# செங்கதிர் மாலை

**விஷ்வக்ஸேனன்**




23, தீனதயாளு தெரு, பாண்டிபஜார்
(தி.நகர் தலைமைத் தபால் நிலையம் அருகில்)
தியாகராய நகர், சென்னை - 600 017
தொலைபேசி : 24342810 / 24310769

முதற் பதிப்பு : நவம்பர், 2012


பதிப்பாசிரியர் : வானதி திருநாவுக்கரசு

---

விலை ரூ 200.00

| | | |
|---|---|---|
| ❒ | Title | **SENKATHIRMALAI** |
| ❒ | Author | Vishvaksenan |
| ❒ | Language | Tamil |
| ❒ | Subject | Novel |
| ❒ | Edition | First Edition November, 2012 |
| ❒ | Pages | 416 |
| ❒ | Published By | **THIRUVARASU PUTHAKA NILAYAM**<br>23, Deenadayalu Street,<br>T.Nagar, Chennai-600 017.<br>Ph:24342810,24310769 |
| ❒ | Price | **₹ 200.00** |

---

Laser Typeset by: **S.S. Graphics,** Cell : 8825554095

*Printed at :* **NOVENA OFFSET PRINTING CO.,** Chennai - 5 ✆ 28446166, 28446891

# முன்னுரை

தமிழகத்தின் இடைக்காலச் சரித்திரத்தின் ஏடுகளை ஆக்கிரமிக்கும் விஜயாலயசோழனின் வம்சம் தமிழகத்தின் பொற்காலத்தைச் சிருஷ்டித்து வைத்தது சரித்திர உண்மை. தமிழ் மன்னர்களின் பெருமை வடக்கே கங்கை வரையிலும் மட்டுமின்றி கடல் கடந்து கடாரம், மாப்பாளம், சாவகம் என்று வங்கக்கடலையும் தாண்டிப் பரவியிருந்த காலம் அது. மாமன்னன் ராஜராஜ சோழதேவனும் அவனுக்குப் பின் வந்தவர்களும் தமிழகத்தின் மக்களுக்காக வளர்த்த கலைகளும், தமிழ் இலக்கியங்களும், கட்டி வைத்த ஆலயங்களும் எத்தனை எத்தனையோ. அதிலும் முக்கியமாகத் தென்பாண்டி நாட்டின் பிரதான நகரமொன்றில் சேர மன்னன் ஒருவன் தன் முன்னோரான குலசேகரர் கட்டிய ஆலயத்தைக் கற்றளியாக ஆக்கியதும், அதற்குச் சோழ மன்னன் உதவி செய்து நிவந்தங்கள் அளித்ததும் மூன்று அரசுகளின் இணைப்பின் அடையாளமாக அந்த ஆலயம் இன்றும் காட்சியளிப்பதும் சரித்திர வியப்பு.

திருநெல்வேலியை அடுத்த அம்பாசமுத்திரத்தின் அருகே சென்று அந்த ஆலயத்தைக் காணவும் அதிலிருந்த கல்வெட்டுகளைப் பற்றி அறிந்து கொள்ளவும் வாய்ப்பு கிடைத்தது என் பாக்கியம். அது மட்டுமின்றி, தமிழகத்தின் கலைகளில் வளர்ந்து

சோழப்பேரரசின் ஏராளமான வெற்றிகளுக்குப் பின்னணியாக இருந்த தனுர்வேதத்தைப் பற்றி அறிந்து கொள்ளவும் வாய்ப்புக் கிட்டியது.

மனிதவாழ்வில் ஆரம்ப முதலேயிருந்து வரும் உறவுகளைவிட நடுவில் வந்து சேர்ந்துவிடும் மனைவி, நண்பர்கள் போன்ற உறவுகள் சற்று பல மானவைதான். வாழ்வின் போக்கை அவை சற்று மாற்றிவிடுவதும்கூட உண்டு. சோர்ந்திருக்கும் மன நிலையைப் புரிந்து ஆறுதல்கூறி மீண்டும் புத்துணர்வு அளிப்பவை அத்தகைய உறவுகள். எழுத்தால் எனக்கு அப்படியொரு மகனும், சகோதரரும் கிட்டியது என் பூர்வஜென்ம புண்ணியம்.

அதிலும் தமிழகத்தின் சரித்திர நாவல்கள் அனைத்தையும் ஓர் ஆவணக் களஞ்சியமாகச் சேர்க்கப் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கும் என் சகோதரர், திரு.சுந்தர்கிருஷ்ணன் தனக்காக ஒரு நாவல் எழுதவேண்டுமென்று கேட்டதோடு மட்டு மின்றி, அந்த நாவலுக்குத் தேவையான அத்தனை ஆதாரங்களையும் பெற்றுக் கொடுத்தார். மன்னார் கோயில் ராஜகோபால சுவாமி ஆலயத்துக்குச் சென்று அருகிலேயே சில தினங்கள் தங்கவும், அத்தனை விவரங்களையும் பெறவும் உதவிய சரித்திர நாவலாசிரியர் நண்பர் முகிலன் அவர்களும் கொடுத்த ஆதரவால் இந்த "செங்கதிர்மாலை" உருவானது.

"எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும்
குலதனமாகிய பலர் புகழ் முடியும்

செங்கதிர்மாலையும் செங்கதிர்வேலை......." என்று கங்கை கொண்ட சோழ வேந்தன், முதலாம் ராஜேந்திர

சோழ தேவனின் மெய்கீர்த்திகளில் இடம் பெற்ற செங்கதிர் மாலை அதன்பின்னர் வேறெந்தக் குறிப்பு களிலும் இடம் பெறவில்லை. ஆனால் ராஜேந்திர சோழதேவனின் ஆட்சி இறுதியில் அவன் மகன் ராஜாதிராஜ சோழனின் மெய் கீர்த்திகளில் சேரநாட்டுப் போரின்போது மாணிக்கத்தால் ஆன வஞ்சிமாலை யொன்றை அணிந்து, பூபேந்திர சோழன் என்ற பட்டத்துடன் போரிட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது.

பெரும்பாலும் சரித்திர ஆதாரங்களையும், என் கற்பனையையும் கலந்து அந்த செங்கதிர்மாலையின் சரித்திரத்தை இயன்றவரையில் சுவையாக எழுத முற்பட்டிருக்கிறேன். இதில் குற்றங்களும் குறைகளும் காணப்பட்டால், வாசகர்கள் அருள்கூர்ந்து என் அறியாமை என்று கருதி மன்னித்து விடுங்கள். நன்றாகவே அமைந்திருப்பதாக அபிப்பிராயப்பட்டால் அதற்குரிய பாராட்டுகளை ஆரம்ப முதலே வாசித்து மெருகேற்ற உதவிய என் சகோதரர் திரு.சுந்தர்கிருஷ்ணன் அவர்களிடம் அளித்து விடலாம்.

எழுதத் தொடங்கிய காலம் முதல் ஆதரவளித்துவரும் வானதி பதிப்பகத்தார் இந்த செங்கதிர்மாலையையும் வெளியிட முன்வந்ததற்கு என்றும் என் மனமார்ந்த நன்றி.

ஆதாரமாகப் பயன்படுத்திய நூல்கள்:

1. திரு கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி அவர்களின் சோழர்கள்
2. தி பாண்டியன் டவுன்ஷிப்ஸ் மற்றும் மன்னார் கோயில் கல்வெட்டுகள் திரு ஆர். திருமலை ஐ.ஏ.எஸ்
3. தென்னிந்திய கல்வெட்டுகள் தொகுதி

4. பிருகு முனிவர் மற்றும் வசிஷ்டர் எழுதிய தனுர்வேதம்.
5. குலவம்சா இலங்கையின் வரலாறு
6. திருவாங்கூர் ஆர்கியாலஜிகல் சீரீஸ்
7. கரந்தை செப்பேடுகள்
8. திருவாலங்காடு செப்பேடுகள்
9. பிற்காலச் சோழர் வரலாறு தி.வை.சதாசிவ பண்டாரத்தார்.
10. தென்னிந்திய போர்க்களங்கள் கா. அப்பாத்துரையார்

அன்புடன்
விஷ்வக்ஸேனன்

# 1. சைவத்துறவி

**வ**ங்கக் கடலின் அலைகளைத் தங்க அலைகளாக அடித்தபடி சிவந்த ஒளியுடன் எழுந்த கதிரவன் நாகைத் துறைமுகத்தின் வாயிலில் புலிக்கொடி பறக்க நகரத் தொடங்கிவிட்ட நூற்றுக்கும் மேற்பட்ட போர்க் கலங்களைக் கண்டு திகைத்தபடி மேலே ஏறத் தொடங்கினான். சற்று மேலே வந்ததும் கரையில் பூரண போர்க் கவசங்களுடனும், இடையில் வாட்களையும், கைகளில் வேல்களையும் தரித்துநின்றிருந்த வீரர் கூட்டத்தையும், புரவிப்படைப் பிரிவையும், அதன் முகப்பில் நின்றிருந்த சோழர் படைத்தலைவனையும் கண்டு அச்சத்தில் முகம்வெளுக்க சரசரவென்று இன்னும் மேலேறத் தொடங்கினான். அடுத்து புலிக்கொடி பறக்க நின்ற பெரும் ரதத்தையும், அதிலிருந்து கீழிறிங்கி மணலில் திடமாகக் கால்களைப் பதித்து, ஆறடிக்குக் குறையாத உயரத்துடனும், உயரத்துக்கேற்ற சீரான உடல் வாகுடனும், கற்கள் பதிக்கப்பட்ட பிடியுடன்கூடிய பெரும் வாளையும் தரித்து, நகர்ந்து கொண்டிருந்த கலங்களை நோக்கியபடி நின்றவனைக் கண்ட கதிரவனின் அச்சம் மேலும் உயர்ந்து, அருகில் நீந்திய மேகக் கூட்டத்தின் பின்னே மறைந்து கொள்ளவும் தொடங்கினான். கதிரவன் முகம் வெளுக்கவும், அச்சத்தால் மேகங்களின் பின்னே மறைந்து கொள்ளவும் காரணமிருக்கவே செய்தது.

*கடுந்தவம் செய்து பகீரதனால் ஈசனின் சடைமுடியி லிருந்து பூவுலகுக்குக் கொண்டு வரப்பட்ட கங்கையை

---

* திருவாலங்காட்டு செப்பேடு வரிகள்

அத்தனை முயற்சியின்றி காஞ்சியின் அரண்மனையில் அமர்ந்து உத்தரவிட்டும், தன் படைத்தலைவன் விக்கிரமச்சோழியவரையனான அரையன் ராஜ ராஜனையும், படைகளையும் அனுப்பி, தமிழகத்துக்குக் கொண்டு வந்துவிட்டவனும், கங்கை நீராலேயே சோழ கங்கம் என்னும் ஏரியைக் கங்கைகொண்ட சோழ புரத்தருகே உருவாக்கி விட்டவனுமான மாமன்னன் ராஜேந்திர சோழனைக் கண்டுவிட்ட கதிரவனின் அச்சம் பலமடங்கு உயர்ந்ததிலும், அவன் மேகங்களின் பின்னே மறைந்து கொள்ள முயன்றதிலும் வியப்பேதும் இல்லை.

கிழக்கு நோக்கி நகரத் தொடங்கிவிட்ட தனது போர்க்கலங்களைப் பார்த்தபடி நின்ற மன்னனின் பெருவிழிகளில் பெருமிதம் தெரிந்தாலும், ஊடே இனம்புரியாத சிறுவருத்தமும் புலப்பட்டது. வீரர்களை வழியனுப்ப வந்திருந்த மற்ற வீரர்களையும், வீரர் குடும்பங்களையும், மக்கள் கூட்டத்தையும் நோக்கி விழிகளைத் திருப்பிய மன்னன், வீரர் கூட்டத்திலும், மக்கள் கூட்டத்திலுமிருந்து வாழ்த்துக் கோஷங்களை எழுப்பிய பலரது விழிகளில் பிரிவின் துயரமும் பிரதி பலிப்பதைக் கவனித்தான். பெரும் போரை எதிர்பார்த்துக் கலங்களில் செல்லும் ஆயிரக்கணக்கான வீரர்களில் எத்தனைபேர் திரும்பிவந்து சேருவார்கள் என்பதைக் கூற இயலாது என்ற உண்மை அத்தனை பேருக்கும் புரிந்தேதான் இருந்தது.

“வீரர்கள் வாழ்வே அப்படிப்பட்டதுதானே பிரபு...” மன்னனது செவிக்கருகில் கரகரத்த குரல் மெல்ல ஒலித்து, மன்னனைத் திரும்ப வைத்தது.

மன்னனின் விழியசைவுகளைக் கண்டே மனதில் ஓடும் எண்ணங்களைப் புரிந்துகொண்டு அதை உடனடியாக நிறைவேற்றி வைப்பவன் என்று பெயரெடுத் தவனும், வங்கம் வரை படைகளை நடத்திச்சென்று, கங்கையைச் சோழநாட்டுக்குக் கொண்டு வந்து

சேர்த்தவனுமான தனது படைத்தலைவன் அருகில் நிற்பதைக் கண்ட மன்னன் முகத்தில் முறுவல் விகசித்தது. அடுத்து மன்னனது விழிகள் மக்கள் கூட்டத்தில் ஊடுருவித் தூரத்தில் நின்றிருந்த ஒரு சைவத்துறவியின் மீதும் பதிந்தது. மன்னன் விழிகள் சென்ற திக்கைக் கவனித்த படைத்தலைவன் தலைவணங்கினான். அவனது பெரும் சாம்பல் நிறப் புரவி அந்தப் பகுதியை நோக்கி நகர்ந்தது.

சற்றுநேரத்தில் இரு வீரர்களுக்கிடையே அந்த சைவத் துறவியுடன் முன்னால் தனது புரவியிலமர்ந்து தனது படைத்தலைவன் வருவதைக் கவனித்த மன்னன் முகத்தில் மந்தகாசம் விரிந்தது. மன்னனை நெருங்கியதும் வணங்கிய அரையன் ராஜராஜன், தனது வீரர்களைச் சற்று விலகியிருக்கும்படி உத்தரவிட்டான்.

தன்னெதிரில் வந்து நின்ற அந்த சைவத்துறவியை ஏறெடுத்து நோக்கிய மன்னன் முகத்திலிருந்த முறுவல் இன்னும் விகசித்தது. முகமெங்கும் மண்டிக்கிடந்த தாடி மீசையுடனும், பின்புறம் சரிந்த சடாமுடியுடனும், நெற்றியிலும் உடலெங்கும் பூசிய வெண்ணீருடனும், பார்வைக்கு ஏதோ இறைவனுக்குச் சேவை செய்வதெற் கென்றே பிறவியெடுத்திருப்பதாகத் தோற்றமளித்த அந்தத் துறவியை நோக்கிய மன்னன் குரல் பரம நிதானத்துடன் ஒலித்தது,

“நலமாயிருக்கிறாயா ஜெயவர்மா? இனி எங்கு செல்வதாக உத்தேசம்?”

ஜெயவர்மன் என்று அழைக்கப்பட்ட அந்தத் துறவியின் முகத்தில் மன்னன் சன்னிதானத்தில் நிற்பதைக் குறித்த அச்சமேதும் புலப்படவில்லை. அங்குமிங்கும் சலனப்பட்ட அவனது பெரும் விழிகளில் குழப்பம் சற்று புலப்பட்டது. அடர்ந்த புருவங்கள் ஒன்றுகூடி, நெற்றியில் சுருக்கங்கள் தோன்றின. அவன் குரலிலும் குழப்பம் தொனித்தது.

“மன்னவா, எங்கு சென்றாலும் எனக்கு அபாயம் காத்துக்கிடக்கிறதென்பதை அறிவேன். எனவே...”

“எனவே, தங்கள் சகோதரர் எனக்கு அளித்ததைத் தங்களிடமே...”

ஜெயவர்மனது வார்த்தைகளை மன்னனது கரம் உயர்ந்து தடுத்தது. “ஜெயவர்மா, பரிசாக அளித்ததையும், தானமாக அளித்ததையும் திரும்பப்பெறும் வழக்கம் சோழ வம்சத்திலேயே இருந்ததில்லை என்பதை அறியமாட்டாயா நீ?”

ஜெயவர்மன் முகத்தில் குழப்பம் அதிகரித்தது, குரலிலும் பெரும் தயக்கம் ஒலித்தது “மன்னவா, நான் சோழர் பொக்கிஷத்திலிருந்து களவாடிய பொருள் அது. தண்டிக்கப்பட வேண்டிய நான் அந்தப் பொருளையே பரிசாகப் பெற்றது புதிராக மட்டுமல்ல, பெரும் குழப்பத்தையும், அச்சத்தையும் அளித்திருக்கிறது. அதைத் தங்களிடமே...”

“இல்லை ஜெயவர்மா, எனது சேரநாட்டுப் படையெடுப்பிற்குப் பின்னர் சோழர் பொக்கிஷத்தில் சேர்க்கப்பட்டது அந்த செங்கதிர்மாலை. அதை நீ களவாடியதற்காக உன்னைத் தண்டிப்பதும் நியாயம் தான். ஆனால் உனது செயலால் எனக்கு மகா வீரனும் பெரும் ராஜதந்திரியுமான ஒரு சகோதரன் கிடைத்தான். சோழநாடும் பெரும் பயனடைந்திருக்கிறது. நீ அதைப் பரிசாகப் பெறத் தகுந்தவன்தான். ஆனால்...” சற்று நிதானித்த மன்னனது குரலில் அடுத்து எச்சரிக்கை ஒலித்தது,

“அந்த மாலை பலர் முன்னிலையில் உனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அதை அடையப் பலர் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். தற்போது சிதறிக் கிடக்கும் சேரநாட்டு சிற்றரசர்கள் மட்டுமல்ல, ஈழத்து மன்னர்களும்கூட அதற்கு உரிமை கொண்டாடிக் கொண்டிருக் கிறார்கள். நீ எச்சரிக்கையாக இருப்பது அவசியம்”

ஜெயவர்மன் சற்று மௌனம் சாதித்தான். தனது கச்சையிலிருந்து ஓலைக் குழலொன்றை எடுத்தவன் "சற்று இதைப்பாருங்கள் மன்னா" என்று நீட்டினான்.

ஓலையைப் பெற்றுக்கொண்ட சோழ மன்னன் நிதானமாகவே குழலைப் பிரித்து உள்ளிருந்த ஓலையை எடுத்தான். ஓலையில் மூன்றே வரிகள்தான் இருந்தன.

"மஹோதயபுரத்து மன்னர் ராஜசிம்மருக்கு, தங்களை வரும் பௌர்ணமியன்று தலைநகரில் எதிர்பார்க்கிறோம். வேனாட்டு மன்னரும், மலைநாட்டு வீரகேரளரும் மட்டுமல்ல மற்ற சிற்றரசர்களும் காத்திருக்கிறார்கள். ஈழத்து இளவலும் தங்களது பதிலுக்காகக் காத்திருக் கிறார்." — மூவர் திருவடி காழிவர்மன்.

ஓலையைப் படித்துமுடித்து மீண்டும் துறவியிடம் நீட்டிய மன்னன் முகத்தில் முறுவல் விரிந்திருந்தது. அவன் குரலும் அதே நிதானத்துடன் ஒலித்தது.

"ஜெயவர்மா, நீ உன் பணியை நிறைவேற்று. மன்னர் ராஜசிம்மர் தற்போது முல்லை நாட்டில் சோழ நாட்டு சிற்பிகளைக் கொண்டு ஆலயம் கட்டுவதில் ஈடுபட்டிருக் கிறார். தேவையானால் உனது பாதுகாப்பிற்காக வீரர் இருவரை அழைத்துச்செல்"

"நன்றி மன்னவா, ஆனால் தற்போது வேறு சில பணிகளும் எனக்காகக் காத்திருக்கின்றன. அவற்றை இருதினங்களில் முடித்துவிட்டுப் பின்னரே சேரலா தரைக் காணச் செல்லலாமென இருக்கிறேன்." சோழ வேந்தனிடம் விடைபெற்றுக் கொண்ட ஜெய வர்மன் தலைவணங்கிவிட்டு அகன்றான்.

அதுவரை ஏதும் பேசாமல் அடித்துவைத்து கற்சிலையாகவே நின்றிருந்த சோழர் படைத்தலைவன் முகத்தில் முறுவலொன்று விரிந்திருந்தது.

அடுத்த சில கணங்களில் சோழ மன்னனும், வீரர்களும், மக்கள் கூட்டமும் கடற்கரையிலிருந்து திரும்ப முற்பட்டனர்.

மக்களோடு மக்களாகக் கலந்துவிட்ட ஜெயவர்மன் அன்று முழுதும் நாகையை விட்டு நகரவில்லை. தியாகராஜ மூர்த்தி, சுந்தர விடங்கராய்த் தரங்க நடனம் புரியும் திருநாகைக் காரோண ஆலயத்தில் சுற்றிச்சுற்றி வந்து கொண்டிருந்தார். ஒரு கண்ணால் அம்பிகையை யும், மறுகண்ணால் ஈசனையும் பார்த்தபடி அமர்ந் திருக்கும் நந்திகேசுவரர் அருகே சற்று நேரம் நின்றார். பாய்ந்துவரும் புரவிகள் பூட்டிய தேர் போன்ற வடிவத்தில் அமைந்த நீலாயதாக்ஷி சன்னதியருகே சற்று நேரம் உலாவினார். அதிபத்த நாயனாரின் சன்னிதியில் வெகுநேரம் அமர்ந்திருந்தார். உணவுக்காகவோ, நீரருந்தவோகூட அவர் வெளியில் செல்லவில்லை. வாயிலை நோக்கி அடிக்கடி பாய்ந்து பாய்ந்து மீண்ட அவரது விழிகள், யாரையோ அவர் எதிர்பார்த்திருப்பதை உணர்த்தின.

ஆனால் மாலை நெருங்கிய பின்னரும் அவர் எதிர்பார்த்திருந்த மனிதர் வருவதாகத் தெரியவில்லை. அவர் முகத்தில் கவலையும் குழப்பமும் அதிகரித்து, ஆழ்ந்த சிந்தனையும் புலப்பட்டது.

நாகையின் மாலைநேரத்து அழகு மனதை மயக்கும் படியாகத்தான் இருந்தது. கடற்காற்று வீசத் தொடங்கி விட்டதால் உயர்ந்து எழுந்த அலைகளின் இரைச்சல் பலமாக ஒலிக்கத் தொடங்கியது. கடற் பறவைகளும், கோபுரங்களிலிருந்து இரைக்காகச் சென்ற கிள்ளைகளும், புறாக்களும் கூடு நோக்கித் திரும்பிவிட்டதால் அவற்றின் கீச் கீச்சென்ற ஒலி பலமான இசையாகக் கேட்கத் தொடங்கியது. நாகையை அடுத்து இருந்த பன்னிரண்டு சிவஸ்தலங்களிலிருந்தும் ஆராதனைப் பொருட்கள் சுந்தர விடங்கருக்கு மாலை வேளைகளில் வருவது வழக்க மாதலால், அந்த ஊர்களிலிருந்த மக்கள் கூட்டமும்,

அவர்கள் இட்ட கோஷங்களும், இடைவிடாது ஒலித்த ஆலய மணியின் ஓசை காற்றையும் ஆலயத்தையும் மட்டுமல்லாது நாகையை நிறைத்திருந்த மனிதர் மனங்களையும் சுத்தம் செய்து ஒலிக்கத் தொடங்கின.

சைவத்துறவியார் வேடத்திலிருந்த ஜெயவர்மன் அப்படியொன்றும் பக்தியில் திளைத்தவர் அல்ல என்றாலும், ஆலயத்தின் சூழலும், ஒலித்த தேவாரப் பண்களும், அவற்றின் மனதை மயக்கும் இசையும், மணியின் இடைவிடாத நாதமும், அவர் மனநிலைக்குச் சற்று மாற்றத்தை அளிக்கவே செய்தன. அலைகள் தாவித் தாவி வருவதுபோல் அமைந்த நடனமாதலால் தரங்க நடனம் என்று பெயர் பெற்ற நடனத் தோற்றத்தில் நின்ற சுந்தர விடங்கரை ஒருமுறை வணங்கிய சைவத் துறவி திரும்பி ஆலயத்தை விட்டு வெளியேறினார். ஆலயத்தின் தென்புற மதிலை ஒட்டி அமைந்திருந்த சம்பந்தர் திருமடத்தை அடைந்தவர், மடத்துத் தலைவரிடம் உணவுக்குச் சொல்லிவிட்டு, உள்ளே சென்று நீராடித் திரும்பினார். உணவை எடுத்துக்கொண்டு மடத்துப் பணியாள் வந்தபோது உடலெங்கும் நீறு பூசியபடி, பத்மாசனத்தில் அமர்ந்திருந்த சைவத்துறவியார் அதி உக்கிரமான நிஷ்டையில் இருந்தார். குரல் கொடுத்து அழைக்கவும் தயங்கிய பணியாள், வாழையிலையைப் பரப்பி அதன்மீது உணவை வைத்துவிட்டு மெல்ல கதவைச் சார்த்திவிட்டு வெளியேறினான்.

அவன் சென்ற இரண்டொரு கணங்கள் கழித்து நிஷ்டை கலைந்த துறவியாரின் பார்வை இலையின் மீது இருந்தவைகளின் மீது நிலைத்தது. அடுத்த கணம் இலையின் மீது வேங்கையைப் போல் பாய்ந்தார் சைவத் துறவியார்.

மறுதினம் சூரிய உதயத்துக்குப் பின்னரே எழுந்த துறவியார் தாம் தாமதித்து விட்டதை உணர்ந்து அவசர மாகப் பயணத்துக்குத் தயாரானார். அன்று முழுவதும்

தாம் பயணப்பட வேண்டியிருக்கும் என்பதை உணர்ந்த துறவியார் காலை உணவை ஒரு வேளைக்கு இருவேளை யாக அருந்திவிட்டு வெளியே வந்தபோது அவருக்கு ஆச்சரியம் காத்திருந்தது. வாயிலில் பெரும் கருநிறப்புரவி யொன்று காத்திருந்தது. உடன் சோழவீரன் ஒருவனும் நின்றான். அவரைக் கண்டதும் வணங்கியவன், "இந்தப் புரவியைத் தங்களிடம் ஒப்படைக்குமாறு படைத் தலைவர் உத்தரவு. தங்கள் பயணத்துக்கு உதவும்" என்றான். மேலுக்குப் பணிவைக் காட்டினாலும் அந்த வீரனின் விஷமம் வழிந்த விழிகள், சோழர் படைத் தலைவன் அவரது ஒவ்வொரு அசைவையும் கவனித்துக் கொண்டிருக்கிறான் என்பதை உணர்த்தின. அந்த வீரன் சற்றுத் தயங்கிவிட்டு "துறவியாரே, நாகையின் எல்லையைக் கடந்த பின்னர் தங்களைத் தொடர வேண்டாமென படைத்தலைவர் உத்தரவிட்டிருக்கிறார். எச்சரிக்கையாகச் செல்லும்படி தங்களிடம் கூறச் சொன்னார். வருகிறேன்" அந்த சோழவீரன் வணங்கித் திரும்பிச் சென்று சற்றுத் தூரத்திலிருந்த தனது புரவியில் ஏறி அவர் பார்வையிலிருந்து மறைந்தான்.

சற்றுநேரம் வெறித்த பார்வையுடன் நின்ற துறவியார் புரவியில் தாவியேறினார். அவரது புரவி அடுத்த இரு நாழிகைகளில் நாகையைவிட்டு வெளியேறியது. நாகையிலிருந்து நேர் மேற்கில் ஆரூரை நோக்கிச் சென்ற பிரதானப் பாதையைவிட்டு விலகியவர் சற்று வடமேற்கில் தெரிந்த அடர்ந்த வனப்பகுதியை நோக்கிச் சென்றார். மரக்கூட்டங்களினிடையேயும், வயல்வெளி களிலும் வாய்க்கால்களின் ஓரங்களிலும் நிதானமாகவே பயணத்தைத் தொடர்ந்தவர், மாலைப் பொழுது நெருங்கும்வரை எங்கும் நிற்கவில்லை. திருக்குடந்தைக்குச் செல்லும் பிரதானப் பாதையைக் குறுக்குவாட்டில் அடைந்து பயணித்தவருக்குக் கீழ்க்கோட்டத்தை அடைய நான்கு காதங்கள் இருக்கும்பொழுது அந்தச் சந்தேகம்

வந்தது. ஒன்றிரண்டாக சில புரவி வீரர்கள் அவரைத் தொடர்ந்து வருவதாகத் தோன்றியது.

அவர் நின்று கவனித்ததும் யவனர்களாகத் தோன்றிய அந்த வீரர்கள் வேறு திசையில் செல்வதாகப் போக்குக் காட்டுவதாகவும் தோன்றியது. எச்சரிக்கையுடன் மீண்டும் பிரதானப் பாதையைவிட்டு சட்டென்று மரங்களடர்ந்த பகுதியை நோக்கித் தமது புரவியைச் செலுத்தினார். முற்றிவிட்ட மாலைப் பொழுதும், இருள் கவியத் தொடங்கிவிட்டதும் அவருக்குச் சாதகமாகவே இருந்தன. அரசலாற்றுக் கரையை ஒட்டிச் சென்ற ஒற்றையடிப் பாதையொன்றைத் தேர்ந்தெடுத்தவர் குடந்தை கீழ்க்கோட்டத்தை நோக்கிப் புரவியை வேகமாகச் செலுத்தத் தொடங்கினார். கீழ்க்கோட்டத்தை அடைய சற்றுத் தூரமிருக்கையில் அவருக்கு எதிரே திடீரெனப் பந்தமொன்று எரிந்தது. புரவியொன்றில் வீரனொருவன் அவரெதிரே சற்றுத் தொலைவில் பாதையின் குறுக்கே நின்றிருந்தான். அவருக்குப் பக்கவாட்டிலும் பந்தங்கள் இரண்டு தோன்றின. பின்புறத்திலும் மூன்றுநான்கு பந்தங்கள் எரிந்து நெருங்கத் தொடங்கின.

சூழ்ந்துகொண்ட வீரர்கள் அருகே நெருங்கியதும் அவர்கள் யவன வீரர்கள் என்பது புரிந்தது. உடல் முழுதும் கவசங்களுடனும், தலையை மூடிய கவசங் களுடனும் நெருங்கிய வீரர்கள் கரங்களில் பந்தங்களுடன் யவனர் பயன்படுத்தும் நீளம் குறைந்த பட்டையான வாட்களும் பளபளத்தன.

துறவியார் சற்று சிந்தித்தார். அவரது கரம் புரவியின் பக்கவாட்டில் தொங்கிய துணி முடிப்பிலிருந்து குறுவா ளொன்றை எடுத்தது. முன்னால் நெருங்கி வருபவர்கள் தமது குறுவாள் வீச்சின் எல்லையை அடைந்து விட்டார்கள் என்பது புரிந்ததும், புரவியைக் கால்களால் உதைத்துக் கிளப்பி, சட்டென்று முன்னோக்கிப் பாய்ந்தார். எதிரில் பந்தத்துடன் வந்த வீரனை நோக்கி

அவரது குறுவாளும் கனவேகத்தில் பறந்து முகக் கவசத்துக் கீழே மிகச் சரியாக அவனது கழுத்தில் பாய்ந்தது. கையில் பிடித்த பந்தத்தை நழுவவிட்ட அந்த வீரன் அப்படியே கீழே சரிந்தான். மற்றொருவனைத் தமது புரவியால் முட்டித் தள்ளிவிட்டு, புரவியைப் பறக்க விட்டார் துறவியார்.

பின்னாலிருந்து வேகமாக நெருங்கிய வீரர்கள் கீழே விழுந்துவிட்டவனை நெருங்கி, அவனது நிலையைக் கவனிக்க, மற்றுமிருவர் துறவியாரை வேகத்துடன் தொடர்ந்தனர். அரசலாற்றுக் கால்வாய் பிரதானப் பாதையை அடையச் சற்றுத் தொலைவிருக்கையில் பின்னால் வந்த வீரர்களில் ஒருவன் தனது பட்டையான வாளைத் துறவியாரை நோக்கி முழுபலத்துடன் வீசினான். துறவியாரின் புரவி பிரதானப் பாதையை அடைவதற்கும் அந்த யவன வீரனின் வாள் அவரது பின் கழுத்தில் பாய்வதற்கும் சரியாக இருந்தது.

துறவியாரிடமிருந்து அலறல் ஒன்று எழுந்தது. புரவியின்மீதே சரிந்தார் அவர். ஆனால் அவரது புரவி பிரதானப் பாதையை அடைந்ததும் இன்னும் வேகத்துடன் பாய்ந்து, சற்றுத் தொலைவில் பாதையின் மறுபுறத்தில் வெகுதூரத்துக்கு நீண்டு தொடர்ந்த மதிலையும், அதன் நடுவே விரிந்துகிடந்த பெரும் வாயிலையும் நோக்கிப் பாய்ந்து, வாயிலைக் கடந்து உள்ளே புகுந்து மறைந்தது.

மதில்களுக்கு நடுவே இருந்த வாயிலை அடைந்த வீரர்கள் சற்று நின்றார்கள். உள்ளே சென்ற பாதையின் இருபுறங்களிலும் கட்டடங்கள் தெரிவதையும், நேர் எதிரே உயரமாக மற்றொரு கட்டடமிருப்பதையும், மக்கள் பலர் நடமாடுவதும் புலப்படவே, புரவிகளை அப்படியே திருப்பியவர்கள் மீண்டும் ஆற்றோரப் பாதையை அடைந்து, தென்பட்ட ஓரிரு மக்களிடம் ஏதோ விசாரித்துக் கொண்டு மீண்டும் மரக் கூட்டங்களிடையே மறைந்தார்கள்.

உடன் வந்த யவன வீரர்களை நெருங்கிய அந்தப் புரவிவீரர்கள் தங்களுடன் வந்தவர்கள் மரக்கூட்டங் களுக்கிடையே பள்ளம் வெட்டிக் கொண்டிருப்பதைக் கண்டு நெருங்கி நின்றார்கள். அந்தத் துறவியைப் பிடிக்கத் தங்களுடன் வந்த வீரன் கழுத்தில் பாய்ந்த குறுவாள் பிடிமட்டும் வெளியே தெரிய மண்ணில் உருண்டு கிடப்பதையும், அவன் உயிர் பிரிந்து சற்று நேரமாகி விட்டதையும் உணர்ந்து சிலையாக நின்றார்கள். அவர்களில் தலைவனாகத் தோன்றியவன் முகத்தில் ஆத்திரமும் சினமும் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருப்பது பந்தங்களின் ஒளியில் தெளிவாகவே புலப்பட்டது.

"எங்கே அந்த ஜெயவர்மன்? என்ன செய்தீர்கள்?" யவனர் தலைவனிடமிருந்து கேள்வியொன்று வேகத்துடன் வந்தது.

"தலைவரே, என் வாளை எறிந்து அவனைத் தடுக்க முயன்றேன். பின்கழுத்தில் பாய்ந்த வாளோடு அவன் மக்கள் இருக்கும் இடத்தை அடைந்துவிட்டான். ஆனால் அவன் அதிக நேரம் உயிரோடிருக்க முடியாது"

வீரர் தலைவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது "முட்டாள், அவனைக் கொல்வதானால் எப்போதோ கொன்றிருக்கலாமே. அவனிடமிருக்கும் பொருளைக் கொண்டுவரத்தானே நாம் தொடர்ந்து வந்தோம்...சரி...அவன் சென்ற இடம் எது, விசாரித்தாயா?"

"விசாரித்தேன் தலைவரே, அது குடந்தை கீழ்க் கோட்டத்திலிருக்கும் வேதபாட சாலையாம். உள்ளே ஆதுரச் சாலையொன்றும் இருப்பதாகத் தெரிகிறது. முதல் ஜாமம் முடியும்வரை திறந்திருக்குமாம் அது" என்றான் அந்த வீரன்.

# 2. வேதபாட சாலை

நந்திகேசுவரரும், சூரியனும், விநாயகரும், கௌதம பராசர முனிவர்களும், பாண்டவர்களும் மட்டுமின்றி, மனித இனத்தையே ஆட்டிப்படைப்பதாக சோதிட நூல்கள் கூறும் ராகு பகவானும் இரவின் இரண்டாவது ஜாமத்தில் வந்து வழிபட்டுப் பேறுபெற்றதாகப் புராணங்கள் கூறும் நாகநாத சுவாமி ஆலயத்தின் உச்சித்தீபம் ஜாஜ்வல்யமாக எரிந்து கொண்டிருந்தது. திருக்குடந்தையிலிருந்தும், சுற்றிலுமிருக்கும் ஊர்களி லிருந்தும் வந்து செல்லும் மக்கள் கூட்டம் இரவின் இரண்டாவது ஜாமம் தொடங்கிய பின்னரும் குறையாம லிருந்ததால், ரதங்களிலும், புரவிகளிலும் சென்றவர்கள் மெல்ல ஊர்ந்து சென்றே மக்கள் கூட்டத்தைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. ஆலயத்திலிருந்து நீண்டு வடக்கு தெற்காகத் திரும்பிய பிரதானப்பாதை தெற்கில் திரும்பி, திருவிண்ணகரப்பன் ஆலயத்தையும் கடந்து அரசலாற்று வாய்க்காலை நோக்கிச் சென்றது. ஆற்றைக் கடக்கப் போடப்பட்டிருந்த மரப்பாலத்தில் அரையிருளில் அமர்ந்திருந்தனர் அந்த யவன வீரர்கள். அவர்களது புரவிகள் பாலத்தை ஒட்டிச் சென்ற பாதையோரத்தில் காத்துக்கிடந்தன. யாரையோ எதிர்பார்த்து அவர்கள் காத்திருப்பதாகத் தெரிந்தது.

இரண்டாவது ஜாமத்தின் பாதியில் அவர்களை நோக்கிப் புரவியொன்று வரும் குளம்பொலி ஒலித்தது. அமர்ந்திருந்த யவன வீரர் ஐவரும் எழுந்தனர். புரவியில் வந்தவனும் ஒரு யவன வீரனாகத்தான் தெரிந்தான். வந்தவன் பாலத்தினருகில் வந்ததும் குதித்து இறங்கி நடுவிலிருந்த யவனனை வணங்கி நிமிர்ந்தான்.

“தலைவரே, நான் தீர விசாரித்து விட்டேன். துறவி சென்று மறைந்த இடம் ஒரு வேதபாடசாலை யென்றுதான் கூறுகிறார்கள். உள்ளே ஒரு ஆதூரச்

சாலையும் மருத்துவர்களும் இருப்பதாகக் கூறுகிறார்கள். காவலுக்கு வீரர்கள் எவரும் அங்கிருப்பதில்லையாம். வேதபாடசாலைக்குக் காவலர்கள் அவசியம் இல்லை என்கிறார்கள்"

யவன வீரர் தலைவன் ஒருகணமே சிந்தித்துவிட்டு "சரி, புறப்படுங்கள். நாம் அங்கு உள்ளே புகுந்து அந்தத் துறவி வேடமிட்ட ஜெயவர்மனைக் கொன்று அவனிடமிருக்கும் அந்த மாலையைப் பறித்து வருவோம். அதைக் கொண்டு போகாமல் போனால் நம் தலைகள் தலையில் நிற்காது." என்றான்.

அந்த வீரர்கள் புரவிகளில் ஆரோகணிக்க, இருளில் தெற்கே நீண்ட பாதையில் அவை விரைந்தன.

கிருஷ்ணபட்சத்து தேய்ந்த நிலவொளியில் பாதை மங்கலாகவே புலப்பட்டது. வாய்க்காலில் வெள்ளம் சலசலத்து ஓடும் ஒலியும், ஓயாமல் ஒலித்த இரவுப் பூச்சிகளின் ரீங்காரமும், புரவிகளின் குளம்பொலியால் சாலையோர மரங்களில் பட்சிகளின் சலசலப்பும் அவர்களைத் தொடர்ந்தன. அரை நாழிகைக்குப் பின் பாடசாலையின் மதிலின் மீது எரிந்த பந்தங்களின் ஒளி பாதையில் வெளிச்சத்தை வீசத் தொடங்கியது. மதிலின் ஓரமாகவே சென்ற புரவிகள் வாயிலை அடைந்ததும் நின்றன. வாயிற்கதவுகள் திறந்துகிடந்தன. உள்ளே சென்ற பாதையின் இருபக்கங்களிலும் நின்ற மரங்கள் வருபவர்களை உற்றுக் கவனித்துக் கொண்டிருக்க இடதுபுறத்தில் சற்று உள்ளடங்கித் தெரிந்த ஆதுர சாலையின் வாயிலில் வெளியூர்களிலிருந்து .வந்திருந்த மக்கள் சிலர் உறங்கிக்கொண்டிருந்தனர். மர நிழல்களில் மாடுகள் கட்டப்பட்டிருக்க, இரண்டொரு மாட்டு வண்டிகளும் நின்றிருந்தன. புரவியிலிருந்து இறங்கிய வீரனொருவன் ஆதுர சாலையை நோக்கிச் சென்று சற்றுநேரத்தில் திரும்பினான்.

"தலைவரே, துறவி இங்கு இல்லை. பாடசாலைக் குள்ளே அவரை அழைத்துச் சென்றுவிட்டதாகக்

கூறுகிறார்கள்” என்றபடி மீண்டும் புரவியில் தாவியேறினான்.

ஆதூரச் சாலையை நோக்கிச் சென்ற பாதையை விடுத்து நேராக உள்ளே சென்ற பாதையில் ஆரவார மின்றிப் புரவிகளை நடத்திய யவனவீரர்கள் சற்று நேரத்தில் புரவிகளை நிறுத்தினர். நேர் எதிரே உயர்ந்து எழுந்து நின்ற கட்டடத்தின் முகப்பு சர விளக்கு களுடனும், பந்தங்களுடனும் புலப்பட்டது. அரைவட்ட வடிவில் ஏதோ சிறு கோட்டைபோலத் தெரிந்த அந்தக் கட்டடம் பூமியிலிருந்து நல்ல உயரத்தில் அமைக்கப்பட்டு, வாயிலில் இருபதுக்கும் குறையாத படிகளுடனும், பெரும் தூண்களுடனும் குறைந்தது ஐம்பதுபேர் நிற்கக்கூடிய மண்டபமாகவே தெரிந்தது. அந்த மண்டபத்திலிருந்து உள்ளடங்கி நின்ற வாயிற்கதவுகள் பெரும் கோட்டைக் கதவுகளாகவே தெரிந்தன.

பந்தங்களின் ஒளியில் படிகளின் உச்சியில் ஒரு சிறுவன் அமர்ந்திருப்பது தெரிந்தது. பார்வைக்குப் பதினான்கு பதினைந்து வயதே மதிக்கத்தக்க அவன் முகத்தில் இன்னும் விளையாட்டுத்தனமும் ஓர் அலட்சியமும் புலப் பட்டது. நெற்றியில் சந்தனக் கீற்று பளிச்சிட, தலை முன்புறம் மழிக்கப்பட்டுப் பின்புறத்தில் நீண்ட சிகை முடிச்சிடப்பட்டிருந்தது. கரத்தில் அம்பொன்றைப் பிடித்தபடி அதன் கூரியமுனையால் கருங் கல்லாலான படிகளின் பக்கவாட்டில் ஏதோ கீறிக் கொண்டு அமர்ந்திருந்தான் அவன். பக்கத்தில் சிறுவில்லும், அம்பறாத் தூளியொன்றும் கிடந்தன. புரவிகள் அருகில் நெருங்கியதும் அவர்களை நோக்கித் திரும்பியவன் முகத்தில் எந்த மாறுதலும் தெரியவில்லை.

யவன வீரர் தலைவனும் மற்ற ஐந்து வீரர்களும் புரவி களிலிருந்து இறங்கி, படிகளை நெருங்க முற்பட்டதும் அந்தச் சிறுவனின் குரல் ஒலித்தது “நில்லுங்கள் அப்படியே” என்று. யவனர் தலைவன் நின்றான்.

அந்தச் சிறுவனின் குரல் தொடர்ந்து ஒலித்தது "உங்களைப் பார்த்தால் யவனர்களாகவும், ஊருக்குப் புதியவர்களாகவும் தெரிகிறது. இப்போது பாடசாலைக்குள் செல்ல யாருக்கும் அனுமதியில்லை. அதோ வலதுபுறம் செல்லும் பாதையில் விருந்தினர்களுக்கான மாளிகை இருக்கிறது. அங்கே சென்று ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். காலையில் பாடசாலைத் தலைவர் உங்களை அங்கேயே சந்திப்பார்" என்றவன் அம்பைப் பிடித்த கரத்தால் பாதையைச் சுட்டிக்காட்டவும் செய்தான்.

யவன வீரர் தலைவன் "சிறுவனே, இன்று மாலை எங்களிடமிருந்து சேரநாட்டு ஒற்றன் ஒருவன் காயங்களுடன் தப்பிவிட்டான். அவன் இங்குதான் வந்து நுழைந்தான். நாங்கள் உள்ளே சென்று அவனைக் கண்டுவிட்டு திரும்பிவிடுகிறோம், எங்களைத் தடுக்காதே" என்றபடி படிகளை நெருங்கி ஏறவும் முற்பட்டான்.

அவன் முதற்படியில் காலைவைத்த அதே கணத்தில் எப்போது வில்லை எடுத்தான், எப்போது அம்புகளைப் பூட்டினான், எப்போது குறிவைத்தான் என்று புலப்படாத வேகத்தில் அந்தச் சிறுவனிடமிருந்து ஏககாலத்தில் மூன்று அம்புகள் பறந்து, படிகளில் ஏறமுயன்ற வீரர்களின் தலைக் கவசங்களைத் தாக்கி அவற்றை மண்ணில் உருளச் செய்தன.

வியப்பு கலந்த அதிர்ச்சியுடன் அந்தச் சிறுவனை ஏறெடுத்த வீரர்தலைவன், அவன் தோளில் மாட்டிய அம்பறாத்தூளியுடன் கரத்தில் மீண்டும் வில்லில் பொருத்திய மூன்று அம்புகளுடன் படிகளின் உச்சியில் நிற்பதைக் கண்டான்.

சிறுவனின் குரல் தெளிவாக ஒலித்தது "வீரர்களே, படிகளில் ஏற முயலவேண்டாம். இப்போது உங்கள் தலைக்கவசத்தைத் தாக்கிய அம்புகள் இனி உங்கள் கழுத்தில் பாய்ந்துவிடும். எச்சரிக்கை..."

யவனவீரர் தலைவனும் உடன் வந்த வீரர்களும் வாட்களை உருவிக் கொண்டு படிகளில் ஏறத் துவங்கினர்.

அந்தச் சிறுவனிடமிருந்து மீண்டும் மூன்று அம்புகள் அசுர வேகத்தில் பறந்தன. வீரர்களின் வாள் பிடித்த கரங்களை மிகச் சரியாகத் தாக்கிய அவை வாட்களை உதறவைத்தன. மீண்டும் தொடர்ந்த அம்புகள் பின்னால் நின்ற வீரர்களின் தலைக்கவசங்களைத் தாக்கி மண்ணில் உருட்டித் தள்ளின.

வீரர் தலைவன் அம்பு பாய்ந்த கரத்தை மறு கரத்தால் பிடித்தபடி படிகளை விட்டுக் கீழே இறங்கி அந்தச் சிறுவனை பிரமிப்புடன் பார்த்தான்.

படிகளில் ஏறத் துவங்கிய மற்ற வீரர்களும் சட்டென இறங்கி நின்றனர். வலியால் முகத்தைச் சுளித்தபடி கரங்களில் பாய்ந்த அம்புகளைப் பிடுங்கி எறிய முயன்ற வீரர்களை நோக்கிய மற்ற மூவரும் பிரமிப்புடன் அந்தச் சிறுவனை நோக்கினர். வேத பாடசாலைக்குக் காவலர்கள் அவசியமில்லையென்று கூறப்பட்டதன் பொருள் விளங்கியது அவர்களுக்கு.

சிறுவனின் குரல் மீண்டும் ஒலித்தது "யவன வீரர்களே, நான்கு படிகளுக்கு மேல் முன்னேறினால் யாரையும் கொன்றுவிட எனக்கு உத்தரவிருக்கிறது. அப்படிக் கொல்லாமல் விட்டால் தலைவர் என்னைக் கோபித்துக் கொள்வார். நான் குரல் கொடுத்தால் மற்ற வாயில்களில் காவலிருக்கும் என் நண்பர்களும் வந்துவிடுவார்கள். எனவே நீங்கள் இப்படியே திரும்பிச் சென்றுவிடுவது நல்லது"

கரத்தில் பாய்ந்த அம்பைப்பிடுங்கி எறிந்துவிட்டு, குருதி வழிந்த கரத்தைப் பிடித்தபடி வீரர் தலைவன் தயங்கினான். அடுத்து அவனிடமிருந்து கேள்வி

யொன்றும் எழுந்தது. "சிறுவனே, இது வேதபாடசாலை யென்று கூறினார்கள்...?"

"ஆம். இது வேத பாடசாலைதான்" சிறுவனின் பதில் தெளிவாக வந்தது.

"வேதம் பயிலும் இடத்தில் இப்படி வில்லும் அம்புமாக சிறுவர்களை அமர்த்தி வைப்பார்களா?"

"பயிலும் வேதத்தைப் பொருத்தது அது" சிறுவனின் பதில் நிதானமாகவே வந்தது.

வீரர் தலைவன் முகத்தில் குழப்பம் தெரிந்தது. "விளங்கவில்லை எனக்கு" என்றான் குழப்பம் குரலிலும் ஒலிக்க.

"யவன வீரரே, சற்று விழிகளை உயர்த்தி அந்த வாயிலின்மீது என்ன எழுதியிருக்கிறது என்பதை கவனியுங்கள்"

அந்தப் பெரும் தூண்களைத் தாங்கிய மண்டபத்தின் வாயிலை உற்றுக் கவனித்த வீரர் தலைவன் கதவின் மேற்புறத்தில் கருங்கல் சுவரின் மேலே வில்லும் அம்பும் பொறிக்கப்பட்டிருப் பதையும், கீழே 'தனுர் வேதம்' என்று எழுதப் பட்டிருப்பதையும் அப்போதே கவனித்தான்.

வீரர் தலைவன் முகத்தில் பிரமிப்பு அதிகரித்தது. அவன் சொற்கள் தயங்கித்தயங்கி வெளிவந்தது "அப்படி யானால்... இது... இது... கடியலூர்ப் புலவர் கண்ணா கனாரின் பாடசாலையா?"

"ஆம். அவர்தாம் இந்த பாடசாலையின் தலைவர்" என்றான் சிறுவன்.

அதற்குமேல் விளக்கம் ஏதும் தேவைப்படவில்லை வீரர் தலைவனுக்கு. சோழ மன்னன் கரிகாலன் காலத்தில் பெரும் கவியாக விளங்கிய உருத்திரங் கண்ணனாரின் வம்சத்தவரென்றும், மன்னன் கரிகாலன் பரிசாக அளித்த பதினாயிரம் பொன்னைக் கொண்டு கவி அமைத்த பாட

சாலையில் தற்போது சோழ இளவல்களுக்கும், படைத் தலைவர்களுக்கும், தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர்களுக்கும் தனுர் வித்தையைப் போதிப்பவரென்றும் பெயரெடுத் திருந்த கண்ணாகனாரின் பெயர் தமிழகத்தில் மட்டுமின்றி ஈழத்திலும், கடாரத்திலும், சீனத்திலும்கூட வீரர்களின் இடையே பரவியிருந்தது.

இனி காலனே வந்து முயன்றாலும் அந்தக் கோட்டைக் குள்ளிருந்து துறவியை மீட்பது இயலாது என்பதைப் புரிந்து கொண்ட வீரர் தலைவன் தன் புரவியை நோக்கிச் சென்று தாவியேறினான். மற்ற வீரர்களையும் உடனே வெளியேறிவிட உத்தரவிட்டவன், கன வேகத்தில் பாடசாலையிலிருந்து வெளியே பாய்ந்தான். மற்ற வீரர்களும் அவனைத் தொடர்ந்தனர்.

யவன வீரர்கள் சென்ற திசையைப் பார்த்தபடி நின்ற சிறுவனின் முகத்தில் மெல்ல சந்தேகம் படர்ந்தது.

தன் அம்பறாத் தூளியிலிருந்து உருண்டையான முனையை உடைய அம்பொன்றைத் தேர்ந்தெடுத்தவன். அதை அருகிலிருந்த பந்தத்தை நோக்கி நீட்டினான். அந்த அம்பின் முனை சட்டென்று பற்றிக்கொண்டு சிவந்த நிறத்தில் எரியத் தொடங்கியது. அடுத்து அதை வில்லில் பொருத்தியவன் படிகளில் இறங்கிக் கீழே வந்து நாணை செவிவரையில் இழுத்துக் கிழக்கு நோக்கி வானத்தில் பறக்கவிட்டான்.

சிவந்த ஒளியுடன் வானத்தில் வெகுதூரம்வரை கிழக்கு நோக்கிப் பறந்த அந்த அம்பு கண்களுக்கு மறைந்ததும் மீண்டும் படிகளில் ஏறி, தனது இடத்தில் வந்து அமர்ந்து கொண்டவன், எதுவுமே நடவாததுபோல் கரத்தில் பிடித்த அம்பொன்றின் முனையால் கருங்கல் படிகளில் கோடுகளைக் கீறத் தொடங்கினான்.

இரு நாழிகைகளுக்குப் பின் மீண்டும் பாடசாலையின் வாயிற்புறத்திலிருந்து புரவியொன்று அதி வேகமாக வரும் ஒலி கேட்டது. பெரும் சாம்பல் நிறப் புரவியொன்று

கனவேகத்தில் பாதையில் வந்து வாயிலின் அருகே நின்றது. புரவியிலிருந்து இறங்கித் தடதடவெனப் படிகளில் ஏறினாள் ஒரு பெண்.

அந்தச் சிறுவன் கரத்தில் பிடித்த வில்லுடன் எழுந்து நின்றான்.

# 3. தனுர் வேதம்

**கி**ருஷ்ணபட்சத்து இரவின் மூன்றாவது ஜாமத் தொடக்கத்தில் ஆசார்யர் கண்ணாகனாரின் வேத பாடசாலைக்குள் அதிவேகமாகப் பாய்ந்து வந்த அந்த சாம்பல் நிறப்புரவி வாயிற்படிகளை நோக்கி வரும்போதே எழுந்துவிட்ட அந்தச் சிறுவன் முகத்தில் வியப்பும், அச்சம் கலந்த மதிப்பும் புலப்பட்டது. புரவியிலிருந்து அலட்சியமாக இறங்கிய அந்தப் பெண்ணின் முழங்கால் முதல் இடைவரையில் சுற்றிக்கிடந்த புலித்தோலும், இடையிலிருந்து கழுத்துவரை இறுகப்பிடித்திருந்த மான்தோலும், கழுத்திலும் கரங்களிலும் மாட்டிக்கிடந்த முத்தும் மணிச்சரங்களும் அவள் ஒரு வேட்டுவப் பெண் என்பதை அறிவித்தன. அடர்ந்து சுருண்டுகிடந்த கருங் குழல்கள் மேற்புறமாகச் சுற்றிக் கொண்டையாக முடிச்சிடப்பட்டு, அதில் பருந்தின் இறகுகள் செருகப் பட்டிருந்தன. செவிகளிலிருந்து தொங்கிய வளையங்கள் தோள்பகுதியைத் தொட்டுக்கொண்டு ஊசலாடின.

அவள் சாதாரண வேட்டுவப்பெண் அல்ல என்பதை அறிவுறுத்த, அவள் தோள்களின் பின்னேயிருந்து தொங்கிக்கொண்டிருந்த அம்பறாத் தூளியின் அம்புகளுக்கு நடுவேயிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது ஒரு வாளின்பிடி. அவள் தோளில் சாதாரண வேடுவர்கள் பயன்படுத்தும் வில்லுக்குப் பதிலாக மூன்றரை முழ நீளமும் ஐந்து கணுக்களும்கூடிய சோழர் படைத்தலைவர்கள் பயன்படுத்தும் போர்வில்

ஒன்றும் ஊசலாடியது. அம்பறாத்தூளியில் *கர்ணிகம், கோபுகம், காகதுண்டம் வகை அம்புகளும், எதிரிகளின் கழுத்தை அறுத்துத்தள்ளும் த்விபல்லவ வகை அம்புகளும் அதிகமிருந்தன.

அடர்ந்த புருவங்களின் கீழிருந்து கூராகப் பாய்ந்த வேல்விழிகள் மற்றுமிரு ஆயுதங்களாகத் தெரிந்தன. செழித்துக்கிடந்த அவளது அவயங்களும், வலுவாகத் தெரிந்த நீண்ட கரங்களும், கரங்களில் தென்பட்ட வாள்வடுக்களும் அவள் நிச்சயம் வேட்டுவப் பெண்ணாக இருக்க முடியாதென்பதைத் தெளிவுபடுத்தின.

அந்தப் பெண்ணைக் கண்டதும் படிகளின் உச்சியில் எழுந்து நின்ற சிறுவன் இருகரங்களால் வில்லைத் தாழ்த்தி ஏறக்குறைய கருங்கல் படிகளில் தலைபடும்படி வணங்கி நின்றான். அவன் வணக்கத்தைத் தலையசைத்து ஏற்றுக்கொண்ட அந்த வேட்டுவப் பெண் இடதுகரத்தால் ஏதோ சமிக்ஞை செய்து, கட்டைவிரலை உயர்த்திக் காட்டினாள்.

அந்தச்சிறுவன் அரை ஓட்டமாகக் கதவை நோக்கி ஓடி அதன் தாழ்ப்பாள்களைப் பிடித்து இருமுறை பலமாக அசைத்துவிட்டு நின்றான். உள்ளே எங்கோ மணியோசை கேட்டது. அடுத்த சில கணங்களில் அந்தப் பெரும் கதவுகள் திறக்கப்பட்டன.

திறந்த கதவுகளினூடே உள்ளே கரத்தில் சிறு துணிமூட்டையுடன் நுழைந்த அந்தப் பெண்ணின் முன்னால் விரிந்தது ஒரு பெரும் கூடம். அரைவட்ட வடிவில் வளைந்து நீண்ட கூடத்தின் நடுவே *வையாளித் திடல் என்னும் பயிற்சிக் களம் திடலாக விரிந்து கிடந்தது. ஐந்தடிக்கும் குறையாத தாழ்வரையால் சுற்றி வளைக்கப் பட்ட அந்தத் திடலின் மறுபுறத்தில் மூன்று அடுக்கு களுடன் கூடிய கட்டடம் ஒன்று எழுந்து நின்றது. தாழ்வரையைத் தாங்கிய தூண்களை அடுத்தும், எதிரே

★ அம்புகளின் வகை – பிருகுமுனிவரின் தனுர்வேதம்

★ வையாளித்திடல் : இறுதிக்கட்ட சீடர்களின் திறமை சோதிக்கப்படும் பயிற்சித்திடல்

தெரிந்த கட்டடத்தின் முகப்புகளில் தென்பட்ட நான்கு வாயில்களின் முகப்புத் தூண்களிலும் சரவிளக்குகள் வரிசையாக எரிந்தன. திடலில் ஆங்காங்கே எரிந்த பந்தங்கள் முன்னிரவுவரை அங்கே பயிற்சிகள் நடைபெற்றிருக்க வேண்டுமென்பதை அறிவுறுத்தின.

அந்த பயிற்சிக்களமும், தூரத்தில் தெரிந்த கட்டடமும் அந்தப் பெண்ணின் சித்தத்தில் ஏதோ நினைவுகளைக் கிளறியிருக்க வேண்டுமென்பது மலரத் தொடங்கிய அவள் விழிகளிலும் முகத்திலும் தெரிந்தது. சற்றுப் பருத்துத் தெரிந்த அவளது சிவந்த இதழ்களில் முறுவலொன்றும் பூத்தது. தாழ்வரையிலிருந்து குதித்து இறங்கியவள் திடலில் திடமாகக் கால்களைப் பதித்து நேராக அந்தக் கட்டடத்தை நோக்கி நடந்தாள்.

ஏறக்குறைய பாதிவரை அவள் திடலைக் கடக்கும் நேரத்தில் எதிரிலிருந்த கட்டடத்திலிருந்து ஒரு வாலிபன் திடலில் இறங்கி அவளை நோக்கி வந்தான். மழிக்கப் படாத முன்தலையும், சுருண்டு பக்கங்களில் செவிகளை மறைத்துச்சரிந்த குழல்களையும், வலுவான புஜங்களை இறுகப்பிடித்திருந்த வளையங்களையும் கண்டவள் அவன் தனுர்வேதத்தின் இறுதிக் கட்ட மாணவன் என்பதைப் புரிந்து கொண்டாள். அவளை நெருங்கி, தலையைத் தாழ்த்தி வணங்கியவன்,

"ஆசார்யர் தங்களைத் தமது அறையில் தங்கலாமென்று கூறினார். அருள்கூர்ந்து என்னோடு வாருங்கள்" என்றான். அவள் தலையசைத்ததும் முகத்தில் அதீத பணிவும், லேசான அச்சமும்கூட பிரதிபலிக்க, அவள் கரத்திலிருந்த துணிமூட்டையைப் பெற்றுக்கொண்டு முன்னால் நடந்து அந்தக் கட்டடத்தின் இரண்டாவது வாயிலை நோக்கிச் சென்றான்.

கட்டடத்தின் மூன்றாவது தளத்திலிருந்தது ஆசார்யர் கண்ணாகனாரின் அறை. விசாலமான அந்த அறையின் சுவர்களில் வேடுவர்கள் பயன்படுத்தும் வில்முதல்

படைவீரர்களுக்கான விற்களும், படைத்தலைவர்களுக் கான தனுசுகளும், மன்னர்கள் பயன்படுத்தும் பெருவிற் களும் எனப் பல்வேறு வகையான விற்கள் மாட்டப் பட்டிருந்தன. அவை போதாதென்று வாள், சுரிகை, சக்கரம், வேல், கேடயம், கதை, என பல்வேறு ஆயுதங்களும் சுவரில் மாட்டப்பட்டிருந்தன.

சுவரோரத்து மர அடுக்குகளில் ஓலைச்சுவடிகள் பல வரிசையாகக் கிடந்தன.

அந்த விசாலமான அறையின் நடுவே இரண்டொரு இருக்கைகளும், ஓரத்தில் மரக்கட்டிலொன்றும் கிடந்தன. மேலிருந்து தொங்கிய சரவிளக்குகளும், பந்தங்களும் அறை முழுதும் ஒளி வீசிக்கொண்டிருந்தன.

இருக்கையொன்றில் அந்தப் பெண்ணை அமரச்செய்து வெளியேறிய வாலிபன் சற்றுநேரத்தில் ஒரு தட்டு நிறைய கனிவகைகளும், பாலும் கொண்டுவந்து அவள் முன்னால் வைத்தான். “தாங்கள் சற்று உறங்கலா மென்றும் விடிந்தபின்னர் சந்திப்பதாகவும் தலைவர் தெரிவித்தார்” என்ற வாலிபனை ஏறெடுத்தவள் “நீ முகுந்தன்தானே? மூன்று ஆண்டுகளில் உன் தோற்றமே மாறியிருக்கிறதே... உன் பயிற்சிக்காலம் எப்போது முடிகிறது?.” என்றாள்.

முறுவலுடன் தலையசைத்தவன் “முடிந்துவிட்டது, நாளை இறுதிக்கட்ட சோதனையில் நான் தேற வேண்டும்... கனிகளை அருந்துங்கள், நாம் காலையில் சந்திக்கலாம்” என்றபடி வணங்கி வெளியேறினான்.

நீண்ட பயணத்தில் நெடுநேரமாக அந்தப் பெண் உணவின்றி இருந்திருக்க வேண்டும். கனிவகைகளையும் பாலையும் விரைவாக உண்டு முடித்தவள் இருக்கையில் அமர்ந்தபடியே சுற்றிலும் பார்வையை ஓடவிட்டாள். ஏழு ஆண்டுகளுக்கு முன் அவள் அங்கு பயின்றபோது எப்படியிருந்ததோ அப்படியே இன்னமும் இருக்கும் அந்த

அறையின் அமைப்பு அவள் இதழ்களில் முறுவலொன்றை நெளியவைத்தது. அறையின் மூலையில் ஒன்பது கணுக்களுடன் கூடிய பெரும் கோதண்டம் ஒன்று சுவரில் சார்த்தப்பட்டிருந்தது. லேசான பிரமிப்புடன் அதை நெருங்கியவள் மெல்லத் தடவிக் கொடுத்தாள்.

அருகிலிருந்த கண்ணாகனாரின் மரக்கட்டிலையும், மஞ்சமோ, பஞ்சணையோ ஏதுமின்றி வெறும் பலகையொன்று மட்டுமே தலையைச் சாய்த்துக் கொள்ள இருப்பதையும் கண்டவள் முறுவலுடன் அதிலேயே சாய்ந்தபடி விழிகளை மூடினாள். பாடசாலையில் தான் பயின்ற காலங்கள் அவள் சித்தத்தில் ஓடின. பின்னிரவின் குளிர்காற்றில் உறக்கம் சில கணங்களில் அவள் விழிகளைத் தழுவிக் கொண்டது.

**வா**ட்கள் வேகமாக ஒன்றுடன் ஒன்று உராய்ந்து மோதும் ஒலி, காற்றைக் கிழித்து வேல்களும், அம்புகளும் பாயும் ஒலி, வீரர்களின் வெறிக்கூச்சல் என்று செவிகளில் மோதிய ஒலிகள் அவள் நித்திரையைக் கலைக்க முயன்றன. உறக்கம் கலைந்த பின்னும் இமைகளைப் பிரிக்கவிடாமல் விழிகளைத் தழுவிய அரைஉறக்கம், அவள் மனக் கண்களில் பலவிதமான காட்சிகளை ஓடவிட்டது.

“இது என்ன சக்கரக்கோட்டமா, ஒட்டர நாட்டு எல்லையா, துங்கபத்திராவின் வடகரையில் காத்திருக்கும் சாளுக்கிய வீரர்களா...எங்கே அந்த ஜெயசிம்ம சாளுக்கியன்...? தந்தையார் அதோ புரவியின் மீது சக்கரவட்டமாக வாளைச் சுழற்றிக் கொண்டு முன்னே பாய்கிறாரே... மேற்கிலிருந்து சாளுக்கிய ரதங்கள் பாய்கின்றன. எடு வில்லை...”

தலையைப் பலமாக ஒருமுறை உலுக்கிக் கொண்டவள் கண்களை அகல விரித்து, சுற்றிலும் பார்வையை ஓடவிட்டாள்.

"ச்சீ... என்ன இது? நாம் இருப்பது ஆசார்யர் கண்ணாகனாரின் அறையில்... பொழுது விடிந்து இத்தனை நேரமாகி விட்டதா? வாட்கள் மோதும் ஒலியும், அம்புகள் பாயும் இனிய ஓசையும் இன்னும் கேட்கிறதே..."

வேகமாக எழுந்தவள் வடபுறத்துச் சாளரத்தின் அருகே வந்தாள். பாடசாலை முகப்பில் இருந்த திடலைவிடப் பலமடங்கு பெரிதாகப் பரந்து விரிந்திருந்த பின்புறத்துப் பயிற்சிக் களத்தில் ஆங்காங்கே குழுக்களாகப் பிரிந்து பயிற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள் மாணவர் கள். நெடுநெடுவென்ற உயரத்துடன், வெண்ணிற தாடிமீசையும், முடிச்சிடப்பட்ட பின்சிகையுமாக ஆசார்யர் பிரதானமாக நின்றிருக்க, சுற்றிலும் குழுக்களாக நின்ற மாணவர்களுக்கு உதவியாளர்கள் வெவ்வேறு பயிற்சிகளை அளித்துக் கொண்டிருந்தார்கள். சற்றுத்தூரத்தில் அரசகுலத்துக் கன்னியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டுக்கொண்டிருந்தது,

* அலிதம், பிரத்யலிதம், விசாகஸ்தானம், கருடக்கிரமம்... என்னும் எட்டுவகையாக நின்று அம்பெய்யும் முறைகளை ஒருபுறமும், பாதகரம், வஜ்ரமஸ்தி, சிம்மகர்ணம், காகதுண்டி... என ஐந்துவகையாக அம்பெய்யும் முறை களை ஒருபுறமும், நிலையாக நிற்கும் இலக்குகளையும், அசைந்து, சுழன்று கொண்டிருக்கும் இலக்குகளையும், மேலும்கீழுமாக மலர்களைச் சுற்றும் வண்டுகள் போல் ஆடும் இலக்குளையும் நோக்கி அம்பெய்யும் முறை களையும் போதித்துக் கொண்டிருந்தார்கள் உதவி யாளர்கள். திடலின் தென்புறத்தில் இளம்பெண்கள் சிலரும் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

செல்வியின் அரை உறக்கம் அந்தக் காட்சியால் பறந்து ஓடிவிட, பரபரவென்று அறைக்குள் நுழைந்தவள் அதிவேகமாக மேலிருந்த அறையில் நீராடி, தனது துணி

★ தனுர் வேதம் - வசிஷ்ட மகிரிஷி

மூட்டையிலிருந்து சீலையும் கச்சையும் அணிந்துகொண்டு பயிற்சித் திடலை நோக்கி அரை ஓட்டமாகச் சென்றாள்.

சுற்றிலும் பறந்து கொண்டிருந்த அம்புகளையும், தூரத்தில் வாட்பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த மாணவர்களையும் ஆவலுடன் கவனித்தபடி ஆசார்யரை நோக்கி நடந்தாள்.

அவளைக் கண்டதும் ஆசார்யரின் முகத்தில் முறுவல் பூத்தது. அவரை நெருங்கி அவரது பாதங்களைத் தொட்டு வணங்கி எழுந்தவளை அன்பு வழிந்த கண்களால் நோக்கியவர் " வா மகளே, எப்படியிருக்கிறாய்? தந்தையார் நலம்தானே? கங்கைப் பயணம் முடிந்து வந்ததும் நானே வந்து அவரைக் காண எண்ணியிருந்தேன்" என்றார்.

"தந்தையார் இன்னும் நான்கைந்து தினங்களில் தங்களைக் காண இங்கு வருவதாகக் கூறினார். என்னை முன்னதாக இங்கு அனுப்பிவைத்ததே அவர்தான் ஆசார்யரே"

"இங்கு பெற்ற பயிற்சிகளைவிட வடநாட்டுப்போர் அதிகப் பயிற்சிகளை உனக்கு அளித்திருக்கும். சரி வா, உள்ளே சென்று பேசலாம்" என்றவர் கட்டடத்தை அடைந்து இடது கோடியிலிருந்த அறைகளை நோக்கி நடந்தார். இறுதியிலிருந்த அறையின் வாயிலில் இரு மாணவர்கள் கரங்களில் பிடித்த விற்களுடன் நின்றிருக்க, அவர்கள் வணக்கத்தை ஏற்றபடி உள்ளே நுழைந்தவர் சற்று நின்றார்.

அந்த அறை சற்று விசாலமாயிருந்தது. ஒருபுறத்தில் ஏதோ மூலிகைகளும், அவற்றை அரைக்கும் கலுவங்களும், குப்பிகளில் மூலிகைத் தைலங்களும் தரையில் இருக்க, ஒரு முதியவர் மூலிகை இலைகளைச் சிறு விளக்கின் உதவியால் பதப்படுத்திக் கொண்டிருந்தார். அறை முழுவதும் மூலிகைகளின் விதவிதமான மணம் வீசிக் கொண்டிருந்தது.

ஆசார்யரைக் கண்டதும் நிமிர்ந்தவர் "தலைவரே, அவன் அபாயக் கட்டத்தைத் தாண்டிவிட்டான். இன்று மாலைக்குள் கண்விழித்துவிடுவான் என்று எண்ணு கிறேன்" என்றார்.

பதிலுக்குத் தலையசைத்த ஆசார்யர் அறையின் மூலையிலிருந்த திரைச்சீலையை அடைந்து சீலையை விலக்கினார். மறுபுறம் மரக்கட்டிலொன்றின்மீது நினைவற்றுக் கிடந்தான் அந்த சைவத்துறவி .

மெல்ல நெருங்கி சைவத்துறவியை நோக்கிய செல்வி பிரமித்து நின்றாள். இடதுபுறம் திரும்பி படுத்துக் கிடந்தவனது முதுகுப்பகுதியில் மூலிகைச்சாறு தடவப் பட்டிருந்தது. பிடரியின் கீழ்ப்புறம் முதுகுத்தண்டை அடுத்து இரண்டு விரல் நீளத்துக்கு அந்த யவனவாள் பாய்ந்த அடையாளம் தெரிந்தது. வாளின் வீச்சு சற்று இடதுபுறம் விலகியிருந்தால், அவன் பிழைத்திருக்க வாய்ப்பே இருந்திருக்காது என்பது புரிந்தது செல்விக்கு.

சற்றுநேரம் அவனை வெறித்து நோக்கியவள் "ஆசார்யரே, இருதினங்களுக்கு முன் இவனை நாகையில் கண்டேன். மன்னரிடம்கூட இவன் தனித்து ஏதோ கூறிக் கொண்டிருந்தான்... இவனிடம் அந்த செங்கதிர்..." மேற்கொண்டு தொடராமல் நிறுத்தியவள் அகன்ற விழிகளில் ஏதேதோ கேள்விகள் எழ ஆசார்யரை நோக்கினாள்.

மௌனமாகத் தலையசைத்த ஆசார்யர் "ஆம் மகளே, செங்கதிர்மாலை இவனிடம் தான் இருந்தது" என்றார்.

"இருந்தது என்றால்...?"

"நேற்றிரவு இவனை யவனவீரர்கள் துரத்தி வந்திருக்கிறார்கள். அவர்களிடமிருந்து தப்பியவன் மீது பின்புறத்திலிருந்து வாளை எறிந்திருக்கிறார்கள். அதோ மூலையில் கிடக்கிறது அந்த வாள். இங்கு வந்து சேர்ந்தபோது சுயநினைவும் இல்லை, இவனிடம் அந்த செங்கதிர்மாலையும் இல்லை"

"நாகையிலிருந்து நேராக சேரநாட்டுக்குச் செல்ல வேண்டியவன் இங்கு எதற்காக வந்தான்? ஈழத்து ஒற்றர்களும் சேரநாட்டு ஒற்றர்களும் இவனைத் தேடி யலைவதாகக் கேள்விப்பட்டேன் ஆசார்யரே... எதற்காக என்பது தெரியவில்லை?"

ஆசார்யர் அறையின் மறுமூலையிலிருந்த மர அடுக்குகளை நோக்கிச் சென்று கரத்தில் ஓர் ஓலைக் குழலுடன் திரும்பினார். அதை செல்வியிடம் நீட்டியவர் "இதைச் சற்றுப் பார் மகளே. இந்த ஓலை மட்டுமே இவனிடமிருந்தது" என்றார்.

குழலைப் பிரித்து ஓலையைப் படித்தாள் செல்வி, "மஹோதயபுரத்து மன்னர் ராஜசிம்மருக்கு..."

படித்து நிமிர்ந்தவளின் விழிகளில் குழப்பம் தெரிந்தது. "இந்த ஓலை முல்லை நாட்டில் தற்போது ஆலயம் கட்டிக் கொண்டிருக்கும் சேரலாதருக்கு எழுதப் பட்டிருக்கிறது. ஓலையைத் தானே வைத்துக்கொண்டா னென்றால், செங்கதிர் மாலையை எங்கு வைத்தான்? அல்லது யாருக்கேனும் அனுப்பிவிட்டானா? அப்படி யானால் யாருக்கு...?" அவள் சித்தத்தில் எழுந்த கேள்வி களுக்கு பதிலேதும் தோன்றவில்லை.

"மகளே, கவனமாகக் கேள். சேரநாடு நமது மாமன்னர் ராஜராஜரும், ராஜேந்திரசோழரும் தொடுத்த போருக்குப் பின்னர் பல சிற்றரசுகளாகச் சிதறிவிட்டது."

"ஆம் ஆசார்யரே, கூபகர்களின் வேனாடு, பெரும் படப்பு ஸ்வரூபம், நெடியிருப்பு, புறநாடு, புஞ்சரம், மலைநாடு, நீலேஸ்வரம் என்று பல சிற்றரசுகள் தோன்றி விட்டன. இதில் சேரலாதர் ராஜசிம்மர் மட்டுமே சோழரிடம் நட்பு பாராட்டுகிறார். மலைநாட்டு வீரகேரளனும், மூவர் திருவடி காழிவர்மனும் நமக்கு எதிராக நிற்கிறார்கள்"

"சேரநாட்டை நன்றாக அறிந்திருக்கிறாய் மகளே, அதற்காகவே உன்னை வரவழைத்தேன். ஈழத்து மாயா

பரணனும் அவர்களுடன் சேர்ந்திருக்கிறான். இந்த ஜெயவர்மனிடம் இருந்த ஓலையை மூவர் திருவடி காழிவர்மன் அனுப்பியிருக்கிறான். ஆனால் இவனைத் தாக்கி செங்கதிர் மாலையை அபகரித்தவர் யாரென்பது தெரியவில்லை”

“ஆசார்யரே, என்ன நடந்ததென்பதை ஒருமுறை கூறுங்கள்”

“மகளே, நான் விசாரித்தவரை கூறுகிறேன். நேற்று மாலையிலிருந்து இவனைத் தொடர்ந்து யவனவீரர் எழுவர் வந்திருக்கிறார்கள். நம் பாடசாலையிலிருந்து அரைக் காததூரத்தில் இவனைச் சூழ்ந்து கொண்டிருக்க வேண்டும். அரசாலாற்று வாய்க்காலின் கரையோரப் பாதையில் புரவித்தடங்கள் அப்படித்தான் தெரிகின்றன. இவன் அவர்களில் ஒருவனைக் கொன்றுவிட்டு தப்பி விட்டான். தப்பியவன்மீது வாளை வீசித் தடுக்க முயன்றிருக்கிறார்கள். இவன் முதுகில் பாய்ந்த வாளுடன் இங்கு வந்து நுழைந்தான். உன்னை வரவேற்றானே ஒரு மாணவன், முகுந்தன், அவன்தான் இவனைக் கண்டு புரவியின் மீதிருந்து இறக்கி, வாளைப்பிடுங்கி எறிந்து விட்டு கருஞ் செம்பருத்திக் களிம்பைக் கொண்டு முதலுதவி அளித்துவிட்டு எனக்குத் தெரியப்படுத் தினான். நான் வந்ததும் சிகிச்சை அளிக்க மருத்துவரை அழைத்தேன்.

மற்ற யவனவீரர் அறுவரும் முதல் ஜாம இறுதியில் இங்கு வந்திருக்கிறார்கள். நம் மாணவர்களின் காவலை மீற முடியாமல் திரும்பிவிட்டார்கள்”

செல்வி சற்றுநேரம் சிந்தித்தபடி நின்றாள். ‘ஓலை மட்டுமே இருக்கிறது... செங்கதிர்மாலை எங்கே போயிருக்கும்? இப்போதைக்கு ஜெயவர்மன் பிழைத்து எழுந்தால் மட்டுமே தெரிய வாய்ப்பிருக்கிறது. ஆனால் அவன் இங்கு வரக்காரணம் என்னவாக இருக்க முடியும்...?,” அவள் சிந்தனை நின்றது.

"சரி, ஆசார்யரே, நான் என்ன செய்யவேண்டும்... .கூறுங்கள்" என்றாள்

"சேரலாதர் ராஜசிம்மரைக் கண்டு அவருடன் சேரநாடு சென்று வரவேண்டும்" என்றார் ஆசார்யர்.

"சேரநாட்டுக்கா...?"

"ஆம் மகளே, இந்தக் கோலத்தில் அல்ல. சாதாரண பணிப்பெண்ணாகச் செல்ல வேண்டும். அது மட்டுமல்ல...

"... உன்னைத் தனிப்பட அனுப்பிவைக்குமாறு மன்னர் கட்டளை. காரணம் ஏதோ இருக்க வேண்டும்"

செல்வியிடமிருந்து மறுமொழியேதும் வரவில்லை.

"ஆம் மகளே. இங்கிருந்து நீ சாதாரணப்பெண்ணாகவே செல்ல வேண்டும் என்றும் அவசியமேற்பட்டாலொழிய நீ யாரென்பதைக் காட்டிக்கொள்ள வேண்டாமென்றும் கூறியிருக்கிறார். இன்று மாலைப்பொழுதில் நீ புறப்பட வேண்டும். எனக்கு உன்னைத் தனியே அனுப்ப மன மில்லை. முகுந்தனின் பயிற்சிகள் இன்று முடிந்துவிடும். உன்னை அழைத்துச் செல்ல அவனைத்தான் நியமித்திருக்கிறேன்"

சரியென்பதற்கடையாளமாகத் தலையசைத்த செல்வி அன்று மாலை வேட்டுவப் பெண் கோலத்தைக் களைந்து சாதாரண கிராமத்துப் பெண்ணாகத் தயாராக நின்றாள். அவளை அழைத்துச் செல்ல முகுந்தனின் ரதம் வந்து நின்றது.

# 4. மழையோ மழை

**கி**ருஷ்ணபட்சத்து நிலவு வீசிய மங்கலான ஒளியையும் மேகக்கூட்டங்கள் மறைத்து விடுவதென்று கருநில மேகங்கள் கூடிச் சேர்ந்திருந்தன. தென்மேற்கிலிருந்து

வீசிய காற்று அவற்றைக் கலைத்துக் கலைத்து விரட்டினாலும், கூட்டமாகச் சேர்ந்த மேகக்கூட்டங்கள் வடிவங்களை மாற்றி மாற்றி வந்து நிலவை மறைத்தே தீருவது என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தன. ஒருகணம் நாகைத் துறையிலிருந்து கூட்டமாகப் புறப்படும் வணிகக் கலங்கள் போலவும், மறுகணம் சோழநாட்டின் மேற்கு எல்லையிலிருக்கும் அடர்ந்த காடுகளில் சுற்றித்திரியும் யானைக்கூட்டங்களாகவும் வானில் நீந்தின. யானைக்கூட்டங்களைப் பிரிந்த யானைக்குட்டிகள் போல ஒன்றிரண்டு சிறு மேகத் துணுக்குகள் பின்னால் ஓடின.

அரசகுடும்பத்தினரும், பெரும் வணிகரும் பயன் படுத்தும் அந்த ரதம் திருக் குடந்தையிலிருந்து தஞ்சை செல்லும் பெருவழியில் ஒரே சீராகச் சென்று கொண்டிருந்தது. பக்கச்சீலைகளைச் சுருட்டிவிட்டு முகத்தில் அறைந்த காற்றையும், அவ்வப்போது தெறித்த சாரலையும் அனுபவித்தவாறே, சாலையின் இருபுறங் களையும் பார்த்தபடி அமர்ந்து வந்த செல்விக்கு இடையிடையே குறுக்கிட்ட சோழநாட்டுக் கிராமங் களையும், அவ்வப்போது குறுக்கிட்ட சிற்றாறுகளையும், சாலையின் இருபுறங்களிலும் நின்று ஆலவட்டம் வீசிய மரக்கூட்டங்களையும் காணக்காண இத்தனை வளமும், நாளெல்லாம் உழைக்கத் தயாரான மக்களும் இருக்கும் போது எதற்காக மன்னர்களின் சச்சரவுகளும், அதன் விளைவாக இந்தப் போர்களும், போர்களின் விளைவாக வருத்தும் வரிச்சுமைகளும் ஏற்படவேண்டும் என்ற எண்ணமே தோன்றியது. இருளில் கரும்பச்சைநிறப் போர்வையை விரித்ததுபோல நீண்டுகிடந்த வயல் வெளிகளில் ஆங்காங்கே நின்ற கழிகளில் பனைஓலைகள் கட்டப்பட்டிருப்பதையும் அவை காற்றில் எழுப்பிய தடதடவென்னும் ஒலிகள் வயலுக்கு வரும் எலிகளையும் சேற்றில் நீந்தும் நண்டுகளுக்காக வரும் நரிகளையும் விரட்டிவிடும் என்பதையும் உணர்ந்தாள். இந்த வளமான

மண்ணுக்காகத்தான் மற்ற நாட்டவர் சோழநாட்டின்மீது படையெடுக்கவும், சில சமயங்களில் களவாடவும் செய்கிறார்கள். அப்படிவரும் அயலாரை விரட்டி, மக்களைப் பாதுகாக்கப் போர்களும், தந்திரங்களும் கையாளப்பட வேண்டிவருகிறது என்பதும் புரிந்தது அவளுக்கு.

சாலையில் இரவின் அந்த இரண்டாவது ஜாமத்திலும் மக்கள் நடமாட்டம் பலமாகவே இருந்தது, மாட்டு வண்டிகளிலும், ரதங்களிலும், கால்நடையாகவும் பலர் சுமைகளுடன் வந்து சென்றுகொண்டிருந்தனர்.

வடநாட்டில் தான் பயணம் செய்த ஊர்களில் இரவின் முதல் ஜாமம் முடிவதற்குள்ளாகவே மக்கள் நடமாட்டம் அற்றுவிடுவதைக் கண்டிருந்தவளுக்கு சோழநாட்டு மக்கள் நிர்ப்பயமாக இப்படி இரண்டு ஜாமம் முடிந்தபின்னரும் நடமாடுவதும், சாவகாசமாக அவர்கள் ஏதோ பேசியபடி பயணம் செய்வதும் முதலில் ஆச்சரியத்தை அளித்திருந்தாலும், சாலையில் முன்னும் பின்னுமாக இரு நாழிகைகளுக்கொருமுறை கடந்து சென்ற வீரர்களையும், அவ்வப்போது குறுக்கிட்ட கிராமங்களில் பாடிக்காவல் இருப்பவர்களிடமிருந்து அவ்வப்போது ஒலித்த எச்சரிக்கைக் குரல்களையும் கவனித்தவள், 'இத்தனை காவல் இருக்கும்போது மக்கள் பயமின்றி நடமாடுவதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?' என்று தீர்மானித்தாள்.

சோழநாட்டைக் கடந்து பாண்டிய நாட்டுக்குச் செல்லப் போகிறோம், பிறகு சேர நாட்டையும் காணப் போகிறோம் என்ற நினைவு அவள் சித்தத்தில் ஏதோ நினைவுகளை ஓட விட்டது. எட்டு வயதில் சூளாமணி விகாரத்தில் கொண்டுவிடப்பட்டதும், பின் கண்ணா கனாரின் பாடசாலையில் பயின்றதும் தொடர்ந்து தந்தை யாருடன் வடநாட்டுப் போருக்குப் புறப்பட்டுவிட்டதும் அவளது பழைய நினைவுகளை அதுவரை மறைத்து

நின்றன. விளையாட்டுத்தனமும் குறும்பும் நிறைந்த சிறுமியாக ஏதோ அரண்மனையில் வாழ்ந்த நினைவு அவள் மனதில் கலைந்த ஓவியம் போல அவ்வப்போது தோன்றுவதுண்டு. கங்கைப்போர் முடிந்து சோழநாடு திரும்பிய பின்னர் அந்த நினைவுகள் மெல்ல மெல்ல அதிகரித்தன. தன்னைவிடச் சிறிய சகோதரன் ஒருவன் கூட இருந்ததாகவும் அவனுடன் அரண்மனைக் கூடங் களிலும், நந்தவனத்திலும் ஓடியாடிக் கொண்டிருந்த தாகவும் நினைவுகள் வரும்.

அது யாருடைய அரண்மனை? சோழர் படைகளின் படைத்தலைவன் விக்ரமச் சோழிய வரையன் அரையன் ராஜராஜன் வந்து அழைத்துப் போகும்வரை அந்த அரண்மனையில்தான் சிட்டுக்குருவியாய், பட்டுப் பூச்சியாய் ஆடித் திரிந்தேன். உடன் இளைய சகோதரனும் இருந்தான்...

...ஜடாவர்ம... வீர... பாண்டியத்தேவர்... பெற்றெடுத்துச் சீராட்டிய தந்தையின் வீரமுகம் இன்னும் நிழல்வடிவம் போல் மனதில் இருக்கிறது...

அவள் நினைவுகள் சட்டென்று அறுந்தன. தஞ்சைக் கோட்டையின் மதில்களும் அதன்மீது எரிந்த பந்தங் களும், மதில்மீது நடமாடிய காவலரும் அவர்கள் கரத்தில் மின்னிய வேல்களும் தெரிந்தன.

அதுவரை ஏதும் பேசாமல் ஏதோ சிந்தனையுடன் ரதத்தைச் செலுத்திய முகுந்தனைப் பார்த்தாள் செல்வி. பயிற்சிகள் முடிந்து சொந்த நாட்டுக்குத் திரும்பும் அவனது மௌனத்தை அவளால் புரிந்துகொள்ள முடிந்தது.

“முகுந்தா...” அவள் விடுத்த அழைப்பை அவன் கேட்டதாகத் தெரியவில்லை.

“முகுந்...தா” சற்று பலமாகவே குரல் கொடுத்தாள் செல்வி.

புரவிகளின் வேகத்தைச் சற்று மட்டுப்படுத்தியவன் திரும்பி "அழைத்தீர்களா..?" என்றான்.

"ஆம் முகுந்தா. நாம் தஞ்சைக் கோட்டைக்குள் செல்ல வேண்டாம். நகரில் நுழைந்து கோட்டையைச் சுற்றிக் கொண்டு தெற்கு நோக்கித் திரும்பிவிடு..."

"அப்படியே செய்கிறேன்" என்ற முகுந்தனின் பதில் புரிந்துகொள்ள முடியாத தொனியில் ஒலித்தது. அவன் முகத்திலும் விழிகளிலும் காரணமற்ற சினம் புலப்பட்டதாகத் தெரிந்தது செல்விக்கு.

தஞ்சைக் கோட்டையின் மீது நின்றிருந்த காவலர்கள் அந்த ரதத்தைக் கவனிக்கவே செய்தனர். கோட்டை வாயிலை நோக்கி வேகமாக வந்த ரதம் பின் பாதையை மாற்றிக் கொண்டு சுற்று வழியாக நகரின் தென்பகுதியை நோக்கிச் செல்வதையும் கவனித்தனர். காவலர் தலைவன் அந்த ரதத்தைச் சற்று உற்றுநோக்கினான். பிறகு ஓலை யொன்றில் ஏதோ கிறுக்கிவிட்டு வீரனொருவனிடம் அதைக்கொடுத்து எங்கோ அனுப்பிவைத்தான்.

கோட்டை மதில்கள் முடிவே இல்லாமல் நீண்டு கொண்டே வருவதாகத் தோன்றியது செல்விக்கு. தஞ்சை நகரத்து மக்கள் இரவு ஏறிவிட்டதைப் பற்றியோ, அவ்வப்போது பேரொலியுடன் இடிஇடித்து முழக்கிய வானத்தைப் பற்றியோ கவலை கொண்டதாகவே தெரியவில்லை. பெரும் மாளிகைகளிலும், வீடுகளிலும் எரிந்த பந்தங்களும், தீபங்களும் தஞ்சைநகரை ஜாஜ்வல்ய மாக அடித்திருக்க, கோட்டையைச் சுற்றிச் சென்ற பிரதானச் சாலையிலும், பக்கங்களில் கிழக்கும் தெற்குமாய் நீண்ட தெருக்களிலும் சர்வசாதாரணமாய் பெண்களும், சிறுவர் சிறுமியர்களும், முதியவர்களுமாய் நடமாடிக் கொண்டிருக்க, புரவிகளும், ரதங்களும், சில மாட்டு வண்டிகளும் நிதானமாகவே சென்று கொண் டிருந்தன. தெற்கு வாயிலை அடுத்து வணிக வீதியில் ஏராளமான பொதி வண்டிகளும், மூட்டைகளும்

சாலையோரங்களில் கொட்டிக்கிடந்தன. சுற்றிநின்ற வணிகர்கள் வண்டிக்காரர்களிடம் பெரிதாகக் குரல் கொடுத்து விலைபேசிக் கொண்டிருக்க, ரதம் அந்தச் சாலையில் வளைந்து வளைந்து மெதுவாகவே செல்ல வேண்டியிருந்தது.

தெற்கு வாயிலைக் கடந்தபின் ரதம் வேகத்துடன் செல்லத் தொடங்கியது. தென் மேற்கிலிருந்து வந்த மேகங்கள் அந்த ரதத்தை அதிவேகத்துடன் கடந்து எதிர்ப்புறம் சென்றன. ஏதோ எச்சரிப்பது போல் அவ்வப் போது பலமாக முழங்கவும் செய்தன. கூடல் மாநகரை நோக்கிச் செல்லும் இரண்டாவது பிரதானப் பாதை யாதலால் அரைஜாமத்துக் கொருமுறை முன்னும் பின்னும் காவலர்கள் ரதத்தைக் கடந்து சென்றனர். மழை நெருங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்து எதிரில் வந்த பொதிவண்டிகள் விரைவாக தஞ்சையை அடைந்துவிடும் நோக்கத்தில் எதிர்ப்புறத்தில் கடந்து வேகமாகச் சென்றன.

இருபுறங்களிலும் வயல்வெளிகளும், சோலைகளும் மெல்லக்குறைந்து வெறும் திடல்களும், பாறைகளும் சிறு குன்றுகளும் தென்படலாயின. தஞ்சையிலிருந்து பத்துக்காத தூரத்துக்கு மேல் கடந்து வந்துவிட்டதை செல்வி புரிந்து கொண்டாள். வேகமாகச் சென்ற ரதம் மெல்ல வேகம் குறையத் தொடங்கியது. சற்று நேரத்தில் சாலையோரமாக ஒரு பெரும் மர நிழலில் ரதம் நின்றது.

“ஏன் ரதத்தை நிறுத்திவிட்டாய் முகுந்தா?” செல்வி கேட்டாள்.

சற்றுத் தயங்கிய முகுந்தன் “அதோ சாலையின் வலதுபுறம் பிரிந்து செல்லும் பாதையைப் பாருங்கள். அதன் வழியே சென்றால் அரைக்காத தூரத்தில் என் உறவினர் வாழும் ஊர் வந்துவிடும்” என்றான்.

“சரி, அதற்கென்ன?”

"நான் பயிற்சிக்கு வந்து ஏழு ஆண்டுகளாகிவிட்டன. தங்களை மதுரையில் விட்டுவிட்டு, நான் கொங்கு நாட்டுக்குச் செல்லவேண்டும். என் தாய் தந்தை எனக்காகக் காத்திருப்பார்கள்"

"சரி..."

"என் உறவினரைக் கண்டு கொஞ்சம் பொருளும் உணவும் பெற்றுக் கொண்டு வந்து விடுகிறேன். தாங்கள் இங்கு சற்றுநேரம் காத்திருக்க இயலுமா?"

செல்வி சற்று சிந்தித்தாள். 'இவன் உறவினரின் இல்லத்துக்கு உடன் சென்றால் நமக்கும் உணவளிப் பார்கள். ஆனால் மழை வருவதைக் காரணம்கூறி தங்கிச் செல்ல வேண்டும் என்று வற்புறுத்துவார்கள். நாம் இங்கு காத்திருந்தால் இவனுக்கும் விரைந்து வந்துவிடவேண்டும் என்ற எண்ணம் இருக்கும், எனவே இங்கு காத்திருப்பதே நல்லது'

"சரி முகுந்தா, நான் இந்த மர நிழலில் காத்திருக் கிறேன். நீ சென்று உறவினரைக் கண்டுவிட்டு விரைவாக வந்துவிடு, அதிகம் தாமதித்துவிடாதே" என்றாள்.

"நன்றி...நான் இதோ சென்று உடனே திரும்பி விடுகிறேன்" என்ற முகுந்தன், அவள் கீழே இறங்கியதும் ரதத்தைத் திருப்பி அந்தப் பாதையில் செலுத்தினான்.

சற்று வடமேற்காகச் சென்ற அந்தப் பாதையையும், தூரத்தில் தெரிந்த கிராமத்தின் ஒளிப்புள்ளிகளையும் அதி வேகமாக விரைந்து பார்வையிலிருந்து இருளில் மறைந்து விட்ட ரதத்தையும் பார்த்தபடி செல்வி நின்றாள்.

சோழர் படைத்தலைவரின் வளர்ப்பினால் சுபாவத் திலேயே அச்சம் என்பதை அறியாதவளும், வடநாட்டுப் போர்களில் தந்தையுடன் பெற்ற அனுபவங்களும் அவளுக்கு நடுநிசியை எட்டிக் கொண்டிருந்த அந்த இருளில் சாலையோரத்தில் தனியே நிற்பதைக் குறித்து எவ்வித கவலையும் ஏற்படவில்லை. இரவுப் பூச்சிகளும்

வண்டுகளும் செய்த ரீங்காரங்கள் சுற்றிச்சுற்றி வந்தன. பளிச் பளிச்சென்று ஒளியை உமிழ்ந்துகொண்டு சுற்றிப் பறந்த மின்மினிப் பூச்சிகளும், வரப்போகும் மழையைக் கானம் பாடி வரவேற்றுக் கொண்டிருந்த வயல்வெளித் தவளைகளும் அவளுக்குத் துணையாக இருந்தன. வானத்து விண்மீன்களை மேகங்கள் அடியோடு தெரியாதபடிக்கு மூடிவிட்டதால் எவ்வளவு நேரம் ஓடியது என்பதை அவளால் கணக்கிட இயலவில்லை. காலம் கடந்து கொண்டேயிருந்தது.

மண்ணின் மணம் குப்பென்று தாக்கியது. இதோ வரப் போகிறது, இதோ வந்து விட்டது என்று பயமுறுத்திய மழை வந்தேவிட்டது. ஆரம்பத்திலேயே அதீத வேகத்துடன் தாக்கி எதிரிப்படைகளைத் துவம்சம் செய்யத் தொடங்கிவிடும் சோழர் படைப் பிரிவின் வேகத்தை நினைவூட்டியது அந்த மழை. வேகத்துடன் அடித்துப் பெய்த மழைக்கு உயர்ந்து வளர்ந்து சாலையின் எதிர்ப் பக்கம்வரை படர்ந்து விரிந்த அந்த அரச மரத்தடி எத்தனை நேரம் பாதுகாப்பளிக்கும் என்பதைக் கூற இயலாது. விரைவில் ஏதேனும் பொதிவண்டிகளோ, கிராமத்து மக்கள் செல்லும் மாட்டு வண்டிகளோ வந்தாலும்கூடப் பரவாயில்லை.

ஆனால் எதிரில் அரைக்காத தூரத்திலிருப்பதாகச் சொல்லிச் சென்ற முகுந்தன் ஏன் இன்னும் வரவில்லை என்று கேள்வி எழுந்தது அவளுக்கு.

மழை வலுத்து அடித்துப் பெய்யத் தொடங்கிவிட்டது. சுற்றிலும் இருட்டு கவிழ்த்து மூடிய கிண்ணம் போல் கவிந்துகிடந்தது. முகத்தில் வழிந்த நீரைத் துடைத்து விட்டபடி நின்றவள் செவிகளில் லேசான மணிச்சத்தம் கேட்டது. உற்றுக் கவனித்தாள். தூரத்தில் ஏதோ புலப்பட்டது.

தஞ்சையிலிருந்து வந்த பிரதானப்பாதையில் இரட்டை மாட்டு வண்டியொன்று வேகமாக வந்து கொண்டிருந்தது.

# 5. ஆரூடக்காரன்

இயற்கை என்று அழைத்தாலும் சரி, விதி என்றாலும் சரி, எல்லோரும் நம்பும் இறைவன் என்றாலும் சரி, மனிதன் வேண்டுவதுபோல் எப்போதுமே நன்மையே நடந்துகொண்டிருக்க சம்மதிப்பதில்லை. பதவியும் செல்வாக்கும் தரும் பாதுகாப்புக்கும், பாராட்டும் கூட்டத்துக்கும் மாறான சூழ்நிலைகளைச் சில சமயங் களில் சிருஷ்டித்து, சற்று வேறான அனுபவங்களை மனிதன் அனுபவிக்கவேண்டித்தான் நேர்ந்துவிடுகிறது.

சுற்றிலும் சூழ்ந்த வயல்வெளியில் விர்விர்ரென்று வீசி சத்தமிட்ட காற்றில் பேயாட்டம் ஆடிய சாலையோரத்து மரங்களின் நடுவே, அரச மரத்தடியில் சொட்டச் சொட்ட நனைந்தபடியே நிராதரவாக நின்றிருந்த செல்வியும் அப்படித்தான் நினைத்தாள். சோழர் படையின் பிரதான படைத்தலைவன் வளர்ப்பு மகளென்ற செல்வாக்கில், கற்ற வித்தையும், வளர்ந்த திறமையும் கொடுத்த கர்வத்தில், வீரர்களும் படைத் தலைவர்களும் மதிப்புடனும், அன்புடனும் போற்றிய சூழ்நிலைக்கு மாறாக, போர்க்களத்தையே கண்ணால் கூடப் பார்த்திராத ஒரு பாடசாலை மாணவனை நம்பிவந்து தற்போது கொட்டும் மழையில் ஆயுதமும், புரவியும், ஆணையிட எவரும் இன்றி, ஏதேனும் மனிதர் நடமாட்டம் கண்டால் போதும் என்ற நிராதரவான நிலையில் நிற்பது அவள் மனதைக் கொஞ்சம் செப்பனிடத்தான் செய்தது. சோழர் பணிக்காகத் தனித்துச் செல்லும் ஒற்றர்களுக்கும், வீரர்களுக்கும் இதையும்விட நிராதரவான நிலை ஏற்படக்கூடும் என்பதும், அத்தனையும் கடந்துதான் அவர்கள் பணிகளை நிறை வேற்றுகின்றார்கள் என்ற உண்மையும் அவள் மனதில் உதித்தது.

அவளிருந்த நிலையில் அவள் செவிகளில் மழை யினூடே ஒலித்த மணிகளின் நாதம் தேவ கானமாகவே

கேட்டது. சற்றுக் கழித்து சாலையில் நிழலுருவமாக இரட்டை மாட்டு வண்டியொன்று மழையை லட்சியம் செய்யாமல் வேகத்துடன் வருவதும் புலப்பட்டது. அருகே நெருங்க நெருங்க மாடுகள் சற்று வேகநடையில் வருவதும், முகப்பில் மழைச் சாரலுக்குப் பாதுகாப்பாக தாழங் குடையொன்று மூடிக்கிடப்பதும் புலப்பட்டது. அளவில் சற்றுப் பெரிதாகவும், நீளம் அதிகமாகவும் அந்த வண்டி இருப்பதாகத் தோன்றியது.

கொட்டும் மழையில், ஓவென்ற இரைச்சலோடு வீசிய காற்றில், உள்ளிருக்கும் பேர்வழிக்கு தான் மழையில் நிற்பது தெரியாமல் போக வாய்ப்பிருக்கிறதென்பது புரிந்ததால், பாதையை மறித்து நின்று "வண்டிக்காரரே... வண்டிக்காரரே..." என்று பலமாகக் குரல் கொடுத்தபடி அகல விரித்த கரங்களோடு மாடுகளை நிறுத்த முயன்றாள் செல்வி.

அவள் கொடுத்த குரலாலும், மாடுகளின் கயிறுகளைப் பிடித்து இழுத்து நிறுத்தியதாலும் வண்டி நின்றது. முகப்பில் மூடிக்கிடந்த தாழங்குடையும் சற்று விலகியது. அடுத்து வண்டிக்குள்ளிருந்து கிளம்பியது பலமான கூச்சல்...

"ஐயோ...ப்..ப்... பி...பிசாசு... மோகினிப்பிசாசு... பிசாசு..."

அந்த நிலையிலும் செல்விக்குச் சிரிப்பு வந்தது. தாழங் குடைக்கு மறுபுறம் உள்ளே அமர்ந்திருப்பவன் முகத்தில் அரும்பு கட்டத் தொடங்கியிருந்த மீசையும், சுருண்டு சுருண்டு செவிகளைத் தாண்டி விழுந்துகிடந்த குழல் களைச் சுற்றி துணியொன்றைக் கட்டிக் கொண்டு, அச்சம் விரவிக்கிடந்த விழிகளோடு தன்னை வெறித்தபடி அலறியவன் சிறுவனுமல்லாத, வாலிபனுமல்லாத இளைஞன் என்பதும் புலப்பட்டது.

மாடுகளைப் பிணைத்த கயிறுகளை விடுத்து அவனை நெருங்கி தாழங்குடையை விலக்கினாள். "அடேய்... நான்

பிசாசல்ல... என்னைப் பார்... தரையில்தான் நின்று கொண்டிருக்கிறேன்" என்றாள் நகைத்தபடி.

"நீ பிசாசில்லையா... இந்த வழியில் மோகினிகள் உலவும் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். அதனால்தான்... நானொன்றும் பயங்கொள்ளியல்ல... இருந்தாலும் இந்த நடுநிசியில் மழை இப்படிக் கொட்டிக் கொண்டிருக்கும் போது... வழிமறித்து... அப்படி நகைக்காதே... நீ பிசாசு தான்... ஐயோ..."

வண்டிக்குள்ளிருந்து முதிர்ந்த குரல் ஒன்று ஒலித்தது "வல்லபா... என்ன அங்கே? ஏன் கூச்சலிடுகிறாய்?"

"தந்தையே...வண்டியை வழிமறித்துப் பிசாசு ஒன்று நிற்கிறது" என்றான் வல்லபன் என்று அழைக்கப்பட்ட அந்த இளைஞன்.

"என்ன உளறுகிறாய்... பிசாசாவது... வழிமறிப்ப தாவது..." அரை உறக்கத்தில் முணுமுணுத்தபடி வண்டிக் குள்ளே தொங்கிய சீலையை விலக்கி ஒரு முதியவர் சற்று முன்னால் நகர்ந்து வந்தார். உள்ளே வயதான பெண்மணியொருவர் படுத்து உறங்கிக் கொண்டிருப்பது செல்விக்குப் புலப்பட்டது.

செல்வியை சற்று உற்றுப் பார்த்தவர் "ஏனம்மா மழையில் நிற்கிறாய்? அப்படி முன்னால் வண்டிக்குள் ஏறி உள்ளே வா... யார் நீ? இந்த நடுநிசியில் இங்கு என்ன செய்கிறாய்?" என்றார் பரிவு தொனித்த குரலில்.

செல்வி மறுபுறம் சுற்றிவந்து மாடுகளை விலக்கி குதித்து ஏறினாள். தலையை வெளியே நீட்டி குழலை முறுக்கி நீரைப் பிழிந்தாள். உடையை சற்று உதறிக் கொண்டாள்.

"ஐயா... என்னை இங்கே நிறுத்திவிட்டு என்னை அழைத்து வந்த ரதமோட்டி அருகிலிருக்கும் கிராமத்துக்குச் சென்றான். உறவினரைக் கண்டுவிட்டு உடனே வந்துவிடுவதாகக் கூறிச்சென்றவன் திரும்ப

வில்லை. என்னை மதுரைவரையில் அழைத்துச் சென்றீர்களானால் போதும்” என்றாள் செல்வி.

“சோழநாட்டில் இப்படிப்பட்ட ரதமோட்டிகளும் இருக்கிறார்களா? ஆச்சர்யம்தான்.. கலி முற்றிவிட்டது. சரியம்மா.. நீ முன்னால் அமர்ந்துகொள். இரண்டு காதத்தில் ஒரு சத்திரம் இருக்கிறது. அங்கு வேறு உடைகள் கிடைக்கும்” என்ற முதியவர் “வல்லபா, வண்டியை ஒட்டு” என்றபடி சீலைக்கு மறுபுறம் நகர்ந்து படுத்தார்.

வல்லபன் வண்டிக்கு உட்புறம் இருந்த சிறு சர விளக்கைத் தூண்டி, பெரிதாக எரியவிட்டான். அவளை ஒருமுறை ஏறஇறங்கப் பார்த்தவன் கயிறுகளைச் சொடுக்கியபடியே தன் தலையிலிருந்த துணியை உருவி அவளிடம் நீட்டினான்.

“அம்மணி... இதைத் தலையில் குழலைச் சுற்றி முடிந்து கொள்ளுங்கள். ஈரம் உலர்ந்துவிடும்” என்றான்.

துணியைப் பெற்றுக்கொண்ட செல்வி அவனை முறுவலுடன் பார்த்தாள். தன்னை விட மூன்று நான்கு வயது இளையவனாக அவன் இருக்க வேண்டும் என்பதும், சற்று மாநிறமாக இருந்தாலும் முகம் களையாகவும், விழிகள் துறுதுறுவென்று ஒரு ஆராய்ச்சிப் பார்வையுடனிருப்பதையும் கவனித்தாள்.

“தம்பி... நீங்கள் எதற்காக இந்த நடுநிசியில் பயணம் செய்கிறீர்கள்? உள்ளே படுத்துக் கிடப்பவர் உன் தாயாரா?” என்றாள்.

“ஆம். என் தாய்க்கு உடல்நிலை சரியில்லை. இன்னும் மோசமாவதற்குள் சொந்த ஊருக்குச் சென்றுவிட வேண்டும் என்று பிரியப்பட்டார். அதற்காகத்தான் அழைத்துச் செல்கிறோம். அங்கு அவரது தமையன், என் மாமன் இருக்கிறார்”

“எந்த ஊர் தம்பி உனக்கு?”

"நாங்கள் எந்த ஊர் என்பது இருக்கட்டும். உங்களை அழைத்து வந்தவன் யார் என்பதைக் கூறுங்கள். பாதி வழியில் விட்டுச்செல்லும் வண்டியோட்டிகள் சோழ நாட்டில் கிடையாது. இந்த ஊர்த் தலைவரிடம் முறையிட்டாலே போதும். எங்கிருந்தாலும் அவனைப் பிடித்துத் தண்டித்து விடுவார்கள். அதிலும் ஒரு பெண்ணைத் தனியாக நடுநிசியில் மழையில் தவிக்க விட்டதற்குச் சிறையில் போட்டுக் கிட்டி கட்டி விடுவார்கள்"

செல்வி நகைத்தாள். "நிறுத்து... தம்பி நிறுத்து... உனக்கு இத்தனை கோபம் வருகிறதே... கவலைப்படாதே... அவனை நானே கண்டுபிடித்துக் கொள்கிறேன்... சரி, இது வழக்கமான வண்டியாகத் தெரியவில்லையே? சற்றுப்பெரிதாகவும், மேலிருக்கும் கூடு கனமாகவும் தெரிகிறது. அடிப்பாகம் கனமாகவும் இருக்கிறது. ஆனால் வேகமாகவும் செல்கிறதே, எப்படி?"

வல்லபனின் முகத்தில் சற்றுப்பெருமிதம் தெரிந்தது. "அக்கா... இப்படி அழைக்கலாமல்லவா? இது நானே தயாரித்தது. நாங்கள் மரச்சிற்பிகள். சூளாமணி விஹாரத்தில் சிற்பக்கலை பயின்றேன். அஸ்திரம், சஸ்திரம் என்று இரண்டு வகை இருக்கிறதல்லவா? அதில் நான் சஸ்திரம் பயின்றேன். கைவிடுபடை, கைவிடாப்படை என்று தமிழில் சொல்வார்களல்லவா? அதில் கைவிடு படைகள் பற்றி பயின்றேன்."

சற்றுப் பழகினாலே வளவள என்று பேசுபவன் அவன் என்பது புரிந்தது செல்விக்கு. அவனைத் தூண்டிவிட கேள்வியொன்றை வீசினாள் "கைவிடு படையா? என்னஅது?"

"ஆம். யந்திரம், பொறிகள், கைவிடு ஆயுதம் என்று மூன்று வகையில் மொத்தம் எழுபத்திமூன்று வகை இருக்கின்றன. நான் பயின்றது யந்திரவகையும் பொறி களும்தான். என் தாயாரின் உடல் நிலை காரணமாகப் பயின்றது போதும் என்று வந்துவிட்டேன். யந்திரவகைப்

பொறி ஒன்றை இந்த வண்டியில் பயன்படுத்தி யிருக்கிறேன். உங்களுக்கெல்லாம் இதைப் பற்றிக் கூறினால் புரியாது " படபடவென்றான் வல்லபன். அதுவரை அவன் பயின்றவை பற்றி எவரும் ஆர்வமாகக் கேட்டதில்லை போலும்.

"எனக்குப் புரியாதா? ஏன்?"

"ஆம். இவையெல்லாம் போர்கள் பற்றியும், ஆயுதங் களைப் பற்றியும் அறிந்தவர்களுக்குத்தான் புரியும். உங்களைப் பார்த்தால் அரண்மனைப் பணிப்பெண் போல்தான் இருக்கிறது. ஒருவேளை கேள்விப்பட்டிருக் கலாம். சரியா?"

செல்வியின் சிவந்த இதழ்கள் விரிந்து முல்லைச் சரத்தைக் காட்டின "ஆம் தம்பி, ஓரளவு கேள்விப் பட்டிருக்கிறேன். யந்திரம், பொறிகள் என்றாயே, அது என்ன? சொல் புரிகிறதா பார்க்கிறேன்" என்றாள் முறுவலுடன்.

வல்லபனின் விழிகள் விரிந்தன. "யந்திரப் பொறிவகை மொத்தம் முப்பத்தியிரண்டு. வளைவிற்பொறி, கருவிரலூரகம், இடங்கணிப்பொறி, தூண்டில், தொடக்கு, ஆண்டலை அடுப்பு, கவை என்று கோட்டைகளில் பயன்படுத்தும் பொறி பலவகையாக இருக்கின்றன. களிற்றுப்பொறி, எரிசிரல், கழுகுப் பொறி, புலிப்பொறி, சகடப்பொறி அரிநூற்பொறி என்று போர்களில் பயன்படுத்தும் பொறிகளும் உண்டு"

"நீ கூறுவது என்னவென்றே எனக்குப் புரியவில்லை தம்பி"

வல்லபன் முகத்தில் பெருமிதம் விரிந்தது. "அதைத் தான் முன்னமே சொன்னேன், பெண்களுக்குப் புரியாது என்று. இதைக் கற்க முதலில் அஷ்டகணிதம் பயில வேண்டும். அஷ்டகணிதம் தெரியுமா உங்களுக்கு?"

“கணிதம் என்பது கஷ்டம் என்பதுதான் தெரியும்”

“ஐயோ, ஏன்தான் நம் சோழ நாட்டுப் பெண்களில் பெரும்பாலோர் எதையும் கற்காமல் இருக்கிறார்களோ... அவர்கள் கண்டது வெறும் பாடல், ஆடல், நாட்டியம், ...இந்த நிலை மாறவேண்டும் அக்கா. அஷ்ட கணிதம் என்பது கனமூலம், கனம், குணனம், பாகாரம், வர்க்க சங்கலிதம், மூலம், வர்க்கம், விபகலிதம் என்று எட்டு வகை. இவற்றைக் கற்றால்தான் யந்திரப் பொறிகளை வடிவமைக்க முடியும்”

“அத்தனை இருக்கிறதா அதில்?” செல்வியின் முகத்தில் வியப்பு தெரிந்தது.

“ஆம். இந்த மாட்டு வண்டி ரதங்களுக்கு ஈடாக வேகமாகச் செல்கிறது என்றால் நான் பொருத்தியிருக்கும் யந்திரம்தான் காரணம்”

“ம்...சரி, வேறென்ன கற்றாய் சூளாமணி விஹாரத்தில்?”

“இதற்கே ஏழு ஆண்டுகள் ஓடிவிட்டன. பிறகு கொஞ்சம் ஆரூடம் கற்றேன்”

“சூளாமணி விஹாரத்தில் சோதிடம், ஆரூடம் கூடக் கற்றுத் தருகிறார்களா?”

“சகல கலைகளும் அங்கு பயிலலாம். மனித மனத்துக்கும் புத்திக்கும் இடைப்பட்ட இடத்தில் எண்ணங்களின் காரணமாக அதிர்வுகள் ஏற்படும். உண்மைக்கும் அதற்கும் உள்ள தொடர்பைப் பற்றிக் கூறுவதே ஆரூடம். அது ஒரு கலை”

“நீ கூறுவது விளங்கவில்லை தம்பி”

“விளக்க என்ன இருக்கிறது? மனம் ஆசைப்படுகிறது. புத்தி அதை அடைய வழி யோசிக்கிறது. ஆனால் உண்மைநிலை வேறாக இருக்கிறது. அதை அறிவது ஆரூடம், அவ்வளவுதான்”

“அது எப்படி உண்மைநிலையை முன்னதாகவே அறியமுடியும்?” செல்வியின் கேள்வியில் குழப்பம் தொனித்தது.

“அறியலாம். எங்கோ பெய்யும் மழை மண் வாசனையைக் கொண்டு வருகிறது, எங்கிருந்தோ வரும் மணத்தைக்கொண்டு என்ன உணவு என்பதைக் கூறமுடிகிறது. ஒரு எல்லைக்குள் உண்மைகளை அறிவது மனிதனுக்குச் சாத்தியம்தான்”

“சரி, எனக்கு ஆரூடம் கூற உன்னால் முடியுமா?”

வல்லபன் மெலிதாகச் சிரித்தான். “உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை, அல்லவா? சரி, உங்கள் கரங்களை நீட்டுங்கள்” என்றான்.

செல்வி முறுவலுடன் தன் இருகரங்களையும் நீட்டினாள் “சொல், பார்க்கலாம்”

வண்டிக்குள்ளிருந்த சரவிளக்கைச் சற்றுத் தூண்டி விட்ட வல்லபன் தன் வலது சுட்டுவிரலால் அவள் விரல்நுனிகளில் ஒவ்வொன்றாகத் தொட்டு கண்களை மூடிக் கொண்டான். வெளியே மழையின் ஓசை பலமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. சக்கரங்கள் சுழலும் ஒலியும் ஊடே கேட்டது. கால் நாழிகை நேரம் ஓடியது.

மீண்டும் வல்லபன் விழிகளைத் திறந்தபோது அவன் முகத்தில் பிரமிப்பு பலமாகப் படர்ந்திருந்தது.

“அக்கா. நீங்கள் அரண்மனைகளில் பணிபுரிபவர் என்று கூறினேன் அது தவறு. அரண்மனைகளே உங்களுக்குச் சொந்தம். நீங்கள் அரச குலத்தவர்தான். தற்போது நீங்கள் சென்று கொண்டிருப்பதும் ராஜாங்கக் காரியமாகத்தான், சரியா?”

செல்வியின் முறுவல் விரிந்தது “சொல் மேலே”

“நீங்கள் செல்வதும் இதோ அருகில் நெருங்கிக் கொண்டிருக்கும் மதுரைக்கல்ல. அதையும் விடத்

தொலைதூரத்தை நோக்கிச் செல்கிறீர்கள். அந்தக் காரியம் இப்போதைக்கு முடியக்கூடியது அல்ல. பல தலைகளைச் சாய்த்த பின்னரே முடியும், வேறொருவரால். ஆனால்...”

“ஆனால் என்ன வல்லபா?”

“ஆனால் உங்களிடம் ஒரு பெரிய குறை இருக்கிறது”

“என்னிடம் குறையிருக்கிறதா? என்ன அது?”

“அது... அது... நீங்கள் புத்தி சொல்வதைவிட மனம் சொல்வதை அதிகம் நம்பி விடுகிறீர்கள்.”

“புரியவில்லையே”

“உங்கள் அருகிலிருக்கும் பொருள் உங்களுடையது என்று நம்புகிறீர்கள். ஆனால்

அது வேறொருவருக்குச் சொந்தமாகிவிடும். உங்களைச் சேர்ந்த பொருள் அருகிலேயே இருக்கும், ஆனால் அதை நீங்கள் உணர மாட்டீர்கள்”

“இப்போதும் புரியவில்லை”

“சரி, யாரையேனும் உங்கள் மனதுக்கு உற்றவர் என்று நினைத்திருக்கிறீர்களா?”

செல்வி சற்றுநேரம் மௌனம் சாதித்தாள். அவள் நினைவுகள் சற்று பின்னோக்கி ஓடின. “நினைத் திருக்கிறேன்” என்ற அவள் குரலில் சற்று மென்மை தொனித்தது.

“அந்த உற்றவர் உங்களுக்கு உறவாகி இருக்கிறாரா?”

“இல்லை, அந்த பாக்கியம் வேறொருத்திக்குத்தான் கிடைத்தது”

“அதைத்தான் சொன்னேன். உங்கள் கட்டைவிரல் ரேகைகள் கோபுர ரேகை வகையைச் சேர்ந்தது. அதுவும் தேய்ந்து படர்ந்திருக்கிறது. இதற்கு அமிர்தயோகம், ஆனந்தயோகம், பன்னக யோகம், வச்சிர யோகம் என்று

நான்கு யோகங்கள் உண்டு. தற்போது பன்னக யோகம் உங்களுக்கு”

“அப்படியென்றால்?”

“ம்...” வல்லபன் சற்று சிந்தித்தான். “நீங்கள் செல்வது ராஜாங்கக் காரியமாகத்தான். அதுவும் வெகுதூரத்துக்கு. அந்தக் காரியத்தில் மன்னர்களின் அணிகலன் ஒன்று சம்பந்தப்பட்டிருக்கிறது. மணிமுடி, முத்திரைமோதிரம், உடைவாள், அத்திமாலை, வஞ்சிமாலை... இப்படி ஏதேனும்”

செல்வி சற்று பிரமித்தாள். “ஆம், மன்னர் அணியும் மாலை ஒன்று காணாமல் போய்விட்டது”

“அப்படியானால் அந்த மாலை சற்று நேரம் முன்புவரை உங்களுடனேயேதான் இருந்திருக்கிறது”

செல்விக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவள் சிந்தனை பலமாகச் சுழன்றது. விழிகள் வல்லபனை வெறித்து நோக்கின.

வானம் தேக்கிவைத்த நீரையெல்லாம் கொட்டித் தீர்த்திருக்க வேண்டும். மழை சற்று மட்டுப்படத் தொடங்கியிருந்தது.

வண்டியின் சக்கரங்கள் உருளும் ஒலியும், மாடுகளின் கழுத்திலிருந்த மணிகளின் “ஜல் ஜல்” ஒலியும் மட்டும் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது.

வல்லபன் தாழங்குடையைத் தாழ்த்தி வெளியே நோக்கினான். மேகங்கள் விலகிச் செல்ல முற்பட்டுக் கொண்டிருந்தன. நிலவு மறைந்து மறைந்து தோன்றிக் கொண்டிருந்தது. திரும்பியவன் செல்வி சற்று நேரமாக தன்னையே வெறித்து நோக்கிக் கொண்டிருப்பதைக் கவனித்தான்.

“என்ன அக்கா, நான் சொல்வதில் நம்பிக்கை பிறக்கவில்லையா?”

"சற்று நேரம் முன்புவரை அந்த மாலை..." செல்வியின் குரலில் குழப்பம் பலமாகத் தொனித்தது.

"ஆம் அக்கா, நீங்கள் காணாமல் போனதாகக் கருதும் மாலை ஒரு ஜாமத்துக்கு முன்புவரை உங்களுடனேயே தான் இருந்திருக்க வேண்டும். உங்கள் மனம் உங்களையே ஏமாற்றியிருக்கிறது. என் ஆரூடம் அப்படித்தான் சொல்கிறது" வல்லபனின் குரல் தெளிவாக, திடமாக ஒலித்தது.

# 6. ஏமாற்றும் தத்துவம்

**வி**ரலை நீட்டித் தொட்டு விழிகளில் இட்டுக் கொள்ளக் கூடிய இருள் கவிந்துகிடக்கும் நடுநிசியைக் கடந்த அந்த வேளையில், மதுரை மாநகரை நோக்கிச் செல்லும் அந்தப் பிரதானச் சாலையில், ரதங்களுக்கு ஈடாக வேகமாகச் சென்று கொண்டிருந்த அந்த மாட்டு வண்டியில் உட்கார்ந்து கொண்டிருந்த செல்விக்குத் தான் எங்கிருக்கிறோம், எங்கு, எதற்காகச் சென்று கொண்டிருக்கிறோம் என்ற நினைவே சற்று நேரம் அற்றுப் போய் விட்டிருந்தது.

சூளாமணி விஹாரத்தில் சிற்பக்கலையும் ஆருடமும் பயின்றதாகக் கூறும் அந்தச் சிறுவன் கூறிய விஷயம் அவள் சித்தத்தில் அம்பாகப் பாய்ந்து நினைவுகளைக் கிளறிக் கொண்டிருந்தது.

"...அந்த மாலை, சேரனைப் போரில் வென்று மாமன்னர் ராஜேந்திர சோழரின் மெய்கீர்த்திகளில் இடம் பெற்ற செங்கதிர் மாலை, பரிசாக அளிக்கப்பட்டு கைமாறிப் போய் அந்த சேர ஒற்றன் ஜெயவர்மனிடம் தரப்பட்டு பின் காணாமல் போய்விட்ட மாலை...சென்ற ஒரு ஜாமம்வரை என்னருகிலேயே இருந்திருக்கிறதா? இவன் என்ன சொல்கிறான்...?"

“வல்லபா, அந்த மாலை என்னருகில்தான் இருந்திருக்கிறது என்றா சொல்கிறாய்?”

“நிச்சயமாக, என் ஆரூடம் இதுவரை பொய்த்ததே இல்லை. உங்களுக்கு விருப்பமிருந்தால் அதைப்பற்றி விவரமாகச் சொல்லுங்கள். நான் விடையைக் கூறுகிறேன்” வல்லபனின் பதில் திடமாகவே ஒலித்தது.

சற்று சிந்தித்த செல்வி, தான் பாடசாலைக்கு வந்தது முதல் நடந்தவற்றையும், ஆசார்யர் கூறியவற்றையும் மெல்ல விவரித்தாள்.

வல்லபனின் முகத்தில் முறுவல் விரிந்துகிடந்தது. அவன் குரலும் தீர்க்கமாக ஒலித்தது “உங்களுக்கு விளங்கவில்லையா? அந்தச் சேர ஒற்றன் நாகையில் யாரையும் சந்திக்கவில்லை. அவனைத் துரத்திய யவனர்களிடமும் சிக்கவில்லை. முதுகில் வாள் பாய்ந்த காயத்தோடு பாடசாலையில்தான் நுழைந்திருக்கிறான். எனவே, அதுவரை அவனிடம்தான் சேரலாதருக்கு எழுதப்பட்ட ஓலையுடன் அந்த மாலை இருந்திருக்க வேண்டும். சரியா?”

“சரி...” செல்வியின் பதில் ஈனஸ்வரத்தில் ஒலித்தது.

“அந்த சேர ஒற்றனை முதலில் கண்டு அவனுக்கு முதல் சிகிச்சை அளித்தவன் நீங்கள் கூறும் அந்த முகுந்தன். பிறகுதான் ஆசார்யர் வந்திருக்கிறார். அவர் வந்த போது அந்த மாலை சேர ஒற்றனிடம் காணப்படவில்லை என்று கூறினார் ஆசார்யர் என்கிறீர்கள். ஒன்று அந்த முகுந்தன் முன்னதாகவே மாலையை மயங்கிக் கிடந்த ஒற்றனிடமிருந்து அபகரித்திருக்க வேண்டும். அல்லது ஆசார்யர் அதை எடுத்திருக்க வேண்டும். உலகமே புரண்டாலும் ஆசார்யர் வாயிலிருந்து பொய்யான சொற்கள் வராது. எனவே முகுந்தன்தான் அந்த மாலையை எடுத்து மறைத்திருக்க வேண்டும். அவன் ஆசார்யர் பாடசாலையின் மாணவன் என்பதால் உங்களுக்குச் சந்தேகம் வரவே இல்லை”

"உண்மைதான் வல்லபா, ஆனால்..."

"அக்கா, நம்புபவர்களைத்தான் ஏமாற்ற இயலும். நம்பிக்கை அற்றவர்களை ஏமாற்றுவது கடினம். இது நடைமுறைத் தத்துவம்"

செல்வியின் விழிகள் அகன்று அவனை நோக்கின. இந்தச் சிறுவன் கூறும் தத்துவம் உண்மைதான் என்பதை அவள் புத்தி அவளுக்கு உணர்த்தியது.

"உங்கள் மனம் நம்பியதை ஏற்றுக் கொண்டிருக் கிறீர்கள். இதைத்தான் முதலிலேயே சொன்னேன். அந்த முகுந்தனைப் பற்றி நீங்கள் அறிந்தவற்றை நினைவு படுத்திப் பாருங்கள், அவன் மாலையை அபகரித்ததற் கான காரணம் உங்களுக்கே விளங்கும். உங்களுடன் தொடர்ந்து பயணம் செய்வது அபாயம் என்பதால்தான் உங்களைப் பாதி வழியில் விட்டு விட்டு அவன் தப்பிச் சென்றிருக்கிறான். அவன் உறவினர் இருப்பதாகச் சொன்ன கிராமத்தில் விசாரித்தால் உண்மை தெரிந்துவிடும்"

வல்லபனின் முகத்தில் ஏதோ கடினமான வடமொழி வேத வாக்கியத்துக்கு விளக்கம் சொல்லி விட்ட பெருமிதம் தெரிந்தது.

அவனை வெறித்து நோக்கிய செல்விக்கு அவன் வாதத்தில் இருந்த உண்மை தெளிவாகவே புலப்பட்டது. முகுந்தன் அவளைப் பாதி வழியில் விட்டுச் சென்றதற்கு வேறு பொருத்தமான காரணமேதும் அவளுக்குப் புலப்படவில்லை. எத்தனை சுலபமாகத் தான் ஏமாற்றப் பட்டிருக்கிறோம் என்பதை எண்ணியவளுக்குச் சற்று வெட்கமாகவும் இருந்தது.

வெளியே மழை ஓய்ந்து சாலையின் இருபுறங்களிலும் விரிந்துகிடந்த வயல்வெளிகளில் தவளைகளின் கானம் பலமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. காற்றில் கரைந்து கிடந்த குளிர் இருவரையும் தாக்கி, உடலைச் சிலிர்க்க வைத்தது.

'மனம் பல விஷயங்களை உணரக்கூடியது. புத்தி உணர்ந்த விஷயங்களை அலசக் கூடியது. இரண்டையும் சேர்த்துத்தான் உண்மைநிலையை அறிய வேண்டும்', என்று சோழர் படைத்தலைவன் அடிக்கடி கூறி வந்தாலும் மீண்டும் அனுபவரீதியாக அந்தச் சிறுவனிட மிருந்து தான் கற்க வேண்டிவந்துவிட்டதை எண்ணிய செல்விக்கு, அறிவுக்கும் அனுபவங்களுக்கும் எல்லையே இல்லை என்று தோன்றியது.

வல்லபனின் முகத்தைக் கவனித்தபடியே வந்தவளுக்கு அந்த அடர்ந்த புருவங்களும், வாளின் முனைபோலக் கூராக இருபுறங்களிலும் சரிந்த அந்தக் கூர் விழிகளும், எடுப்பான நாசியும், தான் வெகுகாலத்துக்கு முன்பாகப் பழகிய எவருடைய சாயலோ தெரிவதாகத் தோன்றியது.

இருண்டு கிடந்த வானத்தின் எதிர் மூலையில் வெளிச்சக் கீற்று புலப்படத் தொடங்கியது.

இருபுறங்களிலும் விரிந்த மரங்கள் புதிதாக முளைத் தவைபோல மின்னத் தொடங்கின. அவிழ்ந்த முத்துச் சரங்களிலிருந்து கொட்டிய முத்துக்கள் போல் சாலை யோரத்து மரங்களிலிருந்து நீர்த்துளிகள் ஒவ்வொன்றாய் தரையிலிறங்கித் தமிழ் மண்ணில் நெற்கதிர்கள் பொற்கதிர்களாய் விளைவது மட்டுமல்ல, அதில் முத்துக்களும் விளையும் என்று நிரூபிக்க வயல்களை நோக்கி ஓடின. "களிறு மாய்க்குங் கதிர்க் கழனி" என மதுரைக் காஞ்சி வர்ணிக்கும் வயல்வெளிகள் மழையில் நனைந்து தரையோடு படுத்துக்கிடந்தன. மெல்லிய ஒளிக்கீற்றுக்கள் வானத்தின் எதிர்ப்புறத்தை செக்கச் செவேலென்று செப்புத்தகடாய் அடிக்கத் தொடங்கின.

வண்டி ஒரே சீரான வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது. தூரத்தில் நிழலுருவமாகப் புலப்படத் தொடங்கிய மதுரை மாநகரின் உயர்ந்த கோட்டை மதில்கள் செல்வியை நனவுலகத்திற்கு இழுத்து வந்தது. தற்போது மதுரையில் சோழ இளவல் இல்லையென்பதையும், மன்னரைக் காண

தஞ்சைக்கு வந்திருக்கிறார் என்பதையும் அவள் ஏற்கெனவே அறிந்திருந்தாள். கோட்டைத்தலைவன் தந்தையையும் தன்னையும் அறிந்தவன்தான் என்பதால் தன் வருகையை முறைப்படி அறிவித்துவிடுவான் என்பதையும், தான் யாரென்பதைப் பலரும் அறிந்துவிடும் வாய்ப்பு ஏற்பட்டுவிடும் என்பதையும் சிந்தித்தவள் மதுரை நகருக்குள் செல்லவேண்டிய அவசியமே இல்லை என்றே தீர்மானித்தாள். சிந்தித்தபடியே வல்லபனை நோக்கியவள், அவன் சற்று நேரமாகவே தன்னைக் கவனித்தபடியே வந்துகொண்டிருப்பதை உணர்ந்தாள். அவன் முகத்தில் படர்ந்திருந்த முறுவல் அவள் விழிகளைச் சந்தித்ததும் புன்னகையாக மலர்ந்தது.

அடுத்து அவனிடமிருந்து எழுந்த கேள்வி அவளை வியக்க வைத்தது.

"அக்கா, மதுரைக்குச் செல்ல வேண்டிய அவசிய மில்லையே என்று யோசிக்கிறாயா?" என்றான் வல்லபன் முறுவலுடன்.

"ஆம்" என்றவள் அவனை வியப்புடன் நோக்கினாள்.

அவளது வியப்பைக் கவனித்த வல்லபன் "அக்கா, செங்கதிர் மாலையைப் பற்றிச் சொன்னதுமே, நீ யாரென் பதையும் எங்கு சென்று கொண்டிருக்கிறாய் என்பதையும் யூகித்துவிட்டேன்" என்றான் சிரித்தபடி.

தொடர்ந்து "அக்கா, எனக்கும் மதுரைக்குச் செல்ல வேண்டிய தேவையேதும் இல்லை. எத்தனை விரைவாக என் அன்னையை மாமனின் ஊரில் கொண்டு சேர்க்க இயலுமோ அத்தனை விரைவாகச் செல்ல வேண்டும்" என்றான்.

சற்று சிந்தித்த செல்வி "வல்லபா, நான் முடிகொண்ட சோழ வளநாட்டுக்குச் செல்லவேண்டும்" என்றாள்.

"முடிகொண்ட சோழ வளநாட்டில் முல்லை நாட்டுக்குத்தானே? அதிலும் ராஜராஜ சதுர்வேதி

மங்கலம்தானே? நாங்களும் அங்குதான் செல்கிறோம் அக்கா” என்றான் வல்லபன்.

“ஆச்சரியம்தான் வல்லபா. எப்படி யூகித்தாய்?” வினவினாள் செல்வி.

“இதில் பிரமாத யூகம் ஒன்றுமில்லையக்கா. நீங்கள் யாரென்பதை அறிந்ததுமே நீங்கள் எதற்காகச் செல்கிறீர்கள் என்பதையும் யூகித்தேன். உங்களுக்கு உதவக் கூடியவர் தென்திசை நிலைப்படைத்தலைவர் உத்தமசோழ விழுப்பரையர்தான் என்பதையும் யூகித்தேன். அவர் தற்போது இளங்கோகுடி பிரம்மதேயத்தில் தான் இருக்கிறார். நீங்கள் அங்குதான் செல்லவேண்டும் என்பதைப் புரிந்து கொண்டேன்”

“இந்தச் சிறுவன் தான் எண்ணியதுபோல் சாதாரண மானவனல்ல” என்று எண்ணிக் கொண்டாள் செல்வி.

“அக்கா, இந்தப் பாதை மணலூரையும், சமணர்கள் வாழும் சாக்கியப்பள்ளியையும் அடுத்து திருப்பூவனத்தில் வைகையைக் கடக்கிறது. திருப்பூவனத்துத் தென்கரைச் சத்திரத்தைக் கதிரவன் உதிப்பதற்குள் அடைந்து விடலாம். உணவருந்தி சற்று இளைப்பாறிவிட்டுப் புறப்பட்டால் மாலைக்குள் முல்லை நாட்டை அடைந்து விடலாம்” என்றான் வல்லபன்.

அவன் கூறியபடியே திருப்பூவனத்துத் தென்கரைச் சத்திரத்தில் நல்ல உணவும், அவள் மாற்றிக் கொள்ள உடையும் கிடைத்தது. அத்தனை தூரத்துக்கு வண்டியைச் செலுத்திவந்த களைப்போ சலிப்போ இன்றி, தன் தந்தையையும் தாயையும் கவனித்து பணிவிடைகள் செய்த வல்லபனைப் பார்த்துக் கொண்டிருந்த செல்விக்கு வியப்பே மேலிட்டது. மாடுகளையும் அவிழ்த்து வைகையில் இறக்கி அவற்றைத் தளர்ச்சி நீங்கத் தேய்த்து விட்டுத் தானும் நீராடிவிட்டுத் திரும்பிய வல்லபன், தானும் உணவருந்தியதும் அடுத்து இரு நாழிகையில் மீண்டும் காளைகளைப் பூட்டினான்.

காளைகள் கனவேகத்தில் செல்லத் தொடங்கின. வல்லபனின் தந்தையார் பராந்தக சோழர் காலத்தி லிருந்து போர் ரதங்களையும், கோட்டைகளில் அமைக்கும் பொறிகளையும், அரண்மனைகளில் தேவையான வற்றையும் நிர்மாணிக்கும் சிற்பியான பராந்தக சோழ மூவேந்த வேளாண் வம்சத்தைச் சேர்ந்த வீர ராஜேந்திர வானவன் பல்லவாதிராயன் என்பதை அறிந்தபின்பு அவன் அரசியல் அறிவையும் யூகிக்கும் திறனைப் பற்றியும் புரிந்து கொண்டாள். முன்பின் பார்த்தேயிராத அவளிடம் அவனது தாயார் செங்கமலவல்லி காட்டும் அன்பையும் பரிவையும் உணர்ந்து வியக்கவும் செய்தாள். சிறுபிராயம் முதலே அவளுக்குக் கிட்டாமல்போய்விட்ட தாயன்பை எண்ணி, சற்று ஏங்கவும் செய்தாள்.

தென்மேற்கில் துரிதமாகப் பயணம் செய்த வல்லபனின் அந்த வண்டிக்காளைகள் சற்றும் சளைக் காமல் ஓடின. இடையில் குறுக்கிட்ட ஆறுகளை சிரம மின்றிக் கடந்த காளைகள் ராமநதியை வந்து அடையும் போது மாலை முற்றி மெல்ல இருள் சூழத்தொடங்கி விட்டிருந்தது.

இளங்கோகுடிக்குள் நுழையும்போது முதல் ஜாமம் தொடங்கி ஒரு நாழிகை நேரம் ஓடியிருந்தது. வெறும் காட்டுப்பகுதியாக இருந்த அந்தப் பிரதேசத்தில் மன்னர் ராஜேந்திர சோழரால் உருவாக்கப்பட்ட இளங்கோ குடியும், சதுர்வேதி மங்கலமும், மாளிகைகள் பல புதிதாக முளைத்துவிட்ட வழுதியூரும் அந்த முன்னிரவு நேரத்தில் விளக்குகளாலும், அலங்கார தீபங்களாலும், சாலை யோரங்களில் எரிந்த தீப்பந்தங்களால் ஜகஜ் ஜோதியாகவே அவர்களை எதிர்கொண்டன.

இளங்கோகுடியின் வணிகர் இல்லங்களைக் கடந்து ராஜவீதியின் நான்காவது இல்லத்தின் முன்பாக வண்டி நின்றது. வண்டியைக் கண்டதும் பணியாட்கள் பலர் உள்ளிருந்து ஓடிவந்தனர். பணிப்பெண்கள் துரிதமாக

வந்து வல்லபனின் தாயாரைக் கைத்தாங்கலாக உள்ளே அழைத்துச் சென்றனர்.

அந்த இல்லம் வெளியிலிருந்து பார்ப்பதற்குச் சிறியதாகத் தெரிந்தாலும், உள்ளே நுழைந்த பின்பு நீண்ட தாழ்வரையும், தாழ்வரையைக் கடந்ததும் பெரிதாக விரிந்த கூடத்தையும், அடுத்துத் தெரிந்த விசாலமான அறைகளையும். சுவர்களில் தெரிந்த சித்திரவேலைப் பாடுகளையும், நேர்த்தியான வேலைப்பாட்டுடன் நின்ற பாவை விளக்குகளையும் மற்ற சிற்பங்களையும் கண்ட செல்வி, எந்த அரண்மனைக்கும் இது சற்றும் குறைந்ததே அல்ல என்று தீர்மானித்தாள். கூடத்தைத் தாங்கியபடி பக்கத்துக்கு நான்கு பெரும் தூண்கள் இழைத்து இழைத்துச் செய்த வேலைப்பாடுகளுடன் பிரும்மாண்டமாக நின்றன.

தந்தையையும் தாயாரையும் உள்ளே அழைத்துச் சென்று ஆசுவாசப்படுத்தி விட்டு மீண்டும் கூடத்தை அடைந்த வல்லபன், சிற்பங்களையும், சிற்பத்தூண்களையும் கண்டு பிரமித்தபடி நின்றிருந்த செல்வியை நெருங்கி "என்ன அக்கா, அப்படி பிரமித்துப் போய் நின்று விட்டீர்கள்? இது என் மாமனின் இல்லம்தான். அவர் இப்போது வந்து விடுவார். சற்று இப்படி அமருங்கள்" என்று அவள் கரத்தைப் பற்றி அழைத்துச் சென்று நீண்ட மர இருக்கையொன்றில் அமர வைத்தான்.

"அக்கா, சற்று நேரத்தில் உணவு வந்துவிடும். நீங்கள் நீராடிவிட்டு வருவதற்கும் ஏற்பாடு செய்துவிட்டேன்" என்றான்.

அவன் கூறிமுடிப்பதற்குள் வாசலில் ஆரவாரம் ஒலித்தது. புரவிகள் பல வேகமாக வந்து நிற்கும் ஒலியும், யாரோ அதிகாரத் தொனியில் ஆணையிடும் ஒலியும் கேட்டன. தடதடவென வீரர்கள் பலர் கையில் பிடித்த வேல்களுடன் உள்ளே நுழைந்தனர்.

"அக்கா, இதோ என் மாமன் வந்துவிட்டார்" என்றான் வல்லபன்.

வீரர்களுக்குப் பின்னால் ஆறடிக்கும் குறையாத உயரத்துடனும் அதற்கேற்ற ஆகிருதியுடனும், இடையில் புலிச்சின்னம் பொறித்த பெரும் வாள் ஊசலாட, திடமாகக் கால்களைப் பதித்து உள்ளே நுழைந்தார் ஒருவர்.

தலையில் ஆங்காங்கே நரைத்த குழல்களும், முதிர்ச்சியைக் காட்டிய முகமும், பிராயம் ஐம்பதைக் கடந்துவிட்டவர் என்பதை உணர்த்தினாலும், ஈட்டிகளென ஜொலித்த விழிகளும், இடைவிடாத பயிற்சியால் வைரம் பாய்ந்திருந்த உடலும் அவர் மனத்தில் இன்னும் முதுமையை எட்டவேயில்லை என்பதைத் தெளிவுபடுத்தின.

உள்ளே நுழைந்தவர் பார்வையில் முதலில் வல்லபன் படவே "என்ன வல்லபா, எப்போது வந்தீர்கள்? ஏன் இத்தனை தாமதம், உங்களை நான்கைந்து நாட்களுக்கு முன்னதாகவே எதிர்பார்த்தேனே...ம்? என் உடன் பிறந்தவள் எப்படியிருக்கிறாள்?"

கனத்த குரலில் கேள்விகளைச் சரமாரியாக விடுத்தபடி திரும்பியவர் இருக்கையிலிருந்து எழுந்து நின்ற செல்வியைக் கண்டதும் அப்படியே நின்றார்.

சற்று உற்றுப் பார்த்தவர் முகத்தில் பிரமிப்பு வேகமாகப் பரவியது. அப்படியே உறைந்துபோனவரின் உடல் சிலிர்த்து நின்றது. அவளை வேகமாக நெருங்கியவர்,

"என்ன... என்ன இது? நான் கனவேதும் காண்கிறேனா? கங்கை வரையில் சோழர் படைகளுடன் சென்று மன்னாதி மன்னர்களையெல்லாம் வென்று சோழர் கொடியை கங்கைக்கரையில் பறக்கவிட்ட அரையன் ராஜராஜன் மகளா என் இல்லத்துக்கு வந்திருப்பது?

வடநாட்டு மன்னர்களையெல்லாம் வாட்போரில் வென்ற செங்கமலச் செல்விதானா என் முன் நிற்பது?”

அவரது குரல் உணர்ச்சி வேகத்தால் குழறியது, நெடுநெடுவென்ற அவரது நிமிர்ந்த தேகம் முன்னால் வளைந்தது. கைகள் உயர்ந்து அவளை நோக்கி நீண்டன.

“வா மகளே, வா, நீ வந்ததால் இந்த இல்லம் பெருமை பெற்றது. எத்தனை காலம் ஆயிற்று உன்னைக் கண்டு...” அவரது விழிகளில் நீர் கசிந்தது.

வல்லபன் அடித்து வைத்த சிலையாக நின்றான். மாளிகையின் பணியாட்கள் நின்ற இடங்களிலேயே உறைந்துபோய் நின்றார்கள்.

# 7. அத்திரி மலை

**ப**ண்டிதனை மற்றொரு பண்டிதனும், ஞானியை மற்றொரு ஞானியும், மகாவீரனை மற்றொரு வீரனும், எதிரியாயிருந்தாலும்கூட, சந்திக்கும்போது ஏற்படும் மகிழ்ச்சிக்கு ஈடான மற்றொரு மகிழ்ச்சி இந்த உலகில் கிடையாது என்று கூறுகிறது ஒரு வடமொழி வாக்கியம். போரில் இராவணனைச் சந்தித்தபோது அனுமன் கொண்ட மகிழ்ச்சியையும், மேகநாதனைச் சந்தித்தபோது இலக்குவன் கொண்ட மகிழ்ச்சியையும் இப்படித்தான் கூறுகிறது வால்மீகியின் மகா காவியம்.

விஜயாலயச் சோழ மன்னன் காலம் முதலே வாளையும், வேலையும், வில்லையும் அம்பையும், வாழ்வின் அங்கமாகவே கொண்டு, பிறவியெடுப்பதே சோழ நாட்டின் பெருமைக்காக என்று வாழ்வை அர்ப்பணித்து வந்த வம்சத்தில் வந்தவரும், கங்கைப் பயணத்தில் கோதாவரியைக் கடந்து மாசுணி தேசம் வரை அரையன் ராஜராஜனுடன் தோள் கொடுத்து, பின் மன்னரின் கட்டளையால் திரும்பி வந்து தென்திசைத்

தண்ட நாயகனாகப் பொறுப்பேற்றுக் கொண்ட உத்தம சோழ மூவேந்த விழுப்பரையருக்கு, செங்கமலச் செல்வியைத் தன் இல்லத்தில் எதிர்பாராது கண்டதால் ஏற்பட்ட மகிழ்ச்சி கட்டுக்கடங்காததாகவே இருந்தது.

எளிதில் உணர்ச்சி வசப்படாதவர் என்றும், போர்க்களங்களில் எந்த இக்கட்டான சூழ்நிலையிலும் வெகு திடமாகவும், நிதானமாகவும் முன்னேறுபவர் என்றும் பெயரெடுத்திருந்த தென்திசைத் தண்டநாயகரின் வெளிப்படையான அந்த மகிழ்ச்சி, அவரது வீரர்களுக்குச் சற்று வியப்பையே அளித்திருந்தது. அதுவரை செல்வியை நேரில் கண்டிராத வீரர்கள் பிரமிப்புடனும், கேள்விப்பட்டவர்கள் வியப்புடனும் அவளைக் கண்டனர்.

செல்வியின் அகன்ற விழிகள் மலர்ச்சியைக் காட்டினாலும், சுற்றிலும் நின்ற வீரர்களின்மீது அவளது பார்வையை ஓட்டிய விதத்தில் சற்று எச்சரிக்கையைக் காட்டியதும், விழுப்பரையர் சற்று நிதானித்தார். தமது வீரர்களை ஒருமுறை திரும்பி நோக்கியவர் "வீரர்களே, செங்கமலச் செல்வி இங்கு வந்திருப்பதைக் குறித்து எவரும் மூச்சு விடலாகாது. அப்படி மூச்சு விட்டதாகத் தெரிந்தால்... பின்னர் அவனுக்கு மூச்சே இருக்காது, எச்சரிக்கை.." என்றார். வீரர்கள் தலைதாழ்த்தி, அந்த உத்தரவை ஏற்றனர்.

"சரி, வா மகளே, மேலே எனது அறையில் சென்று பேசுவோம்" என்றவர் வல்லபனிடம் உணவு கொண்டு வரும்படி பணித்துவிட்டு, தமது வீரர்களில் சிலரை வல்லபனின் வண்டி வந்த பாதையில் பத்துக்காதம் வரை சென்று எவரேனும் தொடர்ந்து வந்திருக்கிறார்களா என்று பார்த்துவரும்படியும் பணித்தார்.

படிகளில் ஏறி மேல் தளத்துக்கு வந்த செல்வி தாழ்வரையைக் கடந்து விழுப்பரையரின் அறையை அடைந்ததும் பிரமித்தாள். அறை விசாலமாயிருந்தது.

கீழே கிடந்த விரிப்புகளிலும், சாளரங்களின் சீலை களிலும் தீட்டப்பட்டிருந்த சித்திரங்கள் அபாரமா யிருந்தன. சுவர்களில் பல நாடுகளின் போர்வாட்கள் மாட்டப்பட்டிருந்தன. யவனர்களின் பட்டையான நீளம் குறைந்த வாட்கள், ஈழத்தின் குறுகிய பிடிகளை உடைய வளைந்த வாட்கள், சேர நாட்டின் மெல்லிய நேரான நீண்ட வாட்கள், அவர்களின் பிரத்யேக ஆயுதமான எறிசெண்டுகள், சேரநாட்டில் பெருகிவிட்ட அராபியர் களும் அபிசீனர்களும் பயன்படுத்தும் அகன்ற பெருவாட்கள்,. ராஜராஜ சோழ தேவர் வென்ற மேற்குத்தீவுகளின் ஈட்டிகள் மட்டுமின்றி, அவள் பாடசாலையில் கண்டிருந்த பலவிதமான விற்களும், சுரிகைகளும், சக்கரங்களும் அறையின் மூலையில் குவிக்கப்பட்டிருந்தன. வரிசையாகத் தரையில் கிடத்தப் பட்டிருந்த அம்பறாத் தூளிகளில் அம்புகள் வகைவகை யாக நிரப்பப்பட்டிருந்தன. ஊடே பல ஓலைச்சுவடிகளும் கிடந்தன.

விழுப்பரையரின் அந்த விசாலமான அறையின் மூலையில் சாளரத்தை ஒட்டி மிகச் சாதாரணமான மஞ்சமொன்றும் கிடந்தது.

உடன்வந்த இரு உபதலைவர்கள் வாயிலில் நின்றனர். விழுப்பரையர் உள்ளே நுழைந்து அவளை மஞ்சத்தில் அமர வேண்டிக்கொண்டு எதிரே ஒரு இருக்கையை இழுத்து அமர்ந்து கொண்டார்.

“மகளே, கொட்டும் மழையில் நடுநிசியில் உன்னைச் சாலையோரத்தில் விட்டுவிட்டு செங்கதிர் மாலையுடன் அந்த முகுந்தன் சென்றுவிட்டான் என்று வல்லபனிட மிருந்து அறிந்தேன். கவலைப்பட வேண்டாம், அவனை நாளை மாலைக்குள் இங்கு கொண்டுவந்து சேர்க்கிறேன். தகுந்த தண்டனை நீயே அவனுக்கு அளிக்கலாம்” என்றார் சற்று உஷ்ணமான குரலில்.

“வேண்டாம் படைத்தலைவரே, அவன் போக்கிலேயே அவனை விட்டுவிடுங்கள். தென்கொங்கு நாட்டைச் சேர்ந்த அவனுக்கு அந்த மாலையை அணியும் தகுதி யில்லை. அவன் அதைக் கொண்டுசெல்லும் இடத்தையும், அதற்குக் காரணமானவர்களையும் கண்டறியவேண்டும். அதற்கு தகுதியான ஒற்றர்களை அனுப்பி வைத்தால் போதுமானது. நான் வந்த பணி வேறு” என்றாள் செல்வி நிதானமான குரலில்.

“சொல் மகளே, நீ வரப்போகிறாய் என்பதைக் குறித்து உன் தந்தையிடமிருந்து ஓலை வந்து இரு தினங்களா கின்றன. ஆனால் இப்படி வல்லபன் உன்னை அழைத்து வருவான் என்பதை நான் எதிர்பார்க்கவில்லை. என்ன பணிக்காக என்பதையும் அவர் தெரிவிக்கவில்லை...”

செல்வி சற்று மௌனம் சாதித்தாள். “இங்கு சேரலாதர் ராஜசிம்மர் தமது முன்னோர் கட்டிய ஆலயத்தை கற்றளியாக மாற்றிக் கொண்டிருக்கிறார் அல்லவா, அந்தப் பணிக்குச் சற்று தடங்கல் ஏற்படப்போவதாகவும், ராஜசிம்மர் சேரநாடு செல்லப் போவதாகவும், அவருக்கு உதவியாக நான் செல்லவேண்டுமென்றும் மன்னர் உத்தரவிட்டதாகக் கூறினார் தந்தை...” அவள் முகத்தில் சிந்தனை தெரிந்தது.

விழுப்பரையரின் விழிகளில் ஏதோ பளிச்சிட்டது. அவர் முகத்தில் சிந்தனை அதிவேகமாக ஓடுவது தெளிவாகத் தெரிந்தது. தலையை ஒருமுறை சிலிர்த்துக் கொண்டவர் “மகளே, தெற்கில் மீண்டும் ஏற்படப்போகும் போருக்கான முன்னோடிதான் இது என்பது புரிந்தாலும், அதற்காக உன்னை ஏன் அனுப்ப வேண்டும்?...” அவரது சொற்கள் இழுபட்டன.

செல்வியின் விழிகளிலும் குழப்பம் தெரிந்தது. அவள் குரலிலும் அது தொனித்தது “படைத்தலைவரே, போர்களும், முன்னோடியாக ஒற்றர்களை அனுப்புவதும் எனக்குத் தெரிந்தவைதான். ஆனால் நானே அப்படிச்

சென்றதில்லை. தந்தையாரும் இதுவரை அனுப்பிய தில்லை. நேரடியான போர்களைக் கண்டிருக்கிறேன். சேரலாதருடன் என்னை ஏன் அனுப்பப் பணித்தார் மன்னர் என்பதுதான் விளங்கவில்லை”

“மகளே, எனக்கு ஓரளவு புரிந்தாலும் அதுபற்றி நான் இப்போது ஏதும் கூற இயலாது. இங்கு நிலவும் சூழ்நிலையை மட்டும் சொல்கிறேன். பாண்டியனுக்கு மதுரையைக் கைப்பற்றும் எண்ண மிருக்கிறது. சேரநாடு பல சிற்றரசுகளாகப் பிரிந்திருந்தாலும் சேரலாதரை அகற்றுவதில் ஒன்றாக முனைந்திருக்கிறார்கள். ஈழத்தவர் உதவி பெருமளவில் அவர்களுக்குப் பின் வேறு உள்நோக்கத்துடன் நிற்கிறது. சேரலாதர் ராஜசிம்மர் சோழருடன் நட்பு பாராட்டுவது இவர்களுக்குப் பெரும் தடையாக இருக்கிறது” என்றவர் “சரி மகளே, நீ நீராடிவிட்டு உணவு எடுத்துக் கொண்டு ஓய்வெடுத்துக் கொள். நான் மாலையில் சேரலாதரைக் காண ஏற்பாடு செய்கிறேன்” என்றவர் எழுந்த வேகத்தில் “வல்லபா...” என்று அழைத்தபடியே படிகளில் இறங்கிச் சென்றார்.

அறையில் சற்று நேரம் தனித்துவிடப்பட்ட செல்வி சிந்தனையில் ஆழ்ந்தாள். உப்பரிகையை அடைந்து வெளியே நோக்கியவளின் பார்வையில் தென்பட்ட இல்லங்களும், உயர்ந்து எழுந்துநின்ற இரண்டொரு மாளிகைகளும், அடுத்து அடர்ந்து செழித்துக் கிடந்த மரக்கூட்டங்களும் ஏதோ நினைவுகளைக் கொண்டுவர முயன்றன. அவள் மனதில் அந்த ஊரும், மாளிகையும், வெகுகாலம் பழகியவை போன்ற உணர்வை ஏற்படுத் தின. “இங்கு இதுவரை நான் வந்ததேயில்லேயே, பின் இந்த ஊரும், இல்லங்களும், அதோ தூரத்தில் லேசாகப் புலப்படும் சிறு குளமும், அதில் பிரதிபலிக்கும் வெளிச்சக் கோடுகளும், பழகியவைபோல் தோன்றுகிறதே... அந்தக் குளத்தின் கரையில் புரவிகள் பல மரங்களில் கட்டி வைக்கப்பட்டிருக்க வேண்டுமே ...அங்கிருந்து நேர் மேற்கில் ஏதோ மலைப்பகுதி இருக்கிறது அல்லவா?

இன்னும் மலைப்பகுதியில் சென்றால் ஓர் அருவி...”. ...அவளையறியாமல் அவளது வலக்கரம் சற்றுப் பின்னால் நகர்ந்து எதையோ தேடியது. பின்னர் பக்கச் சுவரைப் பற்றி நகர்ந்து இருப்பு வளையமொன்றில் மாட்டி இறுகப் பற்றியது. அதைப் பற்றிய பின்னரே திரும்பி நோக்கியவளின் விழிகளை வியப்பு கலந்த அதிர்ச்சி பற்றிக்கொண்டது.

“இங்கு உப்பரிகைத் தூணில் வளையம் இருப்பதை முன்னதாக நான் கவனிக்கவே இல்லையே? பின்னர் எப்படி எனக்கு அது தெரிந்தது? அனிச்சையாக என் கரம் எப்படி அதைப் பற்றியது?” அவளது முகத்தில் வியப்பும் குழப்பமும் படர்ந்தது.

அவளது சிந்தனையோட்டம் பட்டென்று அறுந்தது. பின்னாலிருந்து வல்லபனின் குரல் ஒலித்தது “அக்கா... உணவு கொண்டு வந்திருக்கிறேன்” என்று.

திரும்பிய அவளது முகத்தைக் கவனித்த வல்லபன் “என்ன அக்கா, உன் முகம் ஏதோ குழப்பத்தைக் காட்டுகிறதே?” என்றான்.

“ஆம் வல்லபா, இந்த ஊரும், மாளிகையும், பழகிய இடங்களாகத் தோன்றுகிறது...சரி, இதே போல் மேற்குப்புறத்தில் இன்னோர் உப்பரிகை இருக்கிற தல்லவா? அதன் தூண்களில் ஊஞ்சல் பலகையை மாட்டக் கூடிய இதே போன்ற வளையங்களும் சங்கிலியும் இருக்கின்றனவா?” என்றாள்.

வல்லபனின் முகத்தில் வியப்பு தொற்றிக் கொண்டது. “ஆம் அக்கா, நான் சிறுவனாக இருந்தபோது அதில் விளையாடியிருக்கிறேன். இப்போது சங்கிலிகளைக் கழற்றி வைத்திருக்கிறார்கள். ஆனால், அது உனக்கெப்படித் தெரிந்தது?” என்றான் வியப்பு பூரணமாக ஒலித்த குரலில்.

செல்வியின் முகத்திலிருந்த குழப்பம் தெளியவில்லை “ஆம். வல்லபா, எனக்கு எப்படி இவை நினைவில்

இருக்கிறது என்பது புரியவில்லை. ஆனால் இந்த மாளிகை எனக்குப் புதிதல்ல என்பது புரிகிறது. சரி, சற்றுப் பொறு, நான் அரை நாழிகையில் நீராடிவிட்டு வந்துவிடுகிறேன்" என்றவள் சற்று நேரத்தில் புத்தம் புதிதாய்த் திரும்பி வந்தாள். அவளது உடை சோழ வீரர் அணியும் உடையாக இருந்தது. சுருண்ட கருங்குழல் முடிச்சிடப்பட்டுத் துணியொன்றும் சுற்றப்பட்டிருந்தது.

வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்த வல்லபனின் திறந்த வாயை ஒரு தட்டுத் தட்டி மூடியவள், மளமள வென்று உணவை அருந்தி முடித்துவிட்டு "வா வல்லபா, உன் மாமன் திரும்பிவருவதற்குள் ஊரைச்சுற்றிப் பார்க்கலாம்" என்றாள்.

"வேண்டாம் அக்கா, சுற்றிப் பார்ப்பதற்கு இந்த ஊரில் ஏதும் இல்லை, தவிர நாம் வெளியே சென்றிருக்கும்போது என் மாமன் திரும்பி வந்துவிட்டால்...?"

"வரட்டும், பார்த்துக் கொள்ளலாம், முதியவர்கள் வீட்டுக்குள்ளேயே அமர்ந்து ஊரைப் பற்றிப் பேசுவார்கள். இளையவர்கள் ஊருக்குள் சுற்றிக்கொண்டு உலகை அறிந்துகொள்வார்கள். இது இயற்கை. வா போகலாம்" என்றவள் தடதடவென்று படிகளில் இறங்கி, வாயிலில் நின்ற வீரனைப் புரவிகளைக் கொண்டுவரப் பணித்தாள்.

பார்வைக்கு மிக அழகாகவும், அமைதியாகவும் புலப்பட்டது அந்தச் சிறிய ஊர். ஒருமுறை ஊரையும், மரக்கூட்டங்களுக்கிடையேயிருந்த குளத்தையும் சுற்றிவிட்டுப் புரவியை மேற்கு நோக்கித் திருப்பிய செல்வி, ஆலயம் எழுந்து கொண்டிருந்த பகுதியை நோக்கிச் சென்றாள். சோழநாட்டுப் பாணியிலேயே எழுந்து கொண்டிருந்த அந்த ஆலயத்தில் சோழநாட்ட வருடன் சேர நாட்டுச் சிற்பிகளும் இணைந்து பணி செய்து கொண்டிருந்தார்கள். ஒருமுறை திரும்பி இருபுரவி

களையும் நோக்கிய சிற்பிகளும், கல்தச்சர்களும் வந்தவர்களின் சோழவீரர் உடைகளைக் கண்டு சாவதானமாகத் தமது பணிகளைத் தொடர்ந்தார்கள்.

ஆலயம் எழுந்து கொண்டிருந்த பகுதிக்கு வடக்கே கிடந்த சமவெளியில் ஏராளமான பாறைகளும், உடைபட்ட கற்களும் குவிந்து கிடக்க, கல்தச்சர்கள் சிற்பிகள் குறித்த அளவுப்படி பாறைகளை வெட்டிக்கொண்டும், செதுக்கிக் கொண்டும் மும்முரமாகப் பணியிலிருந்தனர். பாறைகளில் வரிசையாகத் துளையிட்டுக் கொண்டிருந்தவர்களைக் கண்ட செல்வி "வல்லபா, பாறைகளில் ஏன் இப்படி வரிசையாகத் துளையிடவேண்டும்?" என்றாள்.

"அக்கா, இந்தத் துளைகளில் மரச்சட்டங்களை இறுக அடித்து ஆற்றில் போட்டுவிடுவார்கள். தண்ணீர் ஊறியதும் மரம் பெருத்து துளையிட்ட வரிசையிலேயே நேர்க்கோடாக பாறையைத் துண்டாக்கிவிடும். பின்னர் எடுத்து சமமாகச் செதுக்கிக் கொள்வார்கள். பக்கச்சுவர்களுக்கும், சுற்றுச் சுவர்களுக்கும் ஒரே அளவில் செதுக்கக் கல் தச்சர்கள் இந்தமுறையைத்தான் கையாளுவார்கள். அதோ பாருங்கள், வெவ்வேறு வடிவப் பாறைகளை ஆண், பெண், இரண்டுமில்லாதது என்று மூன்று பிரிவுகளாகப் போட்டு வைத்திருக்கிறார்களே, சிற்பிகள் விக்கிரகங்கள் செய்ய அவற்றிலிருந்து தேர்ந்தெடுப்பார்கள்."

"சரி, வா நதியைச் சென்று பார்க்கலாம்" என்றவளின் புரவி அதிவேகமாகப் பாய்ந்தது. சமவெளியைக் கடந்து மரக்கூட்டங்களை ஊடுருவிய புரவி நதிக்கரையை அடைந்ததும் நின்றது. புரவியிலிருந்து குதித்து இறங்கி நீண்ட படிகளைக் கொண்ட படித்துறையின் அருகில் வந்து நின்றாள் செல்வி. அவளது நீண்ட விழிகள் சலசலத்து ஓடிய நீர்ப்பரப்பையும், தூரத்தில் அது வளைந்து திரும்பிய இடத்தையும், எதிர்க்கரையில் செழித்துக்கிடந்த மரங்களையும் வெறித்து நோக்கின. அலைகளின் வீச்சு அதிகம் இன்றி, ஆனால் நல்ல

வேகத்துடன் பாய்ந்த கருணையாற்றின்* ஓட்டம் அவளது மன ஓட்டத்தை வேறு திசையில் திருப்பியிருக்க வேண்டும். கனவுச்சாயை பலமாகப் படரத்தொடங்கிய அவளது விழிகளில், அவ்வப்போது ஏதோ பளிச்சிட்டு மறைந்தது.

அருகில் வந்து நின்ற வல்லபன் தன்னை ஏறெடுத்த அவளது விழிகளில் தெரிந்த குழப்பத்தைக் கவனித்தான். அவன் முகத்தில் முறுவலொன்று நெளிந்தது. அடுத்து அவனிடமிருந்து எழுந்த கேள்வி அவளைத் திகைக்க வைத்தது "என்ன அக்கா, இந்தப் படித்துறையையும், கருணையாற்றின் வெள்ளத்தையும் இதற்கு முன்பே கண்டிருப்பதாகத் தோன்றுகிறதா?"

சற்று நிதானித்த செல்வி கேட்டாள் "ஏன் அப்படிக் கேட்கிறாய்?"

"உன் முகம்தான் சொல்கிறதே, இங்கு வந்தது முதல் நீ இப்படித் தயங்கித் தயங்கி நிற்பதையும், வெறித்துப் பார்ப்பதையும் பார்த்துக் கொண்டுதானே இருக்கிறேன்"

செல்வி பதிலேதும் கூறாமல் அவனை வெறித்து நோக்கினாள்.

"சரி வா, இந்த நதியோரமே சென்றால் அந்த மலையடி வாரத்தில் ஓர் ஆலயம் இருக்கிறது. அங்கு சென்றால் ஏதேனும் நினைவு வருகிறதா என்று பார்க்கலாம்" என்ற வல்லபன் புரவியை நதிக்கரையோரமாகவே நடத்தினான்.

வளைந்து சென்ற கருணையாற்றின் அகலம் மலையை நெருங்க நெருங்க சற்று கூடிக்கொண்டே வந்தது. பொதிகையின் அந்தத் தொடர் நெருக்கத்தில் பார்க்கப் பார்க்க பல ரகசியங்களை உள்ளடக்கியதாகத் தெரிந்தது. அடிவாரத்தில் பெரும் பாறைகளும் மேலே செல்லச் செல்ல அடர்ந்த செடிகொடிகளும் மரங்களுமாகத்

★ தற்போது கடனாநதியென்று அழைக்கப்படுகிறது

தெரிந்த பொதிகையிலிருந்து புறப்பட்டு வந்த தென்றல் பலவித மூலிகைகளின் மணங்களையும் கொண்டுவந்தது.

"அக்கா, இந்த மலைக்கு அத்திரி மலையென்று பெயர். அத்திரி முனிவர் தமது சீடர்களுடன் இங்கு வாழ்ந்த தாகச் சொல்கிறார்கள். சித்தர்கள் பலர் இன்னும் இங்கு நடமாடுவதாகவும் நம்புகிறார்கள்" என்றான் வல்லபன்.

ஆற்றின் கரையை ஒட்டி ஒரு மண்டபமும், நீராடிய மக்கள் பலர் அங்கு துணிகளை உலர்த்திக்கொண்டும் காணப்பட்டார்கள். மண்டபத்தை ஒட்டிச் சென்ற பாதை நேரே ஆலயத்தின் வாயிலை நோக்கிச் சென்றது. புரவியை மரமொன்றில் கட்டிய வல்லபனும், செல்வியும் ஆலயத்தினுள் சென்று மக்களோடு மக்களாக வணங்கிவிட்டுச் சுற்றி வந்தனர்.

மலைகளுக்கு நடுவே கம்பீரமாக நின்ற அந்த ஆலயத்தின் தோற்றம் செல்வியின் மனதில் இனம் புரியாத அமைதியைத் தந்தது. ஆலயத்தின் சுவர்களிலும், பக்கத்தூண்களிலும் பல சித்தர்களின் சிற்பங்கள் தெரிந்தன. காற்றில் கலந்து பலமாகவே வந்த மூலிகை களின் மணம், மனதுக்கும் உடலுக்கும் ஒரு புதிய சக்தியைக் கொடுப்பதை உணர்ந்தாள் செல்வி. அதே நேரத்தில் அந்த ஊரும், ஆலயமும், அந்தக் கருணை யாறும் முன்னதாகவே தான் அறிந்திருப்பது போன்ற உணர்வை மீண்டும் ஏற்படுத்துவதையும் அவளால் உணர முடிந்தது. உச்சிக்கால பூஜை முடிந்து மக்கள் திரும்பத் தொடங்கிவிட்டதால் ஆலயத்தில் சற்றைக் கெல்லாம் ஓரிருவரே தென்பட்டனர். வெளியே வந்து ஆற்றை நோக்கி நடந்தாள் செல்வி.

ஆற்றங்கரை மண்டபம் வெறிச்சிட்டுக் கிடந்தது. அந்த மண்டபத்தின் அருகே வந்ததும் நின்றவளது விழிகள் அந்த மண்டபத்தை வெறித்தன. மண்டபத்தின் படிகளில் நின்றவளின் விழிகளில் என்னவென்று புரியாத உணர்வு படர்ந்திருந்தது. புரவிகளை நடத்தியபடியே உடன் வந்த வல்லபனும் அவளருகே வந்து நின்றான்.

"வல்லபா..." செல்வியின் குரல் வெகு ஆழத்திலிருந்து ஒலித்தது.

"சொல் அக்கா"

"இந்த மண்டபம்... இந்த மண்டபத்தில்தான்..."

வல்லபனின் முகத்தில் முறுவல் விரிந்துகிடந்தது. என்னவென்று விளங்காத தொனியில் அவன் குரல் ஒலித்தது.

"ஆம் அக்கா. இனி கூறிவிட வேண்டியதுதான். இந்த மண்டபத்தில்தான் தாயுடன் ஆலயத்துக்கு வந்த சிறுமியொருத்தி அழுதபடி நின்றிருந்தாள். அவள் தாயையும் உடன் வந்தவர்க்ளையும், வாட்களும் வேல்களும் தாங்கிய பலர் துரத்தித் தாக்கிக் கொண்டிருந் தனர். அந்தத் தாயைக் காப்பாற்ற முயன்றவர்கள் அனைவருமே கொல்லப்பட்டனர். முரடர்களில் ஒருவன் வீசிய குறுவாள் மண்டபத்தின் தூணில் பட்டு அருகில் விழுந்தது. பயத்தில் அலறினாள் அந்தச்சிறுமி... முதுகில் பாய்ந்துவிட்ட குறுவாளுடனும், காயங்களுடனும் ஆற்றின் கரையோரமாகவே மலையை நோக்கி ஓடினாள் அவளது தாய். தாயைத் தொடர்ந்து அந்த முரடர்கள் துரத்திச் சென்றனர்... அதன் பிறகு அந்தச் சிறுமி தன் தாயைப் பார்க்கவே இல்லை... நான் கூறுவது சரிதானா அக்கா?"

பிரமிப்பில் உறைந்துபோன முகத்துடன் அடித்து வைத்த சிலையாகவே நின்றாள் செல்வி. ஏதோ கூறவந்த அவளது இதழ்கள் திறந்தபடி நின்றுவிட்டன. என்றைக்கும் கலக்கத்தையே கண்டிராத அவளது விழிகளிலிருந்து கண்ணீர் வழிந்து உதிர்ந்து அந்த மண்டபத்தின் படிகளில் உருண்டது. நீரில் மிதக்கும் இரு கயல்களாகத் தெரிந்த அவளது விழிகள் பல கேள்வி களுடன் வல்லபனை வெறித்தன.

"பின் ஊர்ப்புறத்திலிருந்து வீரர்கள் பலர் புரவிகளில் அங்கு விரைந்து வந்தனர். அவர்களின் முன்னால் உயர்ந்த உருவமும் நீண்ட வாளும் கொண்ட அவர் களின் தலைவன் அந்தச்சிறுமியைக் கண்டு அணைத்துத் தூக்கிக் கொண்டான். மற்றவர்கள் மலையை நோக்கி வேகமாகச் சென்றனர். அந்த வீரன் சிறுமியைத் தூக்கிப் புரவியின் முன்புறமாக அமர்த்திக் கொண்டு எங்கோ சென்றுவிட்டான். அத்துடன் அந்தச் சிறுமிக்கும் இந்த ஊருக்குமான தொடர்பு அறுந்தே போனது..."

செல்வியின் இதழ்கள் ஏதோ முணுமுணுத்தன. விழிகள் அவனை வெறித்து நோக்கின. வல்லபனை ஏதோ அவள் கேட்க முயல்வது தெளிவாகத் தெரிந்தது. மனமும் புத்தியும், குரலும் அடைத்துக் கிடந்ததால் ஏதும் சொற்கள் வெளிவரவில்லை.

# 8. சேரலாதன் ராஜசிம்மன்

**ஆ**ண்டவன் என்றாலும் சரி, விதி என்றாலும் சரி, ஊழ்வினை என்றாலும் சரி, மனிதன் நம்பும் எதுவுமே தொடர்ந்து இன்பத்தையோ, தொடர்ந்து துன்பத்தையோ அனுபவிக்க விடுவதில்லை. இரவும் பகலும், நீரும் நிலமும், நல்லவையும் அல்லவையும், உறவும் பிரிவும், இன்பமும் துன்பமும், வாழ்வும் தாழ்வும், வெற்றியும் தோல்வியும் என இயற்கை அனைத்தையுமே இரண்டாகத்தான் பிரித்து வைத்திருக்கிறது. அதிலும் ஆணுக்கும் பெண்ணுக்குமான இன்ப துன்பங்களையும் இன்னும் இருவிதமாகத்தான் பிரித்து வைத்திருக்கிறது.

நினைவு தெளிந்த நாளிலிருந்து சோழர் படைத் தலைவன் அரையன் ராஜராஜனால் வீரத்தையே அஸ்திவாரமாக ஊட்டப்பட்டு, அவனது மகளாகவே மதிக்கப்பட்டு, வாளையும், வில்லையும், போர்களையும், வெற்றிகளையும், அதனால் பெருமைகளையுமே கண்டு

வளர்ந்துவிட்ட செங்கமலச் செல்விக்கு, தனது வாழ்வின் முற்பகுதியில் நிறைந்து கிடந்த சோகமும், தாயையும் தந்தையையும் உடன்பிறந்தவனையும் இழந்து, சொந்த மண்ணையும் பிரிந்து எங்கோ இதுநாள்வரை வாழ்ந் திருக்கிறோம் என்ற உணர்வு பலமாகவே தாக்கிவிட்ட தால் வெகுநேரம்வரை அவளிடமிருந்து வார்த்தைகள் ஏதும் வரவில்லை.

அன்பு வழிந்த விழிகளோடு அவளை நெருங்கிய வல்லபன் அவளது கரங்களை ஆதரவோடு பற்றிக் கொண்டான். அவனது குரலும் நெகிழ்ந்து ஒலித்தது "அக்கா, வருந்தாதே, படைத்தலைவர் காரணத்தோடு தான் உனக்கு அத்தனை பயிற்சிகளையும் அளித்து வீரத்தோடு வளர்த்திருக்கிறார். மாமன்னர் ராஜேந்திரரும் காரணத்தோடுதான் உன்னை இங்கு அனுப்பி வைத் திருக்கிறார். உன் வாளுக்கும் வில்லுக்கும் இங்கு நிறையவே பணிகள் காத்திருக்கின்றன. நீ அறிந்துகொள்ள வேண்டியவையும் பல இருக்கின்றன...வா போகலாம். மாலையில் நீ சேரலாதரைச் சந்திக்க வேண்டும், அதற்கான ஏற்பாடுகளுடன் தண்டநாயகர் திரும்பி வந்து கொண்டிருப்பார்"

விழிகளைத் துடைத்துக் கொண்டு வல்லபனை நோக்கி சோகம் கலந்த முறுவலுடன் தலையசைத்தவள் புரவியில் தாவியேறினாள்.

கதிரவன் மேற்கே நகர்ந்திருந்தான். பொதிகை மலையின் மேகக்கூட்டங்கள் பெருங்கூட்டங்களாய்க் கவியத் தொடங்கின. அவை தாழ்ந்து கூட்டமாய் மலையின் பாதிப்பகுதி வரை நகர்ந்து மூடவும் செய்தன. மலைப்பகுதியிலிருந்து சிலீரென்ற காற்று பலமாக வீசிச் சிலிர்க்கச் செய்தது. பசுமை போர்த்திய வயல் வெளிகளும், தூரத்து மரக் கூட்டங்களும் காற்றில் பலமாக அசைந்தாடின. கருணையாற்றின் வெள்ளம் புது வேகத்துடன் துள்ளி ஓடுவது புலப்பட்டது.

“அக்கா, மலைக்கு மேற்கே கானகத்தில் மழை தொடங்கியிருக்கிறது. இங்கு மலைகளைத் தாண்டும்வரை மழை பெய்வதே புலப்படாது. அந்த முகடுகளைத் தாண்டியதும் துவக்கத்திலேயே அதி வேகமாகப் பெய்யத் தொடங்கிவிடும். நாம் விரைவில் இல்லத்தை அடைந்து விடுவது நல்லது” என்ற வல்லபன் தன் புரவியின் பிடரியில் மெல்ல இருமுறை தட்டினான்.

தன் வேகநடையைச் சட்டென்று அதிவேகமான பாய்ச்சலாக மாற்றிக் கொண்ட அந்தப் புரவி முன்னால் பாய்ந்து, கருணையாறு வளைந்து திரும்பிய இடத்தில் விலகி, கருங்கல் பாலமொன்றைக் கடந்து, தென் கிழக்காகச் சென்ற ஒற்றையடிப் பாதையில் விரைந்தது.

தனது புரவியில் அனாயாசமாக அவனைத் தொடர்ந்த செல்வி “வல்லபா, இது வேறு பாதையாகத் தெரிகிறதே... நாம் வந்த வழி வேறு அல்லவா?” என்றாள்.

“ஆம் அக்கா, நதிக்கு மறுபுறம் செல்லும் பாதை திருவாலீஸ்வரம் ஆலயத்தை ஒட்டிச் செல்கிறது. அங்கு சோழர் நிலைப்படைப்பிரிவு ஒன்று** இருக்கிறது. நாம் மறுபடி வந்த பாதையிலேயே சென்றால் தாமதமாகி விடும். இந்த ஒற்றையடிப் பாதை நம் இளங்கோகுடிக்குச் செல்லும் குறுக்குப் பாதை. இதில் விரைவாக இல்லத்தை அடைந்துவிடலாம். வா.”

ஒருமுறை திரும்பி பொதிகையை கவனித்தாள் செல்வி. மழை அடிவாரத்தில் பலமாகப் பெய்யத் தொடங்கி, வேகமாக அவர்களை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. இன்னும் ஒருநாழிகைக்குள் அது தங்களை நெருங்கிவிடும் என்பதைப் புரிந்து கொண்டவள் தனது புரவியைப் பாயவிட்டாள்.

அவர்கள் இல்லத்தை அடைவதற்குச் சற்று முன்பாகவே மழையின் நீர்க் கரங்கள் பலமாகத் தாக்கத்

** சோழ மன்னன் ராஜராஜரால் நியமிக்கப்பட்ட நிலைப்படைப்பிரிவு திருவாலீஸ்வரத்தில் நிரந்தரமாகவே இருந்தது South Indian inscription

தொடங்கிவிட்டன. இல்லத்தில் நுழையும்போது முழுவதுமாக இருவருமே நனைந்திருந்தனர்.

இல்லத்தில் வேறு உடைகளும், சுவையான உணவும் அவர்களுக்காகக் காத்திருந்தது. பணியாளர்களை ஓரமாக நிற்கவைத்துவிட்டு, விழுப்பரையரின் துணைவியாரே உணவு பரிமாற, வல்லபனின் அன்னை அருகில் அமர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள். அவளது நோயும், தளர்ச்சியும் சொந்த மண்ணை மிதித்ததும் காணாமல் போயிருந்தன.

விழுப்பரையரின் மனைவி வரகுணவல்லி பிராயம் ஐம்பதை நெருங்கிக் கொண்டிருந்தாலும் பாண்டிய நாட்டுக்கே உரிய அகன்ற விழிகளில் கனிவும், மாறாத முறுவலுடனும், குரலில் வாத்ஸல்யமுமாகத் தெரிந்தாள். உணவைப் பரிமாறியபடியே செல்வியின் அருகில் வந்து அமர்ந்தவளின் விழிகள் அவளைப் பரிவுடன் பார்த்தன. அவள் தலையைக் கோதியவள் வல்லபனை நோக்கித் திரும்பினாள். அடுத்து அவளது குரல் மென்மையாக ஒலித்தது,

“வல்லபா, செல்வியிடம் விவரங்களைக் கூறினாயா?” என்று.

நிமிர்ந்து அவளை நோக்கிய வல்லபன் “கூறினேன் அத்தை, ஆனால் ஒரு பாதி மட்டுமே கூறமுடிந்தது” என்றான்.

செல்வியின் விழிகள் அவளை ஏறெடுத்தன. அவளது விழிகளில் தெரிந்த கேள்விகளையும் ஆவலையும் கவனித்த வரகுணவல்லியின் விழிகள் அன்பைச் சொரிந்தன.

“மகளே, நீ இந்த இல்லத்தைச் சேர்ந்தவள். எங்கள் குடும்பத்துப் பெண். இப்போது இருப்பதும் உனது இல்லம்தான். சக்கரக் கோட்டத்திலும், ஒட்டர நாட்டிலும், வங்கத்திலும் நம் படைத்தலைவருடன் நீ

செய்த சாகசங்களை நாங்கள் தினம் தினம் கேட்டு அனுபவித்துப் பெருமையடைந்தோம். மன்னரிடம் உன்னை இங்கு அனுப்பி வைக்கும்படி வெகுகாலமாய் வேண்டிக்கொண்டிருந்தோம். அவரும் தக்க சமயத்தில் அனுப்பிவைப்பதாக வாக்களித்திருந்தார். அதற்கு இப்போதுதான் வேளை வந்திருக்கிறது." மென்மையான குரலில் கூறி நிறுத்திய வரகுணவல்லியின் விழிகள் கலங்கியிருந்தன.

செல்வி சற்றுத் திகைத்தாள். அவளது விழிகளிலும் முகத்திலும் குழப்பம் வேகமாகப் படர்ந்தது "இது என் இல்லம்தானா?" செல்வியின் குரலும் ஆழத்திலிருந்து ஒலித்தது.

"ஆம் மகளே, இது உன் இல்லமேதான்" என்ற வரகுண வல்லி விழிகளை மூடி, சில கணங்கள் மௌனம் சாதித்தாள். அவள் மனதில் பழம் நினைவுகள் பல ஓடிக் கொண்டிருப்பது தெளிவாகவே புலப்பட்டது. சற்றுக் கழித்துத் திறந்த அவள் விழிகளில் ஈரம் கசிந்து கொண்டிருந்தது. குரலும் ஏதோ கனவிலிருந்து ஒலிப்பது போல் ஒலித்தது. "செண்பகவல்லி...ஆம். அதுதான் என் இளைய சகோதரி, உன் தாயின் பெயர். காதல் அனை வருக்கும் வெற்றி பெறுவதில்லை, அப்படி வென்றாலும் அதன்பிறகான நல்வாழ்வு அனைவருக்குமே கைகூடி விடுவதில்லை மகளே. காதலுக்காகக் கட்டுப்பாடுகளை மீறிவிடுவதன் பலன், வாழ்வைத் தொடங்கிய பிறகுதான் புரிகிறது. ஆனால் அது புரியும்போது வாழ்க்கையே நம் கட்டுப்பாட்டை மீறிச் சென்று விடுகிறது."

மனித இனத்தை ஆட்டிப்படைக்கும் சக்திகளில் ஒன்றான காதலைப் பற்றிய நடைமுறைத் தத்துவத்தைக் கூறிய வரகுணவல்லி சற்றுநேரம் மௌனம் சாதித்து விட்டுத் தொடர்ந்தாள்,

"...அடக்கமும், கல்வியும், பண்பும் பக்தியுமாகவே வளர்ந்தவள்தான் உன் அன்னை. இந்தக் குடும்பத்தில்

அன்புக்கும் ஆதரவுக்கும் குறைவேயில்லை. ஆனால்... காதல் அவளது வாழ்வின் போக்கையே மாற்றியது. கல்வியோ, பண்போ, அறிவோ, குடும்பத்தவரின் அன்போ அவளது காதலைத் தடுக்கவில்லை, அதன் விளைவுகளையும் தடுக்க இயலவில்லை. அவளது வாழ்வு சிதைந்து, பெற்ற குழந்தைகளும் எங்கெங்கோ பிரிந்து வாடுவதையும் தடுக்க இயலவில்லை"

உடன் பிறந்தவளின் நினைவு வரகுணவல்லியைச் சற்று நேரம் சோகத்தின் மௌனத்தில் ஆழ்த்தியது. செல்வியின் முகத்தைக் கலங்கிய விழிகளுடன் உற்றுக் கவனித்தவள் "மகளே, உன் அன்னையின் சாயல் அப்படியே உன்னிடம் இருக்கிறது. உன்னைப் பார்ப்பதே எனக்கு நிறைவைத் தருகிறது..." என்றவள் மறுபடி ஏதோ கூற முற்பட்டாள்.

அவள் வார்த்தைகள் முடியுமுன் வாயிலில் தடதடவென புரவிகள் பல வந்து நிற்பதும், வீரர்கள் குரல்களும், கனத்த குரலில் விழுப்பரையரின் உத்தரவுகளும் ஒலித்தன.

தடதடவெனப் படிகளில் ஏறி உணவருந்தும் இடத்துக்கு வந்தவர் இருக்கையொன்றில் அமர்ந்தார். சகோதரியையும், வல்லபனையும், செல்விக்குப் பரிமாறிக் கொண்டு அருகில் அமர்ந்திருந்த வரகுணவல்லியையும் கண்டவர் முகத்தில் கனிவு பிறந்தது. செல்வியை நோக்கியவர் "மகளே, சேரலாதர் ஆலயத்துக்குப் புறப் பட்டுவிட்டார் என்று செய்தி வந்திருக்கிறது. மாலையில் நீ அவரைச் சந்திக்க ஏற்பாடுகள் செய்து விடுகிறேன். அது மட்டுமல்ல..." என்றவர் சற்றுத் தயங்கிவிட்டு "இரு தினங்களுக்கு முன் ஈழத்து மானாபரணனின் கலம் சேரநாடு செல்வதை நம் கோட்டாற்றுக்கரை வீரர்கள் கவனித்திருக்கிறார்கள். நேற்று பொதிகை மலைக் காட்டில் அவனது வீரர்களும் நடமாடுவதாகச் செய்தி வந்திருக்கிறது. நீ சற்று எச்சரிக்கையாக இருக்க வேண்டும் மகளே" என்றார். சற்று நிதானித்தவர்,

“செல்வி, உன்னுடன் பேசுவதற்கும் கேட்பதற்கும் ஏராளமாய் விஷயங்கள் இருக்கின்றன. என் பணிகள் என்னை நிற்க விடாமல் ஓடிக்கொண்டேயிருக்க வைக்கிறது, என்ன செய்வது?” என்றவர் மற்றவர்களை நோக்கித் திரும்பினார்..

மற்றவர் முகங்களைக் கூர்ந்து கவனித்தவருக்கு, தமது மனைவியின் விழிகளின் கலக்கமும், வல்லபனின் ஏக்கப் பார்வையும், சகோதரியின் முகத்தில் பிரதிபலித்த கேள்வியும் அவருக்கு அங்கு என்ன விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தார்கள் என்பதை புரியவைத்தது.

விழுப்பரையரின் விழிகள் வரகுணவல்லியைக் கூர்ந்து நோக்கின. பின் செல்வியின்மீது பதிந்த அவரது விழிகளிலும் அன்பும் பரிவும் பூத்தன. அவரது குரலும் நெகிழ்ந்தே ஒலித்தது “மகளே, நீ யாரென்பதை அறிவிக்கும் காலம் இன்னும் வரவில்லை, அதை ஈழத்தவர் சிலர் அறிவார்கள். ஈழத்தவருடன் சேர்ந்து பாண்டிய ஒற்றர்கள் எங்கும் உலவுகிறார்கள். இந்தப்போர் முடிவுக்கு வரும்போது நானே உனக்கு அனைத்தையும் தெரிவிக்கிறேன். அதுவரை பொறுத்திரு...ஆனால் மகளே, போர் தொடங்குமுன் ஈழத்து மானாபரணனைச் சந்திப்பதைத் தவிர்த்துவிடு” என்றவர் “மன்னரிடமிருந்து ஓலை வந்திருக்கிறது. சேரலாதர் ஆலயத்துக்கு இன்று மாலை வந்துவிடுவார். அவர் சில நாட்கள் வழுதியூர் அரண்மனையில் தங்கி, பணிகளைக் கவனிப்பது வழக்கம். மாலையில் நீ அவரைக் காணச் செல்லும் போது சோழ மன்னரின் இந்த ஓலையை அவரிடம் அளித்துவிடு” என்றார்.

**பொ**திகையின் சாரலையொட்டி கிழக்குமேற்காக நீண்டிருந்த அந்தப் பகுதியில் மாலைப்பொழுது மிக ரம்மியமாக இருந்தது. மேகக்கூட்டங்கள் மலைமுகடுகளை விட்டுத் தாழ்ந்து உலவத் தொடங்கியதால் காற்றில் குளிர் சிலீரென்றது. சற்றுத் தொலைவிலிருந்து குளத்தின்

கரையிலிருந்த மரக்கூட்டங்களில் கிளிகளும் மைனாக் களும் போட்ட கூச்சல் பெரிதாக ஒலிக்கத் தொடங்கியது. கதிரவன் மறைந்த சற்றைக்கெல்லாம் இருள் வேகமாகக் கவிந்ததால், இல்லங்களின் மாடங்களில் தீபங்கள் ஏற்றப்பட்டன. ஆலயத்தை நோக்கிச் சென்ற பாதை வெறிச்சிட்டுக் கிடந்தது. பாதையும் மழை நீர் ஓடியதால் சேறும் சகதியுமாகக் கிடந்தது. புரவி ஆங்காங்கே கிடந்த கற்களிலும், சிறு பள்ளங்களிலும் சற்றுத் தடுமாறியே நடந்தது.

கிராமத்து மக்களும், மேய்ச்சலுக்காக ஆடுமாடுகளை மலையடிவாரத்துக்கு ஓட்டிச் சென்றவர்களும் வேகமாகத் திரும்பத் தொடங்கிவிட்டிருந்தனர். ஆலயத்தில் பணி செய்துகொண்டிருந்த சிற்பிகளும், மற்ற பணியாளர்களும் இளங்கோகுடியை அடுத்திருந்த பிரம்மதேசத்தில் அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த இல்லங்களுக்குத் திரும்பிவிட்டிருந்தனர்.

இரவின் முதல் ஜாமம் முடியும் முன்னரே அந்தப் பகுதியில் பெரும் அமைதி சூழ்ந்துகொள்ளத் தொடங்கியது. புரவியொன்றில் ஏறி ஆலயத்தை நோக்கிச் சென்ற செல்வியின் மனதில், இந்தப் பகுதி இத்தனை துரிதமாக அமைதியாகிவிட்டதற்கான காரணம் என்னவாக இருக்கும் என்ற கேள்வி எழுந்தது. அவளுக்குப் பதில் சொல்வது போல மலைப்பகுதியிலும், உயரே தொடர்ந்த காட்டுப் பகுதியிலிருந்தும் திடீரென்று யானைக் கூட்டத்தின் பெரும் பிளிறல்கள் ஒலித்தன. போதாக்குறைக்கு அந்த யானைகளிடம் சிக்கியதாலோ என்னவோ, வேங்கை ஒன்றின் உறுமல் கூடவே பலமாக ஒலித்தது. பாதையோரத்துப் புதர்களில் இருந்து பளிச்பளிச்சென்று விழிகள் மின்னின. அழுத்தமான "கிறீச்" ஒலிகளுடன் அவை சிறுத்தைகளின் நட மாட்டத்தை அறிவித்தன. இரவு கவிந்தபின்னர் அந்தப்பகுதி துஷ்டமிருகங்களின் கூர் நகங்களும்

கோரைப்பற்களுமே ஆட்சிசெய்யும் பகுதியென்ற உண்மை செல்விக்குப் புரிந்தது.

ஆலயம் இருந்த பகுதி மிக அமைதியாக இருந்தது. சிற்பிகள் அனைவரும் அடுத்தநாள் பணிக்காகப் போட்டு வைத்த பெரும் பாறைகளும், பாதிவரை செதுக்கப் பட்ட தூண்களும், சிற்பங்களும், உடைக்கப்பட்ட கற்களுமாகப் பாதையை நிறைத்துக் கிடந்தன. புரவி அந்த இருளில் நேராகச் செல்லவே சற்று சிரமப்பட்டதால், கீழே இறங்கிய செல்வி புரவியின் கயிறுகளைப் பிடித்தபடி கற்களுக்கிடையே நடக்கத் தொடங்கினாள். ஆலயத்தில் தெரிந்த தீபங்களை நோக்கி முன்னேறிய செல்வியின் செவிகளில் ஆலயத்தின் உள்ளிருந்து யாரோ கனத்த குரலில் பாடுவது கேட்கத் தொடங்கியது. பணிகள் தொடங்கி சில காலமே ஆனதால், கர்ப்பக்கிரகமும், அதன் முன்பாக நீண்ட ஒரு மண்டபமும் மட்டுமே தெரிந்த அந்த ஆலயத்தின் முகப்பில் தீபங்கள் ஏற்றப் பட்டிருந்தன. இடது புறம் பாதிவரையில் முடிந்த மண்டபமொன்றும், சற்றுத் தள்ளி மற்றோர் கோபுரமும் எழுந்து நின்றன. அதையடுத்துத் தெரிந்த மரமொன்றின் அடியில் வீரர்கள் சிலர் கையில் ஏந்திய பந்தங்களுடன் நின்றனர். அவர்களின் புரவிகள் பாறைகளிலும், மரத்தின் கிளைகளிலும் கட்டப்பட்டிருக்க, அழகிய ரதமொன்றும் நிற்பது புலப்பட்டது.

“சேரலாதர் என்ன காரணத்தாலோ தாமதாக வந்திருக்கிறார்” என்று எண்ணிய செல்வி புரவியைப் பாறையொன்றில் கட்டிவிட்டு மெல்ல ஆலயத்தை நோக்கி நடக்கத் தொடங்கினாள். இரண்டொரு அடிகள் எடுத்து வைத்தவள் சட்டென்று நின்றாள். தன் பின்னால் காலடியோசைகள் கேட்டதாகத் தோன்றியது அவளுக்கு.

ஒரு கணமே தயங்கியவள், பின் முகப்பு மண்டபத்தை அடைந்து உள்ளே நடந்தபடியே நோக்கினாள். உள்ளே

முழு அலங்காரங்களுடன் நின்ற வைகுந்தனின் கோலம் அன்று யதுகுல திலகனாக, அகில உலகையும் மேய்த்து "அன்றாவின் நறுநெய் அமர்ந்துண்ண நின்ற" கோஸகனாக, ஆமருவியப்பனாக, கண்களையும், கருத்தையும் பறித்துக்கொள்ளும் விதமாக இருந்தது.

ஆலயத்தின் பட்டர் பூஜைகளைச் செய்து கொண்டிருக்க, எதிரில் வைகுந்தனைப் பார்த்தபடி அதீத உயரத்துடன் அசையாமல் நின்றுகொண்டிருந்த மனிதரின் உடை சுத்தமான வெண்மையில் மெல்லிய சரிகையுடன் சாதாரண நூலாடையாகத் தெரிந்தது. சுருண்டு கழுத்தின் பின்பகுதிவரை இறங்கியிருந்த குழல்களில் ஆங்காங்கே கோடுகளிழுத்த வெண்ணிறம் அவர் நடுத்தரப் பிராயத்தைக் கடந்துவிட்டவர் என்பதைப் புலப்படுத்தியது. குறுகிக்கிடந்த இடையும், நாகத்தின் படம்போல் விரிந்த முதுகுப் பகுதியும், பக்கங்களில் இறங்கி முன்புறமாகக் கூப்பிக் கிடந்த வலிய கரங்களும் அவரின் இடைவிடாத பயிற்சியைத் தெரிவித்தன. கனத்த அவரது குரல் நெகிழ்ந்து குலசேகரரின் பாசுரத்தை இசைத்துக் கொண்டிருந்தது.

"களிநிலா வெழில் மதிபுரை முகமும்
கண்ணனே, திண்கை மார்பும் திண்தோளும்
தளிர்மலர்க் கருங்குழல் பிறையதுவும் தடங்கொள்
தாமரைக் கண்களும்..."

மெல்ல் சன்னிதியை நெருங்கியவள் எதிர்ப்புறமாக அவர் பார்வையில் படும்படி நின்று வைகுந்தனை வணங்கினாள். பார்வை வைகுந்தனின்மேல் பதிந்துகிடந்தாலும், பின்னால் எவரோ வந்து நின்றதை அந்த மனிதர் உணர்ந்திருக்க வேண்டும். மெல்ல தலையைத் திருப்பி செல்வியை நோக்கிய அந்த மனிதர் ஒருகணமே அவள் மீது விழிகளைச் செலுத்தினார். அவரது வலிய இதழ்களில் ஒரு முறுவல் பூத்தது. ஒருமுறை அவளை நோக்கித் தலையசைத்தவர், மீண்டும் பார்வையை வைகுந்தனை நோக்கித் திருப்பிக் கொண்டார்.

சந்திக்கால பூஜைகள் கிரமமாக முடிந்தபின்னர், ஆலயத்துப் பட்டர் அளித்த தீர்த்தத்தையும், திருத் துழாயையும் பெற்றுக் கொண்ட அந்த மனிதர் வெளியே வந்து மண்டபத்தில் நின்றபடி, கதவைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்த பட்டரிடம் சிறு முடிப் பொன்றை அளித்து வழியனுப்பிவிட்டுப் பின்னர் செல்வியை நெருங்கி வந்தார்.

ஆறரையடிக்கும் குறையாத உயரத்துடன், அதற்கேற்ற ஆகிருதியுடன், வேனாட்டவருக்கே உரிய வெளேரேன்ற நிறத்துடன் இருந்த அந்த மனிதரின் ஆஜானுபாகுவான கரங்களில் ஓரிரு வாள்வடுக்களே தெரிந்தன. அடர்ந்த புருவங்களின் கீழிருந்து உள்ளத்தையே ஊடுருவி விடும் விழிகளுடன் எதிரில் வந்து நின்றவர் “வா மகளே, வடக்கே கங்கைவரையில் சென்றுவந்த களைப்பு தீருமுன் தெற்கே இத்தனை தூரம் வந்துவிட்டாயே” என்றார் சர்வ சாதாரணமாக.

செல்வி சற்றுத் திகைத்தாள். அவள் யாரென்பதை அந்த மனிதர் பூரணமாக அறிந்து கொண்டிருக்கிறார் என்பதைப் புரியவைத்தது அவரது கேள்வி.

அவரது முறுவல் இன்னும் விரிந்தது; குரலும் கனிவுடன் ஒலித்தது “மகளே, திகைக்க வேண்டாம். நீ காண வந்தது என்னைத்தான். என்னை ராஜசிம்மன் என்பார்கள். சோழ மன்னர் அளித்த ஓலையைக் கொடு,” என்றவரது வலிய கரம் அவளை நோக்கி நீண்டது.

செல்வி இடைக்கச்சையிலிருந்து ஓலைக்குழலை எடுத்து நீட்டினாள். குழலைப் பெற்றுக் கொண்ட வேகத்திலேயே விரலால் அதன் முத்திரையை உடைத்து, குழலைச் சரித்து ஓலைகளை எடுத்த ராஜசிம்மனது விழிகள் கனவேகத்தில் ஓலைகளைப் படித்தன. படித்தவேகத்தில் ஓலைகளைத் தூணிலிருந்து தொங்கிய சரவிளக்கொன்றில் காட்டி எரித்த சேரலாதர், குழலைப் பக்கவாட்டிலிருந்த பாறைகளை நோக்கி எறிந்தார்.

ஏதோ கூறமுற்பட்டவரது விழிகள் அவளைத்தாண்டி பின்புறம் நோக்கிப் பளிச்சிட்டன. முகத்தில் ஸ்திரமாக இருந்த முறுவல் உறைந்தது. அதே நேரத்தில் மண்டபத்தின் முகப்பிலும், இருளடித்துக் கிடந்த ஆலயத்தின் பின்புறத்திலும் ஏதோ ஒலிகள் கேட்டன.

உருவிய வாட்களும், கைகளில் தாங்கிய ஈட்டிகளும் பந்தங்களின் ஒளியில் பளபளக்கப் பலர் அந்த மண்டபத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தனர்.

"மகளே, நாம் எதிர்பார்த்ததைவிட காரியங்கள் வேகமாகவே நடக்கின்றன. வருபவர்கள் ஈழத்து வீரர்கள். முன்னால் வருபவன்தான் ஈழத்து மானாபரணன்" என்றார் சேரலாதன் ராஜசிம்மன்.

# 9. பூபேந்திர சாரதி

**மை**யிருட்டு கவிந்துகிடந்த அந்த முன்னிரவில், ஆலயத்தின் முகப்பு மண்டபத்தில் நின்று கொண்டிருந்த சேரலாதன் ராஜசிம்மனோ, செல்வியோ மண்டபத்தின் வெளியேயிருந்து எழுந்த ஒலியையோ, தொடர்ந்து வாட்களையும் வேல்களையும் தாங்கியபடி அவர்களை நோக்கி வந்த வீரர்களையோ பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. சேரலாதனின் பெருவிழிகளில் தெறித்த பொருள்பொதிந்த எச்சரிக்கைப் பார்வையைக் கவனித்த செல்வி நிதானித்தாள்.

சேரலாதனின் குரல் மெதுவாக, ஆனால் எச்சரிக்கையுடன் ஒலித்தது "செல்வி, இப்போது போராடவோ எதிர்க்கவோ அவசியமில்லை. தவிர, எனக்கு உடல் நிலையும் சரியில்லை. அதற்காகவே என்னுடன் மருத்துவப் பெண்ணான உன்னை அழைத்து வந்திருப்பதாகக் கூறப்போகிறேன். குளிகைகளும், மூலிகைகளும் அடங்கிய பெட்டியொன்றும் என் ரதத்தில் இருக்கிறது, புரிகிறதா?" என்றான்.

செல்வி புரிந்ததற்கடையாளமாகத் தலையசைத்தாள்.

வந்த வீரர்கள் நீட்டிய வேல்களுடன் சேரலாதரையும் செல்வியையும் சூழ்ந்தனர். முன்னால் வந்தவனது உடை அதீத படோடோபமாயிருந்தது. சுருண்டு சுருண்டு முகத்தை மறைக்க முயன்ற முரட்டுக் குழல்கள் ஏதோ கூடையொன்றைக் கவிழ்த்தது போலிருந்தது. முகத்தில் குரூரம் தெளிவாகப் புலப்பட்டாலும் குரலில் போலியான பணிவு தொனித்தது. அவன் உச்சரித்த தமிழ் பற்களுக் கிடையே அரைபட்டு வெளிவந்தது. “சேரலாதருக்கு வணக்கம். வெகுநாட்கள் முயன்று இந்தச் சூழலில் சந்திக்க முடிந்தது என் பாக்கியம்” என்றான் அவன்.

ராஜசிம்மனின் முகத்தில் அதே முறுவல் நிலைத் திருந்தது, அவரது குரலும் தெளிவாகவே ஒலித்தது “மானாபரணா, எனக்கும் இங்கு உன்னைச் சந்திப்பது மகிழ்ச்சிதான்”

மானாபரணனின் முகம் சற்றுச் சுருங்கியது “என்னைச் சந்திப்பதைப் பலமுறை தவிர்த்த மன்னருக்கு இப்போது மட்டும் என்ன மகிழ்ச்சி இருக்க முடியும்?” என்றான் சந்தேகத்துடன்.

ராஜசிம்மனின் முகத்திலிருந்த முறுவல் சற்று விரிந்தது “இதற்காகவாவது வைகுந்தன் ஆலயத்துக்குள் அடியெடுத்து வைத்திருக்கிறாயே, இதுவரை புரிந்த பாவங்கள் சற்றேனும் குறையுமல்லவா, அதற்காகத்தான்”

மானாபரணனின் முகத்தில் பணிவு மறைந்து இயற்கையான குரூரம் தெரிந்தது. தான் புத்த ஆலயங் களைத் தவிர வேறெந்த ஆலயத்துக்கும் செல்லாததைச் சுட்டிக் காட்டிய சேரலாதனின் வார்த்தைகள் அவனுக்கு ஆத்திரமூட்டியிருக்க வேண்டும்.

“சேரலாதரே, உம்முடன் எதைக்குறித்தும் வாதாட வரவில்லை இப்போது. ஒன்றுபட்ட சேரநாடும் பாண்டியநாடும் உருவாக்குவதில் நாங்கள் முனைந்

திருக்கிறோம். உங்களது ஆதரவைக் கேட்டுப் பலமுறை ஓலைகளும் தூதர்களையும் அனுப்பினோம். உங்களிட மிருந்து இதுவரை பதிலேதும் வரவில்லை”

சேரலாதன் முகத்திலோ வார்த்தைகளிலோ எந்த மாறுதலும் தெரியவில்லை “மானாபரணா, ஒன்றுபட்ட பாண்டியநாடோ, சேரநாடோ உருவாவதில் ஈழத்துக்கு என்ன பயன்? இதில் உனக்கென்ன இத்தனை ஈடுபாடு?”

மானாபரணின் குரலில் உஷ்ணம் ஏறியது “சேரலாதரே, நான் கொற்கைப் பாண்டியரின் வம்சத் தொடர்பு கொண்டவன் என்பதும் நினைவில் இருக் கட்டும். பிளவுபட்டுக்கிடக்கும் பாண்டியநாடும் சிற்றரசு களாகச் சிதறிக் கிடக்கும் சேரநாடும் இணைந்தால் நமது பலம் உயர்ந்துவிடும்”

“பலம் உயர்ந்தால்...?”

“சோழரிடம் அடிமைப்பட்டுக் கிடக்கும் அவசிய மில்லாமல் போய்விடும். இரு அரசுகளும் சுதந்திர நாடுகளாகும்”

“ஆக, உனது எண்ணம் சோழரை எதிர்ப்பது, மீண்டும் மீண்டும் போர்களைத் தொடர்வது, மக்களை வருத்துவது. அவ்வளவுதானே?”

“போரிடாமல் சுதந்திரம் பெறுவது எப்படி?”

“அதைச் சேர பாண்டியரே முடிவு செய்து கொள்ளட்டுமே... ஆனால் உண்மையில் உன் எண்ணம் அதுவல்ல” என்ற சேரலாதனின் முறுவல் விரிந்து மெல்லிய நகைப்பாக உதிர்ந்தது.

“என்ன கூறுகிறீர்கள்?” மானாபரணன் குரலில் உஷ்ணம் ஏறியது.

“காலங்காலமாய் ஈழத்தவருக்குச் சோழரிடம் பகை. அதைப் போரிட்டுத் தீர்த்துக் கொள்ள வலிமையில்லை. நட்பு பாராட்டிப் போரைத் தவிர்க்கவும் மனமில்லை. எனவே, பாண்டியருடன் உறவு கொண்டு சோழருக்குப்

பகையாக்கி விட்டாய். இப்போது சேரரையும் இதில் இழுக்க முயல்கிறாய். அவ்வளவுதான்"

மானாபரணனின் விழிகளில் அனல் பறந்து கொண்டிருந்தது. "சேரலாதரே, உம்மிடம் நான் வாதாட வரவில்லையென்று முன்னமே கூறினேன். சேர பாண்டிய நாடுகள் சுதந்திரம் பெறுவதை நீர் விரும்ப வில்லை என்பதை முன்னமே அறிவேன். சேரநாட்டுச் சிற்றரசுகள் இந்த இணைப்பை விரும்புகிறார்கள். நீர் என்னுடன் வந்தால் போதுமானது. உம்மைப் பிணைத்துக் கட்டாயமாக அழைத்துச் செல்ல நான் விரும்பவில்லை"

சேரலாதன் சற்று மௌனம் சாதித்தான் "மானா பரணா, தற்போது என் உடல் நிலை சரியில்லை. தொடர்ந்து மூலிகைகளையும் மருந்துகளையும் காலக் கிரமப்படி அளிக்க மருத்துவப் பெண்ணை உடன் வைத்துக் கொண்டேதான் எங்கும் செல்ல வேண்டி யிருக்கிறது" என்றவன் செல்வியை சுட்டிக்காட்டியபடி "எங்கு அழைத்துச் செல்லப்போகிறாய், சொல். வருகிறேன்" என்றான்.

ஒருமுறை தூண்களின் நிழலில் நின்ற செல்வியை அலட்சியமாக ஏறெடுத்த மானாபரணன் "சேரலாதரே, உமக்கு மேலும் துன்பம்தருவது என் நோக்கமல்ல. உங்கள் வீரர்கள் உடன்வரும் நிலையில் இல்லை. இந்த மருத்துவப் பெண் வரட்டும். வாருங்கள்" என்றவன் திரும்பி, சேர லாதனின் ரதம் நின்ற இடத்தை நோக்கி நடந்தான். சேரலாதனையும் செல்வியையும் சூழ்ந்தபடி வீரர்களும் தொடர்ந்தனர்.

ரதம் நின்ற இடத்தில் காவலுக்கு நின்ற சேர வீரர்கள் அனைவரும் மரங்களிலும் பாறைகளிலும் கட்டி உருட்டப்பட்டிருந்தனர். ரத சாரதியும் கரங்கள் கட்டப்பட்டு, ரதத்திலேயே பிணைக்கப்பட்டிருந்தான். சாரதியின் கட்டுக்களை மட்டும் அவிழ்த்துவிடப்

பணித்த மானாபரணன் "அடேய் சாரதி, ரதத்தை எங்களுடன் செலுத்து. மீறி ஏதேனும் தப்பிக்க முயன்றால் உன்னைக் கொல்லத் தயங்க மாட்டேன்" என்று மிரட்டி ரதத்தை சித்தப்படுத்த உத்தரவிட்டான்.

அதுவரை தலை குனிந்தபடியே சேரலாதனைப் பின்பற்றி நடந்த செல்வி, ரதத்தை அடைந்ததும் மெல்ல நிமிர்ந்து ரதத்தை நோக்கியதும் பிரமித்தாள். சுத்தமான தேக்கினால் மிக நேர்த்தியாகக் கடையப்பட்டுத் தந்தங் களால் பிடிகள் இழைக்கப்பட்டு, சுகமான இருக்கையுடன் தெரிந்த அந்த ரதம் கண்களைப் பறித்தது.

ரதத்தின் பின்பக்க வளைவுகளையும், நீண்ட மரச் சட்டங்களையும், சக்கரங்களுக்கு மேல் தெரிந்த நீண்ட பேழை போன்ற அமைப்பையும் கண்டவளுக்கு அது சாதாரண ரதமல்ல என்பதும், போர்களில் பயன்படுத்தக் கூடியதும், அதி வேகமாகச் செல்லக் கூடியதுமான ஸங்க்ராம ரத* வகையைச் சேர்ந்தது என்பதும் கணப் பொழுதில் புரிந்தது. தகுந்த புரவிகள் மட்டும் பூட்டப் பட்டிருந்தால், மரக் கூட்டங்களிடையே கூட அதை வேகமாகச் செலுத்த முடியும் என்பதையும், பின்னால் வருபவர்களையும், பக்கவாட்டில் நெருங்குபவர்களையும் கணப்பொழுதில் அழித்துவிடலாமென்பதையும் உணர்ந்தவள் சேரலாதனைப் பிரமிப்புடன் நோக்கினாள்.

பந்தங்களின் ஒளியில் நடந்தபடியே செல்வியைக் கவனித்த சேரலாதனின் விழிகள் அவளை எச்சரித்தன. தாவி ரதத்தில் ஏறி அமர்ந்த சேரலாதன் இருக்கையின் பக்கத்திலிருந்த பலகையொன்றைத் தாழ்த்தி, "பெண்ணே, பலகையின் உட்புற அறையில் உனது மருத்துவப்பெட்டி இருக்கிறது பார். இரவுப்போதில் அளிக்க வேண்டிய குளிகைகளை இப்போதே அளித்துவிடு. நாம் பயணப் படப் போகிறோம்" என்றான்.

---

★ கௌடில்யரின் அர்த்தசாஸ்திரத்தில் இந்தப் போர் ரதம் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

அவனது பொருள்பொதிந்த பார்வையையும், வார்த்தைகளையும் கவனித்தபடியே ரதத்தில் ஏறி, அவனது காலடியில் அமர்ந்த செல்வி அவன் கூறியபடியே பெட்டியை எடுத்து, குளிகைகளைக் கொடுத்தாள்.

அதே நேரத்தில் பிணைக் கயிறுகள் அறுக்கப்பட்ட தால் எழுந்து நின்ற ரதத்தின் சாரதி நெடுநெடுவென்று நின்றான். அவன் உயரத்தைக் குறைக்க, அவன் முதுகில் பெரிதாகப் புடைத்திருந்த சதைப்பகுதி அவனைக் கூன் விழுந்தவனாகக் காட்டியது. பார்வைக்குப் பாதிக்கும் மேல் வெளுத்துக்கிடந்த அவன் குழலும், மீசையும் பிராயம் ஐம்பதைக் கடந்தவன் என்று காட்டினாலும், அவனது உயரமும், உயரத்துக்கேற்ற மல்லன் போன்ற உடல்வாகும், முதுகில் கூன் விழுந்திருப்பதையும் மீறி, திடமானவனாகக் காட்டியது. ரதத்தை நெருங்கி மன்னனை வணங்கியவன் சாரதியின் இருக்கையில் அமர்ந்தான். மானாபரணனும் அவன் வீரர்களும் சூழ்ந்துவர ரதம் மேற்கு நோக்கிச் சென்ற பாதையில் செல்லத் துவங்கியது.

பந்தமொன்றை ஏந்திய வீரன் முன் செல்ல, மற்ற வீரர்களும் மானாபரணனும் தொடர்ந்துவர ரதத்தைச் செலுத்திய முதியவன் நிதானமாகவே செலுத்தினான்.. இருளில் மலைப்பகுதியை நோக்கிச்சென்ற அந்த ஊர் வலம் குறுகலான மலைப் பாதையில் ஏறத் தொடங் கியது.

சற்றுத் தூரம் சென்றதும் சுற்றி உடன் வந்த வீரர் களுக்கும் ரதத்துக்கும் இடைவெளி சற்று அதிகரித்ததைக் கவனித்த சேரலாதன் மெல்ல முன்னால் சரிந்து சாரதியை அழைத்தான்.

"சாரதி...நீ சேரநாட்டு வீரர்களுடன் எங்களுடன் வந்தவனாகத் தெரியவில்லையே"

சாரதியின் கரகரத்த குரல் பதிலளித்தது "ஆம் மன்னவா. நான் சேரநாட்டவன் அல்ல" என்று.

"ஈழத்தவனாகவும் தெரியவில்லை, யார் நீ?"

"மன்னவா, நான் பூபேந்திரன். சோழ நாட்டிலிருந்து வருகிறேன். உங்கள் காவலர்களை மானாபரணனின் வீரர்கள் தாக்கிப் பிணைப்பதற்குச் சற்று முன்னால் வந்து உங்கள் சாரதியை அனுப்பிவிட்டு, அவனுக்குப் பதிலாக உங்கள் வீரர்களுடன் கலந்து கொண்டேன்"

"...பூபேந்திரன்..." அந்தப் பெயரை உச்சரித்த சேரலாதனின் விழிகள் விரிந்தன. முகத்திலும் வியப்பு பரவியது. முறுவலொன்றும் மலர்ந்து மெலிதான சிரிப்பாகவும் உதிர்ந்தது.

இருளில் அகத்தியர் அருவியைக் கடந்து மலையின் மீது வளைந்து வளைந்து சென்ற அந்த மலைப்பாதையில் வெகு லாகவமாக ரதத்தைச் செலுத்திய சாரதியை வியப்புடன் கவனித்தபடியே வந்த செல்வி, மன்னன் "பூபேந்திரன்" என்ற பெயரைக் கேட்டபிறகு பெரும் சாந்தியடைந்துவிட்டதையும் கவனித்தாள்.

தூரத்தே காட்டு யானைகளின் பிளிறல்கள் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருக்க இடையிடையே பாதையின் குறுக்கே பளிச்பளிச்சென்ற விழிகளுடன் ஒன்றிரண்டு சிறுத்தைகள் பாய்ந்து மறைய, அந்த ரதம் பொதிகையின் உச்சியிலிருந்த அகத்தியர் கூடத்தை நோக்கிச் சென்று, பின் பக்கவாட்டில் விலகிய குறுகிய பாதையொன்றில் திரும்பி, தென்மேற்காக விரைந்தது.

# 10. பூந்துறை முகுந்தன்

"**பா**டல்கள் ஓராறு, நதிகள் ஈராறு, கோட்டங்கள் மூவாறு, நாடுகள் நாலாறு, மலைகள் ஐயாறு" எனப் பாடப்பட்ட கொங்கு நாட்டின் தென் எல்லையில் அமைந்திருந்த பூந்துறை நாட்டின் மேற்கு எல்லையில் உயர்ந்திருந்த மலைகள் ஏராளமான மூலிகைகளும்,

மரங்களும் செடிகொடிகளும் செழித்து அடர்ந்த வனப் பகுதியாகவே கிடந்தது. மூலிகைகளுக்காக ஓரிரு மருத்துவர்களும், வேடுவர்களையும் தவிர, வேறு மனிதர் நடமாட்டமே அற்றுக் கிடந்ததால் புலிகளும் சிறுத்தை களும், அளவில் பெருத்து நீண்ட மலைப் பாம்புகளும், அவ்வப்போது காட்டு யானைகளின் கூட்டங்களும் அங்கு சர்வ சாதாரணமாக நடமாடிக் கொண்டிருந்தன. போதாக்குறைக்குப் பருவக்காற்று வீசத் தொடங்கி, மழைக்காலம் அப்போதே தொடங்கியிருந்ததால், அவ்வப்போது அதிவேகத்துடன் பெய்த மழை அந்தப் பகுதியைச் சேறு நிறைந்ததாக ஆக்கிவைத்திருந்தது. கருக்கல் முடிந்து விடிவதற்கு ஓரிரு நாழிகைகளே இருந்த அந்த நேரத்தில் தேய்ந்துகிடந்த கிருஷ்ணபட்சத்து நிலவு வீசிய மங்கலான ஒளியில், அந்தக் கானகத்தினூடே காட்டுக் கொடிகளும், செடிகளும் அவ்வப்போது வழிமறித்த ஒற்றையடிப்பாதையில், சேற்றிலும், செழித்துக் கிடந்த புற்களிலும் கால்களைப் பதித்து, மலையின் மீது ஏற முயன்று கொண்டிருந்தது ஒருபுரவி. புரவியில் அமர்ந்திருந்த வாலிபனுக்கு அந்தப் பாதை புதிதல்ல என்பது அவன் அலட்சியமாக அமர்ந்து சென்றதிலிருந்து புலப்பட்டது. சற்று உயரே சென்றதும் பாதையில் செடிகொடிகள் சற்று விலகி, பாறைகளும் கற்களும் தெரிந்தன. அதன்பிறகு சற்று வேகமாக நடக்க முற்பட்ட புரவி, உச்சியை அடைந்தபிறகு வேகமான நடையில் செல்லத் தொடங்கியது.. வெறும் பாறைகளும் சரளைக் கற்களுமாகவே நிறைந்து, வளைந்து வளைந்து உச்சியிலேயே சென்ற அந்தப் பாதை மலையின் சரிவை அடுத்து சட்டென்று முடிந்தது. மீண்டும் மலைச்சரிவில் தொடங்கிய கானகத்தினுள்ளே இரு பாதைகள் பிரிந்து தென்மேற்கிலும், நேர் தெற்கிலுமாகச் சென்றன. நேர் தெற்கில் இறங்கிய பாதையின் முடிவில் மீண்டும் உயர்ந்து எழுந்த நான்கு மலைத்தொடர்களும், ஒன்றை யடுத்து ஒன்று ஏதோ விலங்குகள் கால்களை மடக்கி

வரிசையில் அமர்ந்திருப்பது போன்ற தோற்றத்தில் கிடந்தது. அந்தப்பகுதியில் வழங்கப்பட்ட புராணக் கதைகளால் எலிமலையென்றும் மூஷிகமலையென்றும் அழைக்கப்பட்ட அந்த மலையின் உச்சியில் நின்றிருந்தது ஒரு கோட்டை. பார்வைக்குச் சிறியதாகத் தெரிந்தாலும் கோட்டையின் மேற்புறத்தில் உலவிக் கொண்டிருந்த வீரர்களும், கோட்டைச் சுவரில் ஆங்காங்கே தெரிந்த மாடங்களும், அவற்றிலிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த வேல்களும் அம்புகளும், வாயில்களில் தெரிந்த வீரர் நடமாட்டமும், அந்தக் கோட்டையை அணுகுவது எளிதல்ல என்பதை நிரூபித்துக் கொண்டிருந் தன. போதாக்குறைக்குச் சுவரின் அடிப்புறத்தில் வரிசையாக நின்ற போர்க்களிறுகளும், களிறுகள் எடுத்துச் சுழற்றும் உலக்கை போன்ற ஆயுதங்களும், களிறுகளை இயக்கும் வீரர் கூட்டங்களும் ஆங்காங்கே தெரிந்தன.

கோட்டையின் உச்சியில் இளங்காலைக் காற்றில் படபடத்துப் பறந்து கொண்டிருந்தது மூஷிக மன்னனின்** கொடி. சிவப்பும் மஞ்சளும் கலந்த நிறத்தில் நந்தகம் என்னும் வாட்கள் இரண்டு பக்கங்களிலும் நேர் செங்குத்தாக நிற்க, நடுவில் சங்கலவட்டம் என்னும் மலைநாட்டு பெரும் விளக்கின் உருவம் வரையப் பட்டிருந்தது. விளக்கின் இருபுறமும் வாகை மலர்களின் கொத்து ஒன்றும் சிவந்த நிறத்தில் வரையப்பட்டிருந்தது.

புரவியிலிருந்து இறங்கி, மலைச்சரிவில் நின்றபடியே அந்தக் கோட்டையையும், உலவிக் கொண்டிருந்த வீரர்களையும் உற்றுக் கவனித்த அந்த வாலிபனின் தோற்றம் கண்ணாகனாரின் பாடசாலையிலிருந்து வந்தபோது கண்டதைவிட வெகுவாக மாறியிருந்தது. காவி உடைகளுக்குப் பதிலாக சீனத்துப் பட்டாலான அங்கியும், யவனர்களைப் போலச் சராயொன்றையும் அணிந்திருந்தவனின் இடையில் வழக்கத்தை விடச் சற்று அதிக நீளமும், அகலமும் கொண்ட வாளொன்று

★★ கோலாத்திரி மூஷிக வம்சம் - திரு ராகவன்பிள்ளை.

பக்கவாட்டில் தொங்கியது. இடையிலிருந்த கச்சையில் வரிசையாக நான்கைந்து குறுவாட்கள் செருகப் பட்டிருந்தன. பாடசாலையில் அவன் கடைசியாகப் பயின்ற தனுசு ஒன்றும் புரவியின் பக்கவாட்டில் தோலா லான அம்பறாத் தூளியுடன் கட்டப்பட்டிருந்தது.

கோட்டையில் கொம்புகள் ஊதப்பட்ட ஒலி எழுந்தது. அதைத் தொடர்ந்து இரவுக் காவலர்கள் கோட்டை வாயிலில் வந்து குழுக்களாக அணிவகுக்க, வேறு குழுக்களில் காவலர்கள் காவலை ஏற்றனர். உள்ளிருந்து வந்த வீரன் ஒருவன் மட்டும் மற்றவர்களை விடுத்து மலைச்சரிவில் மரங்களினூடே இறங்குவதைக் கவனித்த முகுந்தனின் முகத்தில் மலர்ச்சி தெரிந்தது. இருநாழிகை நேரம் காத்திருந்த பின்னர், கானகத்தின் உள்ளேயிருந்து புரவியொன்றில் அந்த வீரன் முகுந்தனின் எதிரில் வந்து இறங்கினான். இறங்கிய வேகத்தில் பரஸ்பரம் அணைத்துக் கொண்டவர்கள் சரிந்து கிடந்த மரக்கிளை யொன்றில் அமர்ந்தனர்.

முகுந்தனை ஏறெடுத்த அந்த வீரன் “உன் ஓலை நேற்றுத்தான் கிடைத்தது முகுந்தா. இரவுக் காவல் பணி இருந்ததால் காலை வரை காத்திருக்க நேரிட்டது. உன்னைச் சந்திக்க ஆவலாக இருந்தேன். எத்தனை ஆண்டுகள் ஓடிவிட்டன உன்னைக் கண்டு...” என்றான் முகமெங்கும் மகிழ்ச்சி பொங்க.

“ஏழு ஆண்டுகள் அச்சுதவர்மா...இத்தனை காலம் எதற்காகக் காத்திருந்தேனோ, அதைக் கொண்டுவந்து விட்டேன். இனி காலம் தாழ்த்தக் கூடாது. உடனடியாக மன்னரைச் சந்திக்க வேண்டும். அதற்கான ஏற்பாடுகளை நீதான் செய்ய வேண்டும்” என்றான் முகுந்தன்.

அச்சுதவர்மன் என்று அழைக்கப்பட்ட அந்த வீரன் முகத்தில் முறுவல் நெளிந்தது. “முகுந்தா, இது சோழ நாடல்ல, எளிதாக மன்னனை அணுகுவதற்கு. சட்ட திட்டங்களும், கட்டுக்காவல்களும் இங்கு அதிகம்.

அரண்மனையின் பக்கத்தில் சேர நாட்டவரல்லாத காவல் வீரர்களை நடமாடக் கூட அனுமதிக்க மாட்டார்கள். கோட்டைக்குள் உன்னை அழைத்துச் செல்வது மட்டுமே என்னால் இயலும்..."

முகுந்தனின் கரம் உயர்ந்து அச்சுதவர்மனைத் தடுத்தது "போதும் அச்சுதா, அதுபோதும், என்னைக் கோட்டைக்குள் அழைத்துச் செல். மற்றவைகளை நானே பார்த்துக் கொள்கிறேன்" என்றான் முகுந்தன் சிரித்தபடி.

சற்று நேரம் மௌனம் சாதித்த அச்சுதவர்மன் "முகுந்தா, நான் இங்கு வந்து சேர்ந்ததே வேறு கதை. இதுவரை என்னால் மன்னரை எட்டி இருந்து காணமுடிந்ததே தவிர நெருங்க முடிந்ததில்லை. நீ எப்படி அவரைக் காண்பாய்? உன் முயற்சியால் என் பணிக்கு இடையூறு ஏதும்..." என்றான் கவலை தொனித்த குரலில்.

"அதைப்பற்றி நீ கவலை கொள்ள வேண்டாம். உன் பணிக்கு இடையூறோ, உனக்கு அவப்பெயரோ வராமல் நான் பார்த்துக் கொள்கிறேன். போதுமா?"

முகுந்தனின் இந்த பதிலில் அச்சுதவர்மன் திருப்தி யடைந்திருக்க வேண்டும். சரியென்பதற்கடையாளமாகத் தலையசைத்தவன் "சரி, நாளைக் காலை இதே இடத்தில் வந்துவிடு. காவலர் தலைவரிடம் நான் அனுமதி பெற்றுக் கொண்டு வந்து விடுகிறேன். முன்னதாக அனுமதி பெற்றால்தான் கோட்டைக்குள் காவலர் குடியிருக்கும் பகுதிக்கு உன்னை அழைத்துச் செல்லமுடியும்" என்றான்.

"இப்போதே செல்ல முடியாதா?..." முகுந்தனின் கேள்வி உடனே வந்தது.

வியப்புடன் அவனைப் பார்த்த அச்சுதன் "முகுந்தா, சற்று நிதானப்படுத்திக் கொள். மூஷிக மன்னர் கந்தன் காழிவர்மன் லேசுப்பட்டவரல்ல. அவரை அணுகுவதும் எளிதல்ல, அரண்மனைக்குள் அவர் நியமித்திருக்கும்

வீரர்களும் சாதாரணமானவர்களல்ல. நான் அறிந்தவரை எதையும் நிதானித்துச் செய்வது நல்லது” என்றான்.

பதிலுக்கு முகுந்தனிடமிருந்து பலமான நகைப்பு ஒலித்தது. “அச்சுதா, வீணாக அஞ்சுகிறாய். சரி, நான் நாளைக் காலையில் முன்னதாகவே வந்து காத்திருக் கிறேன். காலம் தாழ்த்தாமல் வந்துவிடு. கோட்டைக்குள் சென்றபின் நான் பார்த்துக் கொள்கிறேன்” என்ற முகுந்தன் விடைபெற்றுக் கொண்டு புரவியைத் திருப் பினான். அவன் செல்வதை நெடுநேரம் கண்டபடியே நின்ற அச்சுதவர்மனின் முகத்தில் அச்சமே படர்ந் திருந்தது. “நீண்ட காலம் கழித்து நண்பனைச் சந்தித்தால் மகிழ்ச்சி ஏற்பட வேண்டும். எனக்கு அது ஏற்படத்தான் செய்கிறது. ஆனால் இவனை உள்ளே அழைத்துச் செல்வதால் ஆபத்தும் ஏற்படும்போலிருக்கிறதே...” என்று முணுமுணுத்தபடியே புரவியில் ஏறிய அச்சுதவர்மன் சிந்தனையூடே கோட்டையை நோக்கித் திரும்பிச் சென்றான்.

யாருடைய மகிழ்ச்சிக்காகவோ, எதிர்பார்ப்புக்காகவோ, துன்பத்துக்காகவோ, எதற்காகவும் காத்திருக்காத காலம் விரைவாகவே அன்றைய பொழுதை முடித்து வைத்தது. பூந்துறை நாட்டின் அரண்மனையில் கருக்கலுக்கு முன்பே தயாராகிவிட்ட முகுந்தனை, அவன் தந்தையும் கொங்குநாட்டின் உபநாடான பூந்துறையின் சிற்றரசனு மான அவநிதன் புறப்படுமுன் அவனைச் செல்லாமல் தடுக்க எத்தனையோ தர்க்கம் செய்து முயன்றான். “மகனே, சோழர்களுக்கெதிராக பாண்டியர் மீண்டும் மீண்டும் போர்க்கொடி உயர்த்துவதும், அவ்வப்போது அதில் சேரர் கலந்துகொள்வதும் நடைபெற்றுக் கொண்டு தான் வருகிறது”

“ஆம் தந்தையே” முகுந்தனின் பதில் உடனே வந்தது.

“இப்போது நிலைமை வேறாக இருக்கிறது மகனே. சேரலாதர் போரை வெறுத்து சோழர் உதவியுடன்

ஆலயம் கட்டச் சென்றபின் மற்ற சேர சிற்றரசர்கள் யார் சேரலாதரின் இடத்தை அடைவது என்ற போட்டியில் இருக்கிறார்கள்"

"இருக்கட்டும் தந்தையே"

"இந்த நிலையில் மூஷிக மன்னனை நீ அணுகுவது அபாயம். அவன் கருத்துக்கு மாறாக எவரேனும் நினைக் கிறார்கள் என்ற சந்தேகம் வந்தாலே போதுமானது, அவன் அவர்களை அழித்துவிடுவான். அவனைவிட நீ மலைநாட்டு வீரகேரளனை அணுகலாம். அவன் ஆக்கிர மித்துக் கொண்ட நம் ஊர்களைத் திருப்பித் தருமாறு கேட்கலாம்"

"தந்தையே, இழந்த நமது ஊர்களை மட்டும் மீட்பது என் நோக்கமல்ல. பொறுத்திருந்து பாருங்கள். காழிவர் மனையும் வீரகேரளனையும் கட்டிப்போடும் மந்திரம் என்னிடம் இருக்கிறது. இப்போது சென்றுவர அனுமதியுங்கள் போதும்" என்ற முகுந்தன் கருக்கலுக்கு முன்னதாகவே மலையை நோக்கிச் சென்றான்.

உள்ளே ஓடிக்கொண்டிருந்த எண்ணங்களின் வேகம் காரணமாக, இரவின் அந்த மூன்றாவது ஜாமத்தில் கானகப்பாதை வெகு கடினமானதாக இருந்ததைப் பொருட்படுத்தாமலே புரவியைச் செலுத்திய முகுந்தன், முதல்நாள் வந்து நின்ற இடத்துக்கு முன்னதாகவே வந்து சேர்ந்தான். புரவியை விட்டு இறங்கியவன் பந்தங்களின் ஒளியில் புலப்பட்ட கோட்டையை உற்றுக் கவனிக்க ஆரம்பித்தான்.

கோட்டைக் காவல் மாறும் நேரமும் வந்தது. வீரர்கள் குழுக்களாகக் கோட்டையிலிருந்து இறங்கி அணிவகுத்து நின்று அடுத்து வந்த வீரர்களிடம் காவலை ஒப்படைத்து விட்டு, மீண்டும் கோட்டைக்குள்ளே தமது குடியிருப்பு களை நாடிச் சென்றனர். ஆனால் முன்னதாகவே வருவதாகச் சொன்ன அச்சுதவர்மன் மட்டும் காணப்

படவேயில்லை. முகுந்தன் மனதில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து ஓடத் தொடங்கின. "ஒருவேளை மன்னன் காழிவர்மனிடம் சிக்கிக் கொண்டிருப்பானோ, அல்லது தனது பணிக்கு ஆபத்து வந்துவிடும் என்பதால் வராமல் நின்றுவிட்டானோ" என்று பலவித சந்தேகங்கள் முகுந்தனை அலைக்கழிக்கத் தொடங்கின.

இறுதியாக "சரி, என்னதான் நடந்துவிடும் பார்த்து விடலாம். கோட்டையை அணுகி, காவல் வீரர்களிடம் அச்சுதவர்மனைப் பற்றி விசாரித்துவிடலாம்" என்றும் தீர்மானித்தான்.

குழப்பமான மனநிலையுடன் திரும்பி, புரவியில் தாவியேற யத்தனித்த முகுந்தன் சட்டென்று நிதானித் தான். அவன் நின்ற இடத்திலிருந்து சற்றுத் தொலைவில் கானகத்தினுள்ளேயிருந்து ஆந்தையொன்று பலமாக அலறியது. பறவைகளின் சலசலப்பும் தொடர்ந்து புரவியொன்று கனைக்கும் ஒலியும் கேட்டது. தொடர்ந்து அவன் நின்ற பகுதியைச் சுற்றிலும் சலசலப்பு ஒலித்து ஒவ்வொன்றாக புரவிகள் பல வெளியே வந்தன.

அரையிருளில் மரக்கூட்டத்தினிடையேயிருந்து வெளியே வந்தன நான்கு புரவிகள். அவற்றிலிருந்து குதித்து இறங்கி, வாட்கள் இடையில் பளபளக்க அவனை நோக்கி வந்தனர் நான்கு வீரர்கள். அவர்கள் அணிந்திருந்த உடைகளும், தலைக் கவசங்களும் அவர்கள் யவன வீரர்கள் என்பதை அறிவித்தன. அவர்களில் ஒருவன் கரத்தில் காதுவரை இழுக்கப்பட்ட போர் வில்லும், முகுந்தனைக் குறிவைத்த அம்பும் இருந்தது. போதாக்குறைக்கு அவன் நின்ற இடத்தின் நேர் பின்னால் சற்றுத் தொலைவில் மீண்டும் புரவிகள் வரும் ஒலி கேட்டது. திரும்பியவன் பார்வையில் மற்றும் இரு யவனவீரர்கள் அவனை நோக்கி வருவதும் புலப்பட்டது.

# 11. அபாய அழைப்பு

கருக்கல் முடிய இன்னும் அரைநாழிகையே இருந்த அந்த நேரத்தில், கவிந்து கிடந்த அந்தக் காரிருளில், முன்னால் கோட்டைக்குச் செல்லும் பாதையும், பின்னால் கற்களும், பாறைகளும் நிறைந்த அவன் வந்த பாதையையும் மறித்து அவனை நோக்கி வந்த யவன வீரர்களைக் கவனித்த முகுந்தன் தனது புரவியை ஒரு முறை தட்டிக் கொடுத்துவிட்டு, அவர்களை வெறித்தபடி நின்றான். அவன் முகத்தில் வறண்ட முறுவல் ஒன்று நெளிந்தது. சற்று சிந்தனையும் ஓடியது.

முன்னால் வந்த யவன வீரர் நால்வரும் அவனை வேகமாக நெருங்கினார்கள். அவர்களில் வில்லை ஏந்தியவன் பலமாகக் குரல் கொடுத்தான் "முகுந்தா, அப்படியே நில். அசைந்தால் அடுத்த கணம் கொல்லப் படுவாய்"

முகுந்தனை நெருங்கிச் சூழ்ந்து கொண்ட மூவரும் வாட்களை நீட்டியபடி நிற்க, கரத்தில் வில்லும் அம்பு மாக நின்றவன் சற்றுத்தள்ளி நின்றான். இரண்டொரு கணங்களில் பின்னாலிருந்து வந்த இருவரும் புரவிகளி லிருந்து இறங்கி முகுந்தனைப் பின்புறமாக நெருங்கி வந்தனர்.

முகுந்தனின் முகத்தில் பதற்றமோ, தப்பிக்க வழிதேடும் ஆவலோ காணப்படவில்லை.

"முகுந்தா, அந்த செங்கதிர்மாலை உன்னிடம்தான் இருக்கிறது. எடு அந்த மாலையை, இப்போதே எங்களிடம் அளித்துவிட்டால் உயிர் பிழைக்கலாம்" என்றான் பின்னாலிருந்து வாளை நீட்டியபடி முன்னால் வந்தவன்.

அவர்கள் யாரென்பதைப் புரிந்து கொண்ட முகுந்தன் சற்று நிதானித்தான். அடுத்து செயல்பட வேண்டிய முறையைத் தீர்மானித்தவன் பதிலும் கேள்வியாகவே வந்தது.

"செங்கதிர்மாலையா? என்ன அது? என்னிடம் இருக்கிறதா? ஏதேனும் கனவு கண்டீர்களா?" முகுந்தனின் குரலில் ஆச்சரியமும் ஏளனமும் ஒலித்தது.

"முகுந்தா, எங்களை எளிதில் ஏமாற்ற முடியாது. உன் உறவினனான அந்த சேர ஒற்றன் உயிர் பிழைத்து குடந்தையின் அந்தப் பாடசாலையிலிருந்து வெளியே வந்ததும் எங்களிடம் சிக்கி, உண்மையைக் கக்கி விட்டான். எடு அந்த மாலையை. மறுத்தால் உன்னை இங்கேயே கொன்றுபோட்டுவிட்டு மாலையை எடுத்துக் கொள்வோம். இத்தனை சிறுவயதில் ஏன் மரணத்தைத் தேடுகிறாய்? அதை எடுத்து எங்களிடம் கொடுத்து உயிர் பிழைத்துக் கொள்" யவனன் உபதேசம் செய்தான்.

அந்த யவனன் வார்த்தைகளை முடிக்குமுன் முகுந் தனிடமிருந்து கடகட வென்ற பெரும் நகைப்பு உதிர்ந்தது.

"ஏன் நகைக்கிறாய்? நிறுத்து" யவனனின் சீறல் பலமாக ஒலித்தது.

"நகைக்காமல் என்ன செய்வது? வீரனே.. நீ கூறும் மாலை மதிப்பு மிக்கதாக இருக்க வேண்டும். அப்படித் தானே?"

"அதன் மதிப்பு விலையில் இல்லை சிறுவனே சேரநாட்டின் சிற்றரசர்களை ஆட்டிவைக்கக் கூடியது அது. கொடுத்துவிடு"

மீண்டும் நகைத்த முகுந்தன் "வீரனே, அத்தனை மதிப்புமிக்க மாலையை நான் மடியில் கட்டிக்கொண்டு இந்த இருளில் சேரநாட்டுக் காழிவர்மன் கோட்டைக்குள் செல்லக் காத்திருக்கிறேன். அப்படித்தானே?" என்றான் நகைப்பினூடே.

ஒருகணம் திகைத்த யவன வீரர் தலைவன் மற்ற யவனர்களை ஒருமுறை நோக்கினான். "தலைவரே, இவன் பேசியே ஏமாற்றி நம்மிடமிருந்து தப்பிக்க நினைக்கிறான். இவனைச் சோதித்துப் பார்த்துவிடுவோம்" என்றான் ஒரு

யவனன். தன் வாளை நீட்டியபடி முன்னால் வரவும் செய்தான்.

“பொறுங்கள், பொறுங்கள், என்னிடம் நீங்கள் கூறும் எந்த மாலையும் இல்லை” என்றபடியே இடைக் கச்சையை அவிழ்ப்பதுபோல் பாவனை செய்த முகுந்தன். தலையைக் குனிந்து அரைவினாடி வில்லேந்தியவனின் குறியிலிருந்து விலகி, அடுத்த கணம் தரையில் விழுந்து புரவியின் கால்களினூடே உருண்டு மறுபுறம் வெளி வந்தான். மறுபடி எழுந்துநின்றவன் கரத்தில் அவனது இடையிலிருந்த வாள் பளபளத்து முன்னால் நீண்டது.

புரவியைச்சுற்றி இருபுறமும் வளைக்க முயன்ற யவன வீரர்களை நோக்கி வாளுடன் பாய்ந்துவிட்ட முகுந்தனின் வாள் முதலில் வில்லேந்தியவனின் கரத்தில் பதிந்து இழுபட்டது. அடுத்து சுற்றி வந்தவர்களை ஒருபுற மாக ஒதுக்கியவன் கரகரவெனத் தன் வாளைச் சுழற்றினான். இருபுறமும் தாக்க முற்பட்ட யவன வீரர்களின் கனமான பட்டையான வாட்களைச் சற்றுப் பின்வாங்கி ஏக காலத்தில் தடுத்தவன், சட்டென்று தன் வாளை உருவிக்கொண்டு எதிர்வெட்டாகச் சுழற்றி, இரண்டொரு முறை நேர் செங்குத்தாக வாளைப் பாய்ச்சியதில் இரு யவன வீரர்கள் மார்பிலும் கழுத்திலு மாகக் காயங்களுடன் சரிந்தனர். மீதமுள்ளவர்களைப் பக்க வாட்டில் முன்னேறித் தாக்கியவிதத்தில் அவர்கள் ஒருபுற மாக நின்று போராடவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

யவன வீரர் தலைவனின் உக்கிரம் உயர்ந்தது. “அடேய், நாங்கள் இருவர் இவனைக் கவனித்துக் கொள்கிறோம். ஒருவன் பின்வாங்கி இவன்மீது அம்பை எய்து வீழ்த்திவிடு” என்று உத்தரவிட்டபடியே தனது வாளைப் பலமாக வீசத்தொடங்கினான்.

யவன வீரர்களில் ஒருவன் பின்வாங்கினான். முதலில் கை வெட்டுப்பட்டதால் வில்லுடன் விழுந்து கிடந்த

வனை அணுகி, அவன் வில்லை எடுத்து அம்புகளை அடுக்கிக் கொண்டு நாணேற்றினான். அடுத்து அவனிட மிருந்து சரமாரியாக நான்கைந்து அம்புகள் முகுந்தனை நோக்கிப் பறந்தன.

வாளைச் சுழற்றியபடியே சற்றுப் பின்வாங்கி இடை வெளி கொடுத்த யவன வீரர் தலைவன் அத்துடன் முகுந்தன் தொலைந்தான் என்றே எண்ணினான். ஆனால் அவன் எதிர்பார்க்காத முறையில் இருந்தது பாடசாலை மாணவனின் போர்முறை.

முகுந்தனின் வாள் திடீரென்று அசுர வேகத்தில் சுழன்று அம்புகளை மறித்து, இரண்டாகப் பிளந்து எறிந்தது. வலது கரம் வாளைச் சுழற்றியபடியிருக்க, இடையில் வரிசையாக அடுக்கப்பட்டிருந்த குறுவாட் களை ஒவ்வொன்றாக எடுத்து இடது கரம் வில்லுடன் குறிபார்த்துக் கொண்டிருந்த யவனவீரனை நோக்கி, கனவேகத்தில் எறிந்தது. கழுத்திலும், தோளிலும், வலது கரத்தின் மணிக்கட்டிலும் மிகச் சரியாகப் பாய்ந்த குறுவாட்கள் அந்த யவன வீரனை முழுவதுமாகச் செயலிழக்க வைத்தன. யவன வீரர் தலைவன் பிரமித்து நின்றான்.

அதே நேரத்தில் கோட்டையிலிருந்து வந்த பாதையி லிருந்து கிளம்பியது பெரும் கூச்சல். திரும்பிய யவன வீரர் தலைவனுக்குப் புரவி வீரர்கள் பலர் கைகளில் பந்தங்களுடனும் வேல்களுடனும் கூச்சலிட்டபடியே வேகமாக வருவது புலப்பட்டது.

சுழற்றிய வாட்களை நிறுத்திய வீரர் தலைவன் முகுந் தனை ஒருமுறை வெறித்து நோக்கினான். “சிறுவனே, காழிவர்மனின் வீரர்களிடம் நாங்கள் சிக்க விரும்ப வில்லை. எனவே நீ தப்பித்தாய். அடுத்தமுறை உன்னைச் சந்திக்கும்போது உன்னைக் கொல்லாமல் நான் திரும்ப மாட்டேன், நினைவில் வைத்துக் கொள்” என்றவன் திரும்பி தன் வீரர்களை எச்சரித்தான்.

கீழே கிடந்தவர்களைத் தூக்கி, புரவிகளில் கிடத்திய யவன வீரர்கள் புரவிகளைக் கனவேகத்தில் எதிர்ப்புறம் சென்ற மலைப் பாதையில் விரட்டிச் சென்றனர். அவர்கள் மரக்கூட்டங்களுக்கிடையே மறைவதற்கும் கோட்டையிலிருந்து வந்த வீரர்கள் வந்து சேரவும் சரியாக இருந்தது.

கோட்டையிலிருந்து வந்த வீரர் பதின்மரும் முன்னால் வந்த அச்சுதவர்மனும் சிறுகாயங்களுடன் நின்ற முகுந் தனையும், மரக்கூட்டங்களிடையே ஓடி மறைந்த புரவி களையும் வியப்புடன் பார்த்தபடியே வந்து இறங்கினர்.

"முகுந்தா, காவலர் தலைவரிடம் அனுமதி பெறச் சற்றுத் தாமதமாகிவிட்டது. நான் முதலில் வந்தபோது கானகத்தில் இந்த யவனர்களின் நடமாட்டமிருப்பதைக் கவனித்தேன். திரும்பச் சென்று தலைவரிடம் அறிவித்துக் கோட்டையின் வீரர்களுடன் வருவதற்கு இத்தனை நேரமாகிவிட்டது. மன்னித்துக் கொள்" என்றான் அச்சுதவர்மன்.

தன் வாளைத் துடைத்து உறையிலிட்ட முகுந்தனிட மிருந்து சாவதானமாகப் பதில் வந்தது "அதனால் பாதகமொன்றுமில்லை அச்சுதா. நானே அவர்களைக் கவனித்து விட்டேன். கோட்டைக்குள் என்னை அழைத்துச் செல்ல அனுமதி வாங்கி விட்டாயா?"

"வாங்கியாயிற்று. வா போகலாம்" என்ற அச்சுதவர்மனுடன் முகுந்தன் செல்ல, மற்ற வீரர்கள் தொடர்ந்தனர்.

கோட்டைக்குள் நுழைந்த அச்சுதவர்மனுக்கும் முகுந்தனுக்கும் ஆச்சரியம் காத்திருந்தது. முகுந்தனை வரவேற்க காவலர் தலைவனே வாயிலின் அருகே வந்து நின்றிருந்தான். புரவியிலிருந்து இறங்கி வணங்கிய அச்சுதவர்மனை நோக்கித் தலையசைத்த காவலர் தலைவன் முகுந்தனை ஒருமுறை ஏறஇறங்கப் பார்த்தான். அடுத்து அவனிடமிருந்து கேள்வியொன்றும் எழுந்தது

"நீதான் கண்ணாகனாரின் பாடசாலை மாணவன் முகுந்தனா?" என்றவன் தொடர்ந்து அச்சுதவர்மனை நோக்கி "அச்சுதா, இவனை உன் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல். காயங்களுக்கு மருந்திட்டு உன்னுடன் உணவருந்தச் செய்.. இன்னும் இரு நாழிகைகளில் வந்து இவனை அழைத்துச் செல்கிறேன்." என்றான்.

உடன் வந்த வீரர்களில் ஒருவனை அழைத்து "நீ சென்று மருத்துவரை அச்சுதனது இருப்பிடத்திற்கு அழைத்து வந்துவிடு" என்றும் உத்தரவிட்டுத் திரும்பி, அரண்மனையை நோக்கிச் சென்றான்.

அச்சுதவர்மனின் இருப்பிடம் இரு அறைகளுடன் சுத்தமாகவே இருந்தது. காட்டுக்கோரையால் ஆன பாய் ஒன்று கீழே கிடக்க, உடைகளையும் ஆயுதங்களையும் வைத்துக் கொள்ள சுவர்களில் மாடங்கள் இருந்தன. மரத்தாலான இரு இருக்கைகளில் ஒன்றில் முகுந்தனை அமரச் செய்த அச்சுதவர்மனின் முகத்தில் வியப்பே நிரவிக் கிடந்தது.

"முகுந்தா, முதலில் உன்னைப் பற்றிக் கூறியபோது காவலர் தலைவர் வெகு அசிரத்தையாகத்தான் கேட்டுக் கொண்டார். பிறகு ஏதோ நிகழ்ந்திருக்க வேண்டும்.

இங்குள்ள வீரர்களைத் தேடி விருந்தினர் எவரும் அதிகம் வருவதில்லை. இவர்களே சென்றுதான் எப்போ தேனும் கண்டுவருவார்கள். அப்படி எவரேனும் வரும் போதும் காவலர் தலைவர் கண்டு கொள்வதில்லை. உன்னைக் காண அவரே வாயில் வரை வந்தது ஆச்சரியம்தான். அதைவிட ஆச்சரியம் உன்னை அவரே வந்து எங்கோ அழைத்துச் செல்வதாகக் கூறிச் சென்றது தான். எனக்கு ஒன்றும் விளங்க வில்லை" என்றான் அச்சுதவர்மன்.

"எனக்கும் ஒன்றும் விளங்கவில்லை" என்றான் முகுந்தன்.

சற்றுநேரத்தில் வந்த மருத்துவர் முகுந்தனின் காயங்களுக்கு மருந்திட்டுச் செல்ல, காலை உணவும் அங்கேயே வந்தது. உணவருந்தியபடியே பழம்நினைவு களில் சற்றுநேரம் இருவரும் பேசிக்கொண்டிருந்தனர்.

"சரி அச்சுதா, நீ எப்படி இங்குவந்து சேர்ந்தாய்? நாம் பிரிந்தபோது நீ மலைநாட்டு மன்னர் வீரகேரளரிடம் பணிசெய்யச் செல்வதாக அல்லவா கூறினாய்?" என்றான் முகுந்தன். அச்சுதவர்மன் பதிலேதும் கூற வில்லை. அவன் முகத்தில் வியப்பின் சாயை பரவியிருக்க, விழிகள் வாயிலின் வழியே அவர்களை நோக்கி வருபவர்களை வெறித்துக் கெண்டிருந்தன.

காவலர் தலைவனுடன் கோட்டைத்தலைவனும் அவர்களிருந்த அறையை நோக்கி வந்து கொண்டிருந் தான்.

"வருபவர் இந்தக் கோட்டையின் தலைவர். காவலர் இல்லங்களுக்கு அவர் வருவதேயில்லை. இப்போது எதற்காக வருகிறார்..." என்ற அச்சுதவர்மன் "முகுந்தா எச்சரிக்கையாக இரு. கோட்டைத்தலைவர் பெரும் சந்தேகப் பேர்வழி. உன்னை ஏதோ விசாரிக்கவே வருகிறார் என்று எண்ணுகிறேன்" என்றான் அச்சுத வர்மன்.

காவலர்தலைவன் உள்ளே நுழைந்து இருவரும் உணவருந்திக்கொண்டிருப்பதைக் கண்டான் "முகுந்தா, உணவருந்திவிட்டு உடனே புறப்படு. உன்னை அழைத்துச் செல்ல கோட்டைத்தலைவர் வாயிலில் காத்திருக்கிறார்" என்றவன் மீண்டும் வாயிலுக்குச் சென்று கோட்டைத்தலைவனுடன் உள்ளே சுட்டிக் காட்டி ஏதோ கூறியபடி நின்றான்.

"இதோ வருகிறேன்" என்ற முகுந்தன் அச்சுதவர்மனை உள்ளறைக்கு அழைத்துச் சென்றான். "அச்சுதா, விரை வாக நடக்கும் காரியங்களில் ஏதோ அபாயம் இருப்ப

தாகத் தெரிகிறது. எனக்கோர் உதவி செய்" என்றவன் இடைக்கச்சையிலிருந்து நீலநிறப் பட்டுத்துணியொன்றை எடுத்தான்.

முழ நீளத்தில் சிறு முடிப்புபோல நீண்ட அந்த பட்டுப்பையை அச்சுதவர்மனிடம் அளித்த முகுந்தன் "இதில் மிக முக்கியமான பொருள் ஒன்று இருக்கிறது. நான் திரும்பி வரவில்லையென்றாலோ, அரண் மனைக்குள் அபாயம் ஏதேனும் நேரிட்டதாகத் தெரிந் தாலோ, இங்கிருந்து உடனே சென்று என் தந்தையிடம் இதை அளித்துவிடு. எச்சரிக்கை... வேறு எவர் கரங் களிலும் இது சிக்கக்கூடாது" என்றவன் தன் வாளை எடுத்து கச்சையில் இறுக்கிக் கொண்டபடியே வெளியே வந்தான்.

முகுந்தனை ஒருமுறை ஏறஇறங்கப் பார்த்த கோட்டைத்தலைவன் "நீதான் அந்த முகுந்தனா? உன்னைப் பயிற்சிக் களத்தில் மன்னர் எதிர்பார்க்கிறார். உன் புரவியிலிருக்கும் வில்லையும் அம்புகளையும்கூட நீ எடுத்துக் கொள்ளலாம். என்னுடன் வா" என்றவன் திரும்பி அரண்மனையை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

கோட்டைக்குள் நுழைந்த பின்னர் மன்னரைச் சந்திக்க என்ன யுக்தியைக் கையாளலாம் என்ற சிந்தனையில் இருந்த முகுந்தனுக்கு, உள்ளே வந்த ஒரு ஜாம நேரத்தில் மன்னனிடமிருந்து வந்திருக்கும் அழைப்பு வியப்பை அளித்தாலும், நிச்சயம் ஏதோ அபாயம் காத்திருக்கிறது என்ற உணர்வே மேலிட்டது.

ஏதும் கூறாமல் கோட்டைத் தலைவனைத் தொடர்ந்த முகுந்தன் அரண்மனை வாயிலை நெருங்கியதும் நிதானித்தான். வாயிலில் இடையில் பெரும் வாளையும், கரங்களில் சேரநாட்டின் பிரசித்திபெற்ற செண்டாயுதங் களையும் தரித்த காவலர்களும், உள்ளே அரக்கர்கள் போல் நடமாடிக்கொண்டிருந்த வீரர்களும் முதல்

பார்வைக்கே அச்சத்தை ஏற்படுத்தும் விதமாகத்தான் தெரிந்தனர்.

அரண்மனைக்குள் நுழைந்து இரண்டு பெரும் வாயில்களைக் கடந்த முகுந்தனின் மனதில் அச்சத்தை விட பிரமிப்பே ஆட்கொண்டது. நுண்ணிய வேலைப் பாடுகள் நிறைந்த பெரும் தூண்கள் ஆங்காங்கே நிற்க, அரண்மனையின் அந்தப் பெரும் கூடம் ஏதோ இந்திர லோகம் போலவே தெரிந்தது. சுவர்களெங்கும் வண்ணச் சித்திரங்கள் பல தீட்டப்பட்டிருந்தன.

பரசுராமர் தந்தையின் சொல்லுக்காகத் தாய் ரேணுகையின் சிரத்தை அறுத்தது, பின் வரம் கேட்டு சகோதரர்களையும், தாயையும் உயிர்ப்பித்தது, பின் இருபத்தொரு தலைமுறைகள் க்ஷத்திரிய வம்சத்தை வேரறுத்தது, தீர்த்தயாத்திரை சென்றது, மூஷிக மலையில் வந்து இறுதியாக யாகம் நடத்த ஒரு க்ஷத்திரியன் தேவைப்பட, மறைத்து வளர்க்கப்பட்ட மூஷிக இளவலை முன்னிறுத்தி யாகம் செய்து, யாகக்குடங்களில் இருந்த நீரை அபிஷேகம் செய்து, மூஷிக வம்சத்து மன்னர் களுக்கு இராமகுட மன்னர்கள் என்று பெயர் சூட்டியது வரை மூஷிக மன்னர்களின் வம்சத்துப் புராணக் கதைகள் சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருந்தன.

அந்தப் பெரும் கூடத்தைக் கடந்து வலப்புறம் திரும்பி, மற்றொரு வாயிலை அடைந்த கோட்டைத் தலைவன் வாயிலில் இருந்த காவலர்களிடம் ஏதோ கூறிவிட்டு, முகுந்தனை உள்ளே அழைத்துச் சென்றான். உள்ளே நுழைந்த முகுந்தன் பிரமித்தான். அகன்று விரிந்த அந்தப் பெரும் கூடம் காழிவர்மன் படையின் சிறந்த வீரர்களும், படைத்தலைவர்களும், அவர்களுக்குப் பயிற்சியளித்துக் கொண்டிருந்தவர்களுமாக அந்த இடம் ஏதோ யுத்தகளம் போலவே தோற்றமளித்தது. வாட்கள் பலமாக மோதும் ஒலிகளும், விர்விர்ரென்று காற்றைக் கிழித்த அம்புகள் பறக்கும் ஒலிகளும், சேர நாட்டின் பிரத்யேக ஆயுதமான

செண்டுகள் அதிவேகத்துடன் பாய்ந்து இலக்காக நின்ற பலகைகளைப் பிளக்கும் ஒலிகளுமாக அந்த அரங்கம் வீரர்களால் நிறைந்து கிடந்தது.

பயிற்சிக் களத்தின் ஓரமாகவே சென்ற பாதையில் முகுந்தனை அழைத்துச் சென்ற கோட்டைத்தலைவன், இறுதியாக மற்றுமொரு வாயிலை அடைந்து நின்றான். வாயிலில் கிங்கரர்கள் போலிருந்த காவலர்களிடம் சைகை செய்தவன் திரும்பி முகுந்தனிடம் "முகுந்தா, இது மன்னரின் பயிற்சிக்கூடம், உள்ளே மன்னர் உனக்காகக் காத்திருக்கிறார், செல்" என்றான்.

ஒருமுறை கோட்டைத்தலைவனை ஏறெடுத்த முகுந்தன், கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான்.

முதலில் கண்ட பயிற்சிக்கூடத்தைவிடச் சற்றுச் சிறிய தாக இருந்தாலும், அந்த இடம் அதிகம் வீரர்கள் இன்றி வெகு சுத்தமாகக் காணப்பட்டது. சுவர்களில் சோழ, பாண்டிய நாடுகளின் வளைந்த, நேரான வாட்களும், யவனர்களின் பட்டையான வாட்களும் மட்டுமின்றி, தமிழகத்தின் வளைவிற்பொறி, கருவிரலூகம், கல்லுமிழ் கவண், தொடக்கு, குந்தம், வேல், தோமாரம், கதை, கொடு வாள், ஈர்வாள், கை வாள், அரிவாள், மழு, தண்டம், சுழல்படை, ஈட்டி என்று ஆயுதங்கள் பல வரிசையாக மாட்டப் பட்டிருந்தன. போதாக் குறைக்கு முகுந்தன் பாடசாலையில் கண்ட விற்களின் வகையும் மூலையில் சார்த்தப்பட்டிருந்தன. எதிர்மூலையில் தரையில் செண்டுகள் பல குவித்து வைக்கப்பட்டு அதனருகே அந்த போர்க்கூடத்தின் காவலான மூன்று மல்லர்கள் நின்றனர்.

மன்னர் காத்திருப்பதாக கோட்டைத் தலைவன் கூறியிருந்தாலும், உள்ளே நுழைந்த முகுந்தன் அந்த மல்லர்களைத் தவிர வேறு எவரும் காணப் படாத

தையும், அவர்கள் தன்னைப் பார்த்த பார்வை அத்தனை விரும்பத்தக்கதாக இல்லை என்பதையும் புரிந்து கொண்டான்.

உள்ளே நின்ற மூவரில் ஒருவன் பலமாக இரைந்தான் “அடேய், யார் நீ, இங்கு வேறு எவருக்கும் அனுமதி யில்லை. உடனே வெளியேறிவிடு”

அந்த மல்லர்கள் தன்னைக் கொலைப் பார்வையாகப் பார்ப்பதையோ, அவர்களில் ஒருவன் பலமாக இரைந்ததையோ அடியோடு சட்டை செய்யாத முகுந்தன், நிதானமாக அவர்களை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

மீண்டும் அந்த மல்லர்களிடமிருந்து ஏக காலத்தில் கூச்சல் ஒலித்தது “அடேய், நில் அப்படியே. இங்கு அன்னியர் யாரும் வரலாகாது. யார் உன்னை இங்கு அனுமதித்தது? சொல்வது கேட்கவில்லையா உனக்கு?”

முகுந்தன் நின்றான். “உங்கள் கூச்சல் நன்றாகவே கேட்கிறது. கோட்டைத் தலைவர் அனுமதியின் பேரில் தான் உள்ளே நுழைந்தேன். இங்கு மன்னரைச் சந்திக்க வந்திருக்கிறேன். அவர் எங்கிருக்கிறார்?” என்றான் நிதானமாக.

மல்லரின் ஒருவன் “அடேய். அந்தக் கோட்டைத் தலைவன் ஒரு முட்டாள். மன்னரைச் சந்திக்க நீ இங்கு வரவேண்டியதில்லை. திரும்பி அவனிடமே செல்” என்றான் பலமாக.

அதே நேரத்தில் வாயிற்கதவு மீண்டும் திறந்தது. கோட்டைத் தலைவன் அவசரமாக உள்ளே நுழைந்து ஏதோ கூற வாயெடுத்தவன், அந்த மல்லன் கூறியதைக் கேட்டு முகம் சிவக்க நின்றான்.

முகுந்தன் பலமாக நகைத்தான் “ ராமகுடம் மன்னர் ஒரு முட்டாளிடம் கோட்டைக் காவலை ஒப்படைத் திருக்கிறார் என்கிறீர்களா? அப்படியானால் இந்தப்

பயிற்சிக் கூடத்தைக் காக்கும் நீங்கள் எப்படி?...” என்று நகைத்தபடியே இழுத்தான்.

சுபாவத்திலேயே துஷ்டர்களான அந்த மல்லர்களின் முகங்களில் அனல் வீசியது “அடேய்... என்ன கூறினாய்?...” என்றபடியே குனிந்து கீழே கிடந்த செண்டாயுதங்களில் ஆளுக்கொன்றாக எடுத்தவர்கள் அதே வேகத்தில் முகுந்தனை நோக்கி அந்தச் செண்டுகளை பலமாக வீசினார்கள்.

கோட்டைத்தலைவன் உறைந்து போய் நின்றான்.

முகுந்தனை நோக்கி அந்த மூன்று செண்டுகளும் சுழன்றபடியே அசுர வேகத்தில் பறந்து வந்தன.

# 12. பறிப்பதும் நிலைப்பதும்

மூஷிக மன்னனின் கோட்டைத்தலைவனும், சோழருடன் மட்டுமின்றி, உள்நாட்டில் சிதறிக்கிடக்கும் சேரர் சிற்றரசர்களுடன் பலமுறை போரில் கலந்து கொண்டவனும், நினைவு தெரிந்த வயதுமுதல் பலவித போர்க்கருவிகளுடனேயே பழகி வந்தவனுமான கங்காதரன், தன் கண்ணெதிரே நிகழ்ந்த அந்த சாகசத்தைக் கண்டு அப்படியே அடித்துவைத்த சிலையாக நின்றான்.

பார்வைக்குச் சிறுவனாகத் தெரிந்த பாடசாலையின் மாணவன் முகுந்தனை நோக்கி அந்த முரட்டு மல்லர்கள் எறிந்த செண்டாயுதங்கள் மூன்றும் பளபளத்து சுழன்று பாய்ந்ததைக் கண்ட கோட்டைத் தலைவன் அன்றோடு அந்தச்சிறுவன் தொலைந்தான் என்றும், மன்னன் கட்டளைப்படித் தான் அவனை உயிருடன் அழைத்துவரத் தவறிவிட்டதாகவுமே தீர்மானித்தான்.

ஆனால் பாய்ந்துவரும் செண்டாயுதங்களின் பாதையி லிருந்து கணப்பொழுதில் முகுந்தன் வலப்புறமாகச்

சாய்ந்து விலகியதையும், எப்போது எடுக்கப்பட்டது எப்போது வீசப்பட்டது, என்று புரிபடாத வேகத்தில் அவன் வலக்கரத்தில் வாள் எழுந்து செண்டுகளில் இரண்டை லாகவமாகத் தட்டிவிட்டதையும், இடது கரம் உயர்ந்து மற்றொரு செண்டின் கூரான பகுதியை விடுத்து அதன் தண்டுப்பகுதியைப் பிடித்து நிறுத்தியதையும் கண்ட கோட்டைத் தலைவன், அந்த இந்திர ஜாலத்தைக் கண்டு பிரமித்து நின்றான். அவன் பிரமிப்பை இன்னும் உச்ச நிலைக்குக் கொண்டு செல்ல, முகுந்தனின் இடது கரம் சுழன்று, தான் பிடித்த செண்டை அந்த மல்லர்களை நோக்கிப் பலமாக வீசியது. அவர்கள் தழைந்து அதிலிருந்து தப்ப முயன்று மீண்டும் கரங்களில் கீழேயிருந்து செண்டாயுதங்களை எடுத்துக் கொண்டு நிமிர்வதற்குள், முகுந்தனின் தோளில் மாட்டித் தொங்கிக் கொண்டிருந்த அவன் வில் முன்புறம் வந்து நின்றிருந்தது. அதில் ஏக காலத்தில் மூன்று அம்புகளும் பொருத்தப் பட்டு அதிவேகத்துடன் மல்லர்களை நோக்கிப் பறந்தது. மல்லர்கள் கரங்களிலிருந்து செண்டுகள் விடுபடுவதற்குள் அவர்களைத் தாக்கிய அம்புகள், மிகச் சரியாக அவர்களது தோள்களிலும், ஒருவனது மணிகட்டிலும் தாக்கி ஆயுதங்களைக் கீழே உதற வைத்தது.

மீண்டும் அம்புகள் பொருத்தப்பட்ட வில்லுடன் சற்று முன்னால் நகர்ந்த முகுந்தன் "காவலர்களே, நான் இங்கு வந்தது மன்னரைச் சந்திக்க, உங்களைக் கொல்வதற்கல்ல. எனவே மீண்டும் தாக்க முயலவேண்டாம். மன்னர் எங்கிருக்கிறார், கூறுங்கள்" என்றான் உரத்த குரலில்.

பதிலேதும் கூறாமல் குருதிவழிந்த கரங்களைப் பிடித்தபடி நின்ற மல்லர்களின் முகங்களில் வியப்பும் அதிர்ச்சியுமே தெரிந்தது.

ஆனால், முகுந்தனின் கேள்விக்கு அறையின் மூலையி லிருந்து பதில் வந்தது. "மன்னரும் இங்கேதான் இருக்கிறார் முகுந்தா" என்று. மல்லர்கள் நின்ற இடத்திலிருந்து நேர் பின்னால் திட்டிவாசல் போலிருந்த

கதவு திறந்து கிடக்க, மன்னன் காழிவர்மன் வியப்பு வழிந்த விழிகளோடு நின்றிருந்தான்.

அதிக உயரமில்லாவிட்டாலும், திடமான உருவத்துடன் நிமிர்ந்து நின்ற மன்னனின் தோற்றமும், தோரணையும், துருவிவிடுவதைப் போல் ஊடுருவிய கூர் விழிகளும், இடையிலிருந்து பின்புறம் தரையைத் தொடும்வரை நீண்டு கிடந்த உடைவாளும், அவன் பழைமையான இராமகுட மன்னர்கள் வம்சத்தில் வந்தவன் என்பதைத் தெரிவித்தன. அகன்று விரிந்த மார்பில் பயிற்சிக்காக மெல்லிய கவசமொன்றை அணிந் திருந்தான் காழிவர்மன். அவன் இடையில் வாளைத் தவிர, பொன்னாலான பிடியுடன் கூடிய கோடரி ஒன்றும் இருந்தது.

வியப்பு வழிந்த விழிகளுடன் முகுந்தனை நோக்கி வந்த காழிவர்மன் முகுந்தனின் தோளில் வலிய தன் கரத்தை வைத்தான் "கண்ணாகனாரின் பாட சாலையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அங்கு பயின்றவர் களின் திறமையை இப்போதுதான் பார்க்கிறேன். முகுந்தா, உன் வேகம் உண்மையில் பிரமிக்க வைக்கிறது" என்ற மன்னனின் குரலில் வியப்பு பூரணமாகத் தொனித்தது.

தலைகுனிந்து மன்னனை ஒருமுறை வணங்கிய முகுந்தன் "மன்னவா, தங்கள் வீரர்களைப் புண்படுத்திய தற்கு மன்னிக்க வேண்டும். நான் அறிந்தவரை தங்களைச் சந்திப்பது அத்தனை எளிதல்ல என்று கேள்விப்பட்டிருக் கிறேன். கோட்டைக்குள் வந்தவனைத் தாங்கள் அழைத்த தாகக் கூறி கோட்டைத்தலைவர் அழைத்துவந்தார்..." என்று சந்தேகத்துடன் இழுத்தவன் பார்வையைத் திருப்பி சிலையாக நின்றிருந்த கோட்டைத்தலைவனை நோக்கினான்.

மன்னன் உடைவாளுக்கருகில் செருகப் பட்டிருந்த ஓலைக்குழலொன்றை எடுத்தான். "முகுந்தா, உன்

உறவினன் ஜெயவர்மன் உயிர் பிழைத்து எழுந்து விட்டான். அந்த செங்கதிர்மாலையுடன் நீ என்னிடம் வருவதாகவும், அவனைக் கொல்லமுயன்ற யவனர்கள் தொடர்ந்து வருவதாகவும், பாதுகாப்பளிக்கவும், உதவி செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு எழுதிய ஓலை இது. ஜெயவர்மன் எனக்காகவும் சில பணிகள் செய்திருக்கிறான். எனவேதான் நீ கோட்டைக்குள் வந்ததும் அழைத்துவரப் பணித்தேன்" என்றான் முறுவலுடன்.

முகுந்தனுக்கு நடந்தவற்றுக்கான காரணம் புரிந்தது.

கோட்டைத்தலைவனையும், அந்த மல்லர்களையும் சைகையால் வெளியேறப் பணித்த மன்னன் தன்னைத் தொடருமாறு சைகை செய்துவிட்டு, தான் வந்த திட்டி வாயிலை நோக்கி நடந்தான்.

மன்னனைத் தொடர்ந்து திட்டிவாயில் வழியே வெளியே வந்த முகுந்தன் பிரமித்தான். அவன் கண்ணெதிரே விரிந்த காட்சி மூஷிக மன்னன் எத்தனை ரசிகன் என்பதைப் புலப்படுத்தியது. அவன் எதிரில் விரிந்தது ஓர் அழகிய நந்தவனம்.

மலைச்சரிவில் ஏராளமான மரங்களுடனும், மலர்ச் செடிகொடிகளுடனும் அமைந்திருந்தது அந்த நந்தவனம். மா, பலா, பாக்கு, அசோகம், கொன்றை, பாதிரி, என்று மரவகைகள் மட்டுமின்றி, செண்பகம், பாரிஜாதம், மல்லி, முல்லை, தாழை, என்று மலைப்பகுதியில் விளையாத மலர்ச்செடிகொடி வகையும் அளவோடு வெட்டப்பட்ட புல்வெளிகளினூடே பராமரிக்கப்பட்டு, அழகிய சோலையாகக் காட்சியளித்தது. சிலீரென்று வீசிய காற்றில் மலர்களும் மூலிகைச் செடிகளும் வீசிய மணம் மிதந்தது. தொலைதூரத்தில் குன்றின் மேலிருந்து விழும் அருவி யொன்றும், அதன் கீழே அழகிய தடாகமொன்றும் தெரிந்தது.

புல்வெளியினூடே நடந்த மன்னன் காழிவர்மன், ஆங்காங்கே கருங்கல்லால் வடிக்கப்பட்ட இருக்கைகளில் ஒன்றில் அமர்ந்தான். பின்தொடர்ந்த முகுந்தனையும் அமரப் பணித்தான். தலையசைத்து மறுத்துவிட்டு புல்வெளியில் நின்றபடியே மன்னனை நோக்கிய முகுந்தனின் விழிகளில் வியப்பும், பிரமிப்பும் மாறிமாறித் தோன்றின.

முகுந்தனை ஏறெடுத்த மன்னனிடமிருந்து கேள்வி எழுந்தது "முகுந்தா, நீ பூந்துறை சிற்றரசின் இளவல் என்பதை அறிவேன். உனக்கு உதவுமாறு ஜெயவர்மன் கேட்டுக் கொண்டிருக்கிறான். என்னிடம் என்ன உதவியை நாடி வந்தாய் என்பதைச் சொல்"

தான் கூறவேண்டியதை முன்னும்பின்னுமாக சிந்தனைக்குள் தொகுத்துக் கொண்ட முகுந்தன் சற்று நிதானித்தான். "மன்னவா, சோழநாட்டில் படைபலம் தற்போது குறைந்திருக்கிறது. பாண்டியர் மீண்டும் மதுரையைக் கைப்பற்றும் முயற்சியில் ஈடுபட்டிருக் கின்றனர். சேரநாட்டிலும் அதற்கு ஆதரவு தேடுகிறார்கள்"

"மேலே சொல்"

"சிதறிக்கிடக்கும் சேரநாட்டின் சிற்றரசுகளை இணைக்க சேரலாதருக்குப் பின் பலமான தலைமை ஒன்று தேவை. மூஷிக மன்னரால் அதைச் சாதிக்க இயலும். அவரது தலைமைக்கு பலம் கூட்ட என்னிடம் ஒரு பொருள் இருக்கிறது"

காழிவர்மன் தலையசைத்த விதம் அவன் இதை முன்னதாகவே அறிந்திருப்பதைத் தெரிவித்தது. அடுத்து வந்த அவன் கேள்வியும் அதை உறுதிப்படுத்தியது.

"முகுந்தா, அந்த செங்கதிர்மாலை உன்னிடம் இருக்கிறதா?"

"ஆம் மன்னவா, ஜெயவர்மர் என்னிடம் அளித்திருக்கிறார். தங்களை அணுகுவதற்கு யோசனை சொன்னதும் அவர்தான்" என்றான் முகுந்தன்.

காழிவர்மன் முகத்திலிருந்த முறுவல் விரிந்தது "முகுந்தா, அந்த மாலையைப் பற்றி நீ அறியாத, ஆழமான நம்பிக்கைகள் சேரநாட்டில் இருக்கின்றன. அது சேரலாதரின் தந்தையால் முழு மனதுடன் ராஜேந்திர சோழருக்கு அளிக்கப்பட்டது. அவரிடமிருந்து உன்னிடம் வந்து சேர்ந்ததுவரை தானே முன்வந்து அளிக்கப் பட்டிருக்கிறது. அதைப் பலவந்தமாக பறிக்க முயல்வதும், வேறுவகையில் அடைய நினைப்பதும் அனர்த்தத்தையே ஏற்படுத்தும்" என்ற மன்னன் சற்று சிந்தனையில் ஆழ்ந்தான்.

மீண்டும் அவன் தொடர்ந்தபோது முகத்திலிருந்த முறுவல் மறைந்திருந்தது "முகுந்தா, இந்த மாலை மற்ற சேர சிற்றரசுகளைக் கட்டுப்படுத்தும் என்பது உண்மை தான். ஆனால் மிகப் புராதனமானதும், உதியன் பெருஞ் சேரலாதர் வம்சத்தில்** வந்ததும், பரசுராமரால் முடி சூட்டப்பட்டதுமான இந்த மூஷிக மன்னர்களுக்கென்று சில நெறிமுறைகள் இருக்கின்றன. உன்னிடமிருந்து அந்த மாலையைப் பெறுவது அத்தனை சரியல்ல என்றாலும், தற்போது சேரநாடு இருக்கும் நிலைக்காக அதைப் பெற்றுக் கொள்ளச் சம்மதிக்கிறேன். பதிலாக நீ வேண்டும் உதவி என்ன என்பதைச் சொல்" என்றான் காழிவர்மன்.

"மன்னவா, எங்கள் பூந்துறை நாட்டின் மலைப் பகுதியும், தெற்கே ஏறக்குறைய நூற்றுக்கும் மேற்பட்ட ஊர்களும் வீரகேரளரால் அபகரிக்கப்பட்டுப் பல ஆண்டுகள் ஓடிவிட்டன. அவருடன் போரிட்டு மீட்கக் கூடிய படைவலிமை பூந்துறை நாட்டுக்கு இல்லை. இந்த மாலையால் சேரலாதருக்கு இணையான பதவியைப்

**★★ உதியன் பெருஞ்சேரலாதன் – மகாபாரதப் போரில் பாண்டவர் படைகளுக்கு உணவளித்த சேரமன்னன்**

பெறுவீர்கள். தங்கள் உத்தரவை வீரகேரளரால் மறுக்க இயலாது. எங்கள் ஊர்களையும் மலையையும் நாங்கள் திரும்பப் பெற உதவவேண்டும். சோழருடனான போரில் எங்கள் பூந்துறையின் படைப்பிரிவும் தங்களுடன் சேர்ந்து உதவும்”

காழிவர்மன் முகுந்தனை ஏறெடுத்தான். “இதை வீரகேரளரிடமே சென்று கேட்கலாமல்லவா?, என்னிடம் வரக் காரணம்?”

“மன்னவா, இந்த மாலையுடன் நேரில் வீரகேரளரிடம் செல்வது உசிதமல்ல. அவர் அத்தனை தூரம் தர்ம நியாயங்களுக்குக் கட்டுப்படுபவர் அல்ல. உண்மையில் அவர்தான் சோழர் பொக்கிஷத்திலிருந்து இந்த மாலையைக் களவாடிக்கொண்டு வர என் மாமன், ஜெயவர்மனை அனுப்பியவர். என்னிடமிருந்து இதைப் பறிக்கமாட்டார் என்பதும் நிச்சயமல்ல... எனவேதான் நான் தங்கள் முன்பாக நிற்கிறேன்” கூறிமுடித்த முகுந்தனின் விழிகளில் ஏக்கமும் ஆவலும் தெரிந்தன.

முகுந்தனின் விளக்கத்தைக் கேட்ட மன்னன் நீண்ட நேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். ‘ஏற்கெனவே சேர சிற்றரசுகளை ஒன்றிணைத்து, சோழரை எதிர்க்க ஏற்பாடுகள் நடக்கின்றன. இந்த மாலை சேரலாதருக்கு இணையான இடத்தைப் பெற்றுத் தரும் என்பதில் சந்தேகமில்லை. ஏற்கெனவே நடந்த போர்களில் சோழர் வென்றாலும், சேரநாட்டை ஆக்கிரமிக்கும் எண்ணம் அவர்களுக்கு இல்லை. போரின் முடிவு எப்படியிருந்தாலும் சேரலாதருக்கு அடுத்த இடம் மூஷிக மன்னர்களுக்கே தொடர இந்த மாலை வழிசெய்யும். ஆனால் சேரலாதர்...’ மன்னனின் சிந்தனை நின்றது.

முகுந்தனின் ஆவல் தெறித்த விழிகளைக் கவனித்த மன்னனின் அடுத்த சொற்கள் திடமாக ஒலித்தன “முகுந்தா, உன் நோக்கத்தில் தவறேதுமில்லை. ஆனால் அதை அடைய நினைக்கும் வழிகளில் சிக்கல்கள்

இருக்கின்றன” என்றவன் , “சரி, அந்த மாலை தற்போது உன்னிடமிருக்கிறதா?” என்றான்.

முகுந்தனின் பதில் சற்றுத் தயக்கத்துடன் வந்தது “ஆம் மன்னவா, மன்னிக்க வேண்டும். கோட்டைக்குள் நான் செங்கதிர்மாலையுடன்தான் வந்தேன். தங்களை எளிதில் சந்திக்க இயலாதென்றும் நினைத்திருந்தேன். கோட்டைத் தலைவர் அழைத்து வந்த விதமும் சந்தேகத்தை அளித்ததால், கோட்டைக்காவல் பணியிலிருக்கும் என் நண்பன் அச்சுதவர்மனிடம் மாலையை பத்திரப்படுத்தி விட்டு வந்திருக்கிறேன். தாங்கள் அனுமதியளித்தால் இப்போதே சென்று கொண்டுவருகிறேன்”

மன்னனின் புருவங்கள் நெரிந்தன “அச்சுதவர்மனா, அவனிடமா அந்த மாலையைக் கொடுத்தாய்? அவன் வீரகேரளனுக்காக வேவு பார்ப்பவன் என்ற சந்தேகம் இருக்கிறது. வீரகேரளன் சேரலாதரின் மகோதயபுரத்தைக் கைப்பற்றி, படைகளுடன் தெற்கே புறப்பட்டதாகச் செய்தியும் வந்தது. எதற்கும் நீ உடனே சென்று மாலையை எடுத்துக்கொள். அரசவையில் பிரதானிகள் முன்னிலையில் உன் வேண்டுகோளையும், என் சம்மதத்தையும் தெரிவித்து அதை ஏற்றுக் கொள்கிறேன். சென்று நாளை வா” என்றான் மன்னன்.

விடைபெற வணங்கிய முகுந்தனைத் தடுத்த மன்னன் கோட்டைக்குள் வந்து செல்ல தன் முத்திரை மோதிர மொன்றையும் அளித்தான். “முகுந்தா, இது நீ என்னைச் சேர்ந்தவன் என்பதைத் தெரிவிக்க மட்டுமே. உன் தந்தை யிடம் காட்டு. அவர் அனுமதியுடன் நாளை அவைக்கு வந்துவிடு” என்று விடையளித்தான்.

வணங்கி விடைபெற்ற முகுந்தன் வேகமாக அரண் மனையிலிருந்து வெளிவந்து காவலர் இல்லத்தை அடைந்தபோதுதான் மன்னனின் சந்தேகம் எத்தனை உண்மையென்பதைப் புரிந்து கொண்டான். காவலர் இல்லத்தில் அச்சுதவர்மன் காணப்படவில்லை. அந்த

நீலப்பட்டு முடிப்பும் காணப்படவில்லை. திகைத்து நின்றவன் செவிகளில் கோட்டை வாயிலிலிருந்து காவலர் தலைவன் குரலும், வீரர்கள் குரல்களும் இரைந்து பேசுவதும் கேட்டன. அதில் அச்சுதவர்மனின் பெயரும் ஒலிப்பதைக் கேட்டவன் வாயிலுக்கு விரைந்தான்.

கோட்டைத்தலைவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது. காவலுக்கு நின்றிருந்தவர் களிடம் இரைந்து கொண்டிருந்தான். "முட்டாளே, என் அனுமதியில்லாமல் அவனை ஏன் வெளியே செல்ல விட்டாய்?"

வீரன் பதில் தயக்கத்துடன் வந்தது "நேற்றும் முன் தினமும் அவனுக்கு வெளியே செல்ல அனுமதியிருந்தது தலைவரே. ஆனாலும் நான் அனுமதி ஓலை இருக்கிறதா என்றேன். என் கேள்விக்கு அவன் பதிலேதும் கூறவில்லை. எச்சரிக்கையும் செய்தேன். அவன் பொருட்படுத்தவேயில்லை"

"எங்கே சென்றான் அவன்?"

"தெரியவில்லை தலைவரே. நான் தொடர்ந்து எச்சரிப் பதைப் பொருட்படுத்தாமல் புரவியில் ஏறி கோட்டை யின் தென்புறப்பாதையில் சென்றுவிட்டான் பிரபு"

"தென்புறப்பாதையிலா?" காவலர் தலைவன் குரல் இன்னும் உயர்ந்து அதிர்ச்சியுடன் ஒலித்தது.

முகுந்தன் நெருங்கியதும் காவலர் தலைவனின் உக்கிர விழிகள் அவனை நோக்கித் திரும்பின. அவன் குரலும் உஷ்ணத்துடன் ஒலித்தது. "முகுந்தா, உன் நண்பனை கோட்டைக்குத் தெற்கே எதற்காக அனுப்பினாய்?"

"நான் எங்கும் அனுப்பவில்லை தலைவரே. நான் மன்னருக்காகக் கொண்டு வந்த பொருளை அவனிடம் பத்திரப்படுத்திவிட்டுச் சென்றேன்" என்றவன் குரலில் சந்தேகம் ஒலித்தது "தலைவரே, தென்புறப்பாதை எங்கு செல்கிறது?"

காவலர் தலைவன் முகத்தில் விபரீதச்சாயை படர்ந்தது "அந்தப் பாதை மிக அபாயமானது. கானகத்து சோலகர் இன மக்கள் வாழும் பகுதி அது. அவர்கள் அன்னியரைக் கண்டவுடனேயே கொன்றுவிடுவார்கள். அவர்கள் வாழும் அந்தப்பகுதியில் சென்றவர் யாரும் உயிருடன் திரும்பிய தில்லை" என்றான் அவன்.

ஒருகணமே தாமதித்த முகுந்தன் வாயிலில் நின்றிருந்த புரவிகளில் ஒன்றில் தாவியேறினான் "தலைவரே, நான் அச்சுதவர்மனிடம் கொடுத்த பொருளை மீட்டுக் கொண்டு திரும்புகிறேன். மன்னரிடம் கூறிவிடுங்கள்" என்றபடி புரவியை முன்னால் பாயவிட்டான்.

காவலர் தலைவன் எச்சரிக்கைக் குரலும், வீரர்கள் குரல்களும் பின்னால் பலமாக ஒலிக்க, முகுந்தனின் புரவி தென்புறக் கானகப்பாதையில் அதிவேகமாகப் பாய்ந்தது.

# 13. ஒன்றை நினைக்கின்...

'மனிதன் ஒன்றை நினைத்துச் செயல்பட்டால், தெய்வம் அதை வேறு ஒன்றாக மாற்றி வைக்கும். அவன் முன்பு நினைத்தே பார்க்காதவற்றையும் கூட அவன் முன்னால் கொண்டு வந்து நிறுத்தும். எனவே புரிந்து கொள்ளவேண்டியது எதுவெனில், நடப்பது அனைத்தும் ஈசன் செயல் என்பதைத்தான்' என்கிறது ஒரு பழந்தமிழ்ப் பாடல்.

கோட்டையின் தென்புறம் நீண்ட கானகத்துப் பாதையில் புரவியை விரட்டிக் கொண்டு சென்ற முகுந்தனின் சிந்தனையும் பாடசாலையில் கற்ற அந்தப் பாடலின் பொருளையே நினைத்தது. இத்தனை காலமாய் காத்திருந்து அடைந்த பயிற்சியும், அடைந்த அந்த செங்கதிர்மாலையும், அதை முன்னிட்டுத் தன் பூந்துறை நாடு இழந்த பகுதிகளை மீட்பதோடு, பாடசாலையில்

கற்றவை அளித்த அறிவால் தன் நாட்டை வலுவான படை கொண்ட சுதந்திரமான நாடாக உருவாக்கத் தான் வகுத்த திட்டங்களும், அனைத்தும் கூடிவந்துவிட்டன என்றே எண்ணினான். அதற்கு மிக முக்கியமாக மூஷிக மன்னன் உதவியைப் பெற்றுத் தரும் அந்த செங்கதிர் மாலையுடன், நண்பனாகக் கருதிய அச்சுதவர்மன் காணாமற்போனது அவனுக்குக் குழப்பத்தையும், ஆத்திரத்தையுமே அளித்தது.

வீர கேரளன், படைகளுடன் தெற்கே புறப்பட்டு விட்டான் என்று மன்னன் கூறியதையும், அச்சுதவர்மன் வீரகேரளனுக்காக உளவு பார்ப்பவன் என்றதையும் நினைவுபடுத்திக் கொண்ட முகுந்தனுக்கு, அவன் எங்கே செல்கிறான் என்பதற்கான விடையும் புலப்பட்டது. மகோதயபுரத்தைக் கடந்து தெற்கே சென்று விட்ட வீரகேரளனை, இந்த கானகத்துப் பாதை வழியில் சென்று சந்திக்க அச்சுதவர்மன் விரைந்திருக்கிறான் என்பதும் புரிந்தது.

தெற்கே செல்லச்செல்ல பாதை கடுமையாகிக் கொண்டே வந்தது. பாறைகளும், புதர்களும் நெருக்கத் தொடங்கின. பகல்பொழுதிலேயே ஒலித்த உறுமல்களும், கர்ஜனைகளும், பக்கவாட்டில் மரங்களிலிருந்து தொங்கிய நீண்ட பெரும் சர்ப்பங்களும், பாதையின் குறுக்கே பாய்ந்து மறைந்த நரிகளும் புரவியின் வேகத்தைத் தடுக்க முயன்றன.

ஏறக்குறைய இரண்டு காத தூரத்துக்குமேல் பயணித்த முகுந்தனின் பார்வையில் மலைப்பாதை உயர்ந்து அடர்ந்த கானகத்தினூடே இரண்டாகப் பிரிந்தது. ஒரு பாதையில் வெகு தூரத்தில் குடிசைகள் பல தென் பட்டன. மற்றொரு பாதை பிரிந்து ஏறக்குறைய நேர் செங்குத்தான சரிவுகளில் இறங்கி மேற்கே நீண்டது.

சரிவிலிறங்கிய பாதையின் துவக்கத்தில் தரையில் தெரிந்த புரவிகளின் குளம்படிகளின் தடங்களைக் கண்ட

முகுந்தன் நிதானித்தான். புரவியிலிருந்து கீழே இறங்கி அவற்றைச் சோதித்தவனுக்கு நான்கைந்து புரவிகள் ஒருபுறமும், தனித்து ஒரு புரவியும் அந்த வழியில் சென்றிருக்க வேண்டும் எனப் புரிந்தது. எதிரே நீண்ட பாதையில் புலப்பட்ட குடிசைகள், அது காவலர் தலைவன் கூறிய அபாயமான கானகத்து சோலகர் இன மக்கள் வாழும் பகுதியாயிருக்க வேண்டும் என்பதும், சரிவில் இறங்கிய பாதையில் அச்சுதவர்மன் இறங்கி யிருக்க வேண்டும் என்பதும் புலப்பட்டது.

சரிவில் இறங்கியவனை அடர்ந்த காட்டுக்கொடிகளும், பாதையோரத்துச் செடிகளும் வழி மறித்தன. சற்றுத் தொலைவு வந்ததும் வளைந்து திரும்பிய பாதையில் தொலை தூரத்தில் பெரும் மரமொன்றின் நிழலில் புரவி ஒன்று தனித்து நிற்பது தெரிந்தது. பாதையில் ஆங்காங்கே ரத்தத்துளிகள் சிதறிக்கிடப்பதும் தெரிந்தது. வேகத்துடன் விரைந்தவனுக்கு அருகே நெருங்கியதும் அதிர்ச்சி காத்திருந்தது. புரவி தனித்து நிற்க, மரத் தினடியில் உடலெங்கும் குருதி வழிந்த உடலுடனும், காயங்களுடனும் நினைவின்றி விழுந்து கிடந்தான் அச்சு தவர்மன். அவன் விலாப்பகுதியில் ஆழமாகக் குத்திட்டு நின்றிருந்தது ஒரு யவன வாள்.

குதித்து இறங்கிய முகுந்தன் அவனை நெருங்கி சோதித்தான். அச்சுதவர்மனின் மூச்சு மிக மெலிதாக வருவதும், நாடித்துடிப்பு அடங்கிக் கொண்டிருப்பதும் புலப்பட்டது. தனித்து நின்ற புரவியில் தோற்பை ஒன்றிருப்பதைக் கவனித்தவன், மிரண்ட புரவியை ஆசுவாசப்படுத்திவிட்டு அதை எடுத்து வந்தான். பாதியளவு நீர் அதில் இருப்பதைப் கவனித்தவன், தன் கச்சையிலிருந்து சிறு முடிப்பொன்றை அவசரமாக எடுத்து பக்கத்து மரக்கிளை யொன்றிலிருந்து பறித்த இலை யொன்றில் முடிப்பிலிருந்த சிவந்த மரத்தூள் போன்ற பொருளை நீரில் கரைத்தான். பையிலிருந்த நீரை அச்சுதவர்மனுக்குப் புகட்டிய முகுந்தன், அவன்

கழுத்தின் பின்புறமிருந்த நாடிகளை விட்டுவிட்டு அழுத்தியபடி அவனை நிமிர்த்தி அடிமரத்தில் சாய்த்தான்.

அரை நாழிகை நேரம் கழித்து அச்சுதவர்மனின் விழிகளில் அசைவு ஏற்பட்டது. அடங்கிக் கொண்டே போன மூச்சு சற்று பலப்பட்டது. தலையை அசைத்து இமைகளை மெல்லத் திறந்தவனுக்கு எதிரில் முகுந்தன் நிற்பதும், சற்றுத் தள்ளி தன் புரவி நிற்பதும் மங்கலாகப் புலப்பட்டது.

மெல்ல அவனை நிமிர்த்திய முகுந்தன் "அச்சுதா, ஏன் கோட்டையை விட்டு வந்தாய்? என்ன நேர்ந்தது? சொல்... சொல்" என்றான் லேசாக உலுக்கியபடி.

முகுந்தனைக் கண்ட அச்சுதவர்மனின் விழிகளிலும் முகத்திலும் கலக்கம் தெரிந்தது. வார்த்தைகள் வெளிவரத் தடுமாறின.

அச்சுதவர்மனிடமிருந்து சொற்கள் சிதறி விழுந்தன "முகுந்...தா. என்னை... மன்னித்துவிடு. நான் வீரகேரளருக்காக ... அந்தக் கோட்டையில்... "

"நீ வீரகேரளருக்காக உளவு பார்த்ததை மன்னர் காழிவர்மர் அறிவார். நான் கொடுத்த அந்த பட்டு முடிப்பு எங்கே, சொல்" என்றான் முகுந்தன்.

"நீ கொடுத்த முடிப்பில்... அந்த மாணிக்க மாலை..., அதை வீர கேரளரிடம் கொண்டு சேர்க்க... வந்தபோது... வழியில் அந்த யவன வீரர்கள் தொடர்ந்து வந்து... வழிமறித்து... என்னைத் தாக்கி..." அச்சுதவர்மனின் குரல் தடைப்பட்டது. விழிகள் விரிந்து மார்பு இரண்டு முறை உயர்ந்து எழுந்து சட்டென விழுந்தது. அவன் பேச்சும் மூச்சும் அத்துடன் நின்றது.

மரக்கிளைகளினூடே ஊடுருவிய கதிரவன் ஒளி வட்ட வட்டத் தகடுகளாய்த் தரைமீது விழுந்து சிதறிக் கிடந்தன. காட்டுப் பறவைகளின் கூச்சல் பலமாகக்

கேட்டது. எங்கோ தூரத்தில் வேங்கையொன்று கானகமே அதிரும்படி உறுமியது. மரங்களின் மீது கறுத்த முகங்களுடன் கூடிய குரங்குகள் கூட்டமாகக் கூடி, கீழே உற்றுப் பார்த்துக் கோரைப் பற்களைக் காட்டிச் சிரித்தன. சில தாவி மரக்கிளைகளைப் பிடித்தபடி கீழே இறங்கி வரவும் தொடங்கின. சற்றுத் தள்ளி நின்ற அச்சுதவர் மனின் புரவி மிரண்டு பலமாகக் கனைத்தது.

அடித்து வைத்த சிலையாய் அப்படியே மலைத்து நின்றிருந்தான் முகுந்தன்.

மரக்கூட்டங்களின்மீது மழைச்சாரல் சடசடவென விழுவதுபோல் ஒலி எழுந்தது. அவை மழைத்துளிகளின் ஒலியல்ல என்பதும், பெரும் அபாயத்தின் ஒலி என்பதும் சற்றுத் தாமதமாகத்தான் புலப்பட்டது முகுந்தனுக்கு. மேலே நிமிர்ந்து நோக்கியவனின் விழிகளில் எச்சரிக்கை படர்ந்தது. மரங்களிலிருந்து இறங்கிய கறுத்த முகங் களுடன் கூடிய குரங்குகள் அந்த இடத்தைவிட்டு ஓட முற்பட்டன. அவற்றை விட வேகமாகக் கயிறுகளை வீசியும் கிளைகளைப் பிடித்தும் அந்தக் கானகத்தின் சோலகர் இனத்து வீரர்கள் பெரும் கூச்சலுடன் அவனிருந்த இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தனர். சடசடவென மழைத்தூறல் விழுவதுபோல் அவர்களின் விற்களிலிருந்து பறந்த அம்புகள் அவனைச் சுற்றிலும் விழுந்து அசையவொட்டாமல் அடித்தன. அவனைச் சுற்றிலும் குதித்து இறங்கிய சோலக வீரர்களைக் கண்டவனுக்கு முதலில் வியப்பே தோன்றியது. மரங்களிலிருந்து தாவியிறங்கியதும், போட்ட கூச்சலும் அவர்களைக் கானகத்து மக்களாகக் காட்டினாலும், அவர்கள் உடைகளும், சோழ வீரர்களைப் போல தோலாலான இடைக்கச்சையின் இடப்புறம் வாளைக் கட்டிவைத்திருந்த விதமும், கச்சையில் செருகப்பட்டிருந்த சோழவீரர்கள் பயன்படுத்தும் குறுவாட்களும், கரங்களில் விற்களைப் பிடித்தவிதமும், அவர்களைச் சோழநாட்டின் வீரர்களாகவே காட்டின.

சூழ்ந்து நின்றவர்கள் அவனை உற்றுக்கவனித்தபடி மெல்ல முன்னேறத் தொடங்கினார்கள். இருபது பேருக்கு இருக்கலாம் என்று கணக்கிட்ட முகுந்தன், மறைவதற்குச் சாதகமாக அருகில் நின்ற மரங்களையும், சற்றுத் தள்ளி நின்ற தன் புரவியையும் கவனித்துத் தயாராக நின்றான்.

சோலக வீரர்களின் அசைவு சட்டென்று நின்றது. புரவி யொன்று அந்தக் கானகத்தில் பாய்ந்து வரும் ஒலி எழுந்தது. நடத்திச் செல்லவே சிரமப்படும் அடர்ந்த மரக் கூட்டங்களிடையே புரவியை இத்தனை வேகத்தில் செலுத்திவருபவர் யாராக இருந்தாலும் அவர் சாதாரண மனிதராக இருக்க முடியாதென்பது புரிந்தது முகுந்தனுக்கு. சற்றுநேரத்தில் புதர்களிடையேயிருந்து பழுப்பும் வெளுப்பும் கலந்த நிறத்தில், அதீத உயரத்தில் முரட்டுப்புரவியொன்று வெளியே வந்ததைக் கண்டவன் முகத்தில் வியப்பு பரவியது. அதில் அமர்ந்து அந்தக் கானகத்தினூடே செலுத்தி வந்தது ஒரு பெண் என்பதைக் கண்ட முகுந்தனின் வியப்பு இன்னும் உயர்ந்தது. காட்டில் விளைந்த புஷ்பக்கொடி போல வாளிப்பான அவளது அவயங்களும், பலத்தையும் உறுதியையும் காட்டும் கரங்களும், புரவியை அணைத்துப் பிடித்திருந்த கால்களும், குறுகிக்கிடந்த இடையில் தரித்திருந்த நீண்ட வாளும் முகுந்தனைப் பிரமிக்க வைத்தன. வாளை அடுத்து சற்று வளைந்த நுனியை உடைய குறுவாட்கள் வரிசையாகக் கச்சையில் செருகப் பட்டிருந்தன. நூலாடையொன்றையும் அதன்மீது மான்தோலையும் அணிந்திருந்தாள் அவள். அதுவரை முகுந்தன் பார்த்தே யிராத அளவிலான மாணிக்கம் ஒன்று அவள் கழுத்தில் புரண்டது. செவிகளில் அர்த்த சந்திர வடிவில் பெரும் குழைகள் ஊசலாடின. அடர்ந்த கூந்தல் பின்புறமாக முடிச்சிடப் பட்டிருந்தாலும், கட்டுக்கு அடங்காமல் ஓரிரு குழற்கற்றைகள் முன்புறம் வந்து எட்டிப்பார்த்தன. கறுத்த புருவங்களுக்குக் கீழேயிருந்து அகன்ற விழிகளில் தெரிந்த சினமும், உக்கிரமும், தன்னை நோக்கிப் பாய்ந்து

புரவியின் வேகமும் அபாயத்தை உணர்த்தவே, முகுந்தன் தன் கரத்திலிருந்த வில்லை உயர்த்தினான்.

அவன் வில்லை உயர்த்திய மறுகணம் அந்தப் பெண்ணின் இடையிலிருந்த குறுவாட்களில் ஒன்று கனவேகத்தில் அவனை நோக்கிப் பறந்தது. உயர்த்திய வில்லுக்கும் அவன் கழுத்துக்கும் இடையே சுழன்று பாய்ந்த குறுவாளின் வளைந்த முனை, வில்லின் நாணை சரேலென்று அறுத்து எறிந்தது. அந்தக் குறுவாளின் வேகத்தைக் கண்டு திகைத்த முகுந்தனின் கரம் இடையிலிருந்த வாளின் பிடியில் பதிந்தது. ஆனால் அந்த வாள் உருவப்படுமுன் அவன் மணிக்கட்டில் பாய்ந்தது மற்றொரு குறுவாள்.

தான் கற்ற வித்தையும், பெற்ற பயிற்சியும் ஒரு கானகத்துப் பெண்ணின் வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமற் போனதைக் கண்ட முகுந்தன் கரத்தைப் பிடித்தபடி அப்படியே பிரமிப்பில் அடித்து வைத்த சிலையாக நின்றான்.

அவனை நெருங்கிப் புரவியிலிருந்து குதித்து இறங்கிய அந்தப் பெண்ணின் உக்கிர விழிகள் அவனை வெறித்தன. அடுத்து அவளிடமிருந்து அதே வேகத்தில் கேள்வி ஒன்றும் எழுந்தது "யார் நீ? எங்கள் எல்லைக்குள் என்ன செய்கிறாய்?"

ஒரு கையை இடையில் கொடுத்தபடி, மறுகையால் உருவிய வாளை அவனை நோக்கி நீட்டியபடி நின்றவளை வியப்புடன் ஏறெடுத்த முகுந்தனால் உடனே பதில் கூற இயலவில்லை.

"ஏன் விழிக்கிறாய்? பதில் சொல்..யார் நீ?" என்று மீண்டும் கேட்டவள் சோலக வீரர்களை நோக்கிக் கையசைத்தாள். அடுத்து அவனை நெருங்கிய சோலகர் அவனை நெருங்கி இருபுறமும் பிடித்துக் கொண்டனர்.

சற்று நிதானித்துக் கொண்ட முகுந்தன் "அம்மணி, தாங்கள் யாரென்பதோ, இது உங்கள் எல்லையென்பதோ

எனக்குத் தெரியாது. என் நண்பனைத் தேடி வந்தேன். இதோ விழுந்து கிடக்கிறான் பாருங்கள் , அவனைத் துரத்திவந்த யவனர்கள் கொன்று விட்டார்கள்" என்றான் கீழே கிடந்த அச்சுதவர்மனின் உடலை சுட்டிக்காட்டி.

ஒருமுறை கீழே கிடந்தவனை திரும்பி நோக்கியவள் "நேற்றிரவே இந்தப் பகுதியில் யவனர்கள் நடமாட்டம் இருந்ததாக என் வீரர்களும் கூறினார்கள். ஆனால் உன் நண்பன் ஏன் இங்கு வரவேண்டும்? யவனர்கள் ஏன் அவ்னைத் துரத்திக் கொல்ல வேண்டும்?" அவளது அடுத்த கேள்வி சந்தேகத்துடன் ஒலித்தது.

முகுந்தன் பதிலேதும் கூறவில்லை.

அவனை உற்றுப் பார்த்தவள் விழிகளில் விபரீதச் சாயையொன்று படர்ந்தது "நீ தேடி வந்தது உன் நண்பனையா, அந்த யவன வீரர்களையா அல்லது..." என்று இழுத்த அந்த முரட்டுப் பெண் தன் இடைக் கச்சையின் இடப்புறத்திலிருந்து தோற்பை யொன்றை எடுத்தாள். அதிலிருந்து நீல நிறத்தில் பட்டாலான சிறுபை ஒன்றையும் எடுத்தது அவள் கரம்.

முகுந்தனின் விழிகள் குத்திட்டு நின்றன.

நீலப்பையிலிருந்து அந்த செங்கதிர்மாலையை எடுத்து தூக்கிப் பிடித்தாள் அந்தப் பெண். மரக்கிளைகளினூடே பாய்ந்த கதிரொளியில் செங்கதிர்மாலையின் சிவந்த மாணிக்கக்கற்கள் அவனை நோக்கி தீ விழி விழித்தன.

"இதைத்தானே தேடி வந்தாய்?" அவள் வீசிய குறுவாளைவிட வேகமாகப் பாய்ந்தது அவளது கேள்வி. அவனது பதிலை எதிர்பார்க்காத அந்தப் பெண் வீரர்களை நோக்கி சைகை செய்துவிட்டுத் தன் புரவிமீது தாவியேறினாள். புரவி மரக் கூட்டங்களுக்கிடையே பாய்ந்து மறைந்தது.

மூச்சுவிடவும் மறந்து நின்ற முகுந்தனின் வாள் பறிக்கப்பட்டு, கரங்கள் பின்புறமாகப் பிணைக்கப்

பட்டன. மலை உச்சியை நோக்கிச் சென்ற கொடிவழியில் அவனை இழுத்துத் தள்ளாத குறையாக நடத்திச் சென்றனர் சோலக வீரர்கள்.

# 14. விக்கிரம பாண்டு

மேலைக்கடலின் ஐந்து துறைமுகங்களில் மிக முக்கியத் துறைமுகமாகவும், வேனாட்டின் பழந் தலைநகராகவும், ஏராளமாக மிளகு ஏற்றுமதி செய்ததால், வட மொழியில் மிளகு என்று பொருள்பட கொல்லம் என்றும், ஐரோப்பிய மாலுமிகளால் நெல்ஸிந்தா என்றும் பெயர் பெற்றுவிட்ட அந்தத் துறைமுக நகரத்தின் மாலை நேரம் மனதை மயக்கும்படியாகவே இருந்தது. அதீத சீற்றத்துடன் எழுந்து தாழ்ந்த அலைகள் துறைமுகத்தில் நின்றிருந்த அராபிய, கிரேக்க, அபிசீனிய கலங்களை அலைக்கழித்து, அதன் மாலுமிகளையும், வணிகக் குழுக்களையும், விரைவில் துறைமுகத்துக்குள் நுழைந்துவிட ஏங்கவைத்தன. மாலுமிகளும், வணிகர் களும் போட்ட கூச்சல் போதாதென்று, கலங்களிலிருந்து கூட்டம் கூட்டமாக இறங்கிய வணிகர்களும், அவர்கள் கொண்டு வந்த பொதிகளைச் சுமந்த கறுத்த அடிமைகளும், அவர்களை வரிசையில் சுங்கச்சாவடியை நோக்கி வர யவனக் காவலர்கள் போட்ட கூச்சலும் அந்தப் பகுதியில் நிறைந்து கிடந்தது.

மணல்வெளியை அடுத்து தெற்கே நீண்டுகிடந்த ‘நேராயப் பெருவழிச்சாலை’ வழக்கத்துக்கு மாறாக வீரர் கூட்டங்களால் அடைத்துக் கிடந்ததால், வணிகர்கள் தங்கள் பொதிகளைச் சாலையைக் கடந்து நகருக்குள் கொண்டு செல்ல பகீரதப் பிரயத்தனம் செய்ய வேண்டி யிருந்தது. வீர கேரளனின் மலைநாட்டு வீரர்கள் மட்டு மின்றி, அஞ்சுநாட்டு கூபக வீரர்கள் ஒருபுறமும், பெரும் படப்பு ஸ்வரூபத்தின் சிற்றரசன் அனுப்பிவைத்த

வீரர்களும் சாலை நெடுகக் கூடாரங்கள் அமைத்துக் காத்துக் கிடந்ததால் பளபளத்த வாட்களும், வேல்களும் தாங்கிய வீரர்களும், போர் ரதங்களும் அவற்றைச் செலுத்தும் போர்ப்புரவிகளும் அமைத்த ஊர்வலம், தெற்கு நோக்கி வெகுதூரத்துக்கு நீண்டு கிடந்தது.

சாலையின் முடிவில் உயர்ந்து எழுந்த மலையும், மலைமீது தெரிந்த கொல்லத்து அரண்மனையும் பந்தங்களும் மாடங்களில் தொங்கிய சரவிளக்குகளும் அளித்த ஒளிவெள்ளத்தில் ஜகஜ்ஜோதியாகவே இருந்தது. மலைமீது ஏறிச் செல்லும் படிகளில் உயர்த்திய ஈட்டிகளுடன் காவலுக்கு நின்ற வீரர்கள் பொதுமக்கள் யாரும் அருகில் வரவிடாமல் அடித்துக் கொண் டிருந்தனர்.

மலை உச்சியில் அமைந்த அரண்மனை வாயிலின் அருகே காவல் இன்னும் கடுமையாக இருந்தது. சாதாரணக் காவலர் மட்டுமின்றி உபதலைவர்களுக்குக் கூட அரண்மனைக்குள் அனுமதி மறுக்கப்பட்டது.

உள்ளே நடமாடிக்கொண்டிருந்தவர்களில் ஈழத்தவர் அதிகம் தென்பட்டதாலோ, அதிக அதிகாரத் தொனியுடன் அவர்கள் உத்தர விட்டதாலோ, அரண் மனைக்குள் நடமாடிய பணியாட்களின் முகங்களில் அச்சத்தை விட வெறுப்பும் சலிப்புமே அதிகம் புலப் பட்டது. அரண்மனைக் கூடத்தில் நடமாடிய பிரமுகர் களை அவர்கள் பார்த்த பார்வையும் அத்தனை விரும்பத்தக்கதாகத் தெரியவில்லை. அவ்வப்போது பணியாளர்களின் பார்வை மேல்மாடத்தை நோக்கிச் சென்ற படிகளுக்குச் சென்று திரும்பிக்கொண்டிருந்தன.

கொல்லத்து அரண்மனையின் மேன்மாடம் கண்களைக் கவரும் விதமாகத்தான் இருந்தது. மூலைக்கு மூலை நின்ற பதுமைகளும், வண்ண வண்ணத் திரைச் சீலைகளும், சுவர்களில் தீட்டப்பட்டிருந்த அழகிய சித்திரங்களும் அந்தப் பெரும் கூடத்தை அசல்

சொர்க்கலோகமாகவே அடித்திருந்தன. அந்தக் கூடத்தின் அழகை இன்னும் உயர்த்த, தென்புறத்தில் விரிந்து கிடந்தது ஒரு நீளமான தாழ்வரை. தாழ்வரையின் மறுபுறம் திறந்த வெளியாகக் கிடக்க, சற்றுத் தொலைவில் மிக அழகாகக் காட்சியளித்தது கொல்லத்தின் மிகப் பிரசித்தமான அஷ்டமுடி ஏரி. ஏரியில் அலங்கார விளக்குகளுடன் உலவிக் கொண்டிருந்தன பல அழகிய படகுகள். கொல்லத்தின் விருந்தினர் சிலர் அந்தப் படகுகளில் இயற்கையை ரசித்துக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது.

**மா**னாபரணனின் கனத்த குரல் ஒருமுறை கனைத்துக் கொண்டது. நடுவில் நின்றபடி இருக்கைகளில் அமர்ந் திருந்தவர்களை ஒருமுறை சுற்றிலும் கவனித்த மானா பரணன் அவர்களை ஒவ்வொருவராகக் கவனித்தான். கொல்லத்தின் தற்காலிக மன்னரான கோவர்த்தன மார்த்தாண்டவர்மன் பிரதானமாக அமர்ந்திருக்க, அருகில் அமர்ந்திருந்த மலைநாட்டு வீரகேரளனின் முகத்தில் லேசான பதற்றம் தெரிந்தது. கோலாத்திரி அரச வம்சத்தின் காழிவர்மன் சார்பாக அவன் கோட்டைத் தலைவனும் பிரதம சேனாபதியுமான கங்காதரன் சலனமற்ற முகத்துடன் மானாபரணனை ஏறிட்டான். நேர் எதிரில் அமர்ந்திருந்த தென்பாண்டிநாட்டு உதயகிரி மன்னன் சுந்தரபாண்டியனின் ராட்சச உடல் சற்று சங்கடத்துடன் அசைந்தது.

எதிரிலிருந்த ஆசனங்களில் ஈழத்தவர் இருவர் அமர்ந்திருந்தனர். இரும்புக் கம்பிகளைச் சுருட்டிச்சுருட்டி வைத்தது போன்ற தலையுடனும், மது அருந்தியதால் சிவந்து கிடந்த பெருவிழிகளுடனும், கரத்தில் மதுக்குப்பி யுடனும் அமர்ந்திருந்தவனை நோக்கிய மானாபரணன் முகத்தில் சற்றுக் கடுமை படர்ந்தது.

"இளவல் விக்கிரமபாண்டு மது அருந்துவதைச் சற்று குறைத்துக் கொள்வது நல்லது. மிக முக்கியமான திட்டங்

களைப் பற்றிப் பேச இங்கு வந்திருக்கிறோம்” என்றான் குரலிலும் கடுமை தொனிக்க.

விக்கிரமபாண்டு என அழைக்கப்பட்டவன் அந்தக் கடுமையைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. மாறாக அவனிடமிருந்து அலட்சியமான சிரிப்பு ஒன்று உதிர்ந்தது.

“மானாபரணரே, நீர் என் நிலையைப் பற்றிக் கவலை கொள்ளவேண்டாம். மது அருந்தியிருப்பதால் என் நிதானம் தவறிவிடாது. வேண்டுமானால் சோதித்துப் பார்த்துக் கொள்ளலாம்” என்றபடி எழுந்தவன் சரேலென்று தான் அகலமான வாளை உருவிக் கொண்டு காற்றில் ஒருமுறை விர்விர்ரென்று சுழற்றினான்.

சுற்றி அமர்ந்திருந்தவர்களில் எவரும் பாராட்டவோ, ஆமோதிக்கவோ செய்யாததையும் அவர்களது கடுமையான பார்வையையும் கண்டவன் “சரி சரி, நீங்கள் திட்டத்தைக் கூறுங்கள் “ என்று அமர்ந்து கொண்டான்

ஒருமுறை தீர்க்கமாக அவனைப் பார்த்த மானா பரணன் அடுத்து தன் திட்டத்தை விவரிக்க ஆரம்பித் தான். “சோழனது வடதிசைப் படையெடுப்பு வெற்றியில் முடிந்தாலும், அவனது படைகள் மூன்றிலொரு பாகம் அழிந்துவிட்டது. கைப்பற்றிய இடங்களைப் பாதுகாக்கப் பலர் ஆங்காங்கே தங்கிவிட்டனர். பலர் இன்னும் திரும்பவில்லை. சோழனின் பேராசை காரணமாக, சோழ நாட்டில் எஞ்சியிருந்த படைகளும் கடாரத்துக்குச் சென்று விட்டன. திருவாலீஸ்வரத்திலும் கோட்டாற்றி லும் உள்ள நிலைப்படையைத் தவிர தெற்கே வேறு படைப்பிரிவுகள் கிடையாது” என்றவன் சற்று நிதானித்தான்.

ஆமோதிப்பதற்கடையாளமாக சுந்தர பாண்டியனின் தலை அசைந்தது “மானாபரணர் கூறுவது உண்மைதான். என் ஒற்றர்களும் இதே செய்தியைத்தான் கொண்டு வந்தார்கள்” என்றான் அவன்.

“வீர கேரளரின் படைகள் மலைக்கணவாய் வழியே சென்றால் நேராக முல்லை நாட்டை அடைந்துவிடலாம். திருவாலீஸ்வரத்தின் நிலைப்படை ஒன்றும் அத்தனை பலமானதல்ல. ஏறக்குறைய இரண்டாயிரம் வீரர்களே இருக்கின்றனர். சேரலாதரின் ஆலயம் அருகிலிருக்கிறது. இரண்டையும் ஒன்றாக அழித்துவிடலாம். அதே நேரத்தில் கிழக்கிலிருந்து எமது கொற்கைப் படைகளும், சுந்தரபாண்டியர் மேற்கிலிருந்தும் கோட்டாற்று நிலைப்படையைத் தாக்கலாம். அதன் பிறகு தலைநகர் மதுரை செல்லும் வரை தடுப்பதற்கு வேறு சோழர் படைகள் கிடையாது. மன்னர் காழிவர்மரின் படைப் பிரிவு, மலைப்பகுதியைக் கடந்து பூந்துறை நாட்டின் வழியே மதுரைக்குச் செல்லும் பாதையில் வந்து நம்முடன் இணைந்து கொள்ளலாம்”

சுருக்கமாகத் தன் திட்டத்தைக் கூறிய மானாபரணனை மற்றவர்களின் விழிகள் வியப்புடன் நோக்கின.

திட்டம் நிச்சயமான வெற்றிக்கு வழிவகுப்பதை ஏற்றுக் கொண்டார்கள் அனைவரும். தாக்குதலின் மற்ற நடைமுறைத் திட்டங்களையும் கூறிக் கொண்டே வந்த மானாபரணனை வீரகேரளனின் கேள்வி தடுத்தது

“மானாபரணரே, பாண்டி நாட்டில் படைகளை நடத்திச் செல்லும் வழிமுறைகள் திருப்தியாகத்தான் இருக்கின்றன. ஆனால், நான் வரும்பொழுது சேரலாதரின் தலைநகரிலிருக்கும் வீரர்களை ஏறக்குறைய அழித்துவிட்டே வந்திருக்கிறேன். ஆனாலும் பலர் தப்பி விட்டார்கள். சேரலாதரின் இளவலையும் மகளையும் எங்கோ அனுப்பிவிட்டதாகத் தெரிகிறது. சேரலாதர் சிறைப்பட்டது வெளியானால் நாங்கள் பின்னாலிருந்து தாக்கப்படுவோம்” என்றான் வீரகேரளன்.

மானாபரணனின் பதில் தெளிவாக வந்தது “சேரலாதரைப் பணியவைக்க வழி இருக்கிறது. அவர் இளவலையும் மகளையும் அனுப்பிவைத்திருக்கும் இடமும்

எனக்குத் தெரியும். கவலை வேண்டாம். நம்முடன் ஒத்துழைக்க மறுத்தால், போருக்கு முன்னதாக சேரலாதர் களத்திலிருந்து அகற்றப் படுவார். அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் முற்றிலுமாக அகற்றப்படுவார்கள். முன்பு கொற்கைப் பாண்டியர் அகற்றப்பட்டதைப் போல..." என்றவன் மெலிதாக நகைத்தான்.

உடன் சேர்ந்து நகைத்தவர்களில் வீரகேரளன் மீண்டும் சந்தேகம் கேட்டான் "மானாபரணரே, சேரலாதரின் இளவலும் மகளும் எங்கு அனுப்பப்பட்டார்கள் என்பது தெரியும் என்றால், சேரலாதரைச் சிறைவைத்தது போல அவர்களை ஏன் இப்போதே கொண்டு வந்து அடைத்து வைக்கக்கூடாது?"

"வைத்துவிட வேண்டியதுதான். உங்கள் அனைவரது கருத்தையும் தெரிந்து கொண்டபின் பார்த்துக் கொள்ளலாம் என்றிருந்தேன். சேரலாதரிடம் பெரும் படைபலம் இல்லாவிட்டாலும், சோழரின் ஆதரவிருப்ப தால் நீங்கள் தயங்குவீர்கள் என்று எதிர்பார்த்தேன். இனி தயங்க வேண்டியதில்லை" என்றான் மானாபரணன்.

"யார் அவர்களைக் கண்டுபிடித்துக் கொண்டுவரப் போவது?" விக்கிரம பாண்டுவிடமிருந்து கேள்வி எழுந்தது.

"வேறு யார்? நீயே அந்தப் பணியைச் செய்யலாம் விக்கிரம பாண்டு" என்ற மானாபரணன் "முடிந்தால் அவர்களைக் கொண்டுவரலாம். அல்லது கொன்று விட்டும் வரலாம். சேரலாதருக்குப் பின் திருவஞ்சிக்களம் முழுவதுமாக வீரகேரளர் வசம் வந்துவிட வேண்டும். பின்னாட்களில் பிரச்னைகளேதும் இருக்கவே கூடாது" என்றான்.

ஆரம்பத்திலிருந்தே மௌனமாக கவனித்துக் கொண்டிருந்த காழிவர்மனின் படைத்தலைவன் கங்காதரனின் மனதில் "நேரிடையான எதிர்ப்பையும் போரையும் விடுத்து இந்தக் கொலைகாரர்களுடன்

சேர்ந்து சோழரை எதிர்க்கச் செல்வது உசிதம்தானா?" என்ற எண்ணம் ஓடிக் கொண்டிருந்தது.

உள்ளே எழுந்த எண்ணத்தை வெளியில் காட்டிக் கொள்ளாமலே எழுந்த கங்காதரனின் முகம் கல்லாகவே இருந்தது "மானாபரணரே, நான் புறப்படுகிறேன். மன்னரிடம் திட்டங்களைக் கூறவேண்டும். உங்களிட மிருந்து ஓலை வந்தவுடன் எமது படைகள் வந்து கலந்து கொள்ளும்" என்றபடி விடைபெற்றுக் கொண்டு வெளியேறினான்.

அவன் வெளியே செல்லும்வரை பொறுத்த மானா பரணன் "விக்கிரமபாண்டு, காழிவர்மனின் படைத் தலைவன் நம் திட்டங்களை அத்தனை தூரம் விரும்புவ தாகத் தெரியவில்லை. சரி, போகட்டும். சேரலாதரைச் சேர்ந்தவர்களைப் போருக்கு முன்னதாகவே அழித்து விடுவது உசிதம். அந்தப் பணிக்கு இங்குள்ள சேரவீரர் எவரும் தேவையில்லை. அதற்கு நம் ஈழத்தவர்தான் பொருத்தம். நம் கலத்திலிருந்து நூறு வீரர்களை அழைத்துக் கொண்டு இன்றே புறப்படு. கொல்லத்தின் நேர் கிழக்கே மலைப்பகுதியில் பத்துக்காத தூரம் செல்ல வேண்டும்" என்றான்.

அவர்கள் இருக்கும் இடத்தையும் மற்ற விவரங் களையும் கேட்டுக் கொண்ட விக்கிரம பாண்டு அன்றே ஈழத்து வீரர்களுடன் சேரலாதரின் இளவலையும் மகளையும் அழித்துவிட மலைப்பகுதியை நோக்கிப் புறப்பட்டான்.

# 15. சிறையில் ஒரு சூறாவளி

'நிறைகுடம் தளும்பாது' என்பது தமிழ்ப்பழமொழி. மனித வாழ்க்கையில் உண்மைதான் என்றாலும், அது தனக்குப் பொருந்தவே பொருந்தாது என்று தளும்பித் தளும்பி அலைகளை எழுப்பி, கரையை நோக்கி வீசிக்

கொண்டிருந்தது மேலைக்கடல். உக்கிரமாக எழுந்த அலைகள் கரையைத் தாக்கியதா, அல்லது கரைக்குச் சற்றுத் தள்ளி உயர்ந்து எழுந்த விழிஞத்தின் கோட்டையைத் தாக்க முயன்றனவா என்பது தெரியவில்லை. எத்தனை முறை தோற்றாலும் விடுவதில்லை என்று தீர்மானித்த அலைகள் இரவு ஏற ஏறத் தொடர்ந்து கரையில் முன்னேறிக் கொண்டிருந்தன.

மணல்மேட்டின் மீது தெரிந்த பரதவர் குடிசைகள் அந்த அலைகளை அலட்சியம் செய்து காற்றில் படபடத்து நகைத்தன. இரவு ஏறத்துவங்கிவிட்டதால் குடிசைகளுக்குத் திரும்பி விட்ட பரதவரின் நடமாட்டம் அதிகமாகவே தெரிந்தது. ஆழ்கடலும், அதன் அபாயங்களும், ஓயாத காற்றும், அதில் நிறைந்துகிடந்த உப்புமே வாழ்க்கையாகிப்போன பரதவர் மேலைக் கடலின் சீற்றத்தை லட்சியம் செய்ததாகவே தெரிய வில்லை. பெரும் மரங்களின் அடிப்பகுதியைக் குடைந்து செய்யப்பட்ட கொதும்பு வள்ளம் என்னும் அவர்களது படகுகளும் கடற்கரை நெடுகக் கட்டப்பட்டு, அலைகளை லட்சியம் செய்யாமல் ஆடி நின்றன.

மணலடித்த பகுதியை அடுத்து அம்பு எய்யும் தூரத்தில் எழுந்து நின்ற விழிஞத்தின் கோட்டை பார்வைக்குச் சிறியதாகத் தெரிந்தாலும், பலமானதாகவே இருந்தது. கோட்டையின் மீது உலவிக் கொண்டிருந்த வீரர்களும், ஆங்காங்கே சுவர்களில் தெரிந்த மாடங்களும், அவற்றில் நீட்டிக்கொண்டிருந்த அம்புகளின் முனை களும் அந்தக் கோட்டையை அணுகுவதோ, கைப்பற்று வதோ அத்தனை எளிதல்ல என்று புலப்படுத்திக் கொண்டிருந்தன. கோட்டையின் உள்ளே பிரதானமாக ஒரு மாளிகை தெரிந்தது. அடுத்து ஓரிரு சிறு கட்டடங் களும் அரையிருளில் புலப்பட்டன. மாளிகையின் உள்ளேயும், வெளியேயும் பந்தங்களும், சரவிளக்குகளும் வீசிய ஒளியில் அங்கு வீரர்கள் நடமாட்டத்தைத் தவிர

நான்கைந்து பணியாளர்களே இருப்பதைப் புலப் படுத்தின.

மாளிகையின் மேல்தளத்து உப்பரிகையில் நின்று கடலை வெறித்துக் கொண்டிருந்த சேரலாதன் ராஜ சிம்மனின் முகத்தில் ஆழ்ந்த சிந்தனை தெரிந்தது. அவன் சிந்தனையைக் கலைக்க மனமின்றி சற்றுத் தள்ளி நின்றிருந்த செங்கமலச் செல்வி மௌனமாகவே நின்றிருந்தாள்.

நீண்டநேரம் மௌனமாகவே நின்றிருந்த செல்வியின் காற்சிலம்புகள், அவள் சற்று அசைந்ததால் ஒலித்து சேரலாதனின் சிந்தனையைக் கலைத்தன. திரும்பியவன் செல்வியைக் கண்டதும் இதழ்களில் முறுவலொன்றைப் படரவிட்டுக் கொண்டான்.

"செல்வி, இரவு ஏறிவிட்டதாகத் தெரிகிறது, ஏன் இன்னும் உறங்கச் செல்லவில்லை?" என்றான்.

"தாங்களும் விழித்திருக்கிறீர்கள் மன்னா. உணவும் அருந்தவில்லை, முகத்தில் கவலையும் தெரிகிறது."

ஆமென்பதற்கடையாளமாகத் தலையசைத்த சேரலாதன் தொடர்ந்தான் "ஆம் செல்வி. மனம் துயரத்தில் மூழ்கும்போது உணவையும் உறக்கத்தையும் வெறுத்து விடுகிறது.. மனித வாழ்வின் துயரம் அனைத்துமே இந்த மனதினால் வருபவைதான். அது புரிந்தாலும் மனத்தையும் அதன் ஓட்டத்தையும் அடக்க முடிவதில்லை"

சேரலாதனின் வார்த்தைகள் செல்வியின் மனதில் எங்கோ ஒரு மூலையில் ஆதரவாக வருடின. சற்றுநேரம் மௌனம் சாதித்தாள். "வாழ்வின் துன்பங்கள் யாவும் மனதினால் வரும் நோய்தான்" என்று முணுமுணுத்தவள் பேச்சை வேறு திசைக்குத் திருப்ப முயன்றாள் "மன்னவா, நாம் எத்தனை நாட்கள் இங்கு அடைபட்டுக் கிடக்கவேண்டும்?"

சேரலாதன் புருவங்கள் மேலேறின. சற்று சிந்தித்தவன் கூறினான் “இன்னும் இரு தினங்கள்தான் செல்வி”

“இரு தினங்கள் எதற்கு மன்னா?”

“நான் எதிர்பார்க்கும் செய்தி வரும்வரை இருக்க வேண்டும்”

“இத்தனை காவலர்கள் இருக்கும் கோட்டைக்குள் செய்தியை யார் கொண்டுவர முடியும்?” செல்வியின் கேள்வியில் வியப்பு தொனித்தது.

“அதோ, அவர்கள்” சேரலாதனின் கரம் நீண்டு கடலை சுட்டிக்காட்டியது. வியப்புடன் பார்வையைத் திருப்பிய செல்விக்கு நீலக்கடலும், வீசும் அலைகளும், பரந்த மணல்வெளியும்தான் புலப்பட்டன.

மேலைக்கடலின் ஆக்ரோஷ அலைகள் கரையைத் தாக்கி முன்னேறிக் கொண்டிருந்தன. இரவுப் பறவை யொன்று நிலப்பகுதியிலிருந்து அலைகளின் மீது வட்ட மடித்துவிட்டு மீண்டும் பரதவரின் குடிசைகளை நோக்கிப் பறந்தது.

உற்றுக் கவனித்தவளுக்கு உண்மை புரிந்தது. அவன் கரம் காட்டிய திசையில் மணல்வெளியின் ஓரத்தில் கரை நெடுக நின்ற பரதவர் குடிசைகளும் ஆங்காங்கு எரிந்த பந்தங்களின் ஒளியில் பரதவரின் நடமாட்டமும் லேசாகப் புலப்பட்டது.

“ஆம் செல்வி, என் முன்னோர்கள் செய்த ஏற்பாடு இது. சேரநாடு ஒரே குடையின் கீழ் இருந்தபோது அத்தனை அரண்மனைகளிலும், கோட்டைகளிலும் பரதவரையே பணிக்கு அமர்த்தினார்கள். அது இன்னும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. காரணம், பரதவர் அறியாமல் எந்தக் கலமும் சேரநாட்டின் எந்தத் துறைமுகத்திலும் நுழைந்து விட முடியாது” என்றான் சேரலாதன்.

"அப்படியானால் இந்தக் கோட்டையில்..." இழுத்தாள் செல்வி.

"ஆம். நமக்கும், இங்கிருக்கும் வீரர்களுக்கும் உணவுப் பொருட்கள் கொண்டு வருவதும், சமைப்பதும், கோட்டையைப் பராமரிப்பதும் அத்தனை பேரும் பரதவர்தாம். எனக்குச் செய்தி தெரிவிப்பவர்களும் அவர்கள்தாம். என் முகத்தில் கவலை தெரிவதாகச் சொன்னாயல்லவா?"

"ஆம்"

"என் கவலைக்குக் காரணமிருக்கிறது. துறைமுகத்திலிருந்து ஐந்து காத தூரத்தில் ஈழத்தின் போர்க்கலங்கள் நங்கூரமிட்டிருக்கின்றன. தற்போது சுந்தரபாண்டியன் வசம் இருக்கும் காந்தளூர்ச்சாலை ஈழத்து வீரர்களால் நிரம்பி வழிகிறது. அது மட்டுமல்ல..."

வியப்புடன் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தாள் செல்வி.

"நேற்று மாலை கொல்லத்து அரண்மனையில் போர்த்திட்டத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். ஈழத்து இளவல் விக்கிரமபாண்டுவும் வந்திருக்கிறான். போர் தொடுப்பதைப் பற்றிய திட்டமும் அலசப்பட்டிருக்கிறது."

"விக்கிரம பாண்டுவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்..."

"போருக்குமுன்னதாக என்னை அச்சுறுத்திப் பணிய வைக்க என் மகனையும், மகளையும் பிடித்துவரப் புறப்பட்டிருக்கிறான் விக்கிரமபாண்டு"

செங்கமலச்செல்வியின் மனம் துணுக்குறத்தான் செய்தது. சேரலாதனின் முதல் பட்டமகிஷி ஒரு பெண்ணைப் பெற்றுக் கொடுத்துவிட்டு இறந்ததையும், நெடுங்காலம் மீண்டும் மணம் செய்துகொள்ள மறுத்து வந்த சேரலாதனைப் பிரதானிகளும், உறவுகளும்

வற்புறுத்தி மீண்டும் மணம் செய்துகொள்ள வைத்ததையும் விழுப்பரையர் சொல்லக் கேட்டிருந்தாள் அவள். இளவல் பாஸ்கர ரவிவர்மன் சிறுவன் என்பதும், அந்தப் பெண் வஞ்சுளவல்லி மிக மென்மையான சுபாவம் படைத்தவள் என்பதும் நினைவுக்கு வந்தது அவளுக்கு.

“மன்னவா, நான் இப்போதே புறப்படுகிறேன்” என்றாள் செல்வி.

அவள் வேகத்தைக் கவனித்த சேரலாதனின் கரம் உயர்ந்து தடுத்தது. “அவசியமில்லை செல்வி. அதற்கு வேறொருவர் இங்கு இருக்கிறார்” என்றான் அவன்.

செல்வியின் முகத்தில் சந்தேகம் படர்ந்தது “வேறொருவரா? இங்கா?” என்றாள் சந்தேகத்துடன்.

“ஆம். இன்றிரவு புறப்பட்டுவிடுவார்” என்றான் சேரலாதன்.

“யார் அது?”

யார் என்பதை விளக்கினான் சேரலாதன். அவன் கூறக்கூற பிரமிப்பின் உச்சிக்குச் சென்றாள் செங்கமலச் செல்வி.

**வி**ழிஞத்தின் கோட்டைக்குள்ளிருந்த அந்த மாளிகையின் இடது புறத்தில் நின்ற இரு கட்டடங்களும் ஈழத்து வீரர் தங்கும் இடங்களாகத்தான் இருந்தன. அவற்றில் ஒன்றில் ஒன்றிரண்டு பந்தங்களே எரிந்ததால் பெரும் பகுதி இருளடித்தே கிடந்தது. மறுகோடிவரை ஓடிய நீண்ட தாழ்வரையின் முடிவில் இரும்புக் கம்பிகள் பொருத்தப்பட்ட கதவுகளும், உள்ளே தடுக்கப்பட்ட அறைகளும் அந்தப் பகுதி கோட்டையின் சிறைச்சாலை என்பதைத் தெரிவித்தன. மற்ற அறைகள் இருளில் மூழ்கிக் கிடக்க ஒரு அறையின் வாசலில் மட்டும் பந்தமொன்று எரிந்தது. கதவருகே இடையில் தரித்த

வாளுடனும், கரத்தில் நீண்ட ஈட்டியுடனும் காவலன் ஒருவனும் உலவிக் கொண்டிருந்தான்.

அறைக்குள் எட்டிப் பார்த்தவன் உள்ளே இருந்தவன் பகல் உணவுக்குப் பின் தரையில் அசைவற்றுப் படுத்துக் கிடப்பதையே கண்டான். படுத்துக் கிடந்தவனின் கூன் விழுந்த முதுகையும், முகத்தில் தெரிந்த முதுமையையும் கண்டு 'இவனைப் போய் எதற்காகக் காவலில் வைக்க வேண்டும்? அடித்து விரட்டிவிடலாம் அல்லது கொன்று எறிந்துவிடலாம். சேரலாதனின் ரத சாரதி என்பதால் இப்படி அடைத்து வைத்துப் பாதுகாக்க வேண்டுமா என்ன?' என்று சலித்துக் கொண்டவன் மீண்டும் வாயிலை நோக்கித் திரும்பினான். காவலை மாற்றிக் கொள்ள அடுத்து வரவேண்டிய காவலன் இன்னும் வரவில்லை. போதாக்குறைக்கு வரவேண்டிய இரவு உணவும் வரத் தாமதமானதால் சலிப்பு எரிச்சலாக மாறி அவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கத் தொடங்கியிருந்தது.

வாயிற்கதவருகே அரவம் கேட்டது. உணவுத் தட்டுடன் பணியாளன் ஒருவன் நுழைந்து கொண்டிருந்தான். அவன் நெருங்கியதும் "ஏன் இத்தனை தாமதம்?" என்று கடிந்து கொண்ட காவலன் ஒரு தட்டை கம்பிக்கதவின் கீழ்ப்புறத்தின் இடைவெளி வழியே உள்ளே தள்ளிவிட்டு அங்கேயே அமர்ந்து உணவருந்தத் தொடங்கினான். உணவைக் கொண்டுவந்த பணியாளன் பதிலேதும் கூறாமல் நடந்து வாயிலின் வழியே வெளியேறினான்.

காவலன் உணவருந்தி முடிக்கும்வரை அறைக்குள்ளி ருந்து அரவமேதும் கேட்கவில்லை. அருகிலிருந்த மண் பானையில் நீரருந்தி உணவை முடித்த காவலன் திரும்பியபோது கதவருகே வைத்த உணவுத்தட்டு இன்னும் அப்படியே கிடப்பதைக் கவனித்தான்.

உள்ளே எட்டிப் பார்த்தவன் முதியவன் படுத்திருந்த இடம் வெற்றிடமாகக் கிடப்பதையும், அறைக்குள் அவன்

காணப்படாததையும் கண்டு, சுவரில் செருகப்பட்டிருந்த பந்தமொன்றை எடுத்து வந்து அறைக்குள் வெளிச்சம் விழுமாறு தூக்கிப் பிடித்தான். ஒன்றும் புலப்படவில்லை அவனுக்கு.

இன்னும் சற்று கதவை நெருங்கி நின்று பந்தத்தை உயர்த்தியவன் தலைமீது சட்டென்று ஏதோ இடி விழுந்தது போலத் தாக்கியது. பந்தத்தை ஏந்திய கரமும் உள்ளிருந்து பலமாக இழுக்கப்பட்டு முகத்தைக் கம்பி களோடு ஓட்டித் தேய்த்தது. அலறுவதற்காக வாயைத் திறக்க முற்படுமுன் மீண்டும் தலைமீது மற்றுமொரு இடி இறங்கியது. காவலன் மயங்கிச் சரிந்து கதவருகேயே விழுந்தான். அடுத்த சில கணங்களில் கதவு தாழ்ப் பாளுடன் சேர்ந்து பெயர்க்கப்பட்டுக் காவலன் மீதே விழுந்தது.

முதியவன் சாவதானமாக வெளியே வந்தான். அவன் முதுகிலிருந்த கூன் காணாமற் போயிருந்தது. பார்வைக்கு அவன் இன்னும் உயரமாகத் தெரிந்தான். வாயிலை நோக்கிச்செல்லாமல் நீண்ட தாழ்வரையின் மறு மூலையை நோக்கி நிதானமாக நடந்து விசாலமான கூடமொன்றினுள் நுழைந்தான். உள்ளே நேராக நடக்கவும் வழியின்றி ஆயுதங்கள் பல இறைந்து கிடந்தன. வாட்களும், குறுவாட்களும், குத்தீட்டிகளும், கேடயங் களும், மூலையில் மரப்பெட்டிகளில் அம்புகளும், சுவரில் சாய்த்தும் சரித்தும் வைக்கப்பட்ட விற்களும் அங்கு குவிந்து கிடந்தன. நீண்ட வாளொன்றைத் தேர்ந் தெடுத்துத் தரித்துக் கொண்டவன், குறுவாட்கள் இரண்டையும் கச்சையில் செருகிக்கொண்டான். மூலைக்கு நடந்து சென்று சரித்து வைக்கப்பட்ட விற்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அம்புகளையும் எடுத்துக் கொண்டு கட்டடத்தின் வாயிலை நோக்கி நடக்கத் தொங்கினான். வாயிலில் வீரர் மூவர் ஏதோ பேசியபடி நின்றிருந்தனர். முதியவனைக் கண்டதும்

திடுக்கிட்டு "ஏய், நில், என்ன இது? எப்படி வெளியே வந்தாய்?" கூச்சலிட்டபடி வாட்களை உருவினர்.

உயர்ந்து எழுந்த முதியவனது வாள் இருமுறை சுழன்றது. வாயிலில் நின்றிருந்த ஈழத்து வீரர் கணத்தில் சரிந்தனர். அடுத்து, கோட்டைவாயிலை நோக்கியவன் விழிகள் அரையிருளில் அசாதாரணமாக ஜொலித்தன. வாயிலை உற்று நோக்கிய அவை இருபது வீரர்கள் இருக்கலாம் என்று கணக்கிட்டன. நான்கைந்து புரவிகளும் இடப்புறம் கட்டப்பட்டிருந்தன. வலப்புறத்து கோட்டைச்சுவர் மீது உலவியவர்களையும் கவனித்தபடி கோட்டை வாயிலை நோக்கி நடக்கத் தொடங்கினான். வாயிலில் நின்றவர்கள் திரும்பி அவனைக் கவனித்து நகரத் தொடங்கியதும், அவனிடமிருந்து அம்புகள் ஏககாலத்தில் மூன்று, ஐந்து, ஆறு என்று சரசரவெனப் பறந்து அவர்களைத் தாக்கத் தொடங்கின. வீரர்களின் எச்சரிக்கைக் கூச்சலும் பலமாக எழுந்தது. அவனை நோக்கி வீரர்கள் கூச்சலிட்டபடி ஓடிவரத் தொடங்கினர்.

முன்னே ஓடிவந்தவர்கள் பாதி வழியிலேயே அம்புகள் பாய்ந்துவிட்டதால், கூச்சலிட்டபடி சரிந்து விழுந்து உருண்டனர். வாயிலை நெருங்கியதும் வில்லை எறிந்தவன், வாளை உருவிக் கொண்டான். அவனைச் சூழ்ந்து கொள்ள முயன்ற ஈழத்து வீரர்கள் அதுவரை கண்டேயிராத வேகத்தில் அந்த வாள் சுழன்றது. தோளிலும், மார்பிலும் கண்ணிமைக்கும் நேரத்தில் ஊடுருவி வெளியேறிய அந்த வாள், சிலரது விழிகளைத் துருவி எறிந்தது. சிலரது கரங்கள் அறுபட்டுத் தொங்கின. சிலரது கழுத்து வெட்டுப்பட்டு அலறவும் இயலாமல் குரல் தடைப்பட்டது. கூச்சலும், அலறலும், புரவிகள் மிரண்டு கனைத்த ஒலிகளும், வீரர் மற்றவர்களை அழைத்த கூக்குரல்களும் கோட்டை வாயிலில் பலமாகக் கேட்டன.

மாளிகையின் மேன்மாடத்தில் அதுவரை கவலை தோய்ந்த விழிகளுடன் உரையாடிக் கொண்டிருந்த சேரலாதனுக்கும், செல்விக்கும் கூட வாயிலிலிருந்து எழுந்த கூச்சல்களும், வாட்கள் மோதும் ஒலிகளும் கேட்டன.

சேரலாதனின் முகத்தில் அதுவரை தெரிந்த கவலையின் ரேகைகள் மறைந்தன. முகத்தில் சிறு மலர்ச்சியும், வலிய இதழ்களில் பழைய முறுவலும் மீண்டும் தோன்றின.

செல்வியை நோக்கியவன் “செல்வி, புயல் புறப்பட்டு விட்டது” என்றான் நகைத்தபடி.

# 16. ஆணை வரும் முன்னே

**க**ருணையாற்றின் வெள்ளம் எப்போதும்போல் துள்ளிக் குதித்து, சிற்றலைகளால் கரைகளில் மோதிச் சிரித்தபடி ஓடிக் கொண்டேதானிருந்தது. அத்திரி மலையிலிருந்தும், அகத்திய மலையிலிருந்தும் வீசிய குளிர்காற்று செடி கொடிகளையும் மரங்களையும் பாறைகளையும் தொட்டுத்தடவிக் கதம்பமான மணத்துடன் சிலீரென்று விசிக்கொண்டேதானிருந்தது. தூரத்து மலைமுகடுகளில் மோதிய மேகத்துணுக்குகள் ஆங்காங்கே நீரைப் பெய்து விட்டு, சுமை தீர்ந்த ஆயாசத்துடன் இன்னும் தெற்கு நோக்கி உல்லாச நடையில் தொடர்ந்து மிதந்து சென்று கொண்டேதானிருந்தன. மலைப் பகுதியிலிருந்து வயல் வெளிகளுக்கு வந்து விதவிதமாகக் குரல்களால் பாட்டி சைத்துவிட்டுத் திரும்பிய கிளிகளும், மைனாக்களும், வலியனும், கரிச்சானும், சிச்சிலியும், ஆள்காட்டிக் குருவியும், அக்கக்காக்குருவியும், உள்ளானும், மஞ்சள் குருவியும் மற்றும் பெயர் அறியாத கானகத்துப் பட்சிகளும் அதே பாடல்களைப் பாடியபடியேதான் பறந்து சென்றன. இயற்கையின் ஓட்டத்தில் எந்த

மாறுதலும் தென்படவே இல்லை. எதிர்பார்ப்புகளிலும், மனத்தின் ஆசைகளாலும் அலைக்கழிக்கப்படும் மனித இனத்துக்குத்தான் இயற்கை சிலவேளைகளில் ரசிப்பையும், சில வேளைகளில் வெறுப்பையும் அளிக்கின்றன. வல்லபன் கருணையாற்றையும், கூட்டமாகப் பறந்த கிளிகளையும் பார்த்த பார்வையில் ஏக்கமும் கோபமும் கலந்தே தெரிந்தது மட்டுமின்றி சற்று உன்மத்தம் பிடித்தவனாகவும் காட்டியது.

“கருணையாறு என்று யார் உனக்குப் பெயர் வைத்தது? அத்திரி மலையைத் தாண்டித்தானே வருகிறாய்? நீ கண்டாயா?” வெறித்த பார்வையுடன் ஆற்றுநீரைப் பார்த்துக் கேட்டவன் மேலே கூச்சலிட்டுப் பறந்த கிளிக்கூட்டத்தைப் பார்த்தான்.

“கூச்சல் போடாதே, பதில் சொல். என் உடன் பிறந்தவளைக் கண்டாயா நீ?” என்றான் மீண்டும் பலமாக.

கிளிகள் அவனுக்குப் பதில் கூறாமல் கூச்சலிட்ட படியே வட்டமடித்துப் பறந்தன. பக்கத்து மரக்கிளை யொன்றில் சிறுகிளையொன்றை ஒடித்துக் கொண்டவன், அதை வீசி வீசி “போ...போ... கூச்சலிடாதே” என்று அவற்றை விரட்டினான். அவை அவனைப் பரிகசித்துக் கீச்சிட்டுப் பறந்து சென்றன. அவை சென்ற திசையிலேயே பார்வையைத் திருப்பியவனுக்கு, சற்றுத் தொலைவில் ஆற்றில் இறங்கி நீரையெடுத்து தன்மேல் வாணம் போல் வீசியடித்துக் கொண்டிருந்த ஒற்றை யானையொன்று புலப்பட்டது.

“இதென்ன, ஒற்றையானை... மலைப்பகுதியிலிருந்து வந்துவிட்டதா? இவை கூட்டமாகத்தானே வரும்? மதம் பிடித்தவைதானே தனித்து வரும்?” தனக்குள் கேட்டுக் கொண்டவன், கையில் பிடித்த சிறுகிளையுடன் அதை நெருங்கினான்.

அவன் நெருங்கி வந்ததைக் கண்டபிறகும், அவனை அசட்டை செய்த அந்த யானை, நீரைத் துதிக்கையால் வாரி தன் மீதே வீசியடித்துக் கொண்டிருந்தது. அருகில் நெருங்கியவன் அதன் உடலில் தெரிந்த அடையாளங் களைக் கவனித்தான். தரையைத் தொடும் நீளத்தில் அதன் வாலும், நீண்ட துதிக்கையும், கால்களை மாற்றி அசைந்தபோது தென்பட்ட கால் நகங்களின் சங்கு போன்ற வெண்மையும், ஏழு முழத்துக்குக் குறையாத உயரமும் அது சாதாரண காட்டு யானையல்ல என்பதையும், மூன்று முழத்துக்கு நீண்ட தந்தமும், உடலில் தென்பட்ட வடுக்களும் பத்ரம்** என்னும் உயர்ந்த வகையைச் சேர்ந்த போர்க்களிறு அது என்பதையும் அவனுக்குப் புரியவைத்தன. தான் கேள்விப் பட்டிருந்த செய்திகளை நினைவுக்குக் கொண்டுவந்தவன் மனதில் சற்றுக் கலவரமும் பரவியது. அது யாருடைய போர்க்களிறு என்பதும் லேசாகப் புரிந்தது

"நீ அத்திவாரணமா அல்லது அரிவாரணமா?**... இங்கு எப்படி வந்தாய்?" என்று தான் கேள்விப்பட்டிருந்த பெயர்களை பலமாக உச்சரித்தான் வல்லபன். துதிக்கையை ஆட்டியபடி அவனை ஒருமுறை அலட்சிய மாகத் திரும்பிப் பார்த்த அந்தக் களிறு நீரிலிருந்து எதிர்ப்புறமாகக் கரையேறி, ஒருமுறை வல்லபனின் செவிகளைக் கிழிக்கும் பேரொலியுடன் பிளிறலொன்றை வெளியிட்டது. பின் பூமி அதிர, அதிவேகமாக மலைப் பகுதியை நோக்கி அரை ஓட்டமாகச் சென்றது. அரை நாழிகையில் மலைப் பகுதியை அடைந்து விட்ட அந்தக் களிறு அவன் பார்வையிலிருந்து மறைந்தது.

---

**★★ பத்ரம், மந்திரம், மிருகம் – அரச யானைகளின் அங்க லட்சணம் அபிதான சிந்தாமணி மற்றும் இராமாயணம் யுத்த காண்டம்.**

**★★ ராஜேந்திர சோழன், விஜயராஜேந்திர சோழன் ஆகியோரின் பட்டத்து யானைகள் – தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 3 மற்றும் தஞ்சை மன்னார்குடி ராஜகோபாலஸ்வாமி கோயில் கல்வெட்டுகள்.**

பார்வையிலிருந்து அந்தக்களிறு மறையும்வரை அங்கேயே நின்ற வல்லபன், சிந்தித்தபடியே திரும்பி, தன் இல்லத்தை நோக்கி நடந்தான். இல்லத்தின் வாசலில் இன்னொரு களிறும் காத்திருந்தது. ஆறரை அடிக்குக் குறையாத உயரமும், மூன்றடிக்கு அகலமுமாகக் கறுத்த உடலுடன் அசல் களிறு போலவே ஆஜானுபாகுவாக நின்றிருந்தான் ஒருவன். வாசலில் சற்றுத் தள்ளி புரவிகள் பல நின்றன. அருகே புதிதாக வீரர்கள் பலரும் நின்றிருந்தனர்.

இல்லத்தின் உள்ளே நுழையுமுன்னர் அந்த மனிதனின் துதிக்கை போன்ற கரம் நீண்டு வல்லபனைத் தடுத்தது. “யார் நீ? உள்ளே செல்ல அனுமதியில்லை” என்றான் அந்த மனிதன்.

வியப்புடன் அவனை ஏறெடுத்த வல்லபன் “நீ யாரென்பதைச் சொல். எனது இல்லத்திற்குள் செல்வதைத் தடுக்க நீ யார்?” என்றான்.

“நான் சோழ மன்னரின் ஊழியன். பெயர் பாணாக்கியான் பீமனடியான்.** இப்போதைக்கு இந்த இல்லத்தின் காவல் என் பொறுப்பிலிருக்கிறது” என்றான் அந்த மனிதன்.

வல்லபனின் சித்தத்தில் கலவரம் பரவியது. விழிகள் தெறித்துவிடும் போல் விழித்தன. “..பீமனடியான்...” என்று சொல்லிக் கொண்டவன் “நீங்கள்... அப்படியானால் உள்ளே...” அவன் நாக்கு புரளமறுத்தது. வார்த்தைகள் குழறலாக வந்தன.

“ஆம்..” தலையசைத்தான் அந்த பீமனடியான்.

அதுவரை காணாத பணிவும் அச்சமும் வல்லபனின் முகத்தில் தெரிந்தது. “ஐயா, நான் தண்டநாயகர்

**★★ ராஜேந்திர சோழ தேவனின் மெய்க்காப்பாளன் - சின்னமனூர், அரிகேசநல்லூர் கல்வெட்டுகள்.**

விழுப்பரையரின் மருமகன், வல்லபன். உள்ளே செல்லலாமா?" என்றான் அதி வினயமாக.

ஒருமுறை வல்லபனை ஏறஇறங்கப் பார்த்த பீமனடி யானின் கறுத்த முகத்தில் வெளேரென்று பற்கள் பளிச் சிட்டன. "நீதான் அந்த வல்லபனா? சரி சரி, உள்ளே செல். உனக்காகக் காத்திருக்கிறார்கள்" என்றான் முறுவலுடன்.

உள்ளே நுழைந்த வல்லபன் கூடத்தில் தாயார் செங்கமலவல்லியும் வரகுண வல்லியும் மலர்ந்த முகத்துடன் பேசிக்கொண்டிருக்க, தந்தையார் தன்னை நோக்கி முறுவலிப்பதையும் கண்டான். புதிதாக ஒருவரும் அருகில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார். அவரைத் திருவிசலூர் ஆலயத்தில் கண்டிருக்கும் நினைவு வந்தது வல்லபனுக்கு.

"வல்லபா, எங்கே சென்றாய்? ஏன் இத்தனை தாமதம்? உடனே மேல் தளத்துக்குச் செல்." என்றார் அவன் தந்தை.

வல்லபன் மேல்தளத்துப் படிகளில் அடிமேலடி வைத்து ஏறினான். மேல்தளத்துத் தாழ்வரையில் வீரர் இருவர் நின்றனர். உள்ளே கூடத்தில் இருக்கைகளில் அமர்ந்திருந்தவர்கள் சோழர்படையைச் சேர்ந்த படைத் தலைவர்கள் என்பது புரிந்தது வல்லபனுக்கு. அவர் களுக்கு இடையே காவி உடையுடன் நெடு நெடு வென்ற உயரத்துடன் வெண்ணிற தாடிமீசையுடன், பின்புறம் முடிச்சிட்ட சிகையுடன் ஒருவர் அமர்ந்திருந்தார். அவரை அடுத்து அமர்ந்திருந்த விழுப்பரையர் முகத்தில் தன் இல்லத்திற்கு அவர்கள் வந்திருப்பது குறித்து பெருமை புலப்பட்டாலும் ஒரு பணிவும், பக்தியும் தெரிவதைக் கவனித்தான் வல்லபன்.

விழுப்பரையர் பயன்படுத்தும் சிம்மாசனத்தில் நடுநாயகமாக, செக்கச் செவேலென்ற நிறத்தில், உயரமும்

திடமுமாக வாளைத் தரையில் ஊன்றி, கரங்களை அதன் பிடியில் வைத்து, நிமிர்ந்து அமர்ந்திருந்த மனிதரைக் கண்டவனுக்கு, தான் காண்பது உண்மைதானா என்ற சந்தேகமும் எழுந்தது. அவரது நேர்ப்பார்வையில் உள்ளே நுழைந்தவனை நோக்கித் தலையசைத்தார் அந்த மனிதர்.

அந்த வம்சத்துக்கே உரிய 'சுந்தர' எனும் பட்டத்தை அளித்த அந்த அழகிய விழிகள் வல்லபனை உற்று நோக்கின. அந்த விழிகளின் மீது கறுத்து இருபுறங்களிலும் வாளின் முனைகளைப் போல் இறங்கிய அடர்ந்த புருவங்கள் சற்று சுருங்கி விரிந்தன. சோழ நாட்டு மணி மகுடத்தைத் தொடர்ந்து அணிந்ததால் நெற்றியில் வில்போல ஒரு தழும்பு அந்த முகத்துக்கு ஒரு மெருகை அளித்துக் கொண்டிருந்தது. பார்வைக்கு மெலிதாகத் தெரிந்த கரங்கள் இருக்கையின் கைப்பிடியில் உறுதியாகப் பதிந்து நின்றன. அதில் ஓடிய நரம்புகள் எந்த நேரத்திலும் அந்தக் கரங்கள் இரும்பாக மாறவல்லவை என்பதைத் தெரிவித்தன. அசதி காட்டாமல் நேராக அமர்ந்திருந்த தேகத்தின் உறுதியும், இடைவிடாத பயிற்சியைக் காட்டிய தோள்களும் செதுக்கி வைத்தவை போல் தெரிந்தன.

"வல்லபா, உள்ளே வா" என்று முறுவலுடன் ஒரு அழைப்பும் விடுத்தார் அந்த மனிதர். அழைப்பு என்னவோ கனிவுடன்தான் வந்தது. ஆனால் அந்தக் குரலும், அதன் தொனியும் அது ஆணையிடுவதற்காகவே படைக்கப்பட்ட குரல் என்பதைப் புரிய வைத்தது வல்லபனுக்கு. பாய்ந்து அருகில் சென்றவன் மண்டியிட்டு வணங்கினான்.

'திருமன்னிவளர இருநில மடந்தையும், போர்ச் செயப்பாவையும் தன் தேவியராகி இன்புற..." மெய் கீர்த்திகளை இசைக்கக் கட்டியக்காரனின்றி, கவரி வீச போர்களில் கொண்டுவந்த பாவைகள் இன்றி, வெண் கொற்றக் குடையும், வருகையை அறிவிக்கும் தாரைகளும்

இன்றி, சோழச் சக்கரவர்த்தி ராஜேந்திர சோழ தேவர் தன் இல்லத்தில் வந்து இப்படி அமர்ந்திருக்கக் கூடும் என்று கனவிலும் கண்டறியாத வல்லபனை, மன்னனின் வலிய கரங்களில் ஒன்று வாளின் பிடியிலிருந்து நகர்ந்து தோளைப் பற்றி எழுப்பி நிறுத்தியது.

அவனைப் பக்கத்தில் நிறுத்திக் கொண்ட மன்னன் விழுப்பரையரை நோக்கி “நீங்கள் மேலே கூறுங்கள்” என்றான்.

“மன்னவா, கோட்டாற்றில் நான்காயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். திருவாலீஸ்வரத்தில் தற்போது மூன்று கைமா சேனையில்லை. மூவாயிரம் பேருக்குச் சற்றுக் குறைவாகத்தான் இருக்கிறார்கள். ஆனால் நாம் எதிர் பார்ப்பதுபோல மூன்று முனைகளில் தாக்குதல் ஏற்பட்டால் எதிர்கொள்வது சற்று சிரமமாகத்தான் இருக்கும். எனவேதான் கண்ணாகனாரின் உதவி தேவைப்படுகிறது” என்றார் விழுப்பரையர்.

முறுவலுடன் கேட்டுக் கொண்டிருந்த மன்னன் ராஜேந்திரசோழதேவனின் பார்வை பக்கவாட்டில் காவிஉடையுடன் வெளேரென்ற தாடிமீசையுடன் பின்புறம் முடிச்சிட்ட சிகையுடன் அமர்ந்திருந்தவரை நோக்கித் திரும்பியது.

“மன்னவா, மலைக்கணவாய் வழியே வரும் வீரகேரளன் இந்த முல்லை நாட்டையும், ஈழத்துக் கலங்களில் வரும் வீரர்கள் கொற்கையில் இறங்கி கிழக்கிலிருந்தும், மேற்கிலிருந்து சுந்தரபாண்டியனும் கோட்டாற்றை இருபுறமும் தாக்கப் போகிறார்கள்” என்றார் கண்ணாகனார்.

“மகிழ்ச்சி”

“தெற்கில் வீரகேரளனும் பாண்டியனும் சேர்ந்து தாக்கும்போது வடக்கிலிருந்து மூஷிகமன்னன் கொங்கு

நாட்டின் வழியே மதுரையை நோக்கிச் செல்லத் திட்டமிட்டிருக்கிறான். அவனைக் கவனிக்கும் பணியை என் சீடர்கள் பார்த்துக் கொள்வார்கள். திருவாலீஸ்வரத்துப் படையில் சிறுபகுதியை எனக்கு அளித்தால் போதுமானது”

மன்னனின் பார்வை விழுப்பரையரை நோக்கித் திரும்பியது “அத்திவாரணம் சென்றுவிட்டதா? பூபேந்திரன் எங்கிருக்கிறான்?”

“அவர் விழிஞத்திலிருந்து புறப்பட்டதாகச் செய்தி வந்தது பிரபு” என்ற விழுப்பரையர் தம்மிடமிருந்து ஓலைக்குழலொன்றை மன்னனிடம் நீட்டினார். குழலைப் பிரித்து வாசித்த மன்னன் முகத்திலிருந்த முறுவல் சிறு நகைப்பாக உதிர்ந்தது. ஓலையை கண்ணாகனாரிடம் அளித்தவன் “அவன் கேட்டுக் கொண்டபடியே அனுப்பி வைத்து விடுங்கள்” என்றான்.

விழுப்பரையர் சந்தேகம் கேட்டார் “மன்னவா, நாம் பலமுறை எச்சரித்தும் காந்தளூர்ச் சாலையைச் சேரரையும் பாண்டியரையும் விட அதிகம் ஈழத்தவர்தான் பயன்படுத்துகிறார்கள். தற்போது விழிஞத்தையும் மானாபரணனுக்குத் தத்தம் செய்துவிட்டான் சுந்தர பாண்டியன். தமிழரை அழிக்கத் தமிழரையே பயன் படுத்தும் ஈழத்தவரது போர்க் கலங்கள்தான் நிற்கின்றன அங்கு.”

ஒருகணமே சிந்தித்த மன்னன் “இனி அவை பயன்பட வேண்டாம்” என்றான். தொடர்ந்து “சரி, பூபேந்திரன் ஓலைப்படி தென்பந்தள நாட்டுக்கு யாரை அனுப்பப் போகிறீர்கள்?” என்றும் வினவினான்.

விழுப்பரையரின் பார்வை வல்லபன் மீது விழுந்தது. மன்னன் முறுவலுடன் தலையசைத்தான்.

விழுப்பரையர் அடுத்து வல்லபன் செல்லப் போகும் இடத்தையும், செய்ய வேண்டியவைகளையும் விவரித்

தார். நிகழப் போகும் போர் சேரரையும், பாண்டியரையும், விழிஞத்தையும், காந்தளூர்ச்சாலையையும் இனி நெடுங்காலத்துக்குத் தலையெடுக்காதபடிக்கு அடித்து விடும் என்பதையும், அதைத் தொடங்கி வைக்கும் பெரும் பொறுப்பு தன் தலை மீது சுமத்தப்படுகிறது என்பதையும் உணர்ந்தான் வல்லபன்.

**ம**ன்னன் அளித்த ஓலையுடன் சிறுமூட்டை யொன்றைத் தோளில் மாட்டிக் கொண்டு மறுதினம் புறப் பட்ட வல்லபன், ஒருநாள் பயணத்தில் சித்த புருஷர்கள் நடமாடுவதாகக் கூறப்படும் அத்திரிமலையின் கரடு முரடான மலைப் பாறைகளையும், சிற்றாறுகளையும், கொட்டும் அருவிகளையும், கடந்து கோயிலாறு என்னும் அந்தச் சிற்றாறு வளைந்து திரும்புமிடத்தை அடைந்தான். ஆற்றின் கரையோரமாகவே நடந்தவனுக்குச் சுற்றிலும் சூழ்ந்து கிடந்த அடர்ந்த வனம் பயங்கரம் கலந்த அழகாகவே தெரிந்தது. பட்சி ஜாலங்கள் விதவிதமான குரல்களில் பாடியும் கூவியும் அவனை வரவேற்றன. யானைகளின் பிளிறல்கள் அவ்வப்போது ஒலித்து கானகத்தையே அதிர வைத்துத் தேய்ந்தன. திடீர் திடீரென உறுமல்களும் கர்ஜனைகளும் ஒலித்து அவனைச் சிலிர்க்க வைத்தன. தன் குட்டிகளுடன் ஆற்றின் எதிர்க்கரையில் நீரருந்திக் கொண்டிருந்த வேங்கையொன்று அவனைக் கண்டு எச்சரித்துவிட்டு வெகு அலட்சியமாகக் கானகத்துள் நடந்து மறைந்தது. பூனைக்குரல்களில் அவனை நோக்கிக் கீச்சிட்ட குட்டிகள் வேங்கையைத் தொடர்ந்து ஓடி மறைந்தன.

ஆற்றை ஒட்டியே நீண்ட வல்லபனின் பயணம் அன்று மாலை ஒரு அருவிக் கரையில் வந்து நின்றது. பாதையும் அத்துடன் முடிந்துவிட்டதாகத் தோன்றியது. மறுபுறம் காத்திருந்த அபாயத்தை உணராத வல்லபன் அருவியைக் கடக்க வழி தேட. ஆரம்பித்தான்.

# 17. யட்சிணி

மேற்குத் தொடர்ச்சிமலையின் தென்பாகத்தில் அமைந் திருந்த பந்தள நாட்டின் எல்லைப்புறம் அபாயம் கலந்த அழகாகப் படர்ந்து கிடந்தது. செங்குத்தான பாறை களினூாடே நீண்ட ஸர்ப்பம் போல் வளைந்து வளைந்து சென்ற வழியில் சிதறிக் கிடந்த கற்கள் புரட்டியெறியப் பட்ட படிகள் போல் அமைந்திருக்க, சிற்றாறு ஒன்றின் கரையிலேயே நடந்த வல்லபனுக்கு இயற்கையின் அந்த வண்ணஜாலம் அளித்த பிரமிப்பு தொடர்ந்து கொண்டே யிருந்தது. அவ்வப்போது கேட்ட பிளிறல்கள் அந்த இடத்தில் காட்டு யானைகளின் நடமாட்டம் அதிகம் இருப்பதைத் தெரிவித்தன. பாறைகளினூடே அதிவேக மாக வளைந்து வளைந்து சென்ற நீண்ட ஸர்ப்பங்கள் திடீரெனத் திரும்பி எச்சரித்துவிட்டு விரைந்தன. எங்கோ கேட்பதாகத் தோன்றிய உறுமல்கள் ஒலித்துத் தேய்ந்தன. மேலே செல்லச்செல்ல குறுகிக் கொண்டே வந்த அந்த ஆறு திடீரென்று அகன்று, பாறைகளின் நடுவே தேங்கிக் கிடந்த பெரும் ஏரியில் கொண்டு வந்து சேர்ந்தது. நீர்ப் பரப்பின் மறுமுனையில் செங்குத்தாக உயர்ந்த பாறை களின் மேலிருந்து அருவி யொன்று 'ஹோ' வென்ற பேரொலியுடன் ஆக்ரோஷமாகப் பாய்ந்து இறங்கிக் கொண்டிருந்தது.

மாலைப்பொழுது முற்றுவதையும், விரைந்து இருள் கவிந்துவிடும் என்பதையும் உணர்ந்த வல்லபன், அதற்கு மேல் செல்ல வழியொன்றும் புலப்படாததால் திகைத் தான். உற்றுக் கவனித்தபோது அருவி விழும் இடத் தினருகே நீர்த்தாரைகளினூடே இடைவெளியொன்று தெரிந்தது. நெருங்கிய பின்னரே அருவிக்கும் பாசிபடர்ந்த பாறைகளுக்கும் இடையே வழியொன்று இருப்பது புலப்பட்டது அவனுக்கு. வழுக்கும் பாறைகளில் கால் களைப் பதித்து நடந்தவன் நின்றான். இடைவெளியைக் கடந்ததும் எதிரில் சரிந்து இறங்கி விரிந்த சமவெளி

அவனை அசர அடித்தது. சமவெளியில் பூத்துக்கிடந்த வண்ண வண்ண மலர்களும், இருபுறங்களிலும் விரிந்த மரக் கூட்டங்களும், அவற்றிலிருந்து ஒலித்த பலவித பட்சிகளின் ஒலிகளும் கண்களுக்கும் செவிகளுக்கும் குளிர்ச்சியை அளிக்க, சற்றுப் பலமாகவே வீசிய காற்றில் பல மூலிகைகளின் மணம் கலந்து வீசி, அவன் களைப் பையும், அயர்வையும் போக்கியது. சற்றுநேரம் அப்படியே நின்றவன் சுற்றிலும் ஒருமுறை கவனித்தான். மலர்ச் செடிகளினூடே வளைந்து உயர்ந்து கொண்டே சென்ற ஒற்றையடிப்பாதை அங்கு மனிதர் நடமாட்டமிருப்பதை அறிவித்தது. இன்னும் நெருங்கியபோது சமவெளியில் சற்றுத்தூரத்தில் பெரும் மூங்கில்களாலும், மரங்களாலும் அமைக்கப்பட்ட வேலி வெகுதூரத்துக்கு நீண்டு கிடக்க, உள்ளே பல குடிசைகளும், மனிதர்கள் நடமாடுவதும் தெரிந்தன. குடிசைகளுக்கு முன்பாக அந்தக் கானகத்து மக்கள் வழிபடும் சிலை ஒன்று பாதித் தென்னைமர உயரத்தில் நின்றிருக்க, அதன் கரங்களில் சூலமும், வாளும், கதையும், வில்லும் தெரிந்தன. இருள் கவிந்து கொண்டேவந்ததால், ஓரிரு பந்தங்களும் அங்கு எரியத்தொடங்கின.

ஆறு வளைந்து திரும்பிய இடத்தில் மரப்பாலமொன்று தெரிவதையும், உயர்ந்து கொண்டே சென்ற பகுதியில் பாறைகள் படிகள் போல அமைக்கப்பட்டிருப்பதையும் கவனித்த வல்லபன், அந்த மரப்பாலத்தை அடைந்து விடும் உத்தேசத்தில் மலர்ச் செடிகளினூடே, வழிமறித்த மரங்களையும் தாண்டி வேகமாக நடந்தான்.

பாதையில் வளைந்து திரும்பியதும் தென்பட்ட படிகளில் ஏற கால்களைப் பதித்த வல்லபன் சட்டென்று நின்றான். படிகளின் உச்சியில் அவனை நோக்கி நீட்டிய வாளை ஒரு கரத்திலும் மறுகரத்தை இடையிலும் கொடுத்து, உக்கிரமான முகத்தோடு நின்றாள் ஒரு பெண். அப்போதுதான் ஆற்றிலிருந்து எழுந்தவள் போல் நீரைச் சொட்டிய நூலாடையொன்று அவளைச் சுற்றிக்கிடந்தது.

சற்றுத் தள்ளி மான் தோலாலான அங்கி போன்ற உடையும் கீழே கிடந்தது. முன்புறமாக வந்து இடைவரை நீண்டுகிடந்த அடர்ந்த கூந்தலில் சொட்டிக் கொண்டிருந்த நீர்த்துளிகள் உடலுடன் ஒட்டித் தரையில் இறங்கின. அதுவரை வல்லபன் கண்டேயிராத பெரும் மாணிக்க ஆரமொன்று அவள் கழுத்தில் ஆடிச் சிவந்த ஒளியை வீசி அவனை எச்சரித்தது. அர்த்த சந்திர வடிவிலான பெரும் குழைகள் இரண்டு அவள் செவிகளில் ஊசலாடின.

அடர்ந்து வளைந்து கூராக இறங்கிய புருவங்களின் கீழிருந்து அந்த வாளை விடக் கூர்மையான இரு விழிகள் அவனை அனல் பறக்கப் பார்த்தன. செதுக்கி வைத்த நாசியின் நுனியில் வழிந்து இறங்கிய நீர்த்துளிகள் முத்துக் களைப் போல ஊசலாடி, சட்டென விழுந்தன. இயற்கையிலேயே பளபளத்த இதழ்களுடன் ஆற்றுநீர் உறவாடியதால், அவை இன்னும் பளபளத்து பவளங் களாகவே மின்னின.

வல்லபன் முகத்தில் தெரிந்த பிரமிப்பு ஒரு கணத்தில் மறைந்து அச்சம் வேகமாகப் படர்ந்தது.

“ஆகா, புரிந்துவிட்டது... புரிந்துவிட்டது” என்று உரக்கக் கூறியவன் பரபரவென்று தன் தோளில் இருந்த மூட்டை யையும் வாளையும் அவிழ்த்துக் கீழே தள்ளிவிட்டு, பக்கங்களில் செழித்துக் கிடந்த மலர்ச் செடிகளை நோக்கி ஓடினான். கைநிறைய மலர்களைப் பறித்துக் கொண்டு திரும்பியவன் வேகமாக ஓடிப் போய் அந்தப் பெண்ணின் காலடியில் பத்மாசனமிட்டு அமர்ந்து கொண்டான்.

“தேவி, தாயே, யட்சிணீ, முப்பத்தாறு யட்சிணிகளில் நீ யாரம்மா? விசித்ரையா, விபர்ணையா, ஹம்சினியா, விக்கலையா?... கார்மேகக் கூந்தலும், ஐந்தாம்பிறை நெற்றியும், மாவடுவைப்பிளந்து வைத்த கண்களும், செதுக்கிய நாசியும், உடுக்கை இடையும், இது நிச்சயம் விக்கலை யட்சிணியாகத்தான் தெரிகிறது. ஓம் விக்கலே...

ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் ஸ்வாஹா” என்று பலமாகக் கூறியவன் மலர்களை அவள்மீது அர்ச்சிப்பது போல எறிந்தான்.

“பரமேஸ்வரா, உத்தமரேஸ்வரா...குபேரா... யட்சர்களின் அதிபதியே, இந்த யட்சிணியிடமிருந்து என்னைக் காப்பாற்று... ஓம்... ஐம் ஹ்ரீம்... ஸ்ரீம்... க்லீம்... ஸ்வாஹா...” என்றவன் மீண்டும் மலர்களை அவள் மீது எறிந்தான்.

அந்தப் பெண்ணுக்கு வல்லபனின் அச்சமும், யட்சிணி உபாசனையும் கோபத்தை மாற்றிச்சிரிப்பை வரவழைத்து விட்டிருக்க வேண்டும். அவளது அழகிய முகத்தில் தெரிந்த சினம் தணிந்து முறுவலொன்று நெளிந்தது.

“...யார் நீ? எழுந்திரு... எழுந்திரு. இங்கு எதற்காக வந்தாய்?” என்றாள் வாளைத் தாழ்த்தியபடி.

தன்னை நோக்கி நீண்ட வாள் தாழ்ந்து விட்டதையும், அவள் முகத்தில் தெரிந்த உக்கிரம் புன்முறுவலாக மாறி விட்டதையும் கவனித்த வல்லபன், பயபக்தியுடன் எழுந்து கரங்களைக் கட்டி, ஒரு கரத்தால் வாயைப் பொத்தியபடி அதி பவ்யமாக நின்றான்.

“தேவி, விக்கலை யட்சிணியே, வணங்குகிறேனம்மா. நான் இந்தப் பகுதியிலிருக்கும் சோலக இனத்துத் தலைவர் சுந்தர சோலகரைப் பார்க்க வந்திருக்கிறேன்... என்னை ஒன்றும் செய்துவிடாதே..தேவீ...ஓம் விக்கலே... ஐம்... ஹ்ரீம்... ஸ்ரீம்... க்லீம்...ஸ்வாஹா... ஐயோ, பயமாயிருக்கிறதே...”**

அந்தப் பெண் பலமாகவே சிரித்துவிட்டாள். மறைவிலிருந்து அவளுடன் வந்திருந்த சோலகப் பெண்கள் சிலரும் வந்து அவள் பின்னால் நின்றார்கள். வந்து நின்றவர்களின் குறுகுறுவென்ற பார்வையில் அடுத்து

**★★யந்திரம், தந்திரம், யட்சிணி உபாசனைகள் - சாக்த நிகமம், தந்த்ர யோக சித்தி.**

அவன் என்ன செய்யப் போகிறான் என்ற எதிர்பார்ப்பு தெரிந்தது.

கரத்திலிருந்த வாளைப் பின்னாலிருந்த பெண்ணிடம் அளித்த அந்தப்பெண், படிகளில் இறங்கி வல்லபனை நெருங்கினாள். அருகில் நெருங்கி அவனை உற்றுப்பார்த்த வளுக்கு அவன் அச்சம் உண்மைதானா என்ற சந்தேகம் எழுந்தது. மாநிறமாக இருந்தாலும் களையாகத் தெரிந்த அவன் முகமும், அரும்பு கட்டியிருந்த மீசையும், திடமாகக் கால்களைப் பதித்து நின்றிருந்த விதமும், துறுதுறுவென்று அவள் விழிகளைச் சந்தித்த அவன் நேர்ப் பார்வையும், அதில் தெறித்த விஷமமும் அவன் அச்சம் போலியாகத் தானிருக்க வேண்டும் என்றே எண்ண வைத்தது.

"யார் நீ? எதற்காக என் தந்தையாரைப் பார்க்க வேண்டும்?" என்றாள் அவள். அவள் குரலிலிருந்த உஷ்ணம் வெகுவாகக் குறைந்திருந்தது.

அவன் முகத்திலிருந்த போலியான அச்சம் சட்டென்று மறைந்து வியப்பு பரவியது. "என்ன? சுந்தர சோலகர் உங்கள் தந்தையா? அப்படியானால்...நீ...நீங்கள்...யட்சிணி இல்லையா?."

பின்னால் நின்றிருந்த பெண்களில் ஒருத்தி குரல் கொடுத்தாள் "இவர்கள் குந்தவி.. எங்கள் சோலகர்களின் இளவரசி... மண்டியிட்டு வணங்கு"

வல்லபன் மண்டியிடவில்லை. கண்கொட்டாமல் அவளை உற்று நோக்கினான். முகத்தில் முறுவல் நெளிய கைகளைக் குவித்து தலையைச் சற்றே சரித்து "இளவரசி, வணக்கம். உங்கள் தந்தையாரைக் காணவேண்டும். என்னை அவரிடம் அழைத்துச் செல்லுங்கள், தயவு செய்து. தாமதிக்க வேண்டாம். மிக முக்கியமான செய்தி யுடன் வந்திருக்கிறேன்" என்றான் தெளிவாக.

பதிலேதும் கூறாமல் அவனை ஏறிட்ட இளவரசி "என்னுடன் வாருங்கள்" என்று திரும்பி நடந்தாள். நடந்த படியே யோசித்தாள் "எப்படி என் கோபம் தணிந்தது?

யட்சிணி உபாசனையாலா? இவன் முகத்தின் களையும் முறுவலும் என் வேகத்தைக் குறைத்ததா? அச்சத்தில் நடுங்குபவனுக்கு ஒரு பெண்ணின் முகத்தை அப்படி வர்ணிக்க முடியுமா? என்ன சொன்னான்.?...கார்மேகக் கூந்தல்... ஐந்தாம்பிறை...நெற்றி.. மாவடுவைப் பிளந்த விழிகள்... உடுக்கை...?." அத்தனை அழகாகவா இருக்கி றோம்? இதுவரை எவரும் இப்படி வர்ணித்ததில்லையே?" அவள் மனதுக்குள் அதுவரை அறிந்திராத உணர்வு ஏதோ பரவுவதை அவளால் உணர முடிந்தது. முகம் சற்றுப் பின்புறமாகத் திரும்பி, கானகத்தைக் கவனிப்பதாகப் பாவனை செய்தது. விழிகள் இடதுகோடிக்கு வந்து, பின்னால் வந்தவனைக் கண்டும் காணாமல் பார்த்தது. மரப் பாலத்தைக் கடந்ததும் மீண்டும் வல்லபன் அவளை அழைத்தான்.

"இளவரசி..."

"என்ன வேண்டும்?" நடந்தபடியே அவனைத் திரும்பிப் பாாத்துக் கேட்டாள் அவள்.

"உங்கள் தந்தையார் பெயர் சுந்தரர்தானே?" சற்று முன்னால் வந்தவன் அவளுக்குப் பக்கலில் நடந்தபடியே கேட்டான்.

"ஆம். அவரைத்தானே காண வேண்டும் உங்களுக்கு?"

"ஆமாம். காணவேண்டும். உங்கள் பெயர் குந்தவி என்றார்கள்"

"ஆம். என்ன அதற்கு?." அவள் முகத்தில் பழையபடி கோபத்தை வரவழைத்துக் கொள்ள முயன்றாள்.

"இந்தப் பெயர்கள் எல்லாம் சோழ அரச வம்சத்துக் குரிய பெயர்களாயிற்றே..."

அவள் சட்டென நின்று அவனை நோக்கித் திரும்பினாள். பதிலேதும் கூறாமல் விறுவிறுவென்று நடந்தாள். அவளுக்கு முன்னால் நடந்த தோழியர் விழித்தபடி நடந்தனர்.

அதுவரையில் இளவரசியார் அறிமுகமற்ற எவருடனும் இத்தனைதூரம் பேசிக் கண்டறியாத உடன் வந்த தோழியர் ஒருவரையொருவர் வியப்புடன் பார்த்துக் கொண்டனர். அடுத்து அவர்கள் ஏதோ கூறிச் சிரித்தபடி அவர்களுக்குள் ரகசியம் பேசிக் கொள்ளவும் செய்தனர்.

வல்லபனும் மேற்கொண்டு ஏதும் பேசவில்லை. குடிசைப் பகுதி நெருங்கியது. திடமான பெருமூங்கி லாலும் வைரம் பாய்ந்த பெரும் மரங்களாலும் கட்டப் பட்டிருந்த வேலியைக் கண்டவன் அது காட்டு யானை களின் கூட்டம் வந்தாலும் தாக்குப் பிடிக்கக் கூடியது என்பதைப் புரிந்து கொண்டான். நடுவேயிருந்த வாயிலைக் கடந்ததும் முன்னால் அந்தத் தேவதையின் பெரும் சிலை எதிரே நின்றது. அதன் பிரும்மாண்டமான உருவமும், தூண்தூணாக நின்ற கால்களும், கரங்களில் பிடித்திருந்த ஆயுதங்களும், உருட்டி விழித்த பெரும் விழிகளும், பருத்த உதடுகளை ஒட்டித் தெரிந்த இரு கோரைப் பற்களும் வல்லபனுக்கு ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

அந்த கானகத்துத் தேவதையின் பார்வை அவன் மீது விழுந்ததாலோ, அல்லது அவன் சூளாமணி விகாரத்தில் பயின்ற ஆரூடத்தின்படி எதிர்பாராத நிகழ்வுகள் நடக்கத் தொடங்கிவிட்டதாலோ, அல்லது அந்தப் பெண் குந்தவியின் ஜாதகத்தில் ஏழாமிடத்துச் சுக்கிரன் அதுவரை அடக்கிவைத்திருந்த மகிழ்வைக் காட்டி இடிஇடியென்று பலமாக நகைத்ததாலோ, அடுத்து நிகழ்ந்தவை இருவருமே எதிர்பாராததாக இருந்தது. முன்னால் சென்று கொண்டிருந்த பெண்கள் சட்டென்று நின்று, அந்தத் தேவதையை வணங்கினர். அரைப் பார்வையாக வல்லபனைப் பார்த்தபடி நடந்த இளவரசி அவர்கள் நின்றதைக் கவனியாமல் அந்தப் பெண்கள்மீது இடித்துக் கொள்ள, நிலை தடுமாறி அப்படியே பின்புற மாகச் சரிந்தாள். அவளைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த வல்லபனின் கரங்கள் சட்டென விரிந்து

அவளது இடையைப் பற்றி அணைத்து நிறுத்தின. அவன் மீது சரிந்த நிலையில் இடையைச் சுற்றிய கரங்களிலிருந்து விடுபட சுழன்று எழ முயன்ற இளவரசி, வேகத்தில் கால்கள் பின்னிக்கொண்டு தடுமாற அவனையும் சரித்துக் கொண்டு சாய்ந்து இருவருமாக அந்தத் தேவதையின் முன்னால் உருண்டு விழுந்தனர். உடன் வந்த தோழியர் ஒரு கணம் திகைத்து நின்றனர்

அதே நேரத்தில் கனத்த மரச்சுவரின் வாயில் மீண்டும் திறந்தது. புரவிகள் பல தடதடவென உள்ளே நுழைந்தன. சோலக வீரர்கள் தொடர, முன்னால் வந்த புரவியில் ஆஜானுபாகுவாக அமர்ந்து கீழே உருண்டு கிடந்த தன் மகளையும், புதிதாக ஒரு வாலிபனையும் கவனித்தபடியே வேகத்துடன் வந்து கொண்டிருந்தான் சோலக இனத்துத் தலைவன் சுந்தர சோலகன்.

# 18. வர்ம சிகிச்சை

அக்னியின் ஸ்பரிசத்தால் நெய்யும், காற்றின் ஸ்பரிசத்தால் மலர்களும், விரல்களின் ஸ்பரிசத்தால் சந்தனமும், விழிகளின் ஸ்பரிசத்தால் மனித மனமும், மணம் வீசத்தொடங்கி விடுகின்றன என்கிறது மகாகவி காளிதாஸனின் காவியம்.

தன்னைக் கண்டு அஞ்சுவதாகப் பாவனை செய்து, தன் மீது மலர்களைத் தூவி, இதற்கு முன் கேட்டேயிராத வகையில் தன்னை அழகாக வர்ணித்த அந்த இளம் வாலிபனைச் சந்தித்ததால் தன் மனதுக்குள் ஏற்பட்ட மாறுதல்களை உணரத் தொடங்கி விட்டிருந்த சோலகர் இனத்து இளவரசி குந்தவிக்கு, எதிர்பாராது தான் தோழிகள் மீது இடித்துக் கொண்டு தடுமாறவும், இடையை வளைத்துப் பிடித்து நிறுத்திய வாலிபனின் கரங்களின் ஸ்பரிசம் விவரிக்க இயலாத உணர்வுகளை ஏற்படுத்தி விட்டது. அது போதாதென்று, தான் அவனை

கரங்களிலிருந்து விடுபட, சுழன்று விலக முயற்சித்தது இன்னும் விபரீதமாகப் போய், இருவருமாகக் கீழே சரிந்து விழுந்து உருண்டு சோலகரின் காவல் தெய்வத்தின் சிலை முன்பாகத் தரையில் ஒருவர் மீது ஒருவராய்க் கிடக்க நேரிட்டு விட்டதால், என்னவென்றே கூற இயலாத மனநிலையில் இதுவரை அனுபவித்தறியாத நாணமும், சங்கடமும், கோபமும் கலந்த கலவையாகத் தரையில் கிடந்தாள் அவள்.

அந்தச் சங்கடம் போதாதென்று, தடதடவெனப் பிரவேசித்த புரவிகளும், புரவியிலிருந்து குதித்து இறங்கி எதிரே நின்ற தன் தந்தையும், அவர் பின்னால் நின்ற வீரர்கள் பார்த்த பார்வையும் அவளுக்குப் பிராணனே போய்விடும் போலிருந்தது.

சட்டென்று துள்ளியெழுந்துவிட்ட வல்லபன், தன்மீது ஒட்டிக் கொண்ட மண்ணைத் தட்டி உதறிக் கொண்டாலும், அவள் மேனியிலும் உடையிலும் இருந்த ஈரம் தன் மீதும் ஒட்டிக்கொண்டு விலக மறுத்ததால் விழித்துக் கொண்டு நின்றான். ஒன்றுமே அறியாத அப்பாவி போல் முகபாவத்துடன் நின்ற அந்தப் புதிய வாலிபனையும், தரையில் ஈர உடையுடன் மண்ணில் கிடந்த தன் மகளையும் கண்ட சோலகர் தலைவன் முகத்தில் தெறித்தது சினமா, சந்தேகமா, பரிதாபமா, சங்கடமா என்பது புலப்படவில்லை. வெகு நிதானமாக வல்லபனை ஏறிட்டவன், “யாரப்பா நீ? இங்கு எதற்காக வந்தாய்?” என்றான்.

இளவரசியைப் போலவே வல்லபனது மனோ நிலையிலும் விரவிக்கிடந்த குழப்பமும் சங்கடமும் வாயை அடைத்துக் கிடந்ததால் உடனே பதில் கூற இயலாமல் திருதிருவென்று விழித்தான் அவன்.

அவனை அனுதாபத்துடன் நோக்கிய சோலகர் தலைவனின் குரலில் பரிவு தொனித்தது “வாலிபனே, அஞ்ச வேண்டாம். நான் உள்ளே நுழையும் போதே

இங்கு நடந்தவற்றைக் கவனித்துக் கொண்டேதான் இருந்தேன். எதிர்பாராமல் நிகழ்ந்தவற்றில் உன் மீது தவறொன்றுமில்லை" என்றான்.

குனிந்து இளவரசியை கைகொடுத்து எழுப்பிவிட்டான் "மகளே, எழுந்திரு, உன் தடுமாற்றத்தால் ஏற்பட்டது இது. நம் இல்லத்துக்குச் சென்று உடைகளை மாற்றிக் கொள்" என்றவன், அடுத்து நின்ற தோழிகளைப் பார்த்து சைகை செய்தான்.

ஆனால் எழுந்து நிற்க முயன்ற சோலக இளவரசி மீண்டும் "ஆ..." என்றபடி கால்களில் ஒன்றை உயர்த்தி அவசர பரத நாட்டிய முத்திரைகாட்டிவிட்டுச் சரிந்தாள். தோழிகள் அவளைப் பிடித்து நிறுத்தினர். விழுந்து உருண்டபோது கால்கள் மடங்கியதால் ஏதோ பிசகியிருக்க வேண்டும் என்பது புரிந்தது. அவளைக் கைத் தாங்கலாகப் பிடித்துக் கொண்ட தோழியர் மெல்ல எட்ட இருந்த குடிசைகளை நோக்கி அழைத்துச் சென்றனர்.

இளவரசி ஒரு காலைப் பதிக்க இயலாமல் தோழியர் உதவியுடன் செல்வதைக் கவனித்த சோலகர் தலைவனின் முகத்தில் கவலை படர்ந்தது.

வல்லபன் அவனைக் கவனித்தபடி நின்றான். செப்பாலடித்தது போலிருந்த அவன் நிறத்தையும், பின்புறம் முடிச்சிட்டிருந்தாலும், புரவியில் வேகமாக வந்ததால் காற்றில் அலைந்த கறுத்த குழற்கற்றைகளையும்; அந்தக் கானகத்து வேங்கை மரத்தால் செய்யப்பட்டது போன்ற திடமான தேகத்தையும், வலுவான கரங் களையும் கவனித்த வல்லபன் அவன் வயதை நிர்ணயிக்க முடியாமல் திணறினான். இளவரசி அணிந்திருந்தைப் போலவே அவன் கழுத்தில் ஊசலாடிய அந்த மாணிக்க மாலையைக் கொண்டு ஒரு சிற்றரசையே விலைக்கு வாங்கலாம் என்பது புரிந்தது வல்லபனுக்கு. அவன் இடைக் கச்சையில் தொங்கிய நீண்ட வாள் நான்கு விரற் கடைக்குமேல் அகலமாயிருப்பதையும், அதை எடுத்துச்

சுழற்றவே கரங்களுக்கு அதீத உரம் வேண்டும் என்பதும் புரிந்தது.

வல்லபனை நோக்கி மீண்டும் திரும்பிய சோலகர் தலைவன் "வாலிபனே, நீயும் என் வீரர்களுடன் சென்று உடைகளை மாற்றிக் கொள். இன்னும் இரண்டு நாழிகைகள் கழித்து உன்னைச் சந்திக்கிறேன்" என்றவன் தன் வீரர்களை நோக்கிக் கையசைத்து விட்டு மீண்டும் புரவியில் ஏறி, இளவரசி சென்ற திசையில் விரைந்தான்.

வீரர்களில் ஒருவன் அளித்த புரவியில் ஏறிய வல்லபன் குடிசைகள் சீராக அமைக்கப்பட்டிருப்பதையும், இரண்டு கட்டுக்கு மேல் உள்ளே சென்றதும் பெண்களும் குழந்தைகளும், முதியவர்களும் குடிசைகளின் வாயிலில் நின்று தன்னை நோக்குவதையும் கண்டான். நல்ல அகலத்தில் நீண்டிருந்தன தெருக்கள்.

அகன்ற தெருக்களில் ஆங்காங்கே புரவிகள் பல கட்டப்பட்டிருந்தன. இரு புறங்களிலும் செழித்துக் கிடந்த மரங்களிலிருந்து புறாக்களும் கிள்ளைகளும் கூச்சலிட்டு வரவேற்றன. ஆடு மாடுகள் பல பட்டிகளில் அடைக்கப் பட்டுக் குரலெழுப்பிக் கொண்டிருந்தன. சோலகர் இனப் பெண்களும், முதியவர்களும் நடமாடிக் கொண்டிருக்க, குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன.. வேட்டைக்குப் பயன்படுத்தும் நாய்கள் பல பட்டிகளின் முகப்பில் கட்டப்பட்டிருந்தன. அவனைக் கண்டதும் அவையும் ஆக்ரோஷமாகக் குரல் கொடுக்கத் தொடங்கின.

இரண்டு மூன்று தெருக்களை அடுத்துத் தெரிந்த குடிசைகள் இன்னும் பெரிய அளவில் இருக்க, அவற்றின் வாயில்களில் சோலக வீரர்கள் கையில் ஏந்திய பெரும் ஈட்டிகளுடன் நின்றனர். அடுத்துத் திடலாக விரிந்தது ஒரு பெரும் புல்வெளி. திடலைச் சுற்றிப் பந்தங்கள் பல எரிந்து கொண்டிருந்தன. நடுவில் உயரமான மரங் களாலும், மூங்கில்களாலும் கட்டப்பட்ட உயர்ந்த

குடிசையொன்று பிரதானமாக நின்றது. அடுத்து சற்று அளவில் சிறியதான குடில்களும் தென்பட்டன. கல்லெறி தூரத்தில் ஏராளமான புரவிகள் ஓலைப் பந்தலொன்றின் கீழ் அடைக்கப் பட்டிருந்தன.

நேர் எதிரே தெரிந்த குடில்களில் ஒன்றில் வல்ல பனைத் தங்க வைத்த வீரர் தலைவன் உள்ளேயிருந்து வந்த பணிப்பெண்ணிடம் கவனித்துக் கொள்ள உத்தரவிட்டு வெளியேறினான். துரிதமாக நீராட்டத்தை முடித்துக் கொண்டு வந்த வல்லபனுக்குச் சுவையான உணவு காத்திருந்தது.

சற்றைக்கெல்லாம் தலைகாட்டிய வீரர் தலைவன் வல்லபனைப் பிரதானமாகத் தெரிந்த உயரமான குடிசைக்கு அழைத்துச் சென்று வாயிலில் நின்றவனிடம் ஏதோ கூறிவிட்டு “நீங்கள் உள்ளே செல்லலாம்” என்றான் வல்லபனிடம்.

உள்ளே நுழைந்த வல்லபன் நீண்ட தாழ்வரையை அடுத்து விரிந்த முற்றத்தைக் கண்டு பிரமித்தான். சோழ நாட்டின் வீடுகளைப் போலவே முற்றத்தைச் சுற்றிலும் நான்கு புறமும் ஓடிய தாழ்வறையும், தெரிந்த அறை களையும், ஓரங்களில் நின்ற பாவை விளக்குகளையும், மேலிருந்து தொங்கிய சரவிளக்குகளையும் கண்ட வனுக்குச் சோழ நாட்டிலிருப்பதைப் போன்ற உணர்வே ஏற்பட்டது. அங்கு பணிப்பெண்கள் சிலர் நடமாடிக் கொண்டிருக்க, இளவரசியுடன் தான் கண்டவர்களில் சிலரும் அதில் இருப்பதைக் கவனித்தான் வல்லபன். முற்றத்தின் பின்புறம் தெரிந்த வாயிலின் வழியே நோக்கியவனுக்கு இரண்டு மூன்று கட்டுக்களாக வீடு அமைக்கப்பட்டிருக்கிறது என்பது புரிந்தது. ஓரங்களில் ஈட்டிகளும், சுவர்களில் பல வடிவங்களில் வாட்களும் மாட்டப்பட்டிருந்தன.

உள்ளேயிருந்து சோலகர் தலைவன் முதியவர் ஒரு வருடன் வருவது தெரிந்தது. முதியவரிடம் ஏதோ கேட்ட

படியே வந்த சோலகர் தலைவன் முகத்தில் கவலை தெரிந்தது.

“கவலைப்பட ஒன்றுமில்லை தலைவரே. கணுக்காலில் நரம்பு பிசகியிருக்கிறது. மூலிகை வைத்துக் கட்டி யிருக்கிறேன். காலையில் சரியாகிவிடும்” முதியவர் கூறுவது வல்லபனுக்குக் கேட்டது.

ஒருகணமே சிந்தித்த வல்லபன் இருவரையும் நோக்கி நடந்தான். சோலகர் தலைவனை நோக்கித் தலை வணங்கியவன், முதியவரிடம் “இளவரசியாருக்குக் காயமேதும் பட்டிருக்கிறதா?” என்றான்.

ஒருமுறை தலைவனை ஏறிட்ட முதியவர் “காயமேது மில்லை. கணுக்காலில் நரம்பு பிசகியிருக்கிறது” என்றார்.

“உம்மிடம் காந்தள் கொடியின் விதைகள் இருக்கிறதா?”

முதியவரின் புருவங்கள் உயர்ந்தன “இருக்கிறது. முறி யெண்ணையும் இருக்கிறது. ஆனால் பக்குவம் கணிக்க இயலவில்லை. என் கையில் அழுத்தமும் சூடும் போதாது, நீ மருத்துவனா?” என்றார் சந்தேகத்துடன்.

“ஆம். காந்தள் விதை ஒருபிடியும், முறியெண்ணையும் கொடுங்கள்” என்றவன் தலைவனை நோக்கித் திரும்பினான் “தலைவரே, இளவரசி எங்கிருக்கிறார்?” என்றான்.

சோலகர் தலைவன் தயங்குவது தெரிந்தது “இளைஞனே, சற்றுப் பொறு. என் சகோதரி பந்தளத்து மகாதேவர் ஆலயத்துக்குச் சென்றிருக்கிறாள். அவள் இதைக் குணப்படுத்திவிடுவாள்” என்றான் அவன் தயக்கம் குரலில் தொனிக்க.

முதியவர் குறுக்கிட்டார் “தம்பி, நீ இந்த வகை மருத்துவம் பயின்றவனா? யாரிடம் பயின்றாய், சொல்” என்றார்.

“சூளாமணி விஹாரத்தில், தர்மானந்தரிடம்”

அதற்குமேல் முதியவர் ஏதும் கேட்கவில்லை. தமது கையிலிருந்த பனையோலைப் பெட்டியிலிருந்து எண்ணைய்குடுவையும், வாழையிலையில் மடித்த விதைகளையும் வல்லபனிடம் அளித்துவிட்டுத் திரும்பி உள்ளே நடந்தார். வல்லபன் தொடர்ந்தான்.

இளவரசியின் அறை விசாலமாயிருந்தது. இருபுறமும் சாளரங்களின் மீது சித்திரங்கள் தீட்டப்பட்ட வண்ணச் சீலைகள் காற்றில் ஆடின. சரவிளக்குகள் இரண்டு ஒளி வீசிக் கொண்டிருக்க சாளரத்தையொட்டிய மஞ்சத்தை விடுத்து, இளவரசி அருகிலிருந்த இருக்கை யொன்றில் அமர்ந்திருந்தாள். அவளது அழகிய முகத்தில் வேதனை தெரிய, பணிப் பெண்ணொருத்தி வலதுகாலைத் தன் மடியில் வைத்து நீவிவிட்டுக் கொண்டிருந்தாள்.

முதியவர் மீண்டும் உள்ளே வருவதையும் பின்னால் வந்த வாலிபனையும் கண்ட இளவரசியின் முகத்தில் வலி மறைந்து வேறு ஏதோ புலப்பட்டது. தொடர்ந்து வந்த தன் தந்தையைக் கண்டவள் “தந்தையே, இவரை எதற்கு இங்கு...?” என்றாள் சங்கடம் குரலில் தொனிக்க.

வல்லபன் அவளையோ, அவள் விடுத்த கேள்வி யையோ கவனிக்கவில்லை. அவளை நெருங்கியவன் பணிப்பெண்ணை விலகிச் செல்லுமாறு சைகை செய்துவிட்டு, எதிரில் மண்டியிட்டு அமர்ந்தான். அவள் வலது காலை இடது கரத்தில் தாங்கிக் கொண்டவன் வலது கை விரல்களால் கணுக்காலையும் பாதத்தையும் மெல்ல அழுத்தி பரிசோதித்தான். மேலே பூசப்பட்டிருந்த பச்சிலையைச் சுத்தமாகத் துடைத்து விட்டு, பணிப் பெண்ணை லேசான சூட்டில் நீர் கொண்டுவரப் பணித்தான்.

முதியவருக்கு அவன் அடுத்துக் கேட்கப் போவது புரிந் திருக்க வேண்டும். தமது பெட்டியிலிருந்து மெல்லிய கயிறுபோலிருந்த வேர்கள் இரண்டை அவனை நோக்கி நீட்டினார். அதைப் பெற்றுக் கொண்ட வல்லபன் திரும்பி

சோலகர் தலைவனை நோக்கி முறுவலித்தபடி, தன் கச்சையிலிருந்த ஓலைக்குழல்கள் இரண்டை எடுத்து அவனிடம் அளித்தான்.

"தலைவரே, இந்த ஓலைகளை உங்களிடம் அளிக்கத் தான் இங்கு வந்தேன். பிரித்துப் பாருங்கள்" என்றவன் திரும்பி, கயிறுபோலிருந்த வேர் ஒன்றை இளவரசியின் கணுக்காலில் சுற்றி முடிச்சிட்டுக் கீழ்ப்புறமாகக் கொண்டு வந்து நடுவிரலில் அதைப் பிணைத்து முடிச்சிட்டான். அவளது முழங்காலின் மேற்பகுதியில் மற்றொரு வேரை இறுக்கமாகக் கட்டினான். காந்தள் விதைகளைக் கைகளால் அழுத்தமாகக் கசக்கி முறியெண்ணையுடன் கலந்தவன் அந்தக் கலவையை அவள் முழங்காலிலிருந்து கணுக்கால்வரை அழுத்தமாகத் தேய்த்தான். பக்க வாட்டில் வர்மப் புள்ளிகளில் அழுத்தம் கொடுத்து விரல்களை மெதுவாகக் கீழே இறக்கினான். பணிப்பெண் கொண்டு வந்த சுடுநீரில் கைகளை நனைத்துக் கொண்ட வன் மீண்டும் தன் சிகிச்சையைத் தொடர்ந்தான். அவனது கைப்பக்குவத்தைக் கவனித்துக் கொண்டிருந்த முதியவர் திருப்தியுடன் தலையசைத்துக் கொண்டார்.

வாயிலினருகே அரவம் கேட்டது. யாரோ அவசரமாக உள்ளே நுழைந்தார்கள். "என்ன ஆயிற்று குந்தவிக்கு...?" பெண் குரலொன்று பரிவுடன் கேட்டபடி உள்ளே வந்தது. முதியவர் வந்த பெண்மணியைத் தடுத்தார், "அம்மா, சற்றுப் பொறுங்கள், சிகிச்சை முடியட்டும்" என்றார்.

"சகோதரி, இப்படி வா" என்ற சோலகர் தலைவன் வந்த பெண்மணியிடம் நடந்தவற்றைக் கூறத் தொடங்கி னான்.

வல்லபன் திரும்பவில்லை. அவனது முழுக் கவனமும் தந்தத்தில் கடையப்பட்டுச் சந்தன நிறம் பூசப்பட்ட இளவரசியின் கால்களின் மீதும், மலரப்போகும்

மொக்குகளைப் போன்ற விரல்களின் மீதும், கால்களின் வர்மப் புள்ளிகளின் மீதும் லயித்திருந்தது.

இளவரசியின் நிலை சொல்லத் தரமற்றதாயிருந்தது. கானகத்திலும், மலையிலும், புரவியில் ஏறிச் சுற்றிவந்தவள் தான். கூட்டமாக வரும் யானைகளையும் வேங்கை களையும் விரட்ட வீரர்களுடன் பந்தங்களை ஏற்றிக் கொண்டு துரத்தியவள்தான். அத்துமீறி எல்லைக்குள் நுழைபவர்களைத் தண்டித்தவள்தான். எதிர்த்தவர்களை வாளாலும், அம்புகளாலும் வென்றவள்தான்.

அப்போதெல்லாம் உறுதியாக இருந்த கால்கள் சாதாரணமாகக் கீழே விழுந்ததில் பிசகியதே அவளுக்கு வியப்பாக இருந்தது. அதுவும் சந்தித்தபோதே தன் மனதில் ஏதோ மாறுதல்களை ஏற்படுத்திவிட்ட அந்த வாலிபன் எதிரில் அமர்ந்து தன் கால்களைப் பிடித்துக் கொண்டிருப்பதும், தந்தையும், பணிப்பெண்களும் சூழ்ந்து வேடிக்கை பார்ப்பதும் அவள் அதுவரை அனுபவித்தறியாத நாணத்தையும் சங்கடத்தையும் கொடுத்திருந்தது. ஊடே கால்களிலிருந்து சரேல் சரேரென ஊடுருவிய வலி மெல்லக் குறைந்துவிட்டதை உணர்ந்தாள் அவள். மெல்ல உயர்த்தப்பட்ட அவளது பாதம் சட்டென்று அந்த வாலிபனின் மார்பில் அழுத்தமாகப் பதிந்ததை உணர்ந்தவள் படீரெனக் காலை உதறி விடுவித்துக் கொண்டாள். விடுவித்துக் கொண்ட வேகத்தில் வல்லபனின் மார்பில் பதிந்த அவளது பாதம் அவனை உதைத்துப் பின்புறமாக உருட்டித் தள்ளியது. தள்ளப்பட்ட வல்லபன் சோலகர் தலைவனை அடுத்து நின்றிருந்த அந்தப் பெண்மணியின் காலடியில் உருண்டான். இளவரசி துள்ளி எழுந்து நின்றாள்.

உருண்டு தரையில் கிடந்தபடியே அந்தப் பெண் மணியைக் கண்ட வல்லபனின் விழிகள் வெளியே தெறித்துவிடும் போல் விழித்தன. எல்லையற்ற பிரமிப்பு

அவன் முகத்தில் பரவியது. சட்டென்று எழுந்து நின்றவன் முகத்தில் பிரமிப்பைத் தொடர்ந்து வியப்பும், வியப்பைத் தொடர்ந்து எல்லையற்ற சோகமும், சோகத்தினால் கலங்கிய விழிகளில் ஆவலும் அனைத்தும் கலந்த கலவையாகத் தெரிந்தன.

நடுத்தர வயதைக் கடந்துவிட்ட அந்த மாது, தன் அகன்ற விழிகளால் அவனை வியப்புடன் நோக்கினாள். அந்தப் பார்வையும், முகமும், செதுக்கிய நாசியும், லேசாக வெண்ணிறம் ஓடிய சுருண்ட கூந்தலும், அப்படியே அச்சு அசலாகத் தன் உடன்பிறந்தவள், செங்கமலச் செல்வியைப் போலவே இருப்பதை உணர்ந்தான் வல்லபன்.

# 19. எதிர்பாராதது

**கா**லத்துக்கும் மனிதவாழ்வுக்கும் உள்ள உறவு சற்று விசித்திரமானதுதான். உறவையும் பிரிவையும் காலம் கொண்டு வருகிறது. இதுவரை அது கொண்டுவந்தவற்றை யாரும் தடுக்கவும் இயலவில்லை. இனி கொண்டுவரப் போகிறவற்றை யாரும் மறுக்கவும் இயலாது. காலம் கொண்டு சென்றவற்றை மீண்டும் சிந்தனையில் மட்டுமே காணமுடிகிறது என்று மனிதஉறவுகளை எண்ணி உருகிப் போய் விவரிக்கிறது ஒரு பழந்தமிழ்ப்பாடல்.

வல்லபனின் நிலை அந்தப் பாடல் கூறும் நிலையில் தான் இருந்தது. எதிரே நிற்பது யார் என்பது கண நேரத்தில் அவனுக்குப் புரிந்துவிட்டது. சில தினங்கள் முன்பாக எதிர்பாராது செல்வியைக் கண்டதும், அவள் தன் உடன் பிறந்தவள்தான் என்பதை அறிந்து மகிழ்ந்ததும், பின் திடீரென மீண்டும் அவளைப் பிரிந்ததும், இப்போது எதிர்பாராது தன் அன்னையை எதிர்பாராத இடத்தில் கண்டதும் அவனைத் திக்குமுக் காடத்தான் செய்து விட்டது. தன்னை யாரென்று புரிய வைக்க வேண்டிய கடமையும் புரிந்ததால் சற்று

நிதானித்துக் கொண்டவன் சோலகர் தலைவனையும், அருகே நின்ற தன் அன்னையையும் ஏறெடுத்து நோக்கினான்.

அந்தப் பெண்மணியும் சோலகர் தலைவனும் வல்லபனின் பிரமிப்பையும், அவன் முகத்தில் கவிந்த சோகத்தையும் கவனிக்கவே செய்தனர். சோலகர் தலைவன் சுந்தரனின் கரத்திலிருந்த சோழ மன்னனின் ஓலை சுருக்கமாக இருந்தாலும் ஓலையைக் கொண்டு வருபவன் நம்மைச் சேர்ந்தவன் என்றும், விவரங்களை அவன் கூறுவான் என்றும், இயன்ற அளவு படைகளைச் சித்தப்படுத்துமாறும், மீண்டும் செய்தியனுப்புவதாகவும் கூறியிருந்தது. ஆனால் தன் மகளுடன் உள்ளே வந்து அவளுடன் விழுந்து உருண்டு, அவளுக்கு சிகிச்சையும் அளித்து, அவளைத் துள்ளியெழ வைத்துவிட்டவன் அத்தனை சோகத்துடன் நின்றதன் காரணம் புரியாத தால் அவனும் சற்று விழிக்கவே செய்தான்.

இருவரையும் நோக்கிக் கைகளைக் கூப்பி வணங்கிய வல்லபன் "தலைவரே, தாயே, சற்று இப்படி வந்து அமருங்கள்" என்று இருவரையும் இளவரசியின் மஞ்சத்தில் அமர வேண்டினான். ஏதும் புரியா விட்டாலும் அவன் குரலின் தொனி இருவரையும் உருக்கியதால், தலைவன் சென்று அமர்ந்துகொண்டு "சகோதரி, இவன் போக்கு விசித்திரமாகத்தான் இருக்கிறது. இப்படி வா, என்ன சொல்கிறான் என்பதைக் கேட்போம்" என்றான். அந்தப் பெண்மணியும் வல்ல பனைக் கூர்ந்து கவனித்தபடியே சென்று அமர்ந்தாள்.

சற்றுத் தள்ளி நின்றிருந்த இளவரசியைச் சுட்டிக் காட்டிய வல்லபன் "தலைவரே, உங்கள் இளவரசி திடீரென உங்களைப் பிரிந்து சென்று விட்டால், அவர்களைப் பிறகு காணவே இயலாவிட்டால் என்ன செய்வீர்கள்?" என்றான்.

தலைவன் முகம் ஒருகணம் ஸ்தம்பித்தது. விழிகளில் உஷ்ணம் ஏறியது. கரம் அந்தப் பட்டையான வாளின் பிடியில் சென்று அமர்ந்தது. அவன் பெருவிழிகள் வல்லபனையும் பின் தன் சகோதரியையும் ஏறிட்டது. பின்னர் அந்த விழிகளில் எல்லையற்ற சோகம் கவிந்தது. "என்ன கேள்வியிது? என்னால் எண்ணிப் பார்க்க இயல வில்லை. உயிர் உள்ளவரை அவளைத் தேடிக் கண்டு பிடிக்க முயல்வேன். எதற்காக இப்படிக் கேட்கிறாய்?"

"அதே போல் பெற்ற மகளையும் மகனையும் இழந்தவர்களைக் கண்டால் என்ன செய்வீர்கள்?"

"என்னால் இயன்றதை எல்லாம் செய்வேன். அவர் களை ஒன்று சேர்க்க உதவி செய்வேன்...ஆனால் போர் களினால் ஏற்படும் பிரிவாக இருந்தால் அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்"

தலைவனையும் அருகில் மௌனமாக அமர்ந்திருந் தவளையும் ஒருமுறை உற்று நோக்கிய வல்லபன் மீண்டும் கேட்டான் "இதோ அமர்ந்திருக்கும் உங்கள் சகோதரி உண்மையில் உங்கள் உடன் பிறந்தவரா?"

சோலகர் தலைவன் முகத்தில் குழப்பம் படர்ந்தது "உடன்பிறந்தவள் என்ற சொல்லுக்கும் மேலானவள். காட்டு விலங்குகளாக நடமாடிய எங்களை மனிதர்களாக மாற்றியவள். எங்கள் இனத்துக்குத் தெய்வம். ஆனால்... என் உடன்பிறந்தவள் என்று கூறக்கூடிய தகுதி எனக்கில்லைத்தான்...ஆனால்..."

"இவர்களும் பெற்ற மகனையும் மகளையும் இழந்து வாடுபவர் என்பது தெரியுமா உங்களுக்கு? சதிகாரர் களால் கட்டிய கணவரையும் இழந்து தவிப்பவர் என்பது தெரியுமா உங்களுக்கு?"

சோலகர் தலைவன் திகைத்தான். அந்த மாதரசியின் விழிகள் விவரிக்க இயலாத உணர்ச்சிகளால் நிரம்பின. விழிகளின் ஓரங்களில் இரு முத்துக்கள் உருவாயின.

அவள் கலக்கத்தைக் கண்ட சோலகர் தலைவன் முகத்தில் மீண்டும் அனல் வீசத் தொடங்கியது.

சோலகர் தலைவன் சுந்தரனின் முகத்திலிருந்த சுந்தரம் மறைந்து உக்கிரம் படர்ந்தது. அகன்ற அவனது வாள் சரேலென்று வெளியே வந்து வல்லபனை நோக்கி நீண்டது "வாலிபனே, என் மகளை இத்தனை விரைவில் குணமாக்கினாய் என்பதால் பிழைத்தாய். என் சகோதரியைக் கண்கலங்க வைக்க உனக்கு என்ன துணிச்சல்? உண்மையைச் சொல். யார் நீ?"

வல்லபன் பதிலேதும் கூறவில்லை. இருவரையும் ஏறிட்டவனின் தலை கவிழ்ந்தது.

சோலகர் தலைவன் மீண்டும் இரைந்தான் "சொல். வாலிபனே, நீ யாரென்பதைச் சொல்"

வல்லபனின் தலை கவிழ்ந்தே கிடந்தது. சொற்கள் மெல்ல உதிர்ந்தன "நான் சோழ மன்னர் பணியிலிருக்கும் வீர ராஜேந்திர வானவன் பல்லவாதிராயனின் வளர்ப்பு மகன். பெயர் ஸ்ரீ வல்லபன். தான் பெற்ற மகனாகவே என்னைச் சீராட்டி வளர்த்த திருவையாற்று செங்கமல வல்லி என் தாய். தென்திசைத் தண்டநாயகர் உத்தம சோழ மூவேந்த விழுப்பரையர் என் பெரிய தந்தையார். முல்லை நாட்டு இளங்கோகுடி வரகுணவல்லி என் பெரிய தாயார்..."

வல்லபன் நிமிர்ந்து அந்தப் பெண்மணியைத் துயரம் வழிந்த விழிகளுடன் நோக்கினான்.

அந்த மாதரசியிடமிருந்து ஒரு விம்மல் வெடித்தது. அவளது அகன்ற விழிகளில் கண்ணீர் அருவியாகக் கொட்டத் தொடங்கியது.

"சோழ மன்னரின் சிறிய தந்தையார் மகேந்திர தேவர் தொடங்கி வைத்த கொற்கைச் சோழபாண்டிய வம்சத்தின் இளவல் வீர பாண்டியத் தேவர் எனது தந்தை... கணவரையும் பெற்ற மகனையும், மகளையும்

இழந்தே போய்விட்டோம் என்று உலகையே வெறுத்து, உங்களுக்குச் சகோதரியாக வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த செண்பகவல்லி என்னைப் பெற்ற தாய்...”

அப்படியே கவிழ்ந்த வல்லபனின் தலை செண்பக வல்லியின் மடியில் புதைந்தது. அவள் அப்படியே குனிந்து அவன் முதுகில் நீர் அருவியாகக் கொட்டிய விழிகளைப் பதித்தாள். “வல்லபா... வல்லபா...” என்று அவன் பெயரைத் தவிர வேறு சொற்கள் ஏதும் அவளிட மிருந்து வரவில்லை.

சோலகர் தலைவன் சுந்தரன் விக்கித்துப் போய் நின்றிருந்தான். சுற்றிலும் நின்றிருந்த பணிப் பெண்கள் அடித்து வைத்த சிலையாகவே நின்றிருந்தனர்.

சற்றுத் தள்ளி நின்றிருந்த சோலக இளவரசி, வல்லபனின் முதுகுப்புறம் குலுங்குவதைக் கண்டாள். மனம் பாகாய் உருக, மெல்ல அவர்களை நெருங்கி, செண்பகவல்லியின் பக்கத்தில் அமர்ந்து அவள் தோளைப் பற்றி மெல்ல நிமிர்த்தினாள். விழிகளைக் கரங்களால் துடைத்தாள்.

வல்லபனின் தலை நிமிர்ந்து, விழிகள் செண்பக வல்லியையும் அருகே அமர்ந்திருந்த குந்தவியையும் நோக்கின.

மெல்ல அவன் முகம் தெளிந்து முறுவலொன்றும் நெளிந்தது.

“அம்மா, எனக்குத் தமக்கையொருத்தியும் இருந்தாளல்லவா?” என்றான்.

அவனை உற்றுப் பார்த்தபடியேயிருந்த அவன் அன்னையின் முகத்தில் எல்லையற்ற துயரம் படர்ந்தது..

“ஆம் மகனே, இருந்தாள். சிவசைலர் ஆலயத்தில் என்னைத் துரத்திய ஈழத்தவர் அவளைக் குறுவாளெறிந்து கொன்றுவிட்டனர். நானும் மடிந்திருப்பேன். முதுகில்

பாய்ந்த குறுவாளுடன் கானகத்தினுள் ஓடிய என்னை, சேரலாதரும் உடன் வந்த இந்த சுந்தர சோலகனும்தான் வந்து காப்பாற்றினர். என்னையே மாய்த்துக் கொள்ள முயன்றவளையும் இருமுறை தடுத்துவிட்டனர்”

வல்லபனின் முறுவல் விரிந்தது “அம்மா, உன் மகள் இறக்கவில்லை. உயிரோடு தான் இருக்கிறாள்”

செண்பகவல்லியின் விழிகள் விரிந்தன. திகைப்பில் திக்குமுக்காடியவளின் குரல் நடுக்கத்துடன், ஆனால் ஆவலுடன் ஒலித்தது “உண்மையாகவா? நீ அவளைக் கண்டாயா? எங்கிருக்கிறாள்?”

“ஆம், கண்டேன். ஆறு தினங்களுக்கு முன், நட்ட நடுநிசிநேரத்தில், பிரளயமாக வர்ஷித்த மழையில், நாங்கள் முல்லைநாட்டுக்கு வரும் வழியில், சாலை யோரத்து மரத்தினடியில் வனமோகினி போல் நின்றிருந் தாள். அப்போது அவள்தான் என் தமக்கையென்பது தெரியாது. என் ஜாதக விசேஷம் மோகினிகளையும், யட்சிணிகளையும் போகிற வழியில் சந்திக்கிறேன். பின்னர் அவை உறவாகிவிடுகின்றன” என்றான் வல்லபன் இளவரசியைப் பார்த்தபடி.

அதுவரை எங்கிருந்தது என்று அறியாத நாணம் வந்து குந்தவியின் முகத்தில் அப்பிக் கொண்டதைச் செண்பக வல்லி கவனிக்கவில்லை.

“நடுநிசியில், மழையில், சாலையோரத்திலா, என்ன சொல்கிறாய் வல்லபா? அவள் அச்சப்படவில்லையா?”

வல்லபன் நகைத்தான், “அச்சமா, நம் செல்விக்கா? அச்சம் என்று ஒன்று இருந்தால் அது அவளைக் கண்டு அச்சப்படும். சிவசைலர் ஆலயத்து மண்டபத்தில் அவளைக் கொல்லக் குறுவாளெறிந்தான் ஒரு ஈழத்தவன் என்றாயல்லவா? அந்தக் குறுவாள் குறி தவறியதால் மீண்டும் முயன்றான் அவன். ஆனால் இயலவில்லை. சோழர்படைத்தலைவர் வீரர்களுடன் அங்கு வந்தார்.

அந்த ஈழத்து வீரனது கரம் வெட்டப் பட்டது. பின்னரே அவன் உயிரற்று விழுந்தான்”

“சோழர் படைத்தலைவரா?”

“ஆம். கொற்கையில் வீரபாண்டியத் தேவருக்கு அபாயம் நேரிட்டதை சோழர் படைத்தலைவர்களும் அறிந்தார்கள். விழுப்பரையர் என்னைப் பாதுகாத்துத் தன் சகோதரியின் மகனாக சோழ நாட்டுக்கு அனுப்பினார். இன்னும் அவரைப் பெரிய தந்தையென்று அழைக்காமல் மாமன் என்று அழைத்துக்கொண்டிருக் கிறேன். அரையன் ராஜராஜன் திருவாலீஸ்வரத்தில் இருந்து விரைந்து, வீரர்களுடன் வந்து செல்வியைக் காத்தது மட்டுமல்ல, ஆலயத்தினருகே ஈழ வீரர்களை ஒழித்தபின் உன்னைத் தேடிக் கானகத்தினுள் வந்தார். கிடைக்கவில்லை. பின் செல்வியைத் தம்முடன் அழைத்துச் சென்று சூளாமணி விகாரத்தில் கல்வியும், கண்ணாகனாரின் பாடசாலையில் தனுர்வேதமும், போர்ப்பயிற்சியும் அளித்துத் தன் மகளாகவே ஸ்வீகரித்துக் கொண்டார்”

அவன் அன்னையும் குந்தவியும் மட்டுமின்றி, சோலகர் தலைவன் சுந்தரனும் சுற்றி நின்ற பணிப்பெண்களும்கூட விழிகளையும் இமைக்க மறந்து வல்லபன் கூறியவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

“சோழநாட்டில் மட்டுமல்ல, வடக்கே சாளுக்கிய கலிங்க நாடுகளிலும் விக்கிரமச் சோழிய வரையன் அரையன் ராஜராஜரின் மகளாகத்தான் கருதுகிறார்கள் செல்வியை. படைத்தலைவரின் கங்கைப் படையெடுப்பே அவளுக்கு பயிற்சிக்களமானது. அவள் வாளின் வேகத்துக்கு ஈடுகொடுக்க இயலாமல் சாளுக்கிய இளவல் விஷ்ணுவர்த்தன விஜயாதித்தன் புறமுதுகிட்டு ஓடிப் போனான். ஒட்டரநாட்டு இந்திர தத்தனும், லாடநாட்டு ரணசூரனும் அவள் வில்லுக்குப் பதில் கூற முடியாமல் சரிந்தார்கள். வடநாட்டுப் படையெடுப்பில் அவள் பங்கு

முக்கியமாகப் பேசப்படுகிறது. அவள் வில்லிலிருந்து கணைகள் பறக்கும் வேகத்தையும், அவள் கரங்களின் லாகவத்தையும் பார்க்க வேண்டும் அம்மா"

செண்பகவல்லியின் விழிகளில் ஈரம் படர்ந்தது "ஆலயத்து மண்டபத்தில் இறக்கிவிடும்போது அழுதபடி என் கழுத்தைக் கட்டிக்கொண்ட அந்தக் கரங்களை நான் பிறகு பார்க்கவேயில்லையே வல்லபா" என்றாள் ஏக்கம் தொனிக்க.

"விரைவில் பார்க்கப் போகிறாய் அம்மா. இருதினங்களுக்கு முன் சேரலாதரை அந்த ஈழத்து மானாபரணன் சிறையெடுத்து விழிஞத்துக் கோட்டையில் வைத்திருக்கிறான். சேரலாதரைப் பாதுகாக்க சோழ மன்னர் உன் மகளைத்தான் அனுப்பி வைத்திருக்கிறார்" என்றவன் சோலகர் தலைவனை நோக்கித் திரும்பினான்.

சோலகர் தலைவனை வல்லபனின் வார்த்தைகள் நனவுலகத்துக்கு இழுத்து வந்தது. சிலிர்த்துக் கொண்டு எழுந்தான் அவன். "என்ன சொல்கிறாய்? சேரலாதர் சிறையெடுக்கப்பட்டாரா? விழிஞத்தின் கோட்டையிலா?" என்றவன் வேகத்துடன் வெளியே செல்ல அடியெடுத்தான். அதே வேகத்தில் இளவரசி குந்தவியும் எழுந்தாள். இருவர் விழிகளிலும் அனல் பறந்து கொண்டிருந்தது.

வல்லபனின் குரல் தடுத்தது "தலைவரே, சற்றுப் பொறுங்கள். உள்ள நிலையைச் சரியாகப் புரிந்து கொள்ளுங்கள். சேரநாட்டின் சிற்றரசர்கள் இணைந்திருக்கிறார்கள். வீரகேரளன் மலைக்கணவாயில் பாசறை அமைத்திருக்கிறான். சுந்தரபாண்டியன் முல்லை நாட்டைத் தாக்கத் தயாராகப் படைகளைத் தென் எல்லையில் குவித்திருக்கிறான். வடக்கிலிருந்து காழிவர்மனும் வந்து இவர்களுடன் கலந்துகொள்ளப் போகிறான். ஈழத்து மானாபரணனின் போர்க்கலங்கள் விழிஞத்தில் காத்திருக்கின்றன. இவர்களைக் கடந்து விழிஞத்திலிருக்கும் சேரலாதரை மீட்க இயலுமா உங்களால்?"

சோலக சுந்தரன் அப்படியே நின்றான். அவன் முகத்தில் திகைப்பு பரவிக் கிடந்தது. இளவரசியின் அழகிய முகம் சிவந்துகிடந்தது.

வல்லபன் தொடர்ந்தான் "அது மட்டுமல்ல தலைவரே, சேரலாதரின் இளவலையும் மகளையும் கொல்வதற்கு ஈழத்து விக்கிரமபாண்டு வீரர்களுடன் சென்றிருக்கிறான். போருக்கு முன்னால் அவர்களையும் மீட்கவேண்டும்"

இரண்டொரு கணங்கள் அவர்கள் நிதானத்துக்கு வர அவகாசமளித்த வல்லபன் "தலைவரே, சோழநாட்டிலும் அதிக வீரர்கள் தற்போது இல்லை. எனவேதான் என்னை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார் சோழ மன்னர்"

அடுத்து வல்லபன் விவரித்த திட்டத்தைக் கேட்கக் கேட்க, சோலகர் தலைவனுக்குத் தன் மீது பெரும் பொறுப்பு சுமத்தப்பட்டிருக்கிறது என்பதும், கானகத்துச் சோலகர் இனத் தலைவனான தனக்கும் சோழர் சரித்திரத்தில் ஓர் இடம் கிடைக்கப் போகிறது என்பதும் புரிந்தது.

# 20. சட்டமும் திட்டமும்

**அ**திகாலைப் பொழுதில் அந்த சோலகரின் மலைக் கிராமம் அமளி துமளிப் பட்டுக் கொண்டிருந்தது. இரவோடிரவாக மற்ற சோலகர் கிராமங்களுக்குச் செய்தியனுப்பப்பட்டு அத்தனை சோலக வீரர்களும் சுந்தர சோலகனின் இல்லத்தின் முன்பாகக் குவிந்திருந் தனர். சேரலாதர் சிறைப்பட்டிருப்பதும், சோழச் சக்கர வர்த்தியின் உதவியோடு ஈழத்தவரையும், சேரச் சிற்றரசு களையும் எதிர்க்கப் போவதும் சோலக வீரர்களிடையே துரிதமாகப் பரவி விட்டிருந்ததால், அணி வகுத்து நின்று பயிற்சிகளைத் தொடங்கிவிட்ட அத்தனை வீரர்கள் முகங்களிலும் ஒரு வேகமும் ஆவேசமும் விரவிக்கிடந்தது. வல்லபன் கூறியிருந்தபடி சோலக மலைக்கிராமங் களிலிருந்து இருநூற்றுக்கும் மேற்பட்ட மரச் சிற்பிகளும்

வந்து சோலகர் தலைவனின் இல்லத்தின் பின்னால் மரங்கள் சூழ்ந்திருந்த பகுதியில் குழுமியிருந்தனர். எளிதில் வடிவமைக்கூடிய சஸ்திர வகைப் பொறிகளான வளைவிற்பொறி, கல்லுமிழ்கவண், இடங்கணிப்பொறி களை வல்லபன் விளக்கியபடி வடிவமைக்கும் பணியில் வேகத்துடன் ஈடுபட்ட மரச்சிற்பிகளின் உளிகளும், சுத்தியல்களும் எழுப்பிய ஒலிகள் பலமாகக் கேட்கத் துவங்கியிருந்தன. இடங்கணிப் பொறிகளுக்கு வேண்டிய கல்லிடு கூடைகளைச் செய்ய, தேர்ந்த கோங்கு மரங் களையும், இளம் மூங்கில்களையும் வெட்டிக் கொண்டு வந்த வீரர்கள் மரச் சிற்பிகள் கூறிய வடிவங்களில் அவற்றை வெட்டிப் பதனிட்டுக் கொடுத்துக் கொண் டிருந்தனர். மற்றொரு பக்கத்தில் சிற்பிகளின் உதவி யாளர்கள் பொறிகளுக்கு வேண்டிய நாண்களாகப் பயன்படுத்தும் கயிறுகளைத் திரித்தும், அவற்றை வலுப் படுத்தக் கானகத்திலிருந்த ஸர்ப்பகந்தியின் வேர்களை அரைத்த நீரில் நனைத்து நிழலில் உலர்த்திக் கொண்டும் இருந்தனர்.

சோலக வீரர்களின் வேகத்தையும், அவர்கள் புரிந்து கொண்டு வடிவமைக்கும் நேர்த்தியையும் கண்டு வியந்தபடியே அவர்களிடையே சுற்றிவந்த வல்லபனைக் காண வெகுநேரமாகக் காத்திருந்தான் ஒரு சோலகன். மரச்சிற்பிகள் கூட்டத்திலிருந்து வெளியே வந்தவனை அணுகி வணங்கிய அந்த சோலக வீரன் சற்று உயரம் குறைவாகவே தெரிந்தான். சோலகர்களுக்கே உரிய செப்பாலடித்த நிறத்துடன், திடமான தேகத்துடன், திண்மையான தோள்களுடன் நின்றவனை ஏறெடுத்த வல்லபனை வணங்கியவன் "தலைவரே, என் பெயர் முத்துவன். சோலகர் யானைகளைப் பழக்குபவன். தாங்கள் என்னுடன் சற்று வரவேண்டும்" என்றான்.

"எங்கு?"

"இதோ அருகில்தான். வாருங்கள்" என்று நடந்த வனைப் பின்தொடர்ந்த வல்லபன் அரைக்காத தூரம்

வந்தபின் முத்துவன் காட்டிய இடத்தைக் கண்டதும் பிரமித்தான்.

முத்துவன் காட்டிய இடத்தில் பரந்த புல்வெளி யொன்று நீண்டு விரிந்து கிடந்தது. மூன்றடிக்குக் குறையாத உயரத்தில் வளர்ந்திருந்த பசேலென்ற புற்களின் இடையே சிறு மலர்ச்செடிகள் வண்ண வண்ண மலர்களுடன் காற்றில் தலையசைத்து வல்ல பனை வரவேற்றன. சுற்றிலும் மரக்கூட்டங்கள் வளைத்துக் கிடக்க, தூரத்தில் உயர்ந்து எழுந்த மலை முகடுகளைச் சுற்றி மேகக் கூட்டங்கள் மிதந்து கொண்டிருந்தன. புல்வெளியின் ஓரத்தில் கூட்டமாக நின்ற மான்கள் தலையை உயர்த்தி, வருபவர்களைப் பார்த்து மிரண்டு நின்றன. அடுத்த கணம் ஜிவ்வென்று எழும்பிப் பாய்ந்து கானகத்தினுள் மறைந்தன. விதவிதமான பட்சிகளின் கூக்குரல்கள் ஓயாத சங்கீதமாய்க் கேட்டுக் கொண்டிருந்தன. எங்கோ அருவியொன்று பலத்த சத்தத்துடன் விழுந்து கொண்டிருக்கும் ஒலி செவிகளில் விழுந்தது.

அந்தப் புல்வெளியில் மான்கள் நின்ற இடத்தில் வெட்டப்பட்ட கானகத்து மரங்கள் பெரும் உயரத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அந்த மரங்களுக்கு வலது புறம் தெரிந்த மரக்கூட்டங்களில் யானைகளின் கூட்டம் ஒன்று அவ்வப்போது பிளிறல்களை வெளியிட்டபடி திரிந்து கொண்டிருந்தது.

அந்த மலைப்பகுதியில் இயற்கை கடைவிரித்திருந்த அழகை அள்ளிப்பருகியபடியே பிரமித்து நின்ற வல்லபனின் ரசிப்பில் அந்த முத்துவனின் குரல் குறுக்கிட்டது.

“வல்லபரே, தொடங்கலாமா?” என்றான் அந்த சோலக முத்துவன்.

இயற்கை அளித்த பிரமிப்பிலிருந்து விடுபட்ட வல்லபன் விழித்தான் “தொடங்கப் போகிறாயா?

இங்கா? என்ன கூறுகிறாய் முத்துவா?" என்றான் வியப்புடன்.

பதிலுக்குச் சத்தம் வராமல் பற்களைக் காட்டிச் சிரித்த முத்துவன், கைகளை வாயருகே குவித்து ஒலியொன்றை எழுப்பினான். ஏறக்குறைய யானையின் பிளிறலாகவே கேட்ட அந்த ஒலி உடனே எதிரொலித்தது. புல்வெளியின் மறுபுறம் மரக்கூட்டங்களிடையேயிருந்து அந்த களிறுகள் பதிலுக்குக் குரல் கொடுத்தபடியே பூமி அதிர வெளியே வந்தன. வல்லபனின் எண்ணிக்கையில் அறுபதைத் தாண்டிய அந்த களிறுகள் புல்வெளியின் மறுபுறம் ஒன்றோடொன்று மோதியபடி நின்று மீண்டும் அந்தக் கானகமே அதிரும்படி கூட்டமாகப் பிளிறின.

சோலக முத்துவனின் வலது கரம் உயர்ந்து ஏதோ சமிக்ஞை காட்டியது. அடுத்து நேர்ந்தது பிரளயம்.

திமுதிமுவென அந்தக் களிறுகள் அடுக்கி வைக்கப் பட்டிருந்த அடிமரங்களை நோக்கி ஓடின. தங்கள் துதிக்கைகளில் கனத்த அடிமரங்களை ஏந்தியபடி மீண்டும் பழைய இடத்திலேயே வந்து தேர்ந்த வீரர் களைப் போல் அணிவகுத்து நின்றன. சோலக முத்துவனின் கரம் மீண்டும் உயர்ந்தது. அடுத்து, தங்கள் துதிக்கைகளிலிருந்த அடி மரங்களைச் சுழற்றி வானில் உயர்த்தி, தரையில் பலமாக அறைந்த களிறுகள் தடதடவெனப் பூமி அதிர, மரங்களைச் சுழற்றியபடி அதிவேகமாக வல்லபன் நின்ற இடத்தை நோக்கி வந்தன. இடையிடையே மீண்டும் அடி மரங்களைத் தூக்கித் தரையில் அறைந்தன. அந்த மலைப்பகுதியே அதிர்ந்தது.

வல்லபனையும், முத்துவனையும் நோக்கி வேகமாக வந்த களிறுகள் பத்தடி தூரத்தில் வந்து சட்டென்று நின்று பலமாகப் பிளிறலொன்றை வெளியிட்டன.

வல்லபனை நோக்கித் திரும்பிய முத்துவன் "வல்லபரே, இது ஆரம்பப் பயிற்சிதான். சோழர்களின் போர்க்

களிறுகளின் பயிற்சிக்கு இவை ஈடாகாது. ஆனால் நான் அறிந்தவரையில் ஏதோ பயிற்சிகளை அளித்திருக்கிறேன். இன்னும் சிலவற்றையும் காட்டுகிறேன். ஏதேனும் குறைகளிருந்தால் கூறுங்கள். இரு தினங்களுக்குள் பழக்கி விடலாம்" என்றான் பணிவு நிரம்பிய குரலில்.

அந்தக் களிறுகள் வந்த பாதையில் வீரர்களோ, போர் ரதங்களோ இருந்தால் அவை என்ன கதியாகியிருக்கும் என்பது புரிந்தது வல்லபனுக்கு.

அவன் பதில் கூறுமுன் அந்த சோலக முத்துவனின் விழிகள் வல்லபனைத் தாண்டி அவர்கள் வந்த பாதையில் பதிந்தன. அடுத்து அவன் விழிகளில் விஷமம் பரவியது. அவன் குரலிலும் விஷமம் தொனித்தது.

"வல்லபரே, என் களிறுகளின் பயிற்சிகளைப் பிறகு காட்டுகிறேன். இப்போது தங்களுக்குப் பயிற்சியளிக்க வேறொருவர் வந்து கொண்டிருக்கிறார்" என்றவன் வல்லபனின் பதிலுக்குக் காத்திராமல் தன் களிறுகளை நோக்கி வேகமாக நடந்து அவற்றைக் கடந்து மரக்கூட்டங்களை நோக்கி நடந்தான். களிறுகளும் அவனைத் தொடர்ந்தன.

ஏதும் புரியாமல் திரும்பிய வல்லபன் மீண்டும் பிரமித்தான். அந்தப்புல்வெளியின் நடுவே நீண்ட கொடிவழியில் துள்ளலான நடையுடன் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள் குந்தவி. வழக்கமான மான்தோலாலான ஆடையோ, இடையில் தரிக்கும் வாளோ காணப்பட வில்லை. ஆகாய நீல நிறத்திலான பட்டாடையொன்றை சோலகப் பெண்களைப் போல் உடலைச் சுற்றி அணிந்திருந்தாள் அவள்.

திறந்து கிடந்த தோள்களும், தோளை அடுத்து இறுகப் பிடித்திருந்த நாகத்தின் வடிவிலான வங்கியும், வழவழத்து இறங்கிய கரங்களும், கரங்களில் சற்றுக் கனமான வளைகளும், அந்தப் பட்டாடையின் நீல நிறம் எடுத்துக் காட்டிய அவளது சந்தன நிறமும், குறுகி மீண்டும் விரிந்த

இடையின் வளைவும் அவனை மயக்கத்திற்கு உள்ளாக்கின. கறுத்த குழல்களைப் பின்புறம் முடிச்சிட்டு, அதில் மலர்ச்சரமொன்றையும் சுற்றி விட்டிருந்தாள். துள்ளிநடந்த அவளது நடை சற்றுமுன் அவன் பார்த்த மான்களை நினைவூட்டியது. அவள் கழுத்திலிருந்து அப்படியும் இப்படியும் அசைந்த மாணிக்கச் சரம் அவன் மூச்சில் உஷ்ணத்தை ஏற்றியது.

சுற்றிலும் அடர்ந்துகிடந்த மரக்கூட்டங்களுக்கிடையே, பரந்து விரிந்த புல்வெளியில் நீலப் பட்டாடை உடுத்தி அவள் நடந்து வருவதைப் பார்த்தவனுக்கு ஏன் அழகிய பெண்களின் நடையை மயில்களுடன் ஒப்பிடுகிறார்கள் என்பது புரிந்தது.

அவன் பிரமித்து நிற்பதைக் கவனித்தபடியே வந்த குந்தவி, தூரத்தில் திரும்பிக் கொண்டிருந்த யானைக் கூட்டத்தையும், ஊடே வேகமாகச் சென்று கொண் டிருந்த பாகனையும் கண்டாள். அவளது அழகிய விழிகளில் கேள்விக்குறியொன்று தோன்றியது.

வல்லபனை நெருங்கியவள் "முத்துவன் ஏன் அப்படி யானைகளுடன் ஓடுகிறான்?" என்றாள்.

குந்தவியை நோக்கியவன் விழிகளில் விஷமம் தெரிந்தது. "பாவம். உன்னைக் கண்டுதான் பயந்து ஓடுகிறான் போலிருக்கிறது" என்றான் குரலிலும் விஷமம் தொனிக்க.

குந்தவியின் விழிகள் விரிந்தன "பயமா? முத்து வனுக்கா? அவன் இனத்தின் பெயரும் அவன் பெயரே தான். *முத்துவர் இனம் பயமறியா இனம் என்பார்கள் இங்கு. யானைகளைப் பழக்குவதிலும் வேட்டையாடு வதிலும் அவர்களுக்கு இணை யாரும் இந்தப் பகுதியில்

---

**★ முத்துவர் இனம் கேரளத்தின் மிகப்பழைமையான மலைவாழ் பழங்குடியினர் இனம். வேட்டையாடுவதும் மிளகு பயிரிடுவதும் இவர்களின் முக்கியத் தொழில்–திருவாங்கூர் ஆர்க்கியாலஜிகல் சீரியல்.**

கிடையாது. என்னைக் கண்டு ஏன் அவன் அஞ்ச வேண்டும்?" என்றவள், வல்லபனின் விழிகளில் தெரிந்த விஷமத்தையும் ஆவலையும் கண்டு நிதானித்தாள்.

வல்லபனின் விழிகள் அவளை விழுங்கி விடுபவை போல் பார்த்தன. இரு கணங்களில் அவன் விழிகளில் தெரிந்த விஷமம் மறைந்து ஏதோ சிந்தனை படர்ந்தது.

அவன் விழிகள் தன்மீது பதிந்து உலவுவதையும், அவற்றில் தெரிந்த பிரமிப்பையும் கவனித்த குந்தவியின் முகம் சிவக்கத் தொடங்கியது. உள்ளே பொங்கி எழுந்த நாணமும், மகிழ்வும், திருப்தியும் அவளை நிலை கொள்ளாமல் தவிக்க வைத்தாலும், அவற்றை மறைக்க மேலுக்குக் கோபத்தை வரவழைத்துக் கொண்ட குந்தவி மீண்டும் வல்லபனை நோக்கிச் சற்று பலமாகவே கேட்டாள், "அந்த முத்துவன் ஏன் என்னைக் கண்டு ஓடுகிறான் என்று கேட்டேன். பதில் கூறாமல் ஏன் விழிக்கிறீர்கள்?" என்று.

"அவன் அச்சத்தில் ஓடவில்லை குந்தவி. தப்பித்து ஓடுகிறான்" வல்லபனின் பதில் நிதானமாக வந்தது.

"தப்பித்து ஓடுகிறானா?..."

"ஆம். களிறுகளுக்கு அளிக்கப்பட்ட பயிற்சிகளைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தான்... நீ வருவதைக் கண்டதும்..."

"கண்டதும்...?"

"இளவரசியார் எனக்குப் பயிற்சியளிக்க வந்து கொண்டிருக்கிறார் என்று கூறிவிட்டுக் களிறுகளை அழைத்துக் கொண்டு ஓடிவிட்டான். எனக்கு என்ன பயிற்சி அளிக்கப் போகிறாய் குந்தவி?" வல்லபனின் கேள்வியில் ஆவல் ஒலித்தது.

சோலக இளவரசியின் முகம் முழுவதுமாகச் சிவந்துபோய்க் கவிழ்ந்து தரையைப் பார்த்தது. வலது

பாதம் புல்தரையில் கோடுகளை இழுக்க, உடல் லேசாக ஒரு முறை சிலிர்த்துக் குலுங்கியது. இருகரங்களாலும் முகத்தை மூடிக்கொண்டவள் சட்டென்று திரும்பிக் கொண்டாள். வல்லபனின் கரங்கள் எழுந்து மீண்டும் அவளைத் திருப்பின. முகத்தைப் பொத்தியிருந்த கரங்களைப் பற்றி விலக்கியவன், கன்னங்களை இரு கரங்களாலும் தாங்கி நிமிர்த்தினான். அதே நேரத்தில் முகத்தைப் பொத்திய அவளது கரங்களில் ஏதோ மஞ்சள் நிறத்தில் திரிக்கப்பட்ட நூல் ஒன்று இருப்பதையும் கண்டான். அவள் கரத்திலிருந்து அந்த நூலை எடுத்தவன் "என்ன இது குந்தவி?" என்றான் சற்று வியப்புடன்.

ஒருகணம் நிதானித்துக் கொண்ட குந்தவியின் சிவந்த முகம் இன்னும் சிவந்து ஜொலித்தது. "இது எங்கள் சோலகர் இனத்தின் பழக்கம்" என்றாள் மெல்லிய குரலில்.

"என்ன பழக்கம்?"

சோலக இளவரசியின் குரல் மெலிதாக, ஆனால் தெளிவாக ஒலித்தது "சோலக இனத்தில் பெண்கள் தங்கள் விருப்பத்தைத் தெரிவிக்க மஞ்சளில் நனைக்கப் பட்ட நூலை ஆணிடம் அளிப்பார்கள். அவன் அவளது அன்பை ஏற்றுக் கொண்டால், நூலை இரண்டாகப் பிரித்து ஒருவருக்கு மற்றவர் கங்கணமாகக் கட்டிவிடு வார்கள். அதன் பிறகு எவருக்கும் அவர்களைப் பிரிக்க உரிமை கிடையாது. சோலகர் தலைவர், என் தந்தை அவர்களுக்கு மணம் செய்து வைப்பார். இது எங்கள் சோலகர் இனத்தின் பழக்கம்"

வல்லபனின் வலது கரம் அந்த நூலை எடுத்து ஒருமுறை உயர்த்தியது. முகத்தில் சிந்தனை படர, அதை உற்றுப் பார்த்தவன் மீண்டும் அவள் கரத்தைப் பிரித்து நூலை அதிலேயே வைத்து அழுத்தி மூடினான். அடுத்து அவனிடமிருந்து வந்த பதில் சோலக இளவரசியைத் திகைக்க வைத்தது.

"குந்தவி, இந்தக் கங்கணத்தைக் கட்டிக் கொள்ள எனக்குப் பூரண சம்மதம் தான். ஆனால் இப்போது நான் இதைக் கட்டப் போவதில்லை" என்றவன், அவள் கரத்தைப் பற்றியபடியே மெல்ல புல்வெளியில் நடந்தான். களிறுகள் எடுத்துச் சுழற்ற அடுக்கப்பட்டிருந்த அடி மரங்களை நோக்கி நடந்தவன் அதிலொன்றின்மீது அமர்ந்து, அவளைப் பக்கத்தில் இழுத்து அமரவும் வைத்தான்.

வெட்டப்பட்ட அடிமரங்களின் மறுபுறம் மலைப்பகுதி சரேரென்று இறங்கி பள்ளத்தாக்காக ஆழத்தில் விரிந்து சென்றிருந்தது. அடர்ந்த மரங்களும், புதர்களும், பாறை களுமாகத் தெரிந்த அந்தப் பகுதியில் தூரத்தில் அருவி யொன்றும் வெள்ளிச் சரங்களை வாரிக்கொட்டுவது போல் அதிவேகத்தில் பள்ளத்தாக்கில் பாய்ந்து இறங்கிக் கொண்டிருந்தது. அருவியின் 'ஹோ' என்ற இரைச்ச லுடன் கிள்ளைகளும், மைனாக்களும், குயில்களும், பள்ளத்தின் மீது வட்டமிட்டுப் பறந்த பருந்துகளும் கிளப்பிய கதம்ப ஒலி பலமாகக் கேட்டுக் கொண டிருந்தது. தவறிப்போய் அந்தச் செங்குத்தாகச் சரிந்த பள்ளத்தாக்கில் விழுபவன் நேராக அருவி விழும் பாறைகளில் சென்று மோதிக் கொள்ள வேண்டும் என்பதும், அந்தக் கணத்திலேயே மோட்சம் கிட்டிவிடும் என்பதும் பார்த்தவுடன் புரிந்தது.

பயங்கரம் கலந்த அழகாகத் தெரிந்த அந்தப் பள்ளத் தாக்கைப் பார்த்தபடியே சற்று நேரம் இருந்த வல்லபனின் பார்வை சோலக இளவரசியை நோக்கித் திரும்பியது. அவளது முகம் கவிழ்ந்து கிடக்க, விழிகள் அருவிப் பாறைகளை வெறித்துக் கிடந்தன.

மெல்ல அவள் முகத்தை நிமிர்த்தியவன் அவள் கருவிழிகளில் தெரிந்த கேள்வியையும், இதழ்கள் சற்றுத் துடிப்பதையும் கவனித்தான்.

“குந்தவி” என்று அழைத்த அவனது குரல் நெகிழ்ந்து ஒலித்தது.

“ம்” ஒற்றை எழுத்தில் பதில் வந்தது அவளிடமிருந்து.

“நாம் சந்தித்தபோதே உன்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டேன்”

அவளது முகம் நிமிர்ந்து, விழிகள் அவன் விழிகளுடன் கலந்தன “என்ன கேட்டீர்கள்?” என்றவள் முகத்தில் சிந்தனை படர்ந்தது.

“உனது பெயரும் உன் தந்தையின் பெயரும் சோழ வம்சத்துப் பெயர்களாக இருக்கிறதே என்றேன்”

அவளது சிவந்த இதழ்கள் மலர்ந்து முறுவலித்தன. முகத்தில் மெல்ல கனவுச் சாயை படர்ந்தது. “அதற்கும் என் அன்பை ஏற்பதற்கும்...”

“தொடர்பு இருக்கிறது” என்றான் வல்லபன்.

சற்று நிதானித்த குந்தவி தொடர்ந்தாள் “என் பாட்டனார் கிருஷ்ண சோலகர் காலத்தில் சேரலா தருடனான எங்கள் தொடர்பு பலமானது. அவரது காலத்தில்தான் சோழ வம்சத்துக்கும் சேரலாதரின் வம்சத்துக்கும் மணவினைத் தொடர்பு ஏற்பட்டது. சேரநாட்டு இளவரசி சுந்தர சோழச் சக்கரவர்த்தியை மணந்து அவரது பட்டமகிஷியானாள். அப்போதிருந்து எங்கள் சோலக இனத்துக்கும் சோழர்களுக்கும் நட்பு ஏற்பட்டது”

“பிறகு?”

“சுந்தரசோழரின் தண்டநாயகர் கொடும்பாளூார் விக்கிரமகேசரியும் நெருங்கிய நண்பரானார். ஆனால் ஈழத்துப் போரில் அவர் வீரமரணமடைந்தார். அப்போது உடன் சென்றிருந்த எனது பாட்டனாரால் அருகி லிருந்தும் வந்த அபாயத்தைத் தடுக்க இயலவில்லை. காயங்களுடன் திரும்பிவந்தவர் சுந்தரசோழரைச் சென்று

சந்திக்க வெட்கி, பின்னர் சோழநாட்டுக்கே செல்ல வில்லை. ஆனால் சுந்தரசோழர் மீது வைத்த நட்பும், அபிமானமும் இறுதிவரை மாறவில்லை. அதனால்தான் தன் மகனுக்கு, என் தந்தைக்கு, சுந்தரன் என்றும், எனக்குக் குந்தவியென்றும் பெயரிட்டார். நீண்ட காலம் வாழ்ந்த அவர் சமீபத்தில்தான் மறைந்தார்"

வல்லபனின் முகத்தில் வியப்பு பரவியிருந்தது "குந்தவி, என் கதையும் ஏறக் குறைய இப்படித்தான். என் தந்தை வீரபாண்டியத் தேவரைக் காக்க முயன்று இயலாமல் போனதால், ராஜேந்திர சோழர் வெகுநாட்கள் தண்ட நாயகர் விழுப்பரையரைக் கூடச் சந்திக்க வரவில்லை. ஆனால் என்னையும், என் சகோதரியையும் காத்து, சுந்தர பாண்டியனுக்கும் ஈழத்து மானாபரணனுக்கும் எங்கள் இருப்பிடம் குறித்து எந்தச் சந்தேகமும் வராதபடிக்கு வளர்த்தார். இப்போது சோழர் படைபலம் குறைவாக இருப்பதைப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கும் அந்த இருவரும் சோழருக்கு மட்டுமல்ல, தனிப்பட எனக்கும் எதிரிகள்தான். நினைவு தெளிந்த நாள் முதல் அவர்களை அழிப்பது என் லட்சியமாயிற்று. என் கடமையும் லட்சியமும் இணைந்தே நிற்கிறது..."

இடைமறித்தது குந்தவியின் குரல் "நானும் இணைந்தே நிற்பேன். எங்கள் சேரலாதரைச் சிறைசெய்து வைத் திருக்கும் மானாபரணன் எங்களுக்கும் எதிரிதான். எங்கள் சோலக வீரர்களும் யாருக்கும் குறைந்தவர்களல்ல. உங்கள் சகோதரியைப் போல் அத்தனை போர்ப் பயிற்சியை நான் பெறவில்லை. ஆனாலும் என் வில்லுக்கும் வாளுக்கும்கூட கொஞ்சம் வேகம் உண்டு... நீங்கள் வருவதற்கு முன்பு கூட எங்கள் எல்லைக்குள் வந்த நான்கு யவனர்களைத் தனியாகவே எதிர்த்துக் கொன்றேன். ஒருவன் காயங்களுடன் தப்பிவிட்டான். அவர்களிடமிருந்து எங்கள் சேரலாதர் சோழர்களுக்கு அளித்த மாணிக்கமாலையையும் கைப்பற்றினேன். அவர்களைத் தொடர்ந்து வந்த முகுந்தன் என்பவனை,

திருநாகேச்சரத்துப் பாடசாலை மாணவனாம் அவன், அவனையும் வென்று சிறைப்பிடித்தேன். தந்தையார் அவனை எச்சரித்து அனுப்பிவிட்டார்”

வல்லபனின் விழிகள் விரிந்தன. “என்ன... என்ன கூறினாய்? சேரலாதர் சோழர்களுக்கு அளித்த... செங்கதிர் மாலையா?” எதிர்பாராமல் செவிகளில் விழுந்த செய்தி அவனை பிரமிக்க வைத்தது.

“ஆம். செங்கதிர்மாலைதான்” என்றாள் குந்தவி வெகு சாதாரணமாக.

## 21. அவனவன் புத்தி...

‘பஞ்சபூதங்களைத் தவிர மேலும் நான்கு பூதங்கள் உலகை ஆட்டிப் படைக்கின்றன. ஆறாவது பூதமான காலம் உலகின் அனைத்துப் பொருள்களின் மீதும் படர்ந்து கிடக்கிறது. பொருள்களின் தன்மையை ஆதாரமாகக் கொண்டு பழைமையை அடையச் செய்கிறது. காலம் மனிதர்களையும், சம்பவங்களையும் இணைத்து அவர்கள் புத்திக்குப் பலவற்றை அடையாளம் காட்டுகிறது என்றும், அவனவன் புத்தியே அவனவன் வாழ்க்கை’ என்றும் கூறுகிறது கர்க்க ஸம்ஹிதை என்னும் வடமொழி வேதாந்த நூல்.

குந்தவி கூறியதைக் கேட்டதும் அந்தக் காலம்தான் தன்னையும் சோலக இளவரசியையும் இணைத்து வைத்திருக்கிறது என்ற நம்பிக்கை தோன்றியது வல்லபனுக்கு. தன் உடன்பிறந்தவளை ஏமாற்றி, செங்கதிர் மாலையை அபகரித்துச் சென்ற கொங்குநாட்டு முகுந்தனை, தன் அன்புக்குரியவளாகத் துடிக்கும் சோலக இளவரசியிடம் சிக்க வைத்து, செங்கதிர்மாலையை மீட்டது தன்னையும் அவளையும் இணைத்த காலம் காட்டும் அடையாளம் என்றே நம்பினான் அவன். அந்த

இணைப்பை இனியும் தாமதப்படுத்துவது தவறு என்றும் தோன்றியது அவனுக்கு.

வல்லபனின் குரல் தெளிவாக ஒலித்தது "குந்தவி, அந்த மஞ்சள் கங்கணத்தை என்னிடம் கொடு" என்றபடி அவள் கரத்திலிருந்து அந்த நூலை எடுத்து, இரு இழை களாகப் பிரித்தவன், ஒன்றை அவள் கரத்தில் கட்டிவிட்டுத் தன் கரத்தையும் நீட்டினான்.

முகம் பூரித்துச் சிவக்க அந்த நூலை அவன் கரத்தில் கட்டிய சோலக இளவரசியின் சிவந்த கன்னங்களைத் தாங்கி, அவள் நெற்றியில் இதழ்களைப் பதித்த வல்லபன் "வா குந்தவி, இப்போதே உன் தந்தையையும், என் தாயையும் சென்று காணலாம்" என்றான்.

அவனுடன் கரத்தைப் பற்றியபடி புல்வெளியில் துள்ளிநடந்த குந்தவி சற்றுக் கழித்து வினவினாள் "என்ன அது? அந்த மாணிக்க மாலையைப் பற்றிக் கேட்டதும் அப்படித் திகைத்து நின்றீர்கள்?" என்று.

"இளவரசி, அந்த செங்கதிர்மாலை என் வாழ்வின் மாற்றத்துடன் இணைந்தே நிற்கிறது. பிரிந்துபோன என் சகோதரியைச் சந்தித்தபோதே அதைப் பற்றித்தான் பேசினோம். இப்போது நம் அன்பைப் பரிமாறிக்கொள்ள எண்ணும்போதும் அந்த செங்கதிர்மாலையே வந்து காலம் நம்மைப் பிணைத்திருப்பதை உறுதிப்படுத்துகிறது. நான் பயின்ற சாத்திரம் இது காலத்தின் அடையாளங் களில் ஒன்று என்றே கூறுகிறது. இனியும் தாமதிக்க வேண்டாம். வா, செல்வோம்"

இணைந்த கரங்களுடன் சோலகர் தலைவன் குடிலின் முன்பாக வந்து சேர்ந்த இருவரும் திகைத்தனர்.

குடிலின் முன்பாக விரிந்த திடலில் சோலக மலைக் கிராமங்களிலிருந்து வந்திருந்த அத்தனை வீரர்களும் புரவிகளில் அணிவகுத்து நின்றிருந்தனர். பளபளத்த வாட்களையும், பெரும் ஈட்டிகளையும் தாங்கி, மரப்

பட்டைகளாலான கவசங்களை அணிந்திருந்த சோலக வீரர்கள் ஈட்டிகளை உயர்த்தி, பலத்த கோஷங்களுடன் வல்லபனையும், சோலக இளவரசியையும் வரவேற்றனர்.

வீரர்களுக்கு முன்பாக நின்று ஏதோ கூறிக் கொண்டிருந்த சோலகர் தலைவன் அருகில் சோழவீரன் ஒருவன் நின்றிருந்தான். சோலகர் தலைவன் முகத்தில் இளவரசியையும் வல்லபனையும் கரங்களைப் பிணைத்தபடி வந்ததைக் கண்டு ஒருகணம் மகிழ்ச்சி பரவினாலும், அடுத்த கணம் அதில் சிந்தனையும், கவலையும் பரவியது. அவன் கரம் வல்லபனை நோக்கி நீண்டது. அதில் ஓலைக் குழலொன்றும் இருந்தது.

புலிச்சின்னம் பொறிக்கப்பட்ட அந்த ஓலைக்குழலைக் கண்டவுடன் வல்லபனின் சித்தத்தில் உணர்ச்சிகள் அலைகளாகப் பொங்கியெழுந்தன. குழலை வாங்கி விழிகளில் ஒற்றிக் கொண்டவன், கவனத்துடன் முத்திரையை உடைத்து உள்ளிருந்த ஓலைகளை எடுத்துப் பிரித்தான். ஓலைகளின் மீது ஓடிய அவன் விழிகளில் வியப்பும் பிரமிப்பும் பரவியது.

"வல்லபரே, சோழ மன்னர் எப்போது தாக்குதலைத் தொடங்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்?" சுந்தர சோலகனின் குரல் ஆவலுடன் கேட்டது.

"போர் துவங்கிவிட்டது தலைவரே. அதுவும் நமக்கு மிக அருகில்" தெளிவாக அறிவித்தான் வல்லபன்.

**கி**ருஷ்ணபட்சம் தொடங்கி நான்கு தினங்களுக்கு மேல் ஆகிவிட்டதால் எட்டு நாழிகைகளுக்குப் பிறகே உதயமான பிறைநிலவு மெல்ல நகர்ந்து மலை முகடுகளை அடைந்து பலவீனமான தன் கதிர்களை வீசி அந்த மலைப்பிராந்தியத்தை உற்றுப் பார்க்க முனைந்து கொண்டிருந்தது. பூதங்கள் உலவுவதாக நம்பப்பட்டதால் பூதத்தன்கோடு என்றும் பூதத்தன்கோட்டை என்றும் மலைக்கிராமத்து மக்களால் அழைக்கப்பட்ட அந்தப்

பகுதியைக் கண்டதும் அச்சத்தில் மேற்கொண்டு நகர இயலாத நிலவின் முகம் இன்னும் வெளுக்கத் தொடங்கியது. இரு மலைச் சிகரங்களுக்கு இடையே காட்டுக்கொடிகளும், காட்டு மூங்கில்களும், புதர் களுமாக நிறைந்து கிடந்த அந்தப் பகுதியில் சதாசர்வ காலமும் உக்கிரமாக வீசிய காற்று காட்டுமூங்கில்களுக்கு இடையே ஊடுருவி 'ஹோ...' என்று எழுப்பிய ஒலி ஏதோ பூதங்களும், அரக்கர்களும் கூச்சலிடுவதுபோலவே கேட்டுக் கொண்டிருந்தது.

அச்சமூட்டும் சூழ்நிலை நிலவிக்கிடந்த அந்த மலைப் பகுதியில் பூதங்களோ, அரக்கர்களோ உலவவில்லை. அவற்றைவிடக் குரூரமும் அரக்கத்தனமும் நிறைந்த ஈழத்து இளவலும் அவனுடன் வந்திருந்த ஈழத்து வீரர்களும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களது புரவிகள் பக்கத்து மரங்களில் கட்டப்பட்டிருந்தன. ஏதோ இரும்புக்கம்பிகளைச் சுருட்டிச்சுருட்டி வைத்தது போல் பக்கங்களில் தொங்கிய குழல்கள் சரிந்து முன்னால் வந்து விழ, கரத்தில் எப்போதும் தாங்கி யிருக்கும் மதுக் குப்பியுடன், கூடாரமொன்றின் முன்பாக நின்று இருளை ஊடுருவிப் பார்க்க முயன்று கொண்டிருந்த விக்கிரமபாண்டுவின் ராட்சத விழிகள், உள்ளே இறங்கிய மதுவாலும், சித்தத்தில் எழுந்த சினத்தாலும் அதீதமாகச் சிவந்து கிடந்தன. சுற்றியிருந்த மரத்தின் வேர்களிலும், பாறைகளிலும் புரண்டு உறங்கிக் கொண்டிருந்த தன் வீரர்களை ஒரு முறை திரும்பி நோக்கிய விக்கிரமபாண்டுவின் முகத்தில் சினம் ஏறத்தொடங்கியது. மறுபுறம் வெகுநேரமாக மௌன மாகவே நின்ற வீரர் தலைவனை நோக்கித் திரும்பியவன் "ஜகதிபாலா, நாம் இந்தக் காட்டில் இப்படி உறங்கு வதற்காகவா வந்தோம்?" என்றான் குரலில் உஷ்ணம் தொனிக்க.

ஜகதிபாலன் என்று அழைக்கப்பட்ட அந்த வீரர் தலைவன் விக்கிரமபாண்டுவின் சினத்தைக் கண்டு

அசைந்ததாகத் தெரியவில்லை. ஈழத்து இளவலைத் திரும்பிப் பாராமல், எதிரே இருளை ஊடுருவிய விழி களுடன் நின்றவன் நிதானமாகப் பதிலளித்தான் "ஈழத்து இளவல் மன்னிக்க வேண்டும். தாங்கள் அறியாததல்ல. நாம் இருதினங்களாக இந்த மலைப் பகுதியில் புதர் களையும், அடர்ந்த வனப்பகுதியையும் காட்டாறு களையும் கடந்து வந்திருக்கிறோம். மலைக்கிராமங்களில் வீரர்களுக்கு உணவும் சரிவர கிடைக்கவில்லை. நாம் வந்த பாதையும் வடிவாக இல்லாமல் நமது வீரர்களைச் சோர்ந்துவிடச் செய்திருக்கிறது. இன்னும் இருகாத தூரத்தில் இருக்கும் ஏக சக்ரநகரத்தின் கோட்டையைத் தாக்குமுன் நமது வீரர்களுக்குச் சற்று ஓய்வு கொடுக்கலா மென்பதற்காகவே அவர்களுக்கு உணவளித்ததும் உறங்க அனுமதியளித்தேன். அதுமட்டுமல்ல...".

"வேறென்ன?" விக்கிரமபாண்டுவின் குரல் உக்கிரமாக ஒலித்தது.

"இந்தப் பகுதியில் பொழுது கவிந்துவிட்டால் பூதங் களும் பைசாசங்களும் அதிகம் நடமாடுவதாகக் கூறினார் கள். எனவேதான் கருக்கல் முடிந்ததும் பயணத்தைத் தொடரலாம் என்று..."

ஜகதிபாலன் வார்த்தைகளை முடிக்கு முன்பாக மதுக் குப்பியை வாயில் கவிழ்த்துக் கொண்ட விக்கிரமபாண்டு விடமிருந்து இடிஇடியென்ற பலமான நகைப்பு எழுந்தது. எதிரில் நின்ற வீரர் தலைனை நோக்கி, கரத்தை நீட்டிச் சிரித்தவன் "ஜகதிபாலா... என்ன கூறினாய்?... பூதங்களும் பைசாசங்களுமா?... இந்தக் காட்டிலா?..." என்று மீண்டும் நகைத்தான் விக்கிரமபாண்டு.

ஜகதிபாலன் முகத்தில் விக்கிரமபாண்டுவின் நகைப்பு எந்தச் சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. அவன் விழிகள் தூரத்துக் கானகத்து இருளை ஊடுருவ முயன்று கொண் டிருந்தன. எதையோ உற்றுக் கேட்கவும் முயன்றவன் தன்

கரத்தை உயர்த்தி ஈழத்து இளவலின் நகைப்பை நிறுத்தினான்.

அதே கணத்தில் விக்கிரமபாண்டுவின் நகைப்பும் சட்டென்று நின்றது. அவன் விழிகளில் வியப்பும் திகைப்பும் தெரிந்தன.

மலைப்பகுதியின் உச்சியிலிருந்து காற்றின் 'ஹோ' என்ற ஒலி பலமாக உயர்ந்தும் தேய்ந்தும் கேட்கத் தொடங்கியது. அவர்கள் நின்றிருந்த கானகத்துப் பாதையிலிருந்து சற்றுத் தொலைவில் பெரும் பூதமொன்று 'தொம் தொம்' என்று கால்களைப் பூமியில் பதித்து நிலம் அதிர நடப்பதுபோல் கேட்டது. தொடர்ந்து பெரும் கிளைகளும், மரங்களும் மளமளவென முறிபடும் ஒலிகளும் கேட்டது.

"ஜகதிபாலா...வா என்னுடன்..." என்று அழைத்த விக்கிரமபாண்டு கூடாரத்தின் முனையில் எரிந்து கொண்டிருந்த பந்தமொன்றை எடுத்துக் கொண்டான். மற்றொரு கரத்தில் உருவிய வாளையும் எச்சரிக்கையாக உயர்த்திக் கொண்டவன், கானகத்தினுள் ஒலியெழுந்த பகுதியை நோக்கி செடிகொடிகளை விலக்கிக் கொண்டு நடக்கத் தொடங்கினான். வேறு வழியின்றி வீரர் தலைவனும் வாளை உருவிக்கொண்டு விக்கிரம பாண்டுவைத் தொடர்ந்து கானகத்தினுள் நுழைந்தான்

காட்டுச் செடிகளும், புதர்களும், மரங்களைப் பற்றிப் படர்ந்து நாலாபுறமும் தொங்கியபடி கிடந்த கொடிகளும், நகர மறுத்து வழிமறித்த அகன்ற மரங்களின் அடிப் பகுதிகளும், அந்தப்பகுதியில் சாதாரண மனிதர் நடந்து செல்வதே மிகச் சிரமம் என்பதைத் தெரிவித்தன. காலடியில் வழவழத்து ஓடிய ஸர்ப்பங்களும், கவ்விப் பிடித்த ஏதோ விஷஜந்துக்களும் பாதையில் கால்களை வைக்கவே தயங்க வைத்தன.

போதாக்குறைக்கு, பந்தத்தின் ஒளியைக் கண்டு பாய்ந்த பெரும் வண்டுகளும், காட்டுப் பூச்சிகளும் பறந்து வந்து இருவர் முகங்களையும் உடல்களையும் தாக்கின. எந்தக்

கானகமானாலும், பாதாளமானாலும், நிலவறைகளா னாலும், வழி கண்டு பிடித்து வந்து சேர்ந்துவிடும் சில்வண்டுகளும் சுவர்க்கோழிகளும் இடைவிடாது ரீங்கரித்துக் கொண்டிருந்தன. இருளில் பளபளத்த விழிகளுடன் நின்ற விலங்குகள் பந்தத்தைக் கண்டு பாய்ந்து கானகத்தினுள் மறைந்தன.

கானகத்தினுள் சற்றுத் தொலைவு சென்றதும் மரக் கூட்டங்கள் லேசாக விலகி, கொடிவழியொன்று இருளில் மலை உச்சியை நோக்கி வளைந்து வளைந்து செல்வது புலப்பட்டது. சற்று முன்பு கேட்ட ஒலிகள் அந்தப் பாதையின் அருகிலிருந்துதான் வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது விக்கிரமபாண்டுவுக்கு. அந்தக் கொடிவழியில் இரண்டடிகள் முன்னால் எடுத்துவைத்த ஜகதிபாலன் சட்டென்று நின்றான். அவன் கரம் உயர்ந்து விக்கிரமபாண்டுவை எச்சரித்தது. மறுகரம் சற்றுத் தள்ளி நின்ற பெரும் காட்டுவேங்கை மரத்தைச் சுட்டிக் காட்டியது.

காற்றில் அசைந்த பந்தத்தின் ஒளியில் அந்த வேங்கை மரத்தின் நிழல்களே பிசாசுகளைப் போலிருந்தன. மரத்தின் மறுபுறம் கன்னங்கரேலென்று ஏதோ பெரும் உருவமொன்று தெரிவது போலிருந்தது.

விக்கிரமபாண்டுவை எச்சரித்த ஜகதிபாலன் பந்தத்தை உயர்த்தியபடி வெகு எச்சரிக்கையுடன் மரத்தை நோக்கி நடந்தான். அந்த உருவத்திடமிருந்து கொல்லன் பட்டறைத் துருத்தியிலிருந்து வருவதுபோல் பெரிதாக மூச்சுவிடும் சத்தம் கேட்டது. வேங்கை மரத்தைக் கடந்து மறுபுறம் சென்றவனுக்கு அந்தக் கரிய உருவம் பிசாசல்ல என்பதும், பெரும் களிறு ஒன்று இருளில் நிற்பதும் புலப்பட்டது. அந்தக்களிறு தன் துதிக்கையை வானை நோக்கி உயர்த்தி பக்கவாட்டி லிருந்து வீசிய காற்றை முகர்ந்து எதையோ உணர முயன்றுகொண்டிருப்பதும் புரிந்தது.

பந்தத்தின் ஒளியும், ஜகதிபாலனின் காலடியில் நொறுங்கிய சருகுகளின் ஒலியும் அந்தக் களிற்றைத் திரும்ப வைத்தன. சரேரென்று தன் பெரும் உருவத்தை வேகத்துடன் திருப்பிய களிறு, தன் சின்னஞ்சிறு விழிகளால் அவனை ஒரு கணம் உற்றுக் கவனித்தது.

திரும்பிய களிற்றின் அகன்ற நெற்றியில் வாளோ, ஈட்டியோ தாக்கிய பெரும் காயத்தின் வடு ஒன்று இருப்பதையும், வலதுகாலை உயர்த்தியபடி நிற்பதையும் கவனித்த ஜகதிபாலனுக்கு அது கூட்டத்திலிருந்து பிரிந்துவந்த காட்டுயானையல்ல என்பதும், பயிற்சிபெற்ற போர்க்களிறு என்பதும் கணநேரத்தில் புரிந்தது. அவனை அதற்குமேல் சிந்திக்க அனுமதிக்காத அந்தக் களிறு இரண்டே எட்டில் அவனை நெருங்கி, தன் துதிக்கையால் அவனைச் சுற்றிவளைத்துப் பிடித்து, சரேலென்று மரங்களுக்கு மேல் உயர்த்தியது.

ஜகதிபாலனின் கூக்குரல் பலமாக ஒலித்தது. அதை விடப் பலமாக அந்தக் காட்டுப்பகுதியே அதிரும்படி அந்தக் களிற்றின் பிளிறல் ஒலித்தது. அவனை உயர்த்திப்பிடித்த அந்தக் களிறு பக்கத்திலிருந்த வேங்கை மரத்தில் பலமாக ஒருமுறை அவனை மோதியது. பின் மீண்டும் வானை நோக்கி உயர்த்திய தன் துதிக்கையி லிருந்து அவனை வேகமாக வீசியெறிந்தது.

வேங்கை மரத்தின் மறுபுறத்திலிருந்து தன் கண்ணெதிரே கன வேகத்தில் நிகழ்ந்தவற்றையும், அடுத்து அந்தக் களிறு தானிருந்த இடத்தை நோக்கி அடியெடுத்து வைப்பதையும் கண்ட விக்கிரமபாண்டுவை அச்சம் பிடரியைப் பிடித்துத் தள்ளியது. அடுத்த கணம் வானில் பறந்து சென்ற தன் வீரர் தலைவனைத் தொடர்ந்து வந்தவழியே இருளில் தலைதெறிக்க ஓடியவன், சற்றுத் தொலைவு சென்றதும் உடலெங்கும் காயங்களுடன் திறந்தவாய் திறந்தபடி இருக்க, வானை வெறித்த விழிகளுடன் விழுந்து கிடந்த ஜகதிபாலனைக் கண்டு திக்பிரமை பிடித்து நின்றான்.

கானகமே அதிர்ந்த சப்தங்களால் விழித்து எழுந்து ஓடிவந்த ஈழத்து வீரர்களும் ஜகதிபாலன் விழுந்து கிடந்த இடத்தை அடைந்து, அவன் கோலத்தையும் விக்கிரம பாண்டுவையும் கண்டு திகைத்து நின்றனர். வேங்கை மரத்தை நோக்கி ஓடிய வீரர்களுக்கு மறுபுறம் எதுவும் புலப்படவில்லை. மலைமுகட்டை நோக்கிச் சென்ற கொடிவழியில், இருளில் வெகுதூரத்தில் செடி கொடி களும், மரங்களும் முறிக்கப்படும் ஒலி கேட்டது., பின்னர் அதுவும் தேய்ந்து மறைந்தது.

# 22. ஏக சக்ர நகரம்

**ப**ஞ்ச பாண்டவர்கள் வாரணாவதத்திலிருந்து தப்பி ஓராண்டுக்காலம் அஞ்ஞாதவாசம் செய்தபோது வந்து தங்கிய ஏகசக்ர நகரம்* என்று நம்பப்படுவதும், தலைநகர் கொல்லத்தை அடைய முற்பட்ட பாண்டிய வணிகர் களும், மேலைக் கடலில் வந்து இறங்கிய கிரேக்க, ரோம, யவன வணிகர்களும் ஏராளமாக வந்து தங்கியதால் அந்த நகரில் பொன்னும், பொருளும், முத்தும், பவளமும், தந்தங்களும், சந்தனமும், மிளகும், அன்னிய தேசத்துப் பொருள்களும் குவிந்து செழித்ததால் கொல்லமங்கலம்** என்றும் பிற்காலத்தில் அழைக்கப்பட்ட அந்த நகரம். கொல்லத்திலிருந்து பாண்டியநாட்டுக்குச் செல்லும் பிரதானப் பாதையின் நடுவில், மலைப் பகுதியில் விரிந்த சமவெளியில் அமைந்திருந்தது.

---

**★ திருச்செங்குன்றூர், திருப்புலியூர், ஆரன்முளா, திருவண்வண்டுர், திருக்கோடித்தானம் ஆகிய இடங்களில் உள்ள ஆலயங்கள் ஏகசக்ர நகரில் தங்கிய பஞ்சபாண்டவரால் கட்டப்பட்டவை என்று நம்பப்படுவதால், அவர்கள் தொடர்பான விழாக்கள் இன்றும் நடத்தப்படுகிறது. திருவிஞ்சிக்கோட்டில் விஷ்ணுவின் நான்கு வடிவங்கள் பஞ்சபாண்டவர்களால் வடிக்கப்பட்டவை என்றும் நம்பப்படுகிறது. –கேரள ஆலய வரலாறு, கே.கன்னிகேஸ்வரன்.** (Temple Net)

**★★தற்போது கொத்தமங்கலம் என்று அழைக்கப்படுகிறது.**

கொல்லத்தில் வந்து இறங்கி, பாண்டிய நாட்டை நோக்கிச் சென்ற அன்னிய வணிகர்களும், பாண்டிய நாட்டிலிருந்து சேரநாட்டை அடைய முற்பட்ட வணிகர் களும் சந்திக்கும் இடமாக விளங்கிய அந்த நகரம் நன்றாகவே செழித்தாலும், பின்னர் வணிகர்களுக்குள் ஏற்பட்ட பிணக்கு காரணமாகவும், அதில் பாண்டிய வீரர்கள் தலையிட்டதன் காரணமாகவும் அடியோடு அழிக்கப்பட்டு, மக்கள் நடமாட்டமற்ற பாழடைந்த நகராகவே மாறியது. ஏதோ தேவதைகளின் சாபம் அந்த நகரின் மீது விழுந்துவிட்டது என்றனர் அந்தப் பகுதியிலிருந்த மலைக்கிராமத்து மக்கள். இருநூறு ஆண்டுகளுக்கு மேல் உயிரற்றுப் போன அந்த கொல்ல மங்கலம், தற்போது உயிர் பெறத் துவங்கியிருந்தது. நகரத்தைச் சுற்றிச் சென்ற கோட்டைச் சுவர் ஆங்காங்கே இடிந்தும் கற்கள் சரிந்தும் காணப்பட்டாலும், சமீபத்தில் ஏற்பட்ட மாற்றங்களால் சுத்தம் செய்யப்பட்டும், ஓரளவு பழுது பார்க்கப்பட்டும் தெரிந்தது. அனேகமாக நகரத்தின் பல வீதிகளும், இல்லங்களும் பாழடைந்து வெறும் சுவர்கள் மட்டும் நின்றன. அரண்மனை இருந்த பகுதி மட்டும் மீண்டும் புதிதாகக் கட்டப்பட்டதால் அதைச் சுற்றியிருந்த வீதியில் சில இல்லங்களும் புதிதாக முளைத்திருந்தன. வீதிகளில் மக்கள் நடமாட்டம் சிறிது ஏற்படத் தொடங்கியிருந்தது. மக்களை விட வீரர்களின் நடமாட்டமே அதிகம் இருப்பதாகத் தோன்றியது.

அரண்மனையின் மேல்தளத்துச் சாளரத்தினருகே நின்றபடி நகரையும், கோட்டைச்சுவரையும், புதிதாகப் பொருத்தப்பட்ட பெரும் வாயிற்கதவுகளையும் வெறித்த படி நின்றிருந்த அந்தப் பெண்ணின் அழகிய முகத்தில் அச்சம் படர்ந்திருந்தது.

இழைத்த சந்தனத்தின் நிறத்திலிருந்த அவளது முகத்தில் கரிய புருவங்களும் குவளை மலர்களைப் போல் விரிந்திருந்த கருவிழிகளும் ஏதோ சிந்தனையில் மிதந்தாலும், அவற்றில் அவ்வப்போது அச்சம் படர்ந்து

விலகிக் கொண்டிருந்தது. தந்தத்தில் கடையப்பட்ட கரங்களில் ஒன்று சாளரத்தைப் பற்றியிருக்க, மற்றொரு கரம் இல்லவே இல்லையென்று தெரிந்த இடையில் பதிந்திருந்தது. இடையில் பதிந்திருந்த கரத்தில் ஓலையொன்றும் சிக்கியிருந்தது. அவள் கழுத்திலாடிய ஆரமும், கரங்களில் தெரிந்த வளைகளும் சேரநாட்டுப் பொற்கொல்லர்களின் திறனை எடுத்துக் காட்டின. மெல்லிய அவள் தேகமும், அவள் சாளரத்தைப் பற்றி நின்ற விதமும், ஏதோ கைதேர்ந்த சைத்ரிகன் வரைந்த ஓவியமாகவே தெரிந்தது.

சாளரத்தின் வழியே கோட்டைச்சுவரையும், சுவரைத் தாண்டி உயர்ந்தும் சரிந்தும் தெரிந்த மலைப்பகுதியையும், கானகத்தையும் வெறித்துக் கொண்டிருந்தன அவளது விழிகள். முற்றிக்கொண்டிருந்த மாலைப்பொழுது அந்தப் பகுதியில் இருளை வேகமாகப் பரவச்செய்து கொண்டிருந்தது. கோட்டையைச் சுற்றியிருந்த மரங்களில் பட்சி ஜாலங்களின் கூச்சல் மெல்ல அடங்கிக் கொண்டிருந்தது. வெகு தூரத்தில் கிறீச்சென்று ஏதோ விலங்கு அபயக்குரல் எழுப்பியது. யானையொன்றின் பிளிறல் பலமாகக் கேட்டது. அவள் உடல் ஒருமுறை நடுங்கியது. கானகத்தில் கேட்கும் ஒலிகளைத் தலையைத் தூக்கி உற்றுக் கவனித்து மிரண்டு நிற்கும் மானைப் போலவே நின்றாள் அவள்.

பாதுகாப்புக்காக இந்த மலைகளையும் துஷ்ட மிருகங்கள் நிறைந்த கானகத்தையும் கடந்து, தாய் வழி உறவினனான அச்சுத மார்த்தாண்டன் மீண்டும் நிர்மாணிக்க முயன்று கொண்டிருக்கும் இந்த ஏகசக்ர நகரத்துக்கு அவள் வந்து சில நாட்களே ஆகியிருந்தன. இந்த இடத்தை எப்படி ஈழத்தவர் அறிந்தார்கள் என்பதை எண்ணிய சேரலாதன் புதல்வி வஞ்சுளவல்லிக்கு அச்சத்துடன் வியப்பே மேலிட்டாலும், கோட்டைச்சுவர் ஒன்றும் அத்தனை பலமானதல்ல என்பதையும், வீரர்களின் எண்ணிக்கை நூற்றுக்கும்

குறைவாகவே இருப்பதையும் கவனித்தவளுக்கு மீண்டும் அச்சம் மேலோங்கியது.

இடையில் பதிந்திருந்த கரத்தை உயர்த்தி அதில் மடக்கி வைத்திருந்த ஓலையைப் பதினோராவது முறையாகப் படித்தாள். “மகளே, என்னையும் நம் தலைநகரையும் அபாயம் சூழ்ந்திருக்கிறது. நீ இருக்கும் இடத்தையும் ஈழத்தவர் அறிந்து கொண்டார்கள். உன்னைப் பாது காத்து அழைத்து வர சோழநாட்டுப் பூபேந்திரனை அனுப்புகிறேன். ரவிவர்மனோடு செல். அச்சப்பட வேண்டாம். இந்தச் சிக்கல்கள் சோழ மன்னர் உதவியால் விரைவில் முடிவுக்குக் கொண்டுவரப்படும். ராஜசிம்மன்”

ஓலையின் வரிகள் தனக்கு இளையவனும், சேரலாதன் ராஜசிம்மனின் ஒரே மகனுமாக பாஸ்கர ரவிவர்மனை நினைவு படுத்திவிட்டதால், நெடுநேரமாக அவன் தென்படவில்லையென்பதை எண்ணிக் கொண்டவள், திரும்பி அரண்மனையின் உள்ளே விரைந்தாள்.

மேன்மாடத்தைவிட்டுக் கீழே இறங்க முற்பட்டவளின் செவிகளில் அரண்மனையின் நடுக்கூடத்தில் வாட்கள் மோதும் ஒலி திடீரென எழுந்து அவளது தேகத்தை ஒருமுறை நடுங்க வைத்தது. கூடத்தின் நடுவில் நின்று தன் வாளை எதிரில் நின்ற உபதலைவன் வாளுடன் உராயவிட்டுப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தான் பாஸ்கர ரவிவர்மன். பன்னிரண்டு பிராயங்களே கடந்திருந்த சேர இளவலின் தேகம் பார்வைக்கு மெல்லியதாகத் தெரிந் தாலும், இடைவிடாமல் தொடர்ந்த பயிற்சி காரணமாக தோள்கள் விரியவும், கரங்கள் வலுப்பெறவும் தொடங்கியிருந்தன.

“ரவிவர்மா” வஞ்சுளவல்லியின் மென்மையான குரல் அழைத்தது வாட்கள் மோதும் ஒலிக்கு இடையே இளவலின் செவிகளில் விழுந்ததாகவே தெரியவில்லை. இரண்டாவது முறை சற்றுப் பலமாக ஒலித்த அழைப்பு வாட்களின் சுழற்சியை நிறுத்தியது.

சிவந்த முகத்தில் வியர்வை வழியத் திரும்பிய ரவிவர்மனின் முகத்தில் சற்றுக் கடுமை தெரிந்தது. அவன் குரலிலும் உஷ்ணம் தெரிந்தது. தமக்கையைப் பெயரிட்டே அழைத்தவன் தொனியில் அதிகாரமும் ஒலித்தது.

"வஞ்சுளா, பயிற்சியில் குறுக்கிடக் கூடாதென்று எத்தனை முறை கூறியிருக்கிறேன்? எதற்கு அழைத்தாய்?"

வஞ்சுளவல்லியின் குரல் தயக்கத்துடன் ஒலித்தது "தந்தையின் ஓலையைப் பார்த்தாயல்லவா? நம்மை அபாயம் நாடி வந்து கொண்டிருக்கிறது"

"வரட்டும், பார்த்துக் கொள்ளலாம்" என்ற ரவிவர்மன் உபதலைவன் பக்கம் திரும்பி "என்ன உபதலைவரே, ஈழத்து விக்கிரமபாண்டு என்னை அழிக்க வந்து கொண்டிருக்கிறானாம். நம் வீரர்கள் தயாராக இருக்கிறார்கள் அல்லவா?" என்றான்.

உபதலைவன் முகத்தில் சலனமேதும் தெரியவில்லை. அவன் குரல் வறண்டு ஒலித்தது "இல்லை இளவரசே, நம்மிடம் இருக்கும் வீரர்கள் மிகக் குறைவு. ஈழத்து வீரர்களை எதிர்க்கும் அளவுக்கு நம்மிடம் வலிமையில்லை. கோட்டைத் தலைவர் நேரிமங்கலத்துப் படைப்பிரிவை அழைத்துவரச் சென்றிருக்கிறார்..."

"எப்போது சென்றார்? என்னிடம் கூறவில்லையே?"

"சற்று முன்பு தான். எப்படியும் நாளைக்காலை வந்துவிடுவார்"

பாஸ்கர ரவிவர்மன் முகத்தில் குழப்பம் படர்ந்தது. "அவர் வருவதற்குள் ஈழத்தவர் தாக்குதல் ஏற்பட்டால்...?"

உபதலைவன் பதிலேதும் கூறவில்லை.

"யாரோ சோழ நாட்டு பூபேந்திரன் என்பவனை அனுப்பியிருப்பதாக தந்தையின் ஓலையில் கூறியிருந்ததே..." ரவிவர்மனின் குரலில் கேள்வி ஒலித்தது.

“யாரென்பது தெரியவில்லை இளவரசே... ஆனால் நம் வீரர்களைக் கானகத்துப் பாதையில் முன்னதாகச் சென்று, வரும் ஈழத்தவர்களைப் பற்றி அறிந்துவர அனுப்பி யிருக்கிறேன். அவர்கள் திரும்பியதும் பார்த்துக் கொள்ளலாம்” உப தலைவனின் பதிலில் அத்தனை நம்பிக்கை தொனிக்கவில்லை.

வாளை உபதலைவனை நோக்கி எறிந்துவிட்டு, மேன் மாடத்துப் படிகளில் விறுவிறுவென்று ஏறிய ரவிவர்மன், உப்பரிகையில் வந்து நின்றான். அவனைத் தொடர்ந்த இளவரசியும் அவன் பின்னால் வந்து நின்றாள். பின்புறமாக அணுகியவள் தன் ஒரு கரத்தை இளவலின் தோளில் பதித்து, மற்றொரு கரத்தைக் கானகத்தை நோக்கி நீட்டினாள் “அதோ பார் ரவிவர்மா” என்றாள் குரலில் சற்று நடுக்கம் ஒலிக்க.

அவள் கரம் நீண்ட திசையில் கானகத்து மலைப் பாதையின் வளைவில் வெகு தூரத்தில் பந்தங்கள் ஒளிப் புள்ளிகளாகத் தெரிந்தன. கோட்டையிலிருக்கும் வீரர் களின் எண்ணிக்கையைவிட அங்கு தென்பட்ட பந்தங்கள் அதிகமிருப்பதும், மலையைச் சுற்றிவரும் பாதை கரடு முரடானதுதான் என்றாலும், விடிவதற்குள் கோட்டையை அணுகிவிடும் தூரத்தில்தான் ஈழத்தவர் இருக்கிறார்கள் என்பதும் ரவிவர்மனுக்குப் பார்த்தவுடன் புரிந்தது.

கோட்டைத்தலைவன் அச்சுதமார்த்தாண்டன் படைப் பிரிவுடன் வந்தாலொழிய கோட்டையில் இருக்கும் சொற்ப வீரர்களால் அதிகநேரம் தாக்குப் பிடிக்க இயலாது என்பதை உணர்ந்திருந்த ரவிவர்மனுக்கும், இளவரசிக்கும் உபதலைவன் கட்டாயப்படுத்தி அளித்த உணவு இறங்க மறுத்தது. ஈழத்து வீரர்கள் இருந்த இடத்திற்குச் சென்று திரும்பி வந்த சேர வீரர்கள் அளித்த செய்திகள் நம்பிக்கையூட்டுவதாகவும் இல்லை. மஞ்சத்தில் வந்து விழுந்த பின்னரும் வெகுநேரம் விழித்தபடியே இருந்தான் ரவிவர்மன்.

இரவின் இரண்டாவது ஜாமத்தில் கண்ணயர்ந்த ரவி வர்மன் சிறிது நேரத்தில் மீண்டும் திடுக்கிட்டு எழுந்தான். கோட்டை வாயிலிலிருந்து பெரும் கூச்சல் ஒலித்துக் கொண்டிருந்தது. வாட்கள் மோதும் ஒலிகளும், விர்விர் ரென்று அம்புகள் காற்றைக் கிழித்துப் பாயும் ஒலிகளும் பலமாகக் கேட்டுக் கொண்டிருந்தன. கோட்டை வாயிற் கதவுகளில் ஈழத்துவீரர்கள் பெரும் மரங்களைக் கொண்டு தடால் தடாலென மோதும் ஒலி பலமாகக் கேட்டது.

வேகமாக எழுந்தவன் உப்பரிகை நோக்கி ஓடினான். அவனுக்கு முன்னதாக அங்கு இளவரசி அச்சம் படர்ந்த முகத்துடன் கோட்டை வாயிலை நோக்கியபடி நின்றிருந்தாள். மாளிகைக்கும் கோட்டைச்சுவருக்கும் இருந்த சிறிய திடலில் சேர வீரர்கள் குவிந்திருந்தனர். உபதலைவன் அவர்களுக்கு உத்தரவிட்டுக் கொண் டிருப்பது தெளிவாகக் கேட்டது.

பெரும் மரங்களைத் தாங்கிய ஈழ வீரர்கள் வேகமாகப் பின்னால் நகர்ந்து மீண்டும் மீண்டும் வாயிற்கதவுகளின் மீது மோதி அதைப் பிளக்க முயன்று கொண்டிருந்தனர். கோட்டைச் சுவர் மீது நின்றபடி அம்புகளையும் ஈட்டி களையும் எய்ய முயன்றவர்களைக் கீழே சற்றுத் தள்ளி நின்ற புரவி வீரர்களின் அம்புகள் குறிதவறாமல் தாக்கின. வாயிலுக்குச் சற்றுத் தள்ளி புரவியில் அமர்ந்தபடி வீரர்களை ஏவிக் கொண்டிருந்த விக்கிரம பாண்டுவின் உருவம் பந்தங்களின் ஒளியில் தெளிவாகப் புலப்பட்டது ரவிவர்மனுக்கு.

பின்புறமிருந்து வஞ்சுளவல்லியின் குரல் அச்சத்துடன் ஒலித்தது "ரவிவர்மா, அதோ ராட்சதன் போல் புரவியில் அமர்ந்திருப்பவன்தான் ஈழத்து விக்கிரமபாண்டுவாக இருக்க வேண்டும்"

விக்கிரமபாண்டுவின் அருகில் நின்ற ஈழத்து வீரனொருவன் மேன்மாடத்து உப்பரிகையைச் சுட்டிக் காட்டி ஏதோ கூறினான். தொடர்ந்து விக்கிரமபாண்டு

வின் உக்கிரமான முகம் உப்பரிகையை நோக்கித் திரும்பியது. இளவரசியும் ரவிவர்மனும் நிற்பதைக் கவனித்த விக்கிரம பாண்டு அடுத்து தன் வீரர்களில் சிலரை அழைத்து, உப்பரிகையைச் சுட்டிக்காட்டி ஏதோ உத்தரவிட்டான். தொடர்ந்து பெரும் போர் விற்களைத் தலையில் நாட்டிய ஈழ வீரர்களிடமிருந்து அம்புகள் மாளிகையை நோக்கிப் பறக்கத் தொடங்கின.

அதே கணத்தில் கோட்டையின் வாயிற்கதவுகள் பெரும் ஒலியெழுப்பியபடி தடாலென்று உட்புறமாக விழுந்து உடைந்து பிளந்தன. ஈழத்து வீரர்கள் உயர்த்திய வாட்களுடனும், ஈட்டிகளுடனும் உடைந்த கதவுகளின் மீது ஏறி மிதித்தபடி கோட்டையின் உள்ளே பெரும் கூச்சலுடன் நுழைந்தனர். புரவிகள் பெரிதாகக் கனைத்தபடி தொடர்ந்து உள்ளே பாய்ந்தன.

# 23. போரில் தாமதம்...

**க**ருக்கலுக்கு முன்னதாகவே முளைத்து எழுந்து ஒளிவீசிய வெள்ளி அந்த மலைப்பகுதியில் ஈழத்து வீரர்கள் நடத்திய அநீதியைக் காண விருப்பமின்றித் தன் ஒளியைச் சுருக்கிக் கொண்டு மங்கலாகி மறையத் தொடங்கியிருந்தது. கீழ் வானில் பரவத் தொடங்கிய செந்நிறம், அந்தக் கோட்டை வாயிலிலும் வீரர்கள் சிந்திய குருதியிலும் பரவத் தொடங்கியது. சொற்ப எண்ணிக் கையிலிருந்தாலும் ஆவேசத்துடன் ஈழத்தவர்களை எதிர்த்த சேரநாட்டு அச்சுத மார்த்தாண்டனின் வீரர்கள் பெற்றிருந்த போர்ப்பயிற்சியும், வேகத்துடன் வீசிய வாட்களும், அதி வேகத்துடன் பாய்ந்த ஈட்டிகளும், அம்பு களும் பலமான சுவர்போல நின்று ஈழத்து வீரர்களைத் தேக்கி நிறுத்தியது. சேரநாட்டு உபதலைவன் சரமாரியாக இட்ட உத்தரவுகளால் இரு வரிசைகளில் நின்று அணி வகுத்த சேரநாட்டு வீரர்கள் மாற்றி மாற்றி அம்புகளைப்

பொழிந்து முன்னால் சென்று போராடியவர்களுக்கு அளித்த பாதுகாப்பும், பக்கவாட்டில் நின்று வேகத்துடன் வீசிய ஈட்டிகளும், நேருக்கு நேர் ஈழத்து வீரர்களுடன் மோதித் தடுக்க முற்பட்ட வீரர்களின் ஆவேச வாள்வீச்சும் கோட்டைச்சுவருக்கும் அரண்மனைக்கும் இடையே இருந்த இடைவெளியில் எற்பட்ட சண்டையை உக்கிரமானதாக மாற்றத் தொடங்கியது. ஈட்டிகளும் அம்புகளும் பாய்ந்ததால் புரவிகளின் கனைப்பொலி களும், வீரர்களின் கூக்குரலும் பலமாக ஒலிக்கத் தொடங்கின.

இரண்டு நாழிகை நேரம் முயன்றும் தன் வீரர்கள் கோட்டை வாயிலைத் தாண்ட இயலாமல் தத்தளிப் பதைக் கண்ட விக்கிரமபாண்டுவின் முகத்தில் குரூரமும், ஆத்திரமும் படர்ந்தது. தன் பின்னால் நின்றிருந்த மற்ற வீரர்களைத் தொடர உத்தரவிட்டவன் வாளை உருவிக் கொண்டு, தன் புரவியை வாயிலை நோக்கிப் பாய விட்டான். திடீரென்று எழுந்து பாயும் அலைகளைப் போல வந்த விக்கிரமபாண்டுவின் தாக்குதல் அந்தக் கோட்டை வாயிலில் நின்று போராடிய சேர வீரர்களைச் சற்றுத் திணறடிக்கவே செய்தது.

எதிரிகளின் எண்ணிக்கையும் தாக்குதலும் அதிகமா வதைக் கண்ட சேரர் உப தலைவன் தன் சொற்ப வீரர் களையும் இரண்டாகப் பிரிந்து பின் வாங்க உத்தர விட்டான். வாயிலைக் கடந்ததும் கோட்டைச்சுவரை ஒட்டி வலதுபுறமும் இடதுபுறமும் சேர வீரர்களைத் தாக்கித் தொடர உத்தரவிட்ட விக்கிரமபாண்டு தன் வீரர்களில் ஒருபகுதியை அழைத்துக் கொண்டு அரண் மனையை நோக்கித் தன் புரவியைச் செலுத்தினான். கொலையிலும் கொள்ளையிலும் மிகுந்த ஆர்வமும் வெறியும் கொண்ட அந்த வீரர்கள் வாட்களை வானை நோக்கி உயர்த்திச் சுழற்றியபடி விகாரக் கூச்சலுடன் அரண்மனையை நோக்கித் தங்கள் புரவிகளைச் செலுத்தினார்கள்.

தூரத்தில் நின்று போரிட்டபடியே விக்கிரம பாண்டுவும் அவன் வீரர்களும் அரண்மனையை நோக்கிச் செல்வதைக் கவனித்த உபதலைவனின் முகத்தில் கவலை படர்ந்தது. தன் வீரர்களிடம் அடுத்துச் செய்ய வேண்டியவற்றை மளமளவென்று கூறியவன், பின்புறமாகச் சென்று மாளிகையொன்றின் பக்க வாட்டில் மறைந்தான்.

மாளிகையின் பக்கவாட்டு இடைவெளிகளில் புகுந்து ஓடியவன் எதிர்ப்பட்ட இரண்டொரு ஈழத்தவர்களை வெட்டியெறிந்துவிட்டு, அரண்மனையின் இடப்புறம் தெரிந்த புரவிக் கொட்டடியை நெருங்கி எச்சரிக்கைப் பார்வையொன்றால் துழாவியபடி உள்ளே நுழைந்தான். ஐந்தாறு புரவிகளே உள்ளே நின்றிருந்தன. உபதலை வனைக் கண்டதும் அவற்றில் இரண்டொரு புரவிகள் அவனை நோக்கி வந்து பழகிய நெருக்கத்தில் உராய்ந்தன. அவற்றை விலக்கியபடி கொட்டடியின் மூலையில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த நான்கைந்து ரதங்களை நோக்கிச் சென்ற உபதலைவன், அவற்றில் போர் ரதமொன்றைத் தேர்ந்தெடுத்தான். கொட்டடியில் நின்ற புரவிகளையும், தன்னை நெருங்கி உராய்ந்த புரவி களையும் ஆராய்ந்தவன், அவற்றில் இரண்டைத் தேர்ந் தெடுத்து ரதத்தில் பூட்டித் தயாராக நிற்க வைத்தான்.

மாளிகையை நெருங்கியவன் சற்று நிதானித்தான். அரண்மனையின் வாயிலைச் சூழ்ந்து கொண்ட ஈழத்து வீரர்கள் காவலுக்கு நின்றிருந்த சேர வீரர்களைத் தாக்கிக் கொண்டிருப்பதையும், ஈழத்து வீரர்கள் மாளிகையின் மற்றப் பகுதியையும், அடுத்துத் தெரிந்த இல்லங்களையும் நோக்கிச் செல்வதையும், மளமளவென்று மற்ற வீதிகளிலும் அவர்களது புரவிகள் சுற்றத் தொடங்கி விட்டதையும் கண்டான். மாளிகையைச் சுற்றிக்கொண்டு பின்புறத்தை அடைந்தவன், பணியாட்கள் பயன்படுத்தும் பின்புறத்துப் படிகளில் மளமளவென்று ஏறி, மேன் மாடத்து அறையை அடைந்தான். வாயிலில் காவலுக்கு

நின்றவர்களையும் கடந்து உள்ளே நுழைந்தவன் சாளரத்தின் அருகே இளவரசி நிற்பதையும், அருகே இருக்கையொன்றின் மீது ஏறி ரவிவர்மன் கோட்டை வாயிலில் சேர வீரர்கள் போராடுவதையும் கவனித்துக் கொண்டிருப்பதையும் கண்டான்.

“இருவரும் என்னோடு வாருங்கள். அபாயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது” என்று இரைந்தவன், அவர்கள் அவசரமாகப் பின்தொடர, மீண்டும் திரும்பிப் பின்புறத்துப் படிகளை நோக்கி ஓடி இறங்கினான்.

அடுத்த சில கணங்களில் அந்தப் போர் ரதம் தென் புறத்து வாயிலை நோக்கி விரைந்தது. ரதத்தைக் கவனித்து, விட்ட ஈழவீரர்கள் கூச்சலுடன் அதைத் துரத்தத் தொடங்கினார்கள். ரதத்தை நோக்கி ஈட்டிகளும் அம்புகளும் பறந்தன. ரதத்தின் சக்கரங்களை நோக்கி எறியப்பட்ட ஈட்டிகள் தெறித்து விழுந்தன. பக்கவாட்டி லிருந்து வந்த அம்பு ஒன்று உபதலைவனின் விலாப் பகுதியில் பாய்ந்தது. லாகவமாக வளைத்து வளைத்து ரதத்தைச் செலுத்தியபடியே அதைப் பிடுங்கியெறிந்தவன், கோட்டையின் தெற்கு வாயிலை வேகமாக நெருங்கினான்.

தெற்கு வாயிலில் நின்ற வீரர் பதின்மரும் தங்கள் உபதலைவன் வேகமாக ரதத்தைச் செலுத்தி வருவதையும், ஈழத்து வீரர்கள் துரத்தி வருவதையும் கவனித்து கோட்டைக் கதவுகளை அவசரமாகத் திறக்க முற்பட்டார் கள். ரதம் கனவேகத்தில் கதவுகளைக் கடந்ததும், மீண்டும் கதவுகளை அடைத்துத் தாழிட்டுவிட்டு, வருபவர்களை எதிர்க்கத் தயாராக வாட்களை உருவிக் கொண்டு நின்றனர். அரண்மனை வாயிலில் நின்று வாளை அசுரத் தனமாக வீசிக் கொண்டிருந்த விக்கிரம பாண்டுவின் சிவந்த விழிகளும் அதிவேகமாகச் சென்ற ரதத்தையும், பின்தொடர்ந்த தன் வீரர்களையும் கவனித்தன. தன் புரவியைத் திருப்பியவன், நகரின் வீதிகளில் பிசாசுகளைப்

போல் திரிந்துகொண்டிருந்த தன் வீரர்களுக்குக் குரல் கொடுத்தபடி தெற்கு வாயிலை நோக்கிச் சென்றான். வாயிலில் நின்று போராடிய சேர வீரர்கள் ஒரு நாழிகை நேரத்தில் அழிக்கப்பட்டனர். கதவுகளைத் திறக்கத் தன் வீரர்களுக்கு உத்தரவிட்ட விக்கிரமபாண்டு, திறந்த கதவுகளின் வழியே எதிரே நீண்டுகிடந்த பாதையில் தன் புரவியை அதிவேகத்தில் பாயவிட்டான். மற்ற வீரர்களும் அவனைத் தொடர்ந்தனர்.

அவன் வெளியேறிய சில கணங்களில் கோட்டையின் மேற்குப்புற வாயிலின் வழியே கோட்டைத் தலைவன் அச்சுத மார்த்தாண்டன் நேரிமங்கலத்திலிருந்து அழைத்துக் கொண்டுவந்த படைப்பிரிவுடன் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான். நுழைந்தவுடன் தான் தாமதித்து விட்டதையும், நிலவிய சூழ்நிலை சேரவீரர்களுக்குச் சாதகமாக இல்லையென்பதையும் உணர்ந்தவன் ஆவேசத்துடன் உடன் வந்த வீரர்களுக்கு உத்தரவிட்டபடி, வில்லை உயர்த்தி, சரமாரியாக அம்புகளை விடுத்தபடி அரண்மனையை நோக்கித் தன் புரவியைச் செலுத்தினான். அரண்மனையை நெருங்கியதும் வாயிலிலேயே தன் காவல் வீரர்கள் கொல்லப்பட்டிருப்பதையும், மேன்மாடத்துப் படிகளில் பலர் விழுந்து கிடப்பதையும் கண்டவனின் சித்தத்தில் உஷ்ணம் ஏறியது. வீரர்கள் தொடர மளமளவென்று மேன்மாடத்தை அடைந்தவன் அறைகளில் கிடைத்தவற்றைக் கொள்ளையடிக்க முயன்று கொண்டிருந்த ஈழத்து வீரர்களைக் கண்டதும் முகம் சிவக்கத் தன் வாளை உயர்த்திக் கொண்டு பாய்ந்தான்.

அரண்மனையைச் சுற்றி சேரர் படைப்பிரிவின் ஒரு பகுதி பிரதான வாயிலையையும், மறுபுறம் சண்டை நடந்து கொண்டிருந்த பகுதியையும் நோக்கி விரைந்தது. கலைக்கப்பட்ட தேன் கூட்டிலிருந்து விடுபட்ட தேனீக்களைப் போல நகரத்தின் வீதிகளில் பிரிந்த நேரிமங்கலத்துப் படைப்பிரிவு, எதிர்ப்பட்ட ஈழத்தவர் அனை

வரையும் தயவுதாட்சண்யம் பாராமல் வெட்டியெறியத் தொடங்கியது. ஏறக்குறைய ஒரு ஜாம நேரமே நடந்த அந்தப் போர் முடிந்தபோது ஏகசக்ர நகரத்துக்குள் நுழைந்த அத்தனை ஈழத்து வீரர்களும் அழிக்கப் பட்டிருந்தனர்.

தரையில் பிளந்து விழுந்து கிடந்த பிரதான கோட்டைக் கதவுகளின் அருகே நின்றிருந்த அச்சுத மார்த்தாண்டனின் எதிரே அனைத்து சேர வீரர்களும் அணிவகுத்து நின்றிருந்தனர்.

அச்சுதமார்த்தாண்டனின் முகத்தில் கவலையும் பதற்றமும் பெரிதாகப் படர்ந்து கிடந்தன. அடுத்து உடனே சேரலாதன் புதல்வியையும், இளவலையும் தொடர்ந்து விக்கிரம பாண்டுவும் அவன் வீரர்களும் சென்றதன் நினைவு அவன் வேகத்தை உயர்த்தியது. அருகில் நின்ற தன் புரவிமீது தாவியேறியவன் தன் வீரர்களை ஒரு முறை நோக்கினான். கோட்டையின் வாயிற் கதவுகளையும், ஆங்காங்கே காயங்களுடன் தரையில் உருண்டு கிடந்த தன் வீரர்களையும், ஈழத்தவரையும் வெறித்தவன் ஏதோ தீர்மானத்துக்கு வந்திருக்க வேண்டும். அடுத்து அவனிடமிருந்து வேகத்துடன் உதிர்ந்த சொற்கள் அதை உறுதிப் படுத்தின.

“வீரர்களே, இருநூறு ஆண்டுகளுக்கு மேல் உயிரற்றுப் போன இந்த நகரத்தைப் புதுப்பிக்கவும், கோட்டையை பலப்படுத்தவும் நாம் எடுத்த முயற்சி மீண்டும் தடைப் பட்டிருக்கிறது. இந்த நகரின் மீது ஏதோ தேவதைகளின் சாபம் இருக்கிறது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எனக்கு நம்பிக்கையில்லை என்றாலும் நடக்கும் சம்பவங்கள் அப்படித்தான் தோன்றுகிறது. எனவே, இறந்த நம் வீரர்களை இங்கேயே எரித்து விடுங்கள். அரண்மனையிலும், மற்ற மாளிகைகளிலும் உள்ள நம் பொருள்கள் அனைத்தையும் எடுத்துக் கொண்டு நாம் நேரிமங்கலத்துக்கே சென்று விடுவோம். இந்த நகரம் இப்படியே கிடக்கட்டும்” என்றான் வறண்ட குரலில்.

வீரர்கள் மௌனமாக அவனைப் பார்த்தபடி நின்றனர். சிலர் ஆமோதிப்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தனர்.

மீண்டும் அச்சுதமார்த்தாண்டனின் குரல் ஒலித்தது "வீரர்களே, உங்களில் பாதிப்பேர் நகரத்திலிருந்து அனைத்தையும் வெளியேற்றும் பணியைக் கவனிக் கட்டும். மற்றவர்கள் என்னுடன் இப்போதே புறப் படுங்கள். ஈழத்து விக்கிரமபாண்டு நம் இளவரசியையும், இளவலையும் தொடர்ந்து சென்றிருக்கிறான். அவனையும் அவன் வீரர்களையும் முற்றிலுமாக அழித்துவிட்டுத் திரும்புவோம்"

அவன் உத்தரவுகளை நிறைவேற்ற வீரர்கள் விரைந் தனர். சிறு படைப் பிரிவுடன் அணிவகுத்து தெற்கு வாயிலிலிருந்து புறப்பட்ட அச்சுத மார்த்தாண்டன் அந்தக் கரடுமுரடான மலைப்பாதையில் தன் புரவியைச் செலுத்தினான். மற்ற வீரர்களும் தொடர்ந்தனர். ஒரு காத தூரம் வரை வளைந்து வளைந்து சென்ற அந்த மலைப்பாதையில் அதிவேகமாகச் சென்ற அச்சுத மார்த்தாண்டனின் பார்வையில் உபதலைவனின் ரதமோ, விக்கிரமபாண்டுவின் வீரர்களோ தென்படவே யில்லை.

வேகத்தை அதிகப்படுத்த வீரர்களுக்கு உத்தரவிட்ட அச்சுதமார்த்தாண்டன் அந்த மலைப் பாதையில் தன் புரவியை அதீத வேகத்தில் பாய விட்டான்.

**ஏ**ற்ற இறக்கங்களும், கற்களும் பெரும் பாறைகளும் குறுக்கிட்ட அந்த மலைப்பாதையில் பெரும் குலுக்கல் களுடன் வேகமாகச் சென்று கொண்டிருந்த அந்த ரதத்தில், பக்கப் பலகையை ஆதரவாகப் பற்றிக் கொண்டு அமர்ந்திருந்த சேரலாதன் புதல்வியின் முகத்தில் அச்சம் வெகுவாகப் படர்ந்து கிடந்தது. அசையாமல் வானத்தை நோக்கி நின்று தவம் செய்து கொண்டிருந்த மலை முகடுகளும், பச்சைப் போர்வை

யொன்றை எடுத்து மூடிவைத்தது போல் மலைகளின் மீது படர்ந்திருந்த மரக்கூட்டங்களும், அவ்வப்போது தூரத்தில் தெரிந்து மறைந்த அருவிகளும், ரதத்தை வட்டமிட்டுவிட்டு நேர் செங்குத்தாகப் பள்ளத்தாக்கை நோக்கி இறங்கிய பருந்துகளும், கூட்டமாகக் கீச்சிட்டுப் பறந்த கிளிக் கூட்டங்களும், அவள் முகத்தில் மெல்ல மெல்ல மாற்றத்தை ஏற்படுத்தத் தொடங்கியிருந்தன. அருகில் அமர்ந்து திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே வந்த இளவல் ரவிவர்மனின் முகம் சிவந்து அவன் சினத்தின் உச்சியில் இருப்பதைப் புலப்படுத்தியது. திரும்பி அவன் பார்வை பதிந்த இடத்தைக் கண்டவளின் முகத்தில் மீண்டும் அச்சம் பரவியது. தூரத்தில் மலைப்பாதையில் ஈழத்து வீரர்கள் புரவிகளில் பாய்ந்து வருவது புலப்பட்டது.

ரவிவர்மன் முகத்தைக் கவனித்த இளவரசி இப்போதைக்கு அவனுடன் உரையாடுவது உசிதமல்ல என்பதைப் புரிந்து கொண்டதால், தவிப்புடன் மௌனமாக எதிரில் விரிந்த கானகத்தைப் பார்த்தபடியே வந்தாள். ரதம் பாதையின் வளைவுகளில் திரும்பியபோது ஏதோ முறிபடுவதுபோல் கேட்கத் தொடங்கிய ஒலி அவள் அச்சத்தை உயர்த்தியது. ரதத்தைச் செலுத்திய உபதலைவனை எச்சரிக்க எண்ணியவள், அவன் விலாப்பகுதியிலிருந்து குருதி வழிந்து உடை முழுதும் நனைந்திருப்பதைக் கண்டதும் திடுக்கிட்டாள்.

“உபதலைவரே...” அவளது அழைப்பு உபதலைவனைத் திரும்பிப் பார்க்க வைத்தது.

ரதத்தின் வேகத்தை மட்டுப்படுத்தியபடி திரும்பிய உப தலைவனின் முகத்தில் அதிகமாகக் குருதி வெளியேறிய தால் ஏற்பட்ட பலவீனம் தெரிந்தது. ரதத்தைப் பாதையில் மெல்ல நிறுத்தியவன் கீழே இறங்கி, தன் உடையை ஓரத்தில் கிழித்து விலாப்பகுதியைச் சுற்றி இறுக்கிக் கட்டிக் கொண்டான்.

நிமிர்ந்து இளவரசியையும், ரவிவர்மனையும் பார்த்தவன் "அஞ்சவேண்டாம் இளவரசி, இது சாதாரணக் காயம்தான், பிறகு கவனித்துக் கொள்ளலாம். ஈழத்து விக்கிரமபாண்டு வீரர்களுடன் நம்மைத் தொடர்ந்து கொண்டிருக்கிறான். இன்னும் நான்கு காத தூரத்தில் நம் சோலகர் வாழும் பகுதி இருக்கிறது. அதை அடைந்து விட்டால் அபாயமில்லை" என்றபடி மீண்டும் ரதத்தில் ஏற யத்தனித்தவன் சட்டென்று நின்றான்.

அவன் விழிகள் ரதத்தின் வலதுபுறத்துச் சக்கரத்தின் மேற்பகுதியிலிருந்த பக்கப் பலகையில் பதிந்தன. ஈழத்து வீரர்கள் எறிந்த ஈட்டிகளால் சக்கரத்தின் மேற்புறத்துப் பலகையின் இணைப்பு பிளக்கப்பட்டிருந்தது. கரடு முரடான பாதை அந்தப் பிளவை அதிகரித்து, ரதத்தின் மேற்பகுதி ஏறக்குறைய விழுந்துவிடும் நிலையில் இருந்தது.

ஈழத்து வீரர்களின் புரவிகள் நெருங்கிக் கொண்டிருந்தன. தூரத்தில் உப தலைவனின் ரதம் நின்று விட்டதையும், அவன் கீழே இறங்கி ரதத்தைப் பரிசோதிப்பதையும் கவனித்தபடியே வேகமாக வந்த விக்கிரம பாண்டு, தன் புரவியைப் பிடரியில் அறைந்து துரிதப்படுத்தினான். அவன் வீரர்களும் கூச்சலிட்டபடி தொடர்ந்தனர்.

# 24. முதல் போர்

'**தோ**ல்வியென்பதைக் காண வாய்ப்பின்றிப் போவதால் வீர மரணம் என்பதும் கூட ஒரு வெற்றிதான்' என்னும் மலைநாட்டுப் பழமொழியை வேதவாக்காக நினைத்திருந்த சேரர் உபதலைவன், அந்த வெற்றி தன்னை நோக்கி மலைப்பாதையில் வேகமாக வந்து கொண்டிருப்பதை உணர்ந்தான். இளவல் பாஸ்கர ரவிவர்மனையும், இளவரசியையும் காக்கும் பொறுப்பை நிறைவேற்றாமல் போவது குறித்து வருத்தம் மட்டும் அவன் மனதில் எஞ்சியிருந்தது.

ரதத்தின் மேற்பகுதியை இணைக்கும் பக்கப்பலகை பிளந்து கிடப்பதையும், மேற்கொண்டு அந்த மலைப் பாதையின் மேடு பள்ளங்களில் செல்வதால் அந்தப் பிளவு அதிகரித்து உடைந்து இருவரையும் தூக்கியெறிந்து விடும் அபாயம் இருப்பதையும் கவனித்த உப தலைவன் பாதையின் குறுக்கே நின்று போராடுவது என்றே தீர்மானித்தான். ஆனால் அவன் தீர்மானத்தை மாற்ற அவன் நின்ற இடத்திற்கு முன்னால் நீண்ட பாதையில் புரவிகள் பல பாய்ந்து வரும் ஒலி எழுந்தது. திகைப்புடன் திரும்பிய உபதலைவனின் எதிரே மலைப் பாதையின் வளைவிலிருந்து இருபதுக்கும் குறையாத புரவிகள் பாய்ந்து வந்து கொண்டிருந்தன.

முன்னால் பாய்ந்து வந்த சாம்பல் நிறப்புரவியில் அமர்ந்து வந்தவன் முதியவனாகத் தெரிந்தான். ஏதோ காற்றில் மிதப்பதுபோல் அசாதாரண வேகத்தில் வந்த அந்தப் புரவி துரிதமாக ரதத்தை நெருங்கி நின்றது. கீழே இறங்கியவனது தலை பாதிக்கும் மேல் வெளுத்துக் கிடந்தது. ஆனால் மல்லன் போன்ற வலுவான தேகமும், உயரத்திற்கேற்ற ஆகிருதியும், அவன் கரங்களில் தென்பட்ட வாள்வடுக்களும், இதழ்களில் ஸ்திரமாகத் தொக்கி நின்ற அலட்சிய முறுவலும் அவன் உண்மையில் முதியவன்தானா என்ற சந்தேகத்தை ஏற்படுத்தியது அச்சுதமார்த்தாண்டனுக்கு. தொடர்ந்து வந்த புரவிகளில் அமர்ந்திருந்தவர்கள் வெளேரென்ற நீண்ட அங்கி போன்ற உடைகளுடன், இளைஞர்களாகத் தெரிந்தார் கள். அவர்களது சிகை முன்புறம் மழிக்கப்பட்டுப் பின்புறம் இறுக்கமாக முடிச்சிடப்பட்டிருந்தது. அவர் களது தோளில் மாட்டப்பட்டிருந்த விற்களும், இடையில் தரித்திருந்த வாட்களும் அசாதாரண நீளத்தில் தெரிந்தன. புரவியின் இருபக்கங்களிலும் அம்புகள் நிறைந்த தோற்பைகள் தொங்கிக் கொண்டிருந்தன.

ரதத்தை நெருங்கிய அந்த முதியவன் கச்சையிலிருந்து ஓலைக்குழல் ஒன்றை எடுத்து நீட்டினான் “சேரர்

உபதலைவரே, நான் சோழநாட்டவன். பெயர் பூபேந்திரன். சேரலாதர் அளித்த ஓலை இதிலிருக்கிறது. ரதத்தை அப்படி மரங்களின் நிழலில் நிறுத்துங்கள். வருபவர்களை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம்" என்றான் முறுவலுடன். தன் பின்னால் நின்றவர்களில் ஒருவனை அழைத்து உபதலைவனுக்கு உதவவும், அவன் காயத்தைக் கவனிக்கவும் உத்தரவிட்டான்.

தானே ரதத்தின் புரவிகளின் கயிற்றைப் பிடித்துக் கானகத்து மரமொன்றின் அடியில் நிறுத்தியவன் அவனை வியப்பும் திகைப்புமாக வெறித்துக் கொண்டிருந்த இளவரசியையும், ரவிவர்மனையும் நோக்கி ஒருமுறை முறுவலுடன் தலையசைத்தான் "சேரலாதர் இளவலும், இளவரசியும் மன்னிக்க வேண்டும். என் சீடர்களை அழைத்து வரச் சற்றுத் தாமதமாகிவிட்டது." என்று பின்னால் நின்றவர்களைச் சுட்டிக்காட்டியவன் திரும்பி மீண்டும் பாதையை அடைந்தான்.

தன் சாம்பல் நிறப் புரவிமீது தாவியேறியவன் உத்தரவுப்படி அவன் சீடர்கள் இரு வரிசைகளில் தங்கள் புரவி களை நிற்கவைத்தனர். அவர்கள் தோள்களில் மாட்டப்பட்டிருந்த நீண்ட விற்கள் முன்னால் வந்தன. ஒன்பது கணுக்களுடன் தெரிந்த அவை கோதண்ட வகையைச் சேர்ந்ததாக இருந்தன. அவர்கள் முன்பாகத் தன் புரவியை உலவ விட்ட முதியவன் "சீடர்களே, இது பாடசாலையில் அளிக்கப்பட்ட பயிற்சிகளுக்கான நேரிடையான சோதனை. எனவே கவனமாகச் செயல்படுங்கள். எதிரில் வருபவர்கள் பாதை குறுகலாக இருப்பதால் நீண்ட வரிசையில் அணிவகுப்பு முறை ஏதுமின்றி வருகிறார்கள். அம்புகளைக் குறிவைப்பதில் கைசிதமோ, சாத்விதமோ, வத்ஸகர்ணமோ கூடாது. அனைத்தும் ஸ்கந்தமாயிருக்க* வேண்டும்... சிலர் கவசங்களை அணிந்திருக்கிறார்கள். ஈழத்து வீரர்

★ ஸ்கந்தம் - தலை, கால், நடுப்பகுதி இவற்றை விடுத்து கழுத்துக்கு மட்டும் குறிவைப்பது - தனுர்வேதம் வரி 1806

கவசங்களுக்கு இணைப்பு விலாப்புறத்தில் இருக்கும், நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். என் வேகத்தைக் கவனித்து எதிரில் வருபவர்கள் நெருங்கியதும் உங்கள் வாட்களை எடுத்துக் கொள்ளுங்கள். இரு வரிசைகளில் வருபவர்களை ஊடுருவிவிட வேண்டும். ஆனால் இறுதிவரை செல்ல வேண்டாம்"

ஏதோ சீடர்களுக்கு உபதேசிப்பது போல் நிதானமாகத் தன் முறைகளை விளக்கிய முதியவன், திரும்பித் தன் வலப்புறம் கானகத்தினுள் மரங்களும்; செடி கொடிகளும் அசைவதையும், எழுந்த ஒலிகளையும் ஒருமுறை கவனித்துக் கொண்டான்.

ஈழத்து வீரர்களின் முன்னால் பாய்ந்து சென்று கொண்டிருந்த ரதம் கானகத்தினுள் மறைந்து விட்டதையும், புதிதாக ஒருவன் முன்னால் புரவியில் இருக்க, வெண்ணிற உடைகளில் பின்னால் விற்களை ஏந்தி நிற்பவர்களையும் கவனித்த விக்கிரமபாண்டுவின் முகத்தில் ஆத்திரம் மறைந்து சந்தேகச்சாயை பரவியது. புரவிகள் நெருங்கிக் கொண்டிருந்தன.

முதியவனின் வில் உயர்ந்தது. அவனது அடுத்த உத்தரவில் மற்ற விற்களிலிருந்தும் அம்புகள் பறக்கத் தொடங்கின. மூன்றாகவும், ஐந்தாகவும் கன வேகத்தில் ஒரே சீரான உயரத்தில் பாய்ந்த அம்புகள் மிகச்சரியாக ஈழத்து வீரர்களின் கழுத்துக்குக் குறிவைத்துப் பாய்ந்தன. சில கவசங்களின் இணைப்பில் பாய்ந்து உடைத்தன. முன்னால் பாய்ந்த தன் வீரர்கள் மளமளவெனச் சரிந்து விழுவதையும், அம்புகள் சரம்சரமாக மழைபோல் பாயத் தொடங்கிவிட்டதையும் கவனித்த விக்கிரம பாண்டு வீரர்களை முன்னேறவிட்டுப் புரவியை மட்டுப் படுத்தினான்.

அம்புகளைப் பறக்கவிட்டபடியே அந்த சாம்பல் நிறப் புரவியைத் தொடர்ந்து மற்ற சீடர்களும் முன்னேறினர். முதியவனின் விழிகள் கானகப்பகுதியையும், ஈழத்து

வீரர்கள் சரிந்து விழுவதையும், விக்கிரமபாண்டு பின் வாங்குவதையும் ஏக காலத்தில் கவனித்தபடியே வந்தன.

முன்னால் சென்ற வீரர்கள் முக்காலுக்கும் மேல் சரிந்துவிட்டதைக் கவனித்த விக்கிரமபாண்டு, கவச மணிந்தவர்களை முன்னால் செல்ல உத்தரவிட்டான். அவன் சிவந்த ராட்சத விழிகள் முதியவனைச் சந்தேகத் துடன் பார்த்தன. 'இவன் உண்மையில் முதியவன் அல்ல. அந்த வில்லைப் பிடிக்கும் முறை, அம்புகள் பறக்கும் இந்த வேகம்... அந்த சாம்பல் நிறப் புரவி... நீண்ட வாள்... இவனை இதற்கு முன்பாக எங்கோ பார்த்திருக் கிறோம். எங்கே...' என்ற சிந்தனை அவன் சித்தத்தில் ஓடி சட்டென்று நின்றது. அடுத்து அவன் முகத்தில் குரோதமும், ஆத்திரமும் கொழுந்து விட்டு எரியத் தொடங்கின.

அதே கணத்தில் ஈழத்தவரை நெருங்கிவிட்ட முதியவன் தன் வில்லைப் புரவியின் பக்கவாட்டில் தொங்கவிட்டு, தன் நீண்ட வாளை உருவி, வானை நோக்கி இருமுறை சுழற்றினான். அவன் சீடர்களின் விற்களும் புரவிகளின் பக்கவாட்டில் சென்று பதுங்கின. அவர்கள் இடையிலிருந்த வாட்களும், வெளிவந்தன.

முதியவன் அடுத்து செய்த காரியம் விக்கிரம பாண்டுவைத் திகைக்க வைத்தது. வாள் பிடித்த கரத்தைத் தன் வாயருகே குவித்த முதியவன் விசித்திரமான ஓர் ஒலியெழுப்பிக் கூவினான். இரு கணங்கள் கழித்து கானகத்தினுள்ளேயிருந்து அந்த ஒலிக்கு பதிலாகப் பிளிறல் ஒன்று அந்தப்பகுதியே அதிரும்படி பலமாக ஒலித்தது. மரமொன்று முறிபடும் ஒலியும் தொடர்ந்து கேட்டது. முன் தினம் விக்கிரமபாண்டுவின் உபதலை வனைச் சுழற்றி வானில் எறிந்த அதே களிறு கானகத்தை விட்டு வெளியே வந்தது. அதன் துதிக்கையில் புதிதாக முறித்த மரம் ஒன்று கிளைகளும், இலைகளுமாக ஊசலாடியது. வந்த வேகத்தில் விக்கிரமபாண்டு நின்ற இடத்திற்குப் பின் வரிசையை நோக்கிப் பூமிஅதிர அரை

ஓட்டமாக விரைந்த அந்தக் களிறு, ஈழத்து வீரர்களை நெருங்கி, மரத்தைச் சுழற்றிச் சுழற்றித் தாக்கத் தொடங்கியது. வீரர்கள் எறிந்த ஈட்டிகளும், அம்புகளும் மரத்தின் கிளைகளால் தடுக்கப்பட்டுத் தொங்கின. ஒன்றிரண்டு களிற்றின் உடலிலும் பாய்ந்தன. நெருங்கியவர்களைக் காலால் துவைத்தும் துதிக்கைக்கும் தந்தங்களுக்கும் இடையே இறுகப் பற்றிய மரத்தால் தாக்கியும் அரக்கன் போல் அழிக்கத் தொடங்கியது அந்தக் களிறு.

முதியவனும் அவன் சீடர்களும் முன் வரிசையைப் பிளந்து கொண்டு ஊடுருவி ஈழத்து வீரர்களைத் தாக்கத் தொடங்கினர்.

சீடர்களின் வாட்கள் ஒரே சீராகச் சுழன்று சுழன்று ஈழத்து வீரர்களை நோக்கிக் கனவேகத்தில் இறங்கின. இரண்டு மூன்று சுழற்சிகளில் ஈழத்து வீரர்களின் வாட்களைத் தடுத்துப் பாய்ந்த சீடர்களின் வாட்கள் கனவேகத்தில் கழுத்தில் பதிந்து இழுக்கப்பட்டும், தோள் பகுதியில் கவசங்களைப் பிளந்தும், விலாப்பகுதியில் பாய்ந்தும் வெளிவந்தன. இரண்டு மூன்று வீரர்களை ஏக காலத்தில் எதிர்த்த சீடர்கள் போராடிய விதத்தைக் கவனித்தபடியே வந்த முதியவனின் சிரம் திருப்திக்கு அறிகுறியாக அசைந்தது. வாட்கள் மோதும் ஒலிகளும், பறந்து வந்த ஈட்டிகள் தடுக்கப்பட்டு நிலத்தில் விழும் ஒலிகளும், வீரர்களின் கூக்குரல்களும் அந்தப்பகுதியில் பலமாகக் கேட்கத் தொடங்கின. பின் வரிசையில் அந்தக் களிறு தாக்கிய பகுதியில் வீரர்களின் கூக்குரல் இன்னும் பலமாக ஒலித்தது.

முதியவனின் விழிகள் விக்கிரமபாண்டு நின்ற இடத்தையும், அவன் தன் சீடர்களைத் தாக்கிக் கொண்டிருப்பதையும் கவனித்தன. அடுத்து அந்த சாம்பல் நிறப் புரவி முன்கால்களை உயர்த்தி எதிரில் வந்தவர்களை விலக்கிப் பாய்ந்தது. இரண்டு மூன்று கணங்களில் விக்கிரமபாண்டுவை நெருங்கிய முதியவன்

தன் சீடனை விலக்கி விட்டுத் தன் நீண்ட வாளை உயர்த்தி, விக்கிரமபாண்டுவின் வாளைத் தடுத்தான். ஆவேசமும் ஆத்திரமும் பொங்க முதியவனை நோக்கிய விக்கிரம பாண்டுவின் அகன்ற பட்டையான வாள் தன் முழு கனத்தையும் பயன்படுத்தி முதியவனின் நீண்ட வாளைத் தாக்கத் தொடங்கியது.

முதியவனின் வாள் சுழன்ற விதமே அலாதியா யிருந்தது. அதிக சுழற்சிகளோ, வீச்சுக்களோ இன்றி நேர் செங்குத்தாகப் பாய்ந்த அந்த நீண்ட வாளின் வேகம் அபரிமிதமாக இருந்தது. கண்களைத் துருவிவிடுவதைப் போல் முகத்துக்கு எதிரிலும், கழுத்தினருகிலும் தோன்றித் தோன்றி மறைந்த அந்த வாளின் வேகத்தையும், அது சுழன்ற முறையையும், வாள்பிடித்த கரத்தின் விரல்களில் தெரிந்த முத்திரை மோதிரத்தையும் கண்ட விக்கிரமபாண்டுவின் சந்தேகம் உறுதிப்பட்டதால், உக்கிரமாகத் தன் வாளை உயர்த்தித் தாக்கத் தொடங் கினான். ஆனால் எந்தப் பக்கத்திலிருந்து தாக்கினாலும், முன்னதாகவே வந்து உறுதியாகத் தடுத்த அந்த நீண்ட வாளைத் தாண்டிச் செல்ல இயலாததையும், எதிரில் நிற்பவன் ஏதோ சீடனுக்குப் பயிற்சியளிக்கும் ஆசான் போல் முறுவலுடன் வாளை வீசுவதையும் கண்ட வனுக்கு ஆத்திரம் இன்னும் உயர்ந்தது. பின்புறமிருந்து எழுந்த தன் வீரர்களின் கூக்குரல்களும், முன்வரிசைகளில் சரிந்து விழுந்து கொண்டிருந்த வீரர்களின் அவலக் குரல்களும் அவன் ஆத்திரத்தை அதிகப்படுத்தியிருக்க வேண்டும். தன் பட்டையான வாளை முதியவன் வாளுட ன் உக்கிரமாக மோதவிட்டபடியே, இடது கரத்தால் இடையிலிருந்த குறுவாளை எடுத்து குறுக்கே பாய்ச்ச முயன்றான் விக்கிரமபாண்டு.

ஆனால் கண்ணிமைக்கும் நேரத்தில் விலகிய முதியவனின் நீண்ட வாள் பக்க வாட்டில் சரிந்து இறங்கி குறுவாள் பிடித்த கரத்தில் பாய்ந்து இழுபட்டது. அதே

வேகத்தில் உயர்ந்து விக்கிரமபாண்டுவின் கழுத்திலும் ஊடுருவி வெளியேறியது.

சிவந்த விழிகள் திகைப்பில் அப்படியே உறைந்திருக்க, அலறுவதற்காகத் திறந்த வாய் கழுத்தின் நரம்புகள் வெட்டப்பட்டதால், சத்தம் வெளிவராமல் அப்படியே திறந்திருக்க, தன் புரவியிலிருந்து சரிந்தான் விக்கிரம பாண்டு.

அதே கணத்தில் ஏகசக்ர நகரத்துக் கோட்டையிலிருந்து வந்த பாதையில் புரவிகள் பல பாய்ந்து வந்தன. முன்னால் பாய்ந்த புரவியிலமர்ந்து வாளைச் சுழற்றிய படியே வந்த அச்சுதமார்த்தாண்டனுக்கும், அவனுடன் வந்த வீரர்களுக்கும் அதிகம் போராட வேண்டிய அவசியமில்லையென்பது புரிந்தது. பின்னால் தாக்கிக் கொண்டிருந்த களிற்றை எதிர்த்த வீரர்களையும், அடுத்து நின்றவர்களையும் அழித்தபடியே, முன்னால் சீடர் களுக்கு உதவத் தன் வீரர்களுக்கு உத்தரவிட்டு, விக்கிரம பாண்டு விழுந்து கிடந்த இடத்தை நெருங்கிய அச்சுத மார்த்தாண்டன் எதிரில் நின்ற சாம்பல் நிறப்புரவியையும், முதியவனையும் சந்தேகத்துடன் பார்த்தான். வாள் பிடித்த கரத்திலிருந்த முத்திரை மோதிரம் அவன் சந்தேகத்தை உடைத்து, எல்லையற்ற பணிவை அவன் முகத்தில் படரவிட்டது.

புரவியை விட்டுக் குதித்த அச்சுதமார்த்தாண்டன் முகத்திலும் அடுத்து உதிர்ந்த அவன் சொற்களிலும் அதீதப் பணிவே நிரம்பிக் கிடந்தது.

“பூபேந்திரச் சோழர், சோழ பாண்டியருக்கு நேரிமங் கலத்து அச்சுதமார்த்தாண்டன் வந்தனம்...” அவன் மேற் கொண்டு தொடருமுன் அவன் அருகிலிருந்த தரைப் பகுதி அதிர்ந்தது.

அச்சுதமார்த்தாண்டனைவிட அதிகப் பணிவோடு பூமி அதிர வந்து நின்று மண்டியிட்டது அத்திவாரணம்.

அதன் உடலெங்கும் பாய்ந்திருந்த ஈட்டிகளும் அம்பு களும் குருதியை வழியவிட்டபடியிருக்க, அதன் செவ்வரி யோடிய சிறு விழிகள் பூபேந்திரச் சோழனை அன்புடன் பார்த்தன. அதன் துதிக்கையும் அவனை நோக்கி நீண்டது. ஒருகையால் அதைப் பற்றியபடி புரவியிலிருந்து கீழே குதித்த பூபேந்திரச் சோழன் அத்திவாரணத்தை நெருங்கி அணைத்துக் கொண்டான். ஏதோ தன் தந்தை, சக்கரவர்த்தி ராஜேந்திர சோழனையே அணைத்துக் கொண்டதைப் போன்ற பரவசம் அவன் முகத்தில் தெரிந்தது.

அச்சுதமார்த்தாண்டனும், அவன் வீரர்களும், ரதத்திலிருந்து இறங்கி வந்து உப தலைவனுடன் நின்ற பாஸ்கர ரவிவர்மனும், இளவரசியும், ஏன், முன்புறம் மழிக்கப்பட்ட தலையுடன் கைகளில் குருதி வழிந்த வாட்களை ஏந்த நின்ற சீடர்களும் கூட வியப்புடனும், பிரமிப்புடனும் பார்த்திருக்க, அத்திவாரணத்தை அணைத்தபடி அதன் செவியருகே வெகு நேரம் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே நின்றான் பூபேந்திரச் சோழன், சோழ பாண்டியன், சக்கரவர்த்தி ராஜேந்திரச் சோழனின் மூத்த இளவல் விஜய ராஜேந்திரன் என்று பட்டம் பெற்ற முதல் ராஜாதிராஜ சோழன்..

# 25. சம்மதம் தானா?

**கே**ரள கங்கையென்று அழைக்கப்பட்ட பெரியாற்றின் தென்கரையில் பார்வைக்குச் சிறியதாகத் தெரிந்தாலும், பலமான கோட்டையாகக் காட்சியளித்தது நேரிமங் கலத்துக் கோட்டை. சிவகிரி மலைச்சிகரத்தில் உற்பத்தி யாகி, ஏராளமான காட்டாறுகளையும் இணைத்துக் கொண்டு, நேரிமங்கலத்தை அடையும் முன்பாகத் தொட்டியாற்றுடன் இணைந்து மேற்கு நோக்கி அதிவேக மாகப் பாய்ந்த பெரியாற்றைத் தென்புறத்தில் அகழியாகக்

கோட்டையைச் சுற்றி மீண்டும் மேற்கு நோக்கி ஆற்றோடு கலக்க விட்டிருந்தான் அச்சுத மார்த்தாண்டன். கோட்டைக்கு உள்ளே வடக்கு நோக்கி அமைக்கப் பட்டிருந்த மாளிகையும், அதை ஒட்டி அமைக்கப் பட்டிருந்த படைத்தலைவர்கள் இல்லங்களும் நேர்த்தி யாக அமைந்திருந்தன. ஒன்றரைக்காத சுற்றளவே இருந்த நேரிமங்கலத்தின் தென்பகுதி முழுக்கப் படை வீரர்களும், போர்ப்புரவிகளும், ரதங்களும், ஆயுத சாலைகளுமாகவே தெரிந்தது. கிழக்கிலும் மேற்கிலும் இருந்த வாயில்களில் காவல் கடுமையாகவே தெரிந்தது. அன்னியர் எவரும் கோட்டைக்குள் அனுமதிக்கப்படுவதில்லையாதலால் அகழியின் குறுக்கே கிடந்த அகன்ற மரப்பாலத்தின் வழியே சென்று வந்து கொண்டிருந்த மக்களையும், கோட்டைக்கு வெளியே பொருள்களை விற்றுக் கொண்டிருந்த கானகத்து மக்களையும், தூரத்தில் நீண்டு வளைந்து சென்ற கானகத்துப் பாதையும் வெறித்தபடி மேல்தளத்தின் உப்பரிகையில் நின்று கொண்டிருந்தான் சோழ இளவல் பூபேந்திரச் சோழன்.

அவன் சிந்தனையில் குறுக்கிடத் துணிவின்றி, சற்றுப் பின்னால் நின்ற அச்சுத மார்த்தாண்டனின் முகத்தில் சற்றுப் பதற்றமும், விழிகளில் குழப்பமும் தெரிந்தது. அமைதியின்றித் தவித்தவனை நோக்கி நிதானமாகத் திரும்பிய பூபேந்திரனின் விழிகள் அவனைத் துருவி விடுவதைப் போல் பார்த்தன. அவன் கேள்வியும் பரம நிதானமாக வந்தது "மார்த்தாண்டரே, உங்கள் படைபலம் எவ்வளவு?"

"ஆறாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள் பிரபு. இருநூறு போர்க்களிறுகளும், முன்னூற்றுக்கும் சற்றுக் குறைவாகப் போர் ரதங்களும் இருக்கின்றன"

"காழிவர்மன் ஏன் இன்னும் தாமதிக்கிறான் தெரிந்ததா?"

“இல்லை பிரபு. கோலாத்திரி மலைக்குச் சென்ற நம் வீரர்கள் இன்னும் திரும்பவில்லை பிரபு”

“மானாபரணனின் திட்டப்படி காழிவர்மன் பூந்துறை நாட்டை அடைந்திருக்க வேண்டும். ஆனால் இன்னும் கோலாத்திரி மலையை விட்டு அவன் அசைய வில்லை”

“பிரபு. அவன் படைத்தலைவன் மானாபரணனின் திட்டங்களை விரும்பவில்லை என்றும், ஆனால் படை யெடுப்பில் கலந்து கொள்ளச் சம்மதித்ததாகவும் கொல்லத்துப் பரதவர்கள் தெரிவித்தார்கள். அவன் நான்கு தினங்களுக்கு முன் வடக்கே சாளுக்கிய எல்லையை நோக்கிச் சென்றதாகவும் செய்தி வந்தது. காரணம் தெரியவில்லை. உடன் அந்த முகுந்தனும் சென்றதாகத் தெரிகிறது”

“சாளுக்கிய எல்லைக்கா...?” என்ற இளவலின் விழிகள் பளிச்சிட்டன. ஏதோ புரிந்ததற்கடையாளமாகத் தலை யசைத்தவன் “சரி, மார்த்தாண்டரே, உமது உப தலைவன் நிலை எப்படியிருக்கிறது?” என்றான். இளவலின் முகத்தில் முறுவல் சற்று விரிந்திருந்தது.

“ஒன்றும் கவலைப்படுவதற்கில்லை இளவரசே, சாதாரணக் காயம்தான். இரண்டு மூன்று தினங்களில் குணமாகிவிடும்” மார்த்தாண்டனுக்கு இளவல் நகைப்பதன் காரணம் அவனது அடுத்த கேள்வியில் புரிந்தது.

“உமது உபதலைவர் எத்தனை காலமாக இங்கிருக்கிறார்?”

சற்று விழித்த அச்சுதமார்த்தாண்டன் “மூன்று ஆண்டு களுக்கு மேலிருக்கும், சேரலாதர்தான் என்னிடம் உதவிக்காக அனுப்பி வைத்தார். அவரது பெயர் விஜயன் என்று தெரிவித்தார். அவ்வளவுதான்” என்றான் குழப்பம் தொனித்த குரலில்.

“அவர் இங்கு வருமுன் எங்கிருந்தார் என்பது தெரியுமா?” இளவலின் முறுவல் விரிந்திருந்தது.

“தெரியாது பிரபு. எங்கிருந்தார்...?” என்றான் தயக்கத்துடன்.

“கீழைச் சாளுக்கிய நாட்டில்..” சோழ இளவலின் பதில் மீண்டும் நகைப்புடன் வந்தது.

அச்சுதமார்த்தாண்டன் திகைத்தான்.

“அவர் யாரென்பது தெரியுமா உமக்கு? அவருடைய முழுப்பெயர்...”

இளவல் முடிக்குமுன்பாக வாயிலிலிருந்து கரகரத்த குரலொன்று ஒலித்தது “விஷ்ணு வர்த்தன விஜயாதித்த விக்கியண்ணன்” என்று.

திரும்பிய அச்சுதமார்த்தாண்டன் எதிரே சலனமற்ற முகத்துடன் உபதலைவன் வாயிலில் நின்றான். அருகில் சாளுக்கிய வீரனாகத் தெரிந்த ஒருவனும் நின்றான்.

உருவி விடப்பட்ட சாட்டை போல் நெடுநெடுவென்ற உயரத்துடன் நின்ற உபதலைவனின் தோற்றம் வேறாகவே தெரிந்தது அச்சுதமார்த்தாண்டனுக்கு. சாளுக்கியர்களுக்கே உரிய எடுப்பான நாசியும், வலுவான கரங்களும், விலாப்புறத்துக் காயத்தை அலட்சியப்படுத்தி நேராக நின்ற முறையும், வல்லூறைப்போல் எப்போதும் தூரப்பார்வை பதிந்த விழிகளும் அதுவரை அவன் கவனிக்காத விஷயங்களாகத் தெரிந்தன.

தலையைத் தாழ்த்தி, ஒருமுறை சோழ இளவலை வணங்கிய உபதலைவன் “இளவரசே, நான் சோழர்களுக்குப் பரம எதிரியான சாளுக்கிய வம்சத்தில் வந்தவன்தான். ஜெயசிம்ம சாளுக்கியருக்கும், இப்போது சோழமன்னர் தம் மகளை மணமுடித்து, வேங்கியின் அரியணையில் அமர்த்திய ராஜராஜ நரேந்திரருக்கும் இளைய சகோதரன்தான். ஆனால்...”

"இவற்றையெல்லாம் ஏன் என்னிடம் முன்பே கூறவில்லை?" அச்சுத மார்த்தாண்டனின் குரலில் உஷ்ணம் தெரிந்தது.

"காரணமிருக்கிறது. அதைப்பிறகு கூறுகிறேன்" என்ற உபதலைவன் சோழ இளவலை நோக்கி மீண்டும் வின வினான் "நான் யாரென்பதை எப்படிக் கண்டறிந்தீர்கள் இளவரசே?"

பூபேந்திரச் சோழனின் முறுவல் விரிந்தது. "மலைப் பாதையில் நீங்கள் ரதத்தின் அருகே காயங்களுடன் நின்றபோதே கவனித்தேன். உங்கள் முகம் பழகிய முகமாகவே தெரிந்தது. உங்களை ரதத்தில் கிடத்தி சிகிச்சை அளித்த என் சீடன் அப்போதே தெரிவித்தான்... உங்கள் கழுத்திலிருந்து அங்கியில் மறைந்திருந்த சங்கிலியில் சாளுக்கியரின் பதக்கம் இருக்கிறதென்று"

உபதலைவனின் விழிகளில் வியப்பு பரவியிருந்தது. "சோழ இளவலின் விழிகளிலிருந்து எதுவும் தப்புவ தில்லை" என்று முணுமுணுத்தவன் தொடர்ந்தான் "ஆம் இளவரசே... சற்று நான் கூறுவதைக் கேளுங்கள். மார்த் தாண்டரே, நீங்களும்தான்" என்றவன் சற்று நிதானித் தான்.

"இளவரசே, மானியகடகத்திலும் வேங்கியிலும் நடந்த போர் நினைவிருக்கிறதா உங்களுக்கு?" உபதலைவனின் குரல் வெகுதூரத்திலிருந்து ஒலித்தது. விழிகள் எங்கோ வெறித்தன.

"நினைவிருக்கிறது. உக்கிரமான போர் அது. மூன்று தினங்கள் தொடர்ந்து நடந்த போரில் சோழமன்னரும் படைத்தலைவரும் மட்டுமல்ல, ராஜராஜ நரேந்திரரும் கலந்து கொண்டார். சாளுக்கிய ஜெயசிம்மனின் பெரும்படை மானியகடகத்தைத் தாண்டி வெகுதூரம் பின்வாங்கியபடியே போரிட்டது"

"ஆம்.. சோழ மன்னரையும், அவர் படைத்தலைவர் களையும் மேற்கே இழுப்பதற்காக ஜெயசிம்ம சாளுக்கியன் போட்ட திட்டம் அது. அதே நேரத்தில் வேங்கியைத் தாக்கியழிக்க கங்க மன்னன் அனந்தவர் மனுக்கும், ஒட்டர நாட்டு இந்திரதத்தனுக்கும் ஓலை யனுப்பியிருந்தான் ஜெயசிம்மன். கிருஷ்ணா நதியின் வடகரையிலும், வேங்கியின் தெற்கு எல்லையிலும் அவர்கள் படைகள் தயாராக இருந்தன. ஆனால் ஜெயசிம்மன் அனுப்பிய ஓலை என்னிடம் சிக்கியது"

"பிறகு?"

"ஓலையைக் கைப்பற்றினேன். ஓலையைக்கொண்டு சென்ற சாளுக்கிய வீரர்களைச் சிறையில் அடைத்தேன். விஜயாதித்தனுக்கு வேங்கியில் மக்களின் ஆதரவில்லை. எனவே, பாதுகாப்பற்ற வேங்கியையும், அதன் மக்களை யும் மொத்தமாக அழித்து விடும்படி எழுதியிருந்தான் ஜெயசிம்மன். வேங்கியை அழித்துவிட்டால் பின்னர் சோழர்களின் தலையீடு இருக்காது என்றும் நம்பினான். பின்னர் விஜயாதித்தனை அரியணையில் அமர்த்தி, கல்யாணபுரத்திலிருந்தும், உஜ்ஜயினியிலிருந்தும் புதிதாக மக்களைக் கொண்டுவந்து குடியமர்த்தவும், வேங்கியை முழுவதுமாக மேலைச் சாளுக்கிய நகராக மாற்றவும் திட்டமிட்டிருந்தான்." உபதலைவனின் முகத்தில் வருத்தம் தெரிந்தது.

"ஜெயசிம்மனின் திட்டங்கள் எனக்கு அநீதியாகத் தோன்றியது. நேருக்கு நேர் யுத்தம் செய்வதை விடுத்து, பாதுகாப்பற்ற நகரையும் மக்களையும் அழிப்பது அதர்மம் என்று எண்ணினேன். ஜெயசிம்மனின் ஓலைகளை மறைத்துவிட்டு, சோழர் படைத்தலைவருக்குச் செய்தி யனுப்பினேன். ஜெயசிம்மனின் உத்தரவுக்காக ஒட்டர மன்னனும், கங்கனும் இரண்டு தினங்களுக்குத் தாமதித் தார்கள். அந்த இரு தினங்கள் சோழர் படைத்தலை வருக்குப் போதுமானதாக இருந்தது. மானியகடகத்தில்

சாளுக்கியருடனான போர் முடியும் தருவாயில் சோழர் படைத்தலைவர் வேங்கிக்குத் திரும்பி விட்டார். வேங்கி காப்பாற்றப்பட்டது”

சோழ இளவல் தொடர்ந்தான் “ஆம். ஓலையொன்று வந்தாகவும், ஆனால் ஓலையிலிருந்த முத்திரை யாருடையது என்பது தெரியவில்லையென்றும் படைத்தலைவர் கூறினார்”

உபதலைவன் தன் கழுத்திலிருந்த சங்கிலியில் இணைத்திருந்த பதக்கத்தை வெளியே எடுத்தான். வட்டவடிவிலிருந்த பதக்கத்தின் நடுவில் இடதுபுறம் திரும்பிய சிம்மத்தின் உருவமும், சுற்றிலும் பிராகிருதம் கலந்த கன்னட மொழியின் லிபியும் பொறிக்கப்பட்டிருந்தன*

“எங்களது விஷ்ணுவர்த்தன மகாராஜாவின் குடும்பச் சின்னம் இது. வேங்கியின் மக்களைக் காப்பாற்ற என் சகோதரன் அரியணையேறுவதை நானே தடுத்தேன். ஜெயசிம்மனின் ஒற்றர்கள் விஷயத்தை அவனிடம் தெரிவித்து விட்டார்கள். என்னையும், கர்ப்பிணியாயிருந்த என் மனைவியையும், கொன்றுவிட ஜெயசிம்மன் உத்தரவிட்டான். என் சகோதரன் விஜயாதித்தனும் தடுக்க முயலவில்லை”

“எப்படித் தப்பினீர்கள்?” அச்சுதமார்த்தாண்டனின் தொனியில் மாற்றம் தெரிந்தது.

“இதோ நிற்கும் என் மெய்க்காவலன் உத்வியால் தப்பினேன். கொடுகு நாட்டின் வழியே தப்பி வணிகர்கள் உதவியுடன் சேரநாட்டுக்கு வந்தேன். சேரலாதரையும் சந்தித்து என் நிலையைக் கூறினேன். அவர் உங்களிடம் அனுப்பி வைத்தார்”

“உங்கள் மனைவி...?...” அச்சுத மார்த்தாண்டன் குரல் தயக்கத்துடன் ஒலித்தது.

---

★ மத்திய தொல்லியல் ஆய்வுத்துறை-கீழைச் சாளுக்கியர்களின் நாணயங்கள் [இந்திய தொல்லியல் நாணயங்கள் மற்றும் முத்திரைகள் தொகுப்பு]

"தற்போது ராஜராஜ நரேந்திரர் நிர்மாணிக்கும் ராஜமகேந்திரபுரத்தில்** சாதாரண மக்களோடு மக்களாக உயிர் பிழைத்திருக்கிறாள். அழகான பெண் மகவு ஒன்றும் பிறந்திருக்கிறது. இந்த என் மெய்க்காவலனின் குடும்பத்துடன் வாழ்ந்து கொண்டிருக்கிறாள்" உபதலைவன் தலை கவிழ்ந்து கிடந்தது.

ஓரிரு கணங்கள் கனத்த மௌனம் நிலவியது அங்கே.

சோழ இளவலின் முகத்தில் சற்று நேரம் சிந்தனை நிலவியது. ஓலைகளையும் எழுத்தாணியும் கொண்டுவர அச்சுதமார்த்தாண்டனிடம் உத்தரவிட்டவன் பரபர வென்று ஓலைகளில் எழுதத் தொடங்கினான்.

ஓலைகளை எழுதி முடித்துத் தன் முத்திரை மோதிரத்தை அழுத்தமாகப் பதித்தவன் உப தலை வனிடம் நீட்டியபடி "உபதலைவரே, நீங்கள் இனி இங்கிருக்க வேண்டாம். சேரலாதர் புதல்வியையும், இளவலையும் அழைத்துக் கொண்டு முல்லை நாட்டுக்குப் புறப்படுங்கள். என் சீடர்கள் நால்வர் உடன் வருவார்கள். எதற்கும் ஓலையை ஒருமுறை படித்துப் பாருங்கள்" என்றான்.

இரண்டடி முன்னால் வந்து ஓலையைப் பெற்றுக் கொண்ட உபதலைவனின் விழிகள் ஓலையின் வரிகளில் பதிந்த சில கணங்களில் பிரமிப்பில் விரிந்தன. நிமிர்ந்து

---

★★ இப்போது ராஜமுந்திரி என்று அழைக்கப்படுகிறது.

[சுசீந்திரம், கோட்டாறு பகுதி] சுந்தர சோழ சதுர்வேதி மங்கலம் அருகே சர்வலோக சபை விஷ்ணுவர்த்தன விஜயாதித்த விக்கியண்ணன் அளித்த கொடை கல் வெட்டாக உள்ளது - திருவாங்கூர் ஆர்க்கியாலஜிகல் சீரிஸ் தொகுதி 4-பக்கம் 134 மற்றும் 1896 கல்வெட்டுகள் எண்.44

"வேள்குலச் சளுக்கியர் வல்லவர் முதலாய் வணங்கி வீற்றிருந்து தராதலம் படைத்த திக்கேழும் துதிகெழு செயங்கொண்ட சோழ னென்னும் மதிகெழு கோவிராச உடையார் ஸ்ரீ இராஜாதிராஜ தேவர்க்கு..." -இராஜாதி ராஜ சோழன் மெய்கீர்த்தி.

சோழ இளவலை நோக்கியவன் “இளவரசே, இது... இது...” என்று திணறினான்.

“ஆம். அது என் உத்தரவுதான். முல்லை நாட்டையும் கோட்டாற்று நிலைப் படையையும் ஏக காலத்தில் கவனிக்க விழுப்பரையருக்குச் சற்று சிரமமாக இருக்கிறது. எனவே, உம்மைக் கோட்டாற்று நிலைப்படைக்குத் தண்டநாயகராக நியமித்திருக்கிறேன். சோழ மன்னரின் சம்மதத்துடன் முறையான பட்டயம் விரைவில் உங்களுக்குக் கிடைக்கும். அது மட்டுமல்ல...”

உபதலைவன் விழிகளின் தூரப்பார்வை சற்றுக் கலங்கி சோழ இளவலின் மீது பதிந்து கிடந்தது.

“அது மட்டுமல்ல. ராஜமகேந்திரபுரத்திலிருக்கும் உமது மனைவியையும் குழந்தையையும் நீங்கள் கோட்டாற்றை அடைந்த இரு தினங்களில் அழைத்து வந்து உங்களிடம் சேர்க்க, உமது மெய்க்காவலனுடன் என் வீரர்களையும் அனுப்பி வைக்கிறேன். நீங்கள் இன்றே முல்லை நாட்டுக்குப் புறப்படலாம்... உங்களுக்குச் சம்மதம்தானே?” என்றான் சோழ இளவல்.

தலையசைக்கவும் மறந்து விஷ்ணுவர்த்தன விஜயாதித்த விக்கியண்ணன் அடித்து வைத்த சிலையாகவே நின்றிருந்தான்.

# 26. காக்கும் தர்மம்

**அ**ந்த நீள்வட்டமான முகத்தில், அடர்ந்த புருவங்களின் நடுவேயிருந்து நீண்ட திலகமும், அதே தூரப் பார்வை இன்னும் கூர்மையுடன் பளபளக்க, மெல்லிய இருப்புவலை போன்ற அங்கியுடன், தன் உடை வாளையும் தரித்து, ராஜரீதியான உடையுடன் விடை பெற்றுக் கொள்ள வந்து நின்ற தன் உபதலைவனை, அதுவரை அந்தக் கோலத்தில் கண்டறியாத அச்சுத

மார்த்தாண்டனின் விழிகளில் பிரமிப்பு படர்ந்திருந்தது. சேரலாதனின் புதல்வியும், இளவல் பாஸ்கர ரவி வர்மனும் மட்டுமல்ல, சோழ இளவ்லும் கூட சற்று வியப்புடன் அவனை ஏறிட்டனர்.

அவன் முகத்தில் சற்றுத் தயக்கமும், குழப்பமும் தென் படுவதைக் கவனித்த சோழ இளவல் அதற்கான காரணத்தையும் யூகித்துக் கொண்டதால் "சாளுக்கிய இளவல் சேரலாதரை எண்ணித் தயங்குவதாகத் தெரிகிறது. கவலை வேண்டாம். அவரிடம் நான் கூறுகிறேன். மேலும், அவர் மேற்கொண்டிருக்கும் ஆலயப் பணி முடிந்தபின்னர் முல்லைநாட்டிலேயே தங்கப் போவதாகக் கூறியிருக்கிறார்" என்றான் முறுவலுடன்.

விஷ்ணுவர்த்தன விஜயாதித்த விக்கியண்ணன் தன் உடைவாளை உருவி, இருகரங்களாலும் தாங்கி, சோழ இளவலின் முன்பாக நீட்டினான். "இளவரசே, எதிரியின் குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருந்தாலும், எனக்கும் புது வாழ்வளித்த உங்களுக்கும், சோழ மன்னருக்கும் என் உயிர் உள்ளவரை நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். இனி சோழநாட்டுக்காகவே உயிர் வாழ்வேன். இந்த வாளின்மீது ஆணை" என்றான் உணர்ச்சி மிகுந்த குரலில்.

மெலிதாக நகைத்தான் பூபேந்திரச் சோழன். "நண்பரே, உணர்ச்சி வசப்பட வேண்டாம். தர்மத்தின் வழி உமக்கு வாழ்வளித்தது, நான் வெறும் கருவிதான்" என்றான் நகைத்தபடி.

"தர்மத்தின் வழியா?..."

"ஆம். மக்களைக் காக்க வேண்டியது மன்னனுக்குத் தர்மம். மன்னனைச் சேர்ந்தவருக்கும் அதுதான் கடமை. வேங்கியின் மக்களைக் காக்க உமது சகோதரனைத் தியாகம் செய்தீர். உம்மிடம் ஒப்படைத்த சேரலாதரின் புதல்வியையும் சேர இளவலையும் காக்க, உமது

உயிரையே தியாகம் செய்ய முன்வந்தீர்கள். அந்தத் தர்மம்தான் உமக்கு வாழ்வளித்தது. அவ்வளவுதான். சரி, நீங்கள் புறப்படலாம்" என்றான் சோழ இளவல்.

விடைபெற்றுக் கொண்ட விக்கியண்ணனின் ரதம் பார்வையிலிருந்து மறையும் வரை அங்கேயே நின்ற சோழ இளவல் அச்சுத மார்த்தாண்டனை நோக்கித் திரும்பினான்.

"அச்சுத மார்த்தாண்டரே, என் சந்தேகம் உண்மை யானால், மூஷிக மன்னன் சாளுக்கியர் உதவிக்காகக் காத்திருக்கிறான். சாளுக்கியரின் உதவிப்படை வந்ததும் பூந்துறை நாட்டின் வழியாக, மதுரையை நோக்கிப் பயணப்படுவான். அவனைத் தடுக்க வேண்டாம்"

"தடுக்க வேண்டாமா?..." அச்சுத மார்த்தாண்டன் கேள்வியில் திகைப்பு ஒலித்தது.

பதிலுக்கு, தரையில் மண்டியிட்டு அமர்ந்த சோழ இளவல், தன் குறுவாளை எடுத்துத் தரையில் கோடு களை வரைந்தான். நேரிமங்கலத்து மலைப்பகுதியையும், சற்று வடகிழக்கில் மதுரையையும், அருகிலுள்ள ஊர்களையும் கோடிட்டபடியே வரைந்தவன் மீண்டும் மலைப்பகுதியில் குறுவாளை அழுத்தினான் "அச்சுத மார்த்தாண்டரே, கவனியுங்கள். நாம் இங்கிருக்கிறோம். இந்த மலைக்கு நேர் கிழக்கே மலைச் சரிவில் ஆனையிறங்கல் கரையில் இறங்கினால் பாதை வடக்கே நோக்கிச் செல்கிறது"

சற்று நிதானித்த இளவல் தொடர்ந்தான் "அடி வாரத்திலேயே இரண்டு ஜாமப் பயணத்தில் உள்ள கரந்தை மலைக் கானகத்தை அடைந்து விடலாம். கானகத்து எல்லையில் பாசறை அமைத்துக் கொள்ளுங்கள். பூந்துறை நாட்டிலிருந்து காங்கேயத்தின் வழியாகக் காழிவர்மனது படைகள் ஸ்காந்தபுரத்தை* அடைந்து அங்கிருந்து தென்கிழக்காகச் செல்லும் பாதையில் மதுரையை நெருங்க முற்படும்"

★ தற்போது தாராபுரம் என்று அழைக்கப்படுகிறது.

அச்சுதமார்த்தாண்டன் புரிந்ததற்கடையாளமாகத் தலையசைத்தான்.

"காழிவர்மன் படைகள் ஸ்காந்தபுரத்தை விட்டுக் கிளம்புமுன்பாக, நீங்கள் புறப்பட்டு விட வேண்டும். காஞ்சியிலிருந்து படைத்தலைவர் அரையன் ராஜராஜன் வந்து கொண்டிருக்கிறார். காழிவர்மனது படைகள் வைகையைக் கடந்ததும் தாக்கப்படும்"

"காஞ்சியிலிருந்தா ?..." அச்சுதமார்த்தாண்டன் முகத்தில் வியப்பு தெரிந்தது.

"ஆம். வடக்கிலிருந்து நம் படைகள் பெரும்பாலும் திரும்பிவிட்டன. படைத்தலைவரது ஓலை கிடைத்த வுடன் நீங்கள் புறப்படலாம்" என்ற சோழ இளவல் எழுந்தான்.

அரண்மனைக்குத் திரும்பிய அச்சுதமார்த்தாண்டன் அப்போதே தன் வீரர்களை அழைத்துப் பயணத்துக்குச் சித்தமாகும்படி உத்தரவிட்டான். கோட்டையின் தென்புறத்திலிருந்த ஆயுத சாலைகளிலிருந்த வாட்களும், ஈட்டிகளும், விற்களும் அம்புகளும் கூர்பார்க்கப்பட்டு, வீரர்களின் தோள்களில் ஏறத் தொடங்கின. புரவிகள் பக்கவாட்டில் ஊசலாடிய ஆயுதங்களுடன் அணிவகுத்து நின்றன. அம்பாரிகளில் தாவியேறிய வீரர்கள் விற்களை யும், அம்புகளையும் பெரும் ஈட்டிகளையும் அடுக்கி வைத்துக் கட்டி, போர்க் களிறுகளை மலைப்பாதையில் இறக்கத் தொடங்கினர். போர் ரதங்கள் பரிசோதிக்கப் பட்டு, மலைப்பாதையில் கடகடவென்ற ஒலியுடன் போர்க் களிறுகளுக்கு முன்னால் சென்றன.

ஏற்பாடுகளைக் கவனித்துவிட்டுத் திரும்பிய அச்சுத மார்த்தாண்டன் அரண்மனை வாயிலில் சோழ இளவலின் சாம்பல் நிறப்புரவி சித்தமாக நிற்பதையும், சீடர்களின் புரவிகள் உடன் நிற்பதையும், ஒரு புரவிமீது விக்கிரமபாண்டுவின் உடல் கிடத்தப்பட்டிருப்பதையும் கவனித்தபடியே நெருங்கினான். அத்திவாரணம் தன் சிறு

விழிகளால் அனைவரையும் பார்த்தபடி, பரமசாதுவாக நின்று கொண்டிருந்தது.

**மு**தல் போர் அனுபவத்தைப் பெற்றுவிட்ட சீடர்களின் முகங்களில் உற்சாகம் தெரிந்தது. முன்னால் நின்ற சீடனை அழைத்து “நம்பி, கவனமாகக் கேள். இங்கிருந்து மலைப்பாதையின் மூன்றாவது வளைவில் கொடி வழியொன்று பிரிகிறது. அதன் முடிவில் அருவியொன்று விழும். அதன் மேற்கிலிருந்து செல்லும் பாதை நேராகக் கொல்லத்தின் அஷ்டமுடி ஏரியின் கரையில் கொண்டு விடும். ஏரியின் தெற்கே அரண்மனை இருக்கிறது. மற்றவற்றை நான் கூறியபடி செய்துவிடு” என்ற இளவல் இரு ஓலைக்குழல்களை அவனிடம் அளித்து “இதை மானாபரணனிடம் சேர்த்து விடு. பின்னர் அனைவரும் விழிஞத்தின் நெய்யாற்றங்கரையி லிருக்கும் மகாதேவர் ஆலயத்துக்கு வந்துவிட வேண்டும். உங்கள் ஆசார்யர் அங்கு காத்திருக்கிறார். அது மட்டுமல்ல; விழிஞத்தின் கோட்டைக்குள் சேரலாதரும், செல்வியும் காத்திருக்கிறார்கள். புரிந்ததா?” என்றான்.

செல்வியின் பெயரைக் கேட்டதும் நம்பியின் விழிகள் பளிச்சிட்டன.

வணங்கி விடைபெற்றுக் கொண்ட நம்பியும் சீடர் களும், விக்கிரமபாண்டுவின் உடலைப் புரவியொன்றின் மீது கிடத்திக் கொண்டு மலைப்பாதையில் விரைந் தார்கள்.

அடுத்த இரு நாழிகைகளில் அச்சுத மார்த் தாண்டனிடம் விடைபெற்றுக் கொண்டான் சோழ இளவல். சோழ இளவலுடன் அந்தச் சாம்பல் நிறப்புரவி நேரிமங்கலத்துக்கு நேர் தெற்கே நீண்ட பாதையில் ராஜநடை நடந்தது. அத்திவாரணம் தன் பெரும் உடலைத் தூக்கிக் கொண்டு அரை ஓட்டமாகப் பின்னால் சென்றது.

**கொ**ல்லத்தின் மாலை நேரத்து அழகு மனதை மயக்கும்படியாகத்தான் இருந்தது. சிறிய குன்றின் மீது

நேர்த்தியாகக் கட்டப்பட்டிருந்த அரண்மனையின் சர விளக்குகளும், பாவை விளக்குகளும், பந்தங்களும் ஏற்றப் பட்டதால் ஜகஜ்ஜோதியாக ஜொலித்துக் கொண்டிருந் தாலும், மேன்மாடத்து உப்பரிகையில் அமைதியின்றி அங்குமிங்கும் உலவியபடியிருந்த மானாபரணனின் உள்ளம் மட்டும் இருண்டே கிடந்தது. மாளிகையிலிருந்து கீழே இறங்கிய படிகளின் ஓரங்களில் நடப்பட்டிருந்த கம்பங்களில் பந்தங்கள் அனைத்தும் ஏற்றப்பட்டதால் கீழே இறங்கும் வழி நன்றாகவே புலப்பட்டது. ஆனால் மானாபரணனின் உள்ளத்தில் எழுந்த கேள்விகளையும், சந்தேகங்களையும் தீர்க்கும் வழி மட்டும் அவனுக்குத் தெரியவில்லை.

அரண்மனை உப்பரிகையிலிருந்து தெரிந்த அஷ்டமுடி ஏரியில் இயற்கை தன் அழகையெல்லாம் கொட்டிக் குவித்திருந்தது. மாலைக்கதிரவன் மறைந்தாலும், அவனது ஒளி இன்னும் மறையாததால் ஏரியின் நீர்ப்பரப்பு தகதகவெனப் பொன்னாலடித்தது போல் அசைந்து அசைந்து மின்னிக் கொண்டிருந்தது. தூரத்தே வலப் பக்கத்துக் கரையில் விரிந்த கானகத்திலிருந்து யானை களின் கூட்டம் ஒன்று ஏரியில் இறங்கி, துதிக்கைகளில் நீரை உறிஞ்சி, வாணம்போல் வீசியடித்தும், ஒன்றுடன் ஒன்று முட்டிக்கொண்டும் விளையாடிக் கொண்டும் இருந்தன. இடையே சிக்கிக் கொண்ட குட்டிகளின் பிளிறல்கள் பலமாக ஒலித்து, அரண்மனை வரையில் கூட மெலிதாகக் கேட்டன. நீர்ப்பறவைகள் பல கூட்ட மாகவும் தனித்தும் பறந்து கூடுதிரும்பும் அவசரத்தில் இரைகளைத் தேடிக் கொண்டிருந்தன. எப்போதும் தனித்தே பறக்கும் மீன்கொத்திகளில் ஒன்று, சிறகுகளைப் படபடவென்று அடித்து, நீர்ப்பரப்பின் மீது ஒரே இடத்தில் சற்று நேரம் அப்படியே நின்றது. பின் சடேரென்று செங்குத்தாக நீரில் இறங்கி, அலகில் பிடித்த கொழுத்த மீனுடன் கரையை நோக்கி வேகமாகப் பறந்தது. ஏரியில் மிதந்த பரதவர்களின் படகுகளும்,

கட்டுமரங்களும் கரைகளை நோக்கி விரைந்து ஓரிரு நாழிகைகளில் மொத்தமாக மறைந்தே போயின.

இயற்கை கடை விரித்திருந்த அஷ்டமுடி ஏரியின் அழகையோ, மாலைக் கதிர்களின் ஒளியில் மங்கலாகிக் கொண்டே வந்த நீர்ப்பரப்பின் பளபளப்பையோ, பறவைகள் இட்ட கூச்சல்களையோ கவனிக்கும் நிலையில் மானாபரணன் இல்லை.

ஈழத்திலிருந்து மாற்றி மாற்றி வந்த செய்திகள் அவன் சித்தத்தில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தியிருந்தன. தன் சகோதரியின் கணவனும் மன்னனுமான பராக்கிரம பாகுவுக்கு எதிராக, அவனது இளைய சகோதரன் விஜய பாகு சதி செய்வதாகவும், அதன் விளைவாக அனுராத புரத்திலும், பொலன்னருவா, தம்புல்லா பகுதிகளில் கலவரம் நடந்து கொண்டிருப்பதாகவும் ஈழத்திலிருந்து வந்த வணிகர்கள் கூறினாலும், அரச குடும்பத்தி லிருந்தோ, தன் படைத்தலைவர்களிடமிருந்தோ ஓலை எதுவும் வராததால் அவனது சித்தம் குழப்பத்திலிருந்தது. போதாக்குறைக்கு அவன் வருமுன்பாக இட்ட திட்டங் களின்படி அவனது மூத்த மகன் சிரீமேகனும், இளைய வன் பரக்கமனும் தாங்களே போர்க்கலங்களில் வீரர்களுடன் கொற்கையை நோக்கி, இரு தினங்களுக்கு முன்பாகவே புறப்பட்டு விட்டதாகவும் செய்தி வந்தது.

'உள்நாட்டில் நடந்து கொண்டிருப்பதாகக் கூறப்படும் கலவரங்களை இவர்கள் அறியாமலேயே கலங்களில் வீரர்களுடன் புறப்பட்டார்களா? அப்படியிருந்தாலும் தான் வந்து நேரில் உத்தரவிடவோ, ஓலையனுப்பவோ இல்லாமல் ஏன் ஈழத்தை விட்டுக் கிளம்பினார்கள்? எனக்கு ஏன் தெரிவிக்கவில்லை? படைத்தலைவர்களை யும், வீரர்களையும் முன்னதாக அனுப்பி வைக்காமல் இவர்களே ஏன் கொற்கைக்கு வர முயற்சிக்க வேண்டும்? மன்னர் பராக்கிரமபாகுவுக்கு எதிராகக் கலவரம் நடக்கிறதென்றால் நமக்குப் படைஉதவியை அனுப்ப மன்னர் சம்மதிப்பாரா? இந்த விக்கிரம பாண்டு

சேரலாதன் மக்களைக் கொண்டுவரச் சென்றான். ஏன் இன்னும் திரும்பவில்லை?' —மானாபரணனின் சித்தத்தைக் குழப்பிய கேள்விகளுக்கு விடையேதும் கிடைக்கவில்லை.

மானாபரணனின் சித்தம் குழப்பங்களால் அலை பாய்ந்து கொண்டிருக்க, விழிகள் அஷ்டமுடி ஏரியை வெறித்துக் கொண்டிருந்தன. நீர்ப்பரப்பின் மீது பரவிவிட்டிருந்த இருள் முதல் ஜாமம் தொடங்கி இரண்டு நாழிகைகள் ஓடிவிட்டதைத் தெரியப்படுத்தியது. பணியாளன் வந்து உணவுக்கு அழைத்ததையும் கவனிக்காத மானாபரணனின் விழிகள் சட்டென்று விரிந்தன.

ஏரியின் பரந்த நீர்ப்பரப்பின்மீது விளக்கொன்று பளிச்பளிச்சென்று புலப்பட்டது. மெல்ல அது மிதந்தபடி அரண்மனையின் படித்துறையை நோக்கி வரவும் தொடங்கியது. அவனைத் திகைக்க வைக்க அந்த விளக்கு மேலும் கீழுமாக இருமுறை ஆடியது. பின்னர் அரை வட்டமாகச் சுழன்று வளைந்து வளைந்து செல்லும் ஸர்ப்பத்தைப்போல் ஆடி சட்டென்று நின்றது. ஈழத்து அரச குடும்பத்தவரும், படைத் தலைவர்களும் பயன்படுத்தும் அந்த சமிக்ஞை மானாபரணனைத் திகைப்பை உயர்த்தி, அந்தப் பகுதியில் பார்வையை நிலைக்க வைத்தது.

சிறிது நேரத்தில் வருவது ஒரு படகு என்பதும் அதிலிருப்பவன் மீண்டும் அந்த சமிக்ஞையைச் செய்து காட்டுவதும் புலப்பட்டது மானாபரணனுக்கு. அரண்மனைப் படித்துறையை நோக்கி வந்த அந்தப் படகில் ஒரே ஒருவன் மட்டும் வெளேரென்ற நீண்ட அங்கி போன்ற உடையுடன் அமர்ந்திருப்பதும் புலப் பட்டது. படகு படித்துறையை நெருங்கிவிட்டதைக் கவனித்த மானாபரணன் வாயிலில் நின்ற வீரர்களை அழைத்து, அந்தப் படகையும் அதில் அமர்ந்திருப்ப வனையும் கவனித்து வரும்படி ஆணையிட்டான்.

வீரர்கள் நால்வர் அரண்மனைப் படிகளில் தடதடவென இறங்கிப் படித்துறையை நோக்கி விரைந்தனர்.

மேன்மாடத்து உப்பரிகையிலிருந்து மானாபரணன் கவனித்தபடியே நின்றிருக்க வீரர்கள் நால்வரும் அந்தப் படகை நெருங்கினர். நெருங்கியவர்கள் அடுத்த கணம் மீண்டும் திரும்பி அரண்மனையை நோக்கி ஓடி வரத் தொடங்கிவிட்டனர். படகு படித்துறையில் அலைகளில் ஆடியபடி அமைதியாக நின்றிருந்தது. அதில் அமர்ந் திருந்த வெண்ணிற உடையணிந்தவனும் அப்படியே அதில் அமர்ந்திருந்தான்.

தடதடவெனப் படிகளில் ஏறி, மேன்மாடத்துக்கு வந்த வீரர்களின் முகங்கள் ஏதோ பிசாசு அறைந்துவிட்டதைப் போலிருந்தது. மூச்சு வாங்க வந்து நின்றவர்கள் சட்டென்று ஏதும் கூற இயலாமல் திகைப்புடன் மானாபரணனை நோக்கி விழித்துக் கொண்டு நின்றனர்.

தன்னை நோக்கி விழித்துக் கொண்டு நின்ற ஈழத்து வீரர்களை நோக்கிய மானாபரணனின் விழிகளில் அனல் பறக்கத் தொடங்கியது.

"ஏன் விழித்துக் கொண்டு நிற்கிறீர்கள்? அந்தப் படகில் இருப்பவன் யார்?" என்று இரைந்தான் மானாபரணன்.

"பிரபு... பிரபு... அந்தப் படகில்..." வீரன் ஒருவனின் குரல் திணறியபடி ஒலித்தது.

"அந்தப் படகில் என்ன? ஏன் இப்படிப் பேயறைந்தது போல் நிற்கிறீர்கள்? அந்தப் படகில் என்ன இருக்கிறது?" மானாபரணனின் குரல் உயர்ந்து ஒலித்தது.

"அந்தப் படகில்... அந்தப் படகில் இளவல் விக்கிரம பாண்டு..."

"என்ன உளறுகிறாய்? விக்கிரம பாண்டு அந்தப் படகிலா? ஏதோ வெண்ணிற உடையுடன் யாரோ ஒருவன்தானே அமர்ந்திருக்கிறான்?" என்று இரைந்த மானபரணன் தன் உடைவாளை உருவிக் கொண்டு

படிகளில் தடதடவென இறங்கினான். வீரர்கள் தொடர்ந்து வந்தனர்.

மானாபரணன் அவசரமாக அரண்மனைப் படித் துறையை நோக்கி விரைவதையும், வீரர்கள் தொடர்ந்து செல்வதையும் கவனித்த மற்ற ஈழத்து வீரர்கள் பலரும் பின்தொடர்ந்து வரத் தொடங்கினார்கள்.

படித்துறையை அடைந்த மானாபரணன் படிகளில் இறங்கி, அலைமோதும் படியில் நின்றான். படகின் நடுவே பாதிவரை போர்வையால் மூடப்பட்டு விழிகள் வானத்தை நோக்கி வெறித்திருக்க, பாதிவரை வாய் திறந்திருக்க, முக்காலுக்கும் மேல் வெட்டப்பட்ட கழுத்துடன் வலது கரமும் வெட்டுப்பட்டுக் குருதி உறைந்து போயிருக்க, மரப் பலகையின் மீது கிடந்தான் ஈழத்து இளவல் விக்கிரம பாண்டு. மானாபரணனின் தலைக்குக் குபீரென்று ரத்தம் பாய்ந்தது.

படகின் மறுகோடியில் அமர்ந்திருந்தவனை எரித்து விடுவது போல் நோக்கினான் மானாபரணன். முன் புறத்தில் மழிக்கப்பட்ட தலையுடன், வெளேரென்ற நீண்ட அங்கியொன்றை அணிந்துகொண்டு, தோளில் பின்புறம் மாட்டித் தொங்கிய நீண்ட துணிப்பையுடன் மிக அமைதியான முகபாவத்துடன் கைகளைக் கட்டிக் கொண்டு மானாபரணனைக் கவனித்தபடி அமர்ந் திருந்தான் சீடன் நம்பி.

# 27. நம்பியின் உபதேசம்

**உ**ள்ளம் எரிமலையாக வெடித்துக் கொண்டிருந்தது மானாபரணனுக்கு. ஏற்கெனவே ஈழத்து வணிகர்கள் கூறிய செய்திகளால் கொதித்துக் கொண்டிருந்தவன், படகில் கிடந்த விக்கிரமபாண்டுவின் உயிரற்ற உடலைப் பார்க்கப்பார்க்க நிலைமை மேலும் சிக்கலாகி விட்டதையும், மன்னர் பராக்கிரமபாகு தன்னை

மன்னிக்க மாட்டார் என்பதும், ஈழத்து இளவலின் முடிவுக்குத் தானே காரணம் என்றும் சந்தேகிப்பார் என்பதும் புரிந்தது. மன்னருக்கு எதிராக சதியிலும் கலவரத்திலும் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் அவரது ஒன்றுவிட்ட சகோதரனிடம் தனக்குத் தொடர்பிருப்ப தாகச் சந்தேகிக்கவும் இது காரணமாகிவிடும் என்பதும் புரிந்தது அவனுக்கு.

ஈழத்துப் படைத்தலைவர்கள் போர்க்காலங்களில் காட்டும் சமிக்ஞையைக் காட்டி, படகில் விக்கிரம பாண்டுவின் உடலைக் கொண்டுவந்த அந்த இளம் வாலிபன் எதுவுமே நடவாதது போல் அப்பாவியான முகபாவத்துடன் அமர்ந்திருப்பதையும், சில தமிழகத்துத் துறவிகளைப் போல் முன்புறம் மழிக்கப்பட்ட தலையுடன் வெண்ணிற ஆடையுடன் இருப்பதையும் கண்டவனுக்கு, பல போர்களைக் கண்டவனும், மகா முரடனுமான விக்கிரம பாண்டுவை இந்தச் சிறுவனா கொன்றிருப்பான் என்ற சந்தேகமும் எழுந்தது.

சுற்றிலும் திகைப்புடன் நின்ற ஈழ வீரர்களும் கொதித்துப் போயிருப்பதையும், அவர்களது முணு முணுப்பு பலத்த குரல்களாக ஒலிக்கத் தொடங்கி விட்டதையும், எந்தக் கணத்திலும் அவர்களது குறுவாளோ, வாளோ, கரங்களிலிருந்த ஈட்டிகளோ அந்த வாலிபனை நோக்கிப் பாய்ந்துவிடலாம் என்பதையும் எண்ணியவன் எ்திரிலிருந்த வாலிபனை நோக்கி இரைந்தான்,

"வாலிபனே, யார் நீ? உண்மையைச் சொல், ஈழ இளவலைக் கொன்றது யார்? எப்படி இது நேரிட்டது? அவருடன் வந்த வீரர்கள் எங்கே?"

பதிலுக்கு முறுவலித்த சீடன் நம்'பி "மானாபரணரே, வீணாக இரைச்சலிட வேண்டாம். உமது கூக்குரலால் விக்கிரமபாண்டு எழுந்து வந்துவிட மாட்டார். முதலில் உமது வீரர்களைச் சற்றுப் பின்னால் தள்ளி நிற்கச்

சொல்லுங்கள். அவர்கள் கூச்சலில் நான் கூறுவதைத் தெளிவாகக் கேட்க இயலாது” என்றான்.

திரும்பிய மானாபரணன் தன் வீரர்களைப் பின்னால் நகர்ந்து செல்லவும், கூச்சலை அடக்கவும் உத்தர விட்டான்.

மீண்டும் நம்பியை நோக்கியவன் “இப்போது சொல். எப்படி இது நேர்ந்தது? ஈழத்து இளவலைக் கொன்றவன் யார்?”

அமர்ந்தபடியே வெகு நிதானமாகத் தன் நீண்ட அங்கியிலிருந்து ஓலையொன்றை எடுத்து நீட்டிய நம்பி “மானாபரணரே, விக்கிரம பாண்டுவைக் கொன்றது யார் என்பதும், அவருடன் வந்த வீரர்கள் என்னவானார்கள் என்பதும் இந்த ஓலையில் இருக்கிறது. முதலில் இதைப் படித்துப் பாருங்கள். இதனுடன் இன்னொரு ஓலையும் இருக்கிறது. அதைப் பிறகு தருகிறேன்” என்றான்.

இரண்டே எட்டில் நம்பியை நெருங்கி அவனிடமிருந்து பிடுங்காத குறையாக ஓலையைப் பறித்த மானாபரணன் தன் வீரர்களை நோக்கி நடந்து, பந்தங்களின் ஒளியில் ஓலையின் வரிகளின் மீது விழிகளை ஓட்டினான்.

ஓலை சுருக்கமாகவே இருந்தது. “மன்னர்களுக்கிடையே ஏற்படும் அரசுப் போட்டிகளுக்காகத் தனித்து வரும் மன்னனைச் சிறையெடுப்பதும், அவன் மக்களைக் கொன்று பணிய வைக்க முயல்வதும் அதர்மம் மானா பரணா. அந்த அதர்மத்தைச் செய்ய முயன்ற விக்கிரம பாண்டுவுக்கு அதற்கான தண்டனை வழங்கப் பட்டிருக் கிறது. தமிழகத்துக்கு அன்னியனான நீ தமிழகத்து அரசியலில் தலையிடுவதும் தவறு. எனவே உடனடியாக சேர நாட்டிலிருக்கும் உன் வீரர்களை அழைத்துக் கொண்டு ஈழத்துக்குத் திரும்பிவிடு, எச்சரிக்கை — பூபேந்திரச் சோழன்” என்றது ஓலை.

மீண்டும் படகை நெருங்கிய மானாபரணன் “வாலிபனே, யார் இந்த பூபேந்திர சோழன்?” என்றான் உக்கிரமான குரலில்.

"ஜடாவர்ம சுந்தர சோழ பாண்டியன் என்ற அபிஷேகப் பெயருடன் மதுரைக்கு மன்னனாக முடி சூட்டப் பட்டவர், சோழச் சக்கரவர்த்தி ராஜேந்திர சோழரின் மூத்த இளவல். விக்கிரமபாண்டுவையும் உடன் வந்த வீரர்களையும் அழித்தவர், சோழ ராஜாதிராஜர்" என்றான் நம்பி.

மானாபரணனின் முகத்தில் குரோதம் கொழுந்து விட்டது. உடன் சந்தேகமும் பரவியது "சோழர் படைகள் எதுவும் இந்தப் பகுதியில் நடமாடியதாகத் தெரிய வில்லையே. முல்லை நாட்டிலும், கோட்டாற்றிலும்தான் சோழர் படைகள் இருக்கின்றன. விக்கிரம பாண்டுவுடன் இருநூறு வீரர்களுக்கும் மேல் சென்றார்களே, அந்த பூபேந்திரனுடன் இந்த மலைப்பகுதியில் எத்தனை பேர் கொண்ட படை வந்தது?"

மானாபரணனின் பலத்த முணுமுணுப்புக்கு நம்பியிட மிருந்து பதில் வந்தது "சோழ இளவலுடன் இருபது பேர் வந்தார்கள். ஒரு களிறும் வந்தது"

"என்ன உளறுகிறாய்? வெறும் இருபது பேரா? களிறு வந்ததா?" மானாபரணனின் குரலில் குழப்பம் பலமாக ஒலித்தது.

"ஆம். நீர் கேள்விப்பட்டிருக்கலாம். நேரிலும் கண்டிருக்கலாம். அந்தக் களிற்றின் பெயர் அத்திவாரணம்" என்றான் நம்பி.

"இருபது பேருடன் வந்த பூபேந்திர சோழன் விக்கிரம பாண்டுவுடன் சென்ற ஈழ வீரர்களை அழித்தானா? நீ கண்டாயா?"

"ஆம், நேரில் கண்டேன். ஏனென்றால்..." இழுத்தான் நம்பி.

"மேலே சொல்..."

"அந்த இருபதுபேரில் நானும் ஒருவன்"

அவ்வளவுதான். மானாபரணனின் தலைக்குள் பூகம்பம் வெடித்தது. கரத்தில் பிடித்திருந்த வாளை ஓங்கிக் கொண்டு நம்பியின் மீது பாய்ந்தான். நம்பி எழுந்த வேகத்தில் அங்கிக்குள்ளிருந்த அவனது வாளும் வெளியே வந்து மானாபரணனின் வாளைத் தேக்கியது. உறுதியாக வாளை ஒரே இடத்தில் ஓரிரு கணங்கள் நிறுத்திய நம்பி, பின் வாளை உருவி எதிர்வெட்டாகச் சுழற்றி, மானா பரணனின் வாளைத் தடுத்து, மீண்டும் வாளின் பிடியருகே பதித்து, மணிக்கட்டை முறித்துவிடுவது போல் சக்கர வட்டமாகச் சுழற்றி உயர்த்தினான்.

பின்னுக்குத் தள்ளப்பட்டதாலும், படகின் ஆட்டத் தாலும் தடுமாறிச் சாய்ந்த மானாபரணன், விக்கிரம பாண்டுவின் உடல் மீதே விழுந்து உருண்டான். சற்று அசந்திருந்தாலும் வாள் தன் கரத்தை விட்டுப் பறந் திருக்கும் என்பதைப் புரிந்து கொண்ட மானாபரணன் முகத்தில் திகைப்பு பரவியது. ஸ்திரமாகக் கால்களைப் படகில் ஊன்றி, திடமாக நின்ற நம்பி முறுவலுடன் மானாபரணனின் அடுத்த அசைவைக் கவனித்தபடி நின்றான்.

அதே கணத்தில் சற்றுத் தொலைவில் நின்றிருந்த ஈழ வீரர்கள் வாட்கள் மோதும் ஒலியெழுந்ததும் பெரும் கூச்சலுடன் படகை நோக்கி ஓடிவரத் தொடங்கினர். ஆனால் அடுத்து நேர்ந்தது இன்னும் விபரீதம்.

ஈழ வீரர்கள் கூச்சலிட்டபடி படித்துறையை நோக்கி அடியெடுத்த அதே கணத்தில் அஷ்டமுடி ஏரியின் இடப்புறம் சோலையாக வளர்ந்திருந்த மரக் கூட்டங் களிடையேயிருந்து புரவிகள் பல வெளிவந்தன. அதற்கும் முன்னால் விர்விர்ரென்று காற்றில் ஒலியெழும்ப அம்புகள் கூட்டம் கூட்டமாகப் பாய்ந்து, ஈழ வீரர்களின் மார்பிலும், கழுத்திலும், தோள்களிலும் பாய்ந்து மளமளவென்று அவர்களைச் சரித்துத் தள்ளின. ஈழ வீரர்களின் கூக்குரல் பலமாக ஒலித்தது.

அரண்மனையிலிருந்து ஈழ வீரர்கள் பலர் கூச்சலிட்டபடி ஓடிவருவதையும், தன் தோழர்கள் நெருங்கி வருவதையும் கண்ட நம்பி, “இன்னொரு ஓலையும் இருக்கிறதென்று கூறினேனல்லவா? இதைப் பெற்றுக் கொள்” என்று தன் அங்கிக்குள்ளிருந்து ஓலைச்சுருளொன்றை எடுத்து கீழே கிடந்த மானாபரணனை நோக்கி எறிந்தான்.

கீழே கிடந்தவனை ஒரே எட்டில் தாண்டிய நம்பி, படகிலிருந்து குதித்துப் படிகளில் ஏறி நிற்க, சீடர்கள் வரிசையின் இறுதியில் தனித்து வந்த அவன் புரவி நெருங்கியது. தாவியேறிய நம்பி ஒருமுறை திரும்பிப் படகை நோக்கினான்.

படகிலிருந்து தடுமாறியபடியே எழுந்த மானாபரணின் முன்னால் வெண்ணிற உடைகளுடன் புரவிகளில் சீடர்கள் வரிசை நின்றது. அந்த இளைஞர்களையும், தரையில் சரிந்து உருண்டு கிடந்த தன் ஈழத்து வீரர்களையும் கண்டவனுக்குத் தலை சுழலத் தொடங்கியது. தான் படகில் விழுந்து எழுந்து நிற்கும் நேரத்துக்குள் தன் வீரர்கள் அனைவரையும் சாய்த்துவிட்ட அந்த இளைஞர்களை அவன் விழிகள் திகைப்புடன் வெறித்தன.

தன் புரவியைத் திருப்பி, படித்துறையை மீண்டும் நெருங்கினான் நம்பி. மற்ற சீடர்களின் கரங்களிலிருந்த விற்களும் அம்புகளும் மானாபரணனைக் குறிவைத்தன. மானாபரணன் திகைப்பில் உறைந்து போய் அப்படியே நின்றான்.

“மானாபரணா, உன்னைக் கொல்வதற்கு வேறொருவர் காத்திருக்கிறார். எனவே இப்போது நீ பிழைத்தாய். ஓலையைப் படித்துவிட்டு, உடனே கொல்லத்தை விட்டுக் கிளம்பிவிடு” என்ற நம்பி தன் தோழர்களை நோக்கிக் கையசைத்துவிட்டு, புரவியை முன்னால் பாயவிட்டான். புரவிகள் மீண்டும் அடர்ந்த மரக்கூட்டங்களை நோக்கிப் பாய்ந்தன.

அரண்மனையிலிருந்து ஓடிவந்த மற்ற ஈழ வீரர்கள் கீழே கிடந்தவர்களையும் படகில் உறைந்து போய் நின்ற மானாபரணனையும் கண்டு விழித்தனர்.

இரண்டொரு கணங்களில் திகைப்பிலிருந்து விடுபட்ட மானாபரணன் படித்துறையின் மீது ஏறி, சீடர்களின் புரவிகள் மறைந்த திசையை வெறித்தான். இருளில் வெறும் மரக்கூட்டங்களே புலப்பட்டது அவனுக்கு.

தரையில் விழுந்து உருண்டு கிடந்த தன் வீரர்களை நோக்கியவன், இறந்தவர்களை அங்கேயே புதைத்து விடவும், காயமடைந்தவர்களை அரண்மனைக்குத் தூக்கிச் செல்லவும் உத்தரவிட்டான். விக்கிரமபாண்டு வின் உடலையும் எடுத்துவர உத்தரவிட்டவன், கரத்தில் பிடித்த ஓலையுடன் அரண்மனையை நோக்கி நடந்தான்.

அரண்மனையை அடைந்த மானாபரணன் பெரும் தூண்களுடன் விரிந்த கூடத்தை அடைந்ததும் இருக்கை யொன்றில் அமர்ந்தவன், சரவிளக்குகளின் ஒளியில் தன் கரத்திலிருந்த ஓலைச் சுருளைப் பிரித்தான். முதல் ஓலையின் தொடர்ச்சியாகவே இருந்தது இரண்டாவது ஓலையின் வரிகள்.

“மானாபரணா, வீரர்களுடன் எல்லையைத் தாண்டி அத்துமீறும் அன்னியரை அழிப்பதும் ஒரு மன்னனுக்குத் தர்மம்தான். ஈழத்துப் படை வீரர்களுடன் கொற்கையில் நுழைந்த உன் இரு புதல்வர்களையும் எனது படைத் தலைவர்கள் அழிக்கவில்லை. சிறைசெய்து வைத்திருக் கிறார்கள். சேரலாதரை நீ விழிஞத்துக் கோட்டையில் அடைத்து வைத்திருப்பதற்குப் பிரதியாக இது நடக்க வில்லை. அங்கிருந்து அவரே விரைவில் வெளியேறி விடுவார். முடிந்தால் உன் மகன்கள் சிரீமேகனையும், பரக்கமனையும் நீயே வந்து மீட்டுச்செல் — பூபேந்திரச் சோழன்”

அதிர்ச்சியும் திகைப்புமாக வெகுநேரம் அப்படியே இருக்கையில் அமர்ந்திருந்தான் மானாபரணன். எந்த

அவசியத்துக்காகவும் பொய்யான செய்திகளைக் கூறுவதோ, எழுதுவதோ சோழ மன்னரின் அரச குடும்பத்தில் எவருக்கும் அறவே கிடையாதென்பதை நன்றாக உணர்ந்திருந்த மானாபரணனுக்கு, தன் மகன் களின் துடுக்குத்தனமும், முரட்டு சுபாவமும் நினைவில் எழுந்ததும், அந்த ஓலை கூறுவதும், ஈழத்து வணிகர்கள் முன்னதாகக் கூறிய செய்திகளும் உண்மைதான் என்பதும் புரிந்தது.

வெகுநேரம் அப்படியே சிந்தித்தபடி அமர்ந்திருந்த வனுக்கு நடந்திருப்பவற்றில் ஒரு நன்மையும் இருப்பது தெளிவாகியது. ஈழத்து மன்னன் பராக்கிரமபாகுவுக்கு எதிராக நடக்கும் சதியில் தானோ, தன் மகன்களோ கலக்கவில்லை என்பதை மன்னருக்கு எடுத்துக்கூற சந்தர்ப்பம் இருக்கிறது. அதுமட்டுமல்ல, இளவல் விக்கிரம பாண்டு மடிந்ததற்கு தன் மீது பழியேற்படாமல் சரியான காரணம் கூறவும் சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது என்பதையும் புரிந்து கொண்டவன், தான் உடனடியாக கொற்கையை அடைந்து அங்கிருந்து விக்கிரம பாண்டுவின் சடலத்தை அனுப்பிவிடலாம் என்றும் தீர்மானித்தான்.

உடனடியாக தன் உபதலைவர்களை அழைத்தவன் அனைவரையும் சித்தமாகும்படியும், துறைமுகத்தில் நிற்கும் இரு கலங்களையும் புறப்பட ஏற்பாடுகள் செய்யும் படியும் உத்தரவிட்டான். தன் உபதலைவர்களையும் மற்ற வீரர்களையும் விக்கிரமபாண்டுவின் மரணத்தைப் பற்றி மூச்சு விடலாகாது என்றும், கொற்கையை அடைந்த பின்னர் சடலத்தை தனிப்படகில் கொண்டு சென்று விடவும் உத்தரவிட்டான்.

அடுத்த ஒரு ஜாம நேரத்தில் விக்கிரமபாண்டுவின் சடலத்துடன் இரு ஈழத்துக் கலங்களும் கொற்கையின் துறைமுகத்தை விட்டு வேகத்துடன் புறப்பட்டன.

அதற்கும் முன்னால் அரண்மனைப் பணியாளர்களி லிருந்த சேரநாட்டுப் பரதவர்கள் மாளிகையிலிருந்து வெளியேறி புரவிகளில் விழிஞத்தை நோக்கிப் பறந்தனர்.

# 28. கோதண்டம்

**வ**டகிழக்கிலிருந்து வீசிய பருவக்காற்று உக்கிரமாக வீசத் தொடங்கி விட்டதாலும், மேலைக்கடலின் சீற்றம் வழக்கத்தை விட அதிகமாவே இருந்ததாலும், சேர நாட்டின் கரையை நோக்கி வேகமாக வீசிய காற்று, கொல்லத்தின் துறைமுகத்திலிருந்து இரவின் இரண்டாவது ஜாமத்தில் புறப்பட்ட அந்த ஈழத்துக் கலங்களின் பாய்மரங்களைப் புடைக்கவைத்து தெற்கு நோக்கி வேகமாக விரட்ட முற்பட்டுக் கொண்டிருந்தது. உயர்ந்து எழுந்த அலைகளும் வேகத்துடன் வீசிய காற்றும் சேர நாட்டை விட்டுப் போ என்று தன்னை விரட்டி யடிப்பதாகவே தோன்றியது மானாபரணனுக்கு. பெரும் சிரமத்துடன் துடுப்புக்களைத் துழாவ வேண்டிய அவசியமின்றி காற்றின் வேகத்திலேயே துரிதமாகச் சென்ற கலங்கள் கருக்கல் நேரத்துக்கு முன்னதாகவே விழிஞத்தின் துறைமுகத்தை அடைந்தன.

கதிர் அறுக்கும் அரிவாளைப் போல உட்புறமாக வளைந்து, கூரிய நிலப் பகுதி முன்னால் நீண்டு கிடந்த விழிஞத்தின் துறைமுகத்தின் வாயிலிலேயே ஈழத்துக் கலங்கள் இரண்டு நிற்பதையும், கலங்களின் தளத்தில் உயர்த்திய ஈட்டிகளுடன் வீரர்கள் நடமாடிக் கொண் டிருப்பதையும், மற்ற நான்கு கலங்களும் துறைமுகத்தில் உள்ளே சேர்ந்து நிற்பதையும் திருப்தியுடன் கவனித்த படியே விழிஞத்தின் அலைவீசிய இடத்தில் தன் கலத்தை நிறுத்த உத்தரவிட்டான் மானாபரணன்.

கரைப்பகுதியை விட்டுச் சற்றுத் தள்ளி தெரிந்த விழிஞத்துக் கோட்டையின் சற்று உயரம் குறைந்த

மதில்களின் மீதும், உள்ளே தெரிந்த ஓரிரு கட்டடங்களிலும் பந்தங்களும், விளக்குகளும் எரிந்து கொண்டிருப்பதையும், தான் அங்கு முன்னூறு வீரர்களுக்குக் குறையாமல் நிறுத்தி வைத்திருப்பதையும், காவலர்கள் விழிப்புடன் உலவுவதையும் கண்ட மானாபரணன் திருப்தியுடன் தலையசைத்துக் கொண்டான். அந்த பூபேந்திர சோழனின் ஓலையில் கூறியிருந்தபடி சேரலாதன் அங்கிருந்து தற்போதைக்கு வெளியேற முடியாது என்ற எண்ணம் அவனுக்குச் சற்று ஆறுதலைத் தந்தது.

மானாபரணனின் கலங்கள் வருவதை முன்னதாகவே கவனித்து விட்ட துறைமுகத்துக் கலங்களிலிருந்து அதன் தலைவர்கள் படகுகளில் இறங்கி, அந்த இரு கலங்களையும் நெருங்க முற்பட்டனர்.

மரக்கலங்களின் தலைவர்கள் நூலேணி மூலம் மேலே ஏறிவருவதற்கு முன்பாகவே தன் உத்தரவுகளை எழுதி முடித்த மானாபரணன் அவர்கள் நெருங்கி வருவதையும், அவர்களது வணக்கத்தையும் ஏற்றுக் கொண்டு ஓலையை நீட்டினான்.

"உபதலைவர்களே, கொற்கையிலிருந்து நாம் தாக்குதலைத் தொடங்கும் நேரம் வந்துவிட்டது. காந்தளூர்ச் சாலையிலிருக்கும் நம் வீரர்களையும் சித்தமாக இருக்கச் சொல்லுங்கள். கடலில் காத்திருக்கும் நம் பன்னிரண்டு கலங்களையும் என் பின்னால் கொற்கைக்கு வந்துசேர என் உத்தரவு இந்த ஓலையிலிருக்கிறது. கொற்கையில் என் தாக்குதலைத் தொடங்கி, நான் கிழக்கிலிருந்தும், சுந்தர பாண்டியரும், வீர கேரளரும் தென் கிழக்கிலிருந்தும் முல்லை நாட்டைத் தாக்கத் தொடங்கிய பின்னர் என் உத்தரவு வரும். உடனே நீங்களும் நம் வீரர்களைக் கலங்களிலிருந்து இறக்கி வந்து சேர்ந்து கொள்ளுங்கள்... புரிந்ததா?" என்றவன் "ஈழத்து வணிகர்கள் கூறும் வதந்திகளை நம்ப வேண்டாம். எச்சரிக்கையாக இருங்கள்" என்றான்.

உபதலைவர்களின் படகுகளில் ஒன்று மானாபரணனின் ஓலையுடன் விழிஞத்துக் கடலில் தூரத்தே நின்றிருந்த கலங்களை நோக்கிச் சென்றது. அடுத்த அரை ஜாம நேரத்தில் கலங்களின் விளக்குகள் தென்படுவதைக் கவனித்த மானாபரணன் உபதலைவர்களை மீண்டும் ஒருமுறை எச்சரித்துவிட்டு, கலத்தை இயக்க உத்தர விட்டான்.

படகுகளில் இறங்கி விழிஞத்தின் துறைமுகத்தை அடைந்த உபதலைவர்களின் முகங்களில் அதிருப்தியே நிலவியது.

உடன் வந்த கலத்தின் தலைவனை நோக்கிய ஈழத்தவன் "தலைவரே, ஈழத்தில் கலவரம் நடப்பது உண்மைதான். மன்னருக்கு உதவச் செல்லாமல் மானாபரணர் கொற்கைக்குச் செல்கிறார். நாமும் உதவிக்குச் செல்லாமல் இருப்பது முறை இல்லையென்றே எனக்குப் படுகிறது" என்றான்.

மரக்கலத் தலைவன் முகத்திலும் குழப்பமே படர்ந்து கிடந்தது. சற்று சிந்தித்தவன் "உபதலைவரே, நாம் தனிப்பட மன்னருக்கு ஓர் ஓலையனுப்பி வைப்போம். இரு தினங்களில் மன்னர் உத்தரவு கிடைத்துவிடும். பின்னர் நாம் மானாபரணரைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். சரிதானே?" என்றான்.

தலைவனின் ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்ட மற்றவர்கள் இரு தினங்கள் காத்திருப்பதாகச் சம்மதித்து விட்டுத் தங்கள் கலங்களை அடைந்தனர்.

ஆனால் அந்தக் கலங்களோ, அதன் தலைவர்களோ ஈழ நாட்டுக்குத் திரும்பவோ, ஈழ மன்னருக்கு உதவவோ செல்லப் போவதில்லை என்பதையும் விழிஞத்திலேயே தங்களில் பலரின் கதை முடியப் போகிறது என்பதையும் அப்போது அவர்கள் அறியவில்லை.

**வி**ழிஞத்தின் அந்த இளங்காலை நேரம் பார்வைக்கு மிக ரம்மியமாகவே இருந்தது. ஒளி மங்கியபடியே மேகங்

களிடையே நகர்ந்து கொண்டிருந்த நிலவைப் பரிகசித்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டேயிருந்த வெள்ளி, தானும் மறைவதற்கான நேரம் வந்து விட்டதை உணர்ந்து விழிகளை மூடிமூடித் திறந்து பார்த்தது. காற்றின் வேகத்துக்கேற்றபடி தங்கள் வடிவங்களை மாற்றிக் கொண்டே மிதந்த மேகக் கூட்டங்கள் தெற்கு நோக்கி அவசரமாகச் சென்று கொண்டிருந்தன.

விடியலில் எழுந்துவிடும் பழக்கமுடைய சேரலாதன் ராஜசிம்மன் அன்றும் அதிகாலையிலேயே விழித்து ஸ்நானாதிபாதிகளை முடித்துக் கொண்டு மேன்மாடத்து உப்பரிகையின் இருக்கையொன்றில் பலத்த சிந்தனையில் அமர்ந்திருந்தான். அவன் கூர் விழிகள் தெற்கே விரிந் திருந்த மரக்கூட்டங்களை உற்று நோக்கியபடி இருந்தன. அவன் எதிர்பார்த்தபடி அந்தச் சோலைகளின் நடுவே யிருந்து பளீரென்று சிவந்த ஒளியை வீசிய எரியம்பு ஒன்று வானை நோக்கி உயர்ந்தது. வெகு உயரத்துக்கு உயர்ந்த அந்த அம்பு மரக்கூட்டங்களையும், கடற்கரையை ஒட்டிய 'வலிய கடற்புரம்' என்று அழைக்கப்பட்ட மணல்வெளியையும் சிவக்க வைத்துவிட்டு, வானிலேயே உதிர்ந்து மறைந்தது.

ஓரிரு கணங்களில் மீண்டும் ஓர் எரியம்பு இன்னும் அதிக உயரத்துக்கு வானில் பாய்ந்து சிவந்து ஜொலித்து, ஒளித்துகள்களாக உதிர்ந்து இறங்கியது.

சேரலாதனின் பின்னாலிருந்து மெலிதாக முத்துப் பரல்கள் ஒலித்தன. திரும்பிய சேரலாதனின் விழிகளில் வியப்பு தெரிந்தது.

செங்கலமச் செல்வி தான் பழகிய போர்க்கோலத்தில் நின்றிருந்தாள். காரிருளை இழைஇழையாகச் சீவிச் சுருட்டி வைத்த குழல்கள் பின்புறம் முடிச்சிடப் பட்டிருக்க, கூந்தல் கலையாதிருக்க நுனியில் வளைந்த இரு ஊசிகள் செருகப்பட்டிருந்தன. வலம்புரியைப் பழிக்கும் கழுத்தில் அவள் விரும்பி அணியும் அதிக

நீளமற்ற பனிச்சை வகை முத்துச்சரம் அசைந்து கொண்டிருந்தது. நெற்றியின் நீண்ட திலகமும், இறுகக் கட்டிய சீலையும் அவள் புறப்படத் தயாராகி விட்டதை உணர்த்தின.

“ஆசார்யரும் சீடர்களும் நெருங்கிக் கொண்டிருக் கிறார்கள் மன்னவா” என்றவள், வாயிலில் நின்ற ஈழத்து வீரர்களும், மாளிகையின் காவலர்களும் அந்த சிவந்த எரியம்புகளைக் கவனித்துக் கொண்டிருப்பதையும் அம்புகளும் இரண்டு மூன்றாக அதிகரித்துவிட்டதையும் கவனித்தாள்.

எரியம்புகளின் எண்ணிக்கை இன்னும் உயர்ந்தன. வானை நோக்கிச் சீறிய அம்புகள் சரிந்து கோட்டையை நோக்கி வரவும் தொடங்கின.

ஈழ வீரர்களின் தலைவனாகத் தெரிந்தவனும், மற்ற வீரர்களும் கோட்டைக் கதவின் திட்டிவாயிலைத் திறந்து கொண்டு வெளியே சென்று அம்புகள் வந்த திசையைச் சற்று நேரம் வெறித்தான். பின் தன் வீரர்களை அம்புகள் வந்த திசையை நோக்கி அனுப்பிவைத்தான்.

ஓரிருவரைத் தவிர, மாளிகையின் காவலர்களும் கோட்டை வாயிலை நோக்கிச் சென்று விட்டதையும், அறை வாயிலிலும், நீண்ட தாழ்வரையிலும் மட்டும் வீரர் நால்வர் நின்று எரியம்புகளைப் பார்த்துக் கொண்டிருப் பதையும் கவனித்த செல்வி, சேரலாதன் பின்தொடர அறைக்கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். வாயிலுக்குச் சற்றுத் தள்ளித் தூணொன்றைப் பற்றியபடி வெளியே தெரிந்த வாண வேடிக்கைகளைப் பார்த்தபடி நின்றிருந்தான் ஒரு காவலன். பின் புறத்தில் கேட்ட காலடியோசைகள் அந்த வீரன் செவிகளில் மிக அருகில் சென்ற பிறகே விழுந்ததால் சட்டெனத் திரும்பினான். திரும்பியவனது இடது புறத்துச் செவியருகே சுரீரென்று ஊசியொன்று இறங்கியது. அதிர்ச்சியில் விழிகள் வெளியே வந்துவிடுவதைப் போல் விழிக்க, கால்கள்

தளர்ந்து அப்படியே தூண் மீது சரிந்து சாய்ந்தான் அவன். தாழ்வரையில் நின்றிருந்த மற்றொரு வீரன் திரும்பியபோது செல்வியும் சேரலாதனும் அறைக்கு வெளியே நிற்பதைக் கண்டான். கீழே காவலன் விழுந்து கிடப்பதையும், காவலனின் இடையிலிருந்த குறுவாள் செல்வியின் கரத்திலிருப்பதையும் கண்டவன் தன் வாளை உருவ முயன்றான்.

வாளை உருவ முயன்ற அவனது கரம் பிடியிலேயே நின்றது. செல்வியின் கரத்திலிருந்த குறுவாள் அசுர வேகத்தில் பறந்து, அவன் கழுத்தில் பாய்ந்தது. இருவரும் சரிந்ததும் தாழ்வரையில் வேகமாக நடந்த செல்வி சரசர வெனப் படிகளில் இறங்கி, கீழ்த்தளத்தின் இடது புறமாகச் சென்றாள்.

கீழ்த் தளத்தின் இடது கோடியிலிருந்த ஆயுதங்கள் குவித்து வைத்திருக்கும் அறையை அடைந்தவள் உள்ளே சிதறிக்கிடந்த ஆயுதங்களில் நீண்ட வாள் ஒன்றை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொண்டு திரும்பினாள். அவளைப் பின்தொடர உத்தரவிட்ட சேரலாதன் அறையின் மற்றொரு மூலையை நோக்கி நடந்தான்.

அறையின் மூலையில் உயரம் குறைந்த கதவொன்று தெரிந்தது. சேரலாதன் அந்தக் கதவின் மீது இருமுறை தட்டியதும் மறுபுறம் தாழ்ப்பாள்கள் விலக்கப்படும் ஒலி எழுந்தது. மறுபுறம் பரதவன் ஒருவன் நின்றிருந்தான். உள்ளே விரிந்தது ஒரு பெரும் கூடம்.

அந்தக் கூடம் பயன்படுத்தப்படாத ஆயுதசாலை யென்பது பார்த்தவுடன் புரிந்தது. தூசியும், பூச்சிகளின் கூடுகளும் படர்ந்திருக்க, பெரும் இரும்பு உலை ஒன்றும் பக்கத்தில் உடைந்த வார்ப்புகளும் குவிந்திருந்தன.

ஆயுதசாலையின் ஓரத்தில் நீண்ட பாதையில் நடந்த அந்தப் பரதவன் மறு கோடியிலிருந்த வாயிலின் வழியே வந்தான். வாட்களையும், ஈட்டிகளையும் குளிர வைக்க சிறிய குளம் ஒன்று தெரிந்தது. குளத்தில் நீர் வற்றிப்

போய் சிறிதளவே இருந்த நீரில் நனைந்து தலையைச் சிலுப்பிக் கொண்டிருந்த பறவைகள் சிதறிப் பறந்தன. குளத்தை ஒட்டிய பாதையின் முடிவில் விரிந்தது ஒரு பராமரிக்கப்படாத நந்தவனம். மலர்ச்செடிகள் இருக்க வேண்டிய இடங்களில் முட்களும் புதர்களுமே தெரிந்தன. நந்தவனத்தின் இறுதியில் புரவிகளின் கொட்டடி தெரிந்தது. உள்ளே சேரலாதனும் செல்வியும் முல்லை நாட்டிலிருந்து வந்த தேரும் புரவிகள் பூட்டப் பட்டு நின்றிருந்தது.

அருகில் நெருங்கியதும் ஸங்க்ராம வகையைச் சேர்ந்த அந்தத் தேர் நேர்த்தியான பின்பக்கத்து வளைவுகளுடன், தேக்கிலான சட்டங்களின் இணைப்புகளுடன், சக்கரங் களின் மீது நீண்டுவளைந்த பேழை போன்ற அமைப்புடன், தந்தங்களால் கடையப்பட்ட பிடிகளுடன் கூடிய சுகமான இருக்கைகளுடன், சுத்தமாகத் துடைக்கப் பட்டு, பயணத்துக்குச் சித்தமாக இருப்பதைக் கவனித் தாள் செல்வி. சேரலாதன் அந்தப் பரதவனை நோக்கித் தன் வலது கரத்தை நீட்டினான்.

பரதவன் தன் கச்சையிலிருந்து கதிர் அறுக்கும் சிறு அரிவாளொன்றை எடுத்து, மன்னனின் கரத்தில் வைத்தான். செல்வி வியப்புடன் கவனித்துக் கொண்டிருக்கும்போதே தேர்ச்சக்கரத்தின் மீதிருந்த வளைந்த பலகையின் இடையே அரிவாளைச் செலுத்திய சேரலாதன், வெகு லாகவமாக அதை மறுமுனை வரையில் கீறி, இடது கரத்தால் அழுத்தினான். பலகையின் கீழிருந்து பலமான மூங்கில் ஒன்று அரை வட்ட வடிவில் வெளிவந்தது. அதன் முனையில் குழல் போல உறுதியான மூங்கில் ஒன்றும் இருந்தது. தேரின் மறுபுறம் சென்ற சேரலாதன் அதே முறையில் மற்றொரு மூங்கிலையும் வெளியே எடுத்தான். அதன் குழல் சற்று மெலிதாகத் தெரிந்தது. இரண்டு மூங்கில்களின் குழல் களையும் ஒன்றோடு ஒன்று இணைத்து அழுத்தியதும் இரண்டும் இணைந்தன. இரண்டும் சேர்ந்து ஒன்பது

கணுக்களுடன் கூடிய பெரும் கோதண்டமாக வடிவெடுத்தது.

அந்தப் பரதவன் இருக்கையின் கீழே தென்பட்ட கொக்கியை விடுவித்து, பக்கவாட்டில் அதை நகர்த்தினான். மரப்பெட்டி போலத் திறந்த தேரின் இருக்கையின் உள்ளே அம்புகளும், குறுவாட்களும் வரிசையாக அடுக்கப் பட்டிருந்தன. நிறைந்த அம்புகளுடன் அம்பறாத் தூளியொன்றும் இருந்தது. ஒருபுறம் அந்த வில்லுக்கு நாணாகப் பயன்படுத்தும் வலுவான மெல்லிய கயிறு ஒன்றும் இருந்தது.

அந்தக் கயிற்றை எடுத்து வில்லில் பூட்டிய சேரலாதன் செல்வியை நோக்கி அதை நீட்டினான்.

"செல்வி, இது என் முன்னோர்கள் பயன்படுத்தியது. இனி இது உன்னிடம் இருக்கட்டும்" என்றான் முறுவலுடன்.

அதே நேரத்தில் கோட்டையின் உட்புறம் வீரர்கள் தங்கும் பகுதியிலிருந்தும், பணியாளர்களின் இருப்பிடங்களிலிருந்தும் பெரும் தீ, ஜ்வாலைவிட்டு உயர்ந்து எழுந்தது. கோட்டை வாயிலிலிருந்தும் பெரும் கூச்சல் ஒலித்தது.

# 29. வாண வேடிக்கை

**கோ**ட்டை வாயிலில் ஈழத்து வீரர் தலைவன் நின்ற இடத்திலிருந்து நேர் தெற்கே விரிந்த தோப்பிலிருந்து உயரே ஒன்றிரண்டாக எழுந்த எரியம்புகள் சரிந்து கோட்டையின் மீதும், உள்பகுதியிலும் இறங்கத் தொடங்கியதைக் கவனித்த கோட்டைத் தலைவன், தன் வீரர்களில் பதின்மரை அழைத்து, தோப்பை நோக்கி விரைய உத்தரவிட்டான். அவர்கள் தோப்பை நெருங்கும் தருவாயில் படபட்டென்று நிலத்தில் சரிந்ததையும்,

தோப்பின் உள்ளேயிருந்து வெண்ணிற உடைகளை அணிந்த இளைஞர்கள் பலர் விற்களைத் தாங்கி வரிசையாக வெளியே வருவதையும் கண்டு திகைத்தான். அந்த இளைஞர்களின் எண்ணிக்கை குறைவாகவே இருப்பதைக் கவனித்தவன் கோட்டைக்கு உள்ளேயிருந்த தன் வீரர்களை நோக்கிப் பலமாகக் குரல் கொடுத்தான்.

கோட்டைத் தலைவன் குரலுக்கு ஓடிவந்த வீரர்கள் மற்றவர்களுக்கும் குரல் கொடுக்க, கோட்டை வாயிலில் ஈழ வீரர்களின் கூட்டம் குவிந்தது. தோப்பை விட்டு வெளியே வந்த அந்த இளைஞர்கள் ஏதோ தேர்ந்த வீரர்களைப் போல் இரண்டு வரிசைகளில் இடைவெளிவிட்டு அர்த்த சந்திர வடிவில் நின்றனர்.

"அவர்களை வெட்டியெறியுங்கள்" ஆவேசத்துடன் குரல் கொடுத்த வீரர் தலைவன் தன் வீரர்களுடன் அவர்கள் நின்ற இடத்தை நோக்கி உயர்த்திய வாளுடன் விரைய, வீரர்களும் தங்கள் கரங்களிலிருந்த ஈட்டிகளை உயர்த்தி எறிந்தபடியே தொடர்ந்தனர். ஆனால் ஈட்டிகள் எறியக்கூடிய எல்லையை விட்டுத் தூரத்தில் நின்ற இளைஞர்கள் சற்று தாமதித்தார்கள். இரண்டொரு கணங்கள் சென்றதும் முன்வரிசை சீடர்கள் மண்டியிட்டு ஒரே கணத்தில் விற்களை வளைத்தனர். மூன்றாகவும், ஐந்தாகவும் பாய்ந்த அம்புகள் எதிரே ஓடி வந்த ஈழ வீரர்களைக் குறிதவறாமல் தாக்கின.

அதே கணத்தில் தோப்புக்கு நேர் எதிரே, கோட்டையின் வலதுபுறத்திலிருந்து புரவிகள் பல வெளியே வந்தன. முதலில் வந்த புரவியில் நீண்ட தாடி மீசையுடன் நெடுநெடுவென்ற உயரத்தில் துறவி போல் ஒருவர் அமர்ந்திருப்பதைக் கண்டான் கோட்டைத் தலைவன். துறவியின் கரத்தில் அதுவரை அவன் கண்டறியாத பெரும் வடிவில் வில் ஒன்று இருந்தது.

அந்தத் துறவியின் பின்னாலும் வெண்ணிற உடைகளுடன் அதிக எண்ணிக்கையில் அவரது சீடர்கள்

விற்களைத் தாங்கி வந்தனர். துறவியின் கரத்திலிருந்த வில் உயர்ந்தது. அடுத்து அவரது சீடர்களிடமிருந்த எரியம்புகள் பல கோட்டையின் உட்பகுதியை நோக்கிப் பறக்கத் தொடங்கின. கோட்டையின் உள்ளே பெரும் ஜ்வாலையுடன் தீ எழுந்து வீரர்களும் பணியாளர்களும் இருந்த பகுதியிலிருந்து வீரர்களின் எச்சரிக்கைக் குரல்களும், தீயில் சிக்கியவர்களின் கூக்குரல்களும் எழுந்தது. புகைப்படலம் கோட்டையிலிருந்து மெல்ல மேலே எழத்தொடங்கியது.

தான் நினைத்ததைவிடப் பெரும் அபாயம் சூழ்ந்து விட்டதைத் தாமதமாக உணர்ந்த கோட்டைத் தலைவன் முன்னால் அம்புகள் பாய்ந்து சரிந்து விட்ட வீரர்களை விடுத்து, மற்றவர்களை உடனடியாகக் கோட்டைக்குத் திரும்ப உத்தரவிட்டுத் தானும் கோட்டையை நோக்கி ஓடத் தொடங்கினான்.

சீடர்கள் இரு பக்கங்களிலிருந்தும் அம்புகளைப் பொழிந்தபடியே கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்தனர். வீரர் தலைவன் கோட்டை வாயிலை நோக்கித் திரும்பி விட்டதைக் கவனித்த துறவி கண்ணாகனாரின் புரவி முன்னால் பாய்ந்தது. சீடர்களின் புரவிகளும் வாயிலை நோக்கி விரைந்தன.

கோட்டை வாயிலை நெருங்கிவிட்ட வீரர் தலைவன் வீரர்களை உள்ளே சென்றுவிடுமாறும், கதவுகளை மூடி விடும்படியும் உத்தரவிட்டான். ஆனால் அவன் உத்தரவை நிறைவேற்றுவது ஈழ வீரர்களுக்கு அத்தனை எளிதாக இல்லை. வெளியில் நின்றுவிட்ட அத்தனை வீரர்களும் ஒரே சமயத்தில் திட்டி வாயிலின் வழியே உள்ளே புகுந்துவிட முயன்றதால் ஏற்பட்ட அமளியில், பின்னாலிருந்த வீரர்களை அம்புகளால் சரித்துக் கொண்டே நெருங்கிக் கொண்டிருந்தார் துறவியார். இன்னும் நெருங்கியதும் அவரது பெரும் வில் புரவியின் பக்கவாட்டில் சென்று பதுங்கியது. அந்த வில்லுக்குப்

பதிலாக அவரது கரத்தில் வளைந்த முனையுடன் கூடிய நீண்ட வாளொன்று எழுந்து வானை நோக்கிச் சுழன்று பளபளத்தது. அச்சுப் பிழறாமல் அவரைப் பின்பற்றிய சீடர்களும் விற்களைத் தோளில் மாட்டிக் கொண்டு வாட்களை உருவி வானை நோக்கிச் சுழற்றியபடி புரவிகளில் முன்னே பாய்ந்தனர்.

அந்தக் குறுகலான திட்டி வாயிலின் வழியே மூன்றாக வும் நான்காகவும் ஒருவரையொருவர் இடித்தபடி உள்ளே நுழைய முற்பட்ட ஈழ வீரர்கள் உள்ளே நுழைந்த சில கணங்களில் பெரும் கூக்குரலிட்டனர். அவர்கள் கூக்குரலுக்குக் காரணம் அறிய இயலாத வீரர் தலைவன், கோட்டைக் கதவை முழுவதுமாகத் திறக்கும்படி உத்தர விட்டான். அவன் உத்தரவிட்ட சில கணங்கள் கழித்தே கோட்டையின் பெரும் கதவுகள் அரைகுறையாகத் திறக்கப்பட்டன.

கோட்டை வாயிலை நெருங்கிவிட்ட துறவியாரையும், சீடர்களையும் கண்ட ஈழ வீரர்கள் திரும்பி தாக்குதலை எதிர்கொள்ளத் தயாராக நின்றனர். ஆனால் புரவிகள் வந்த வேகமும், துறவியாரும் அவரது சீடர்களின் வாட்கள் சுழன்ற வேகமும் இதுவரை ஈழத்து வீரர்கள் பார்த்தேயிராதபடிக்கு இருந்தன. முன்னால் திட்டிவாயிலை நெருங்கிவிட்ட வீரர்கள் கதவுகளை மோதி முழுவதுமாகத் திறந்தனர். உள்ளே விரிந்த காட்சி வீரர் தலைவனையும் மற்ற வீரர்களையும் ஸ்தம்பிக்கச் செய்தது. முதலில் திட்டிவாயிலின் வழியே உள்ளே நுழைந்தவர்களின் .கூக்குரலுக்கும் காரணம் புரிந்தது.

சேரலாதரைக் கோட்டைக்கு அழைத்து வந்தது முதல் தூசும் புழுதியும் படர்ந்து, தான் அலட்சியப்படுத்தி புரவிக் கொட்டடியருகே நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அவரது ரதம், கண்களைப் பறித்துக் கொண்டு அதிவேக மாக அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. அவனை இன்னும் அதிரவைக்க, வந்தது முதல் சோர்ந்த முகத்

தோடு காணப்பட்ட சேரலாதர், அந்த ரதத்தின் சாரதி யாக அமர்ந்து பின் தொடர்ந்து வந்த ஈட்டிகளையும் அம்புகளையும் பாயவொட்டாமல், வளைத்து வளைத்துக் கோட்டை வாயிலை நோக்கிச் செலுத்திக் கொண்டு வந்தார். அது போதாதென்று, மருத்துவப் பெண்ணாக மிக அமைதியாகப் பணிசெய்து கொண்டிருந்த அந்த அழகிய பெண், ஏதோ வானத்திலிருந்து குதித்துவிட்ட போர்த்தேவதை போல் பெரும் வில்லுடன் ஏக காலத்தில் பல அம்புகளைச் சரம்சரமாக விடுத்து, தன் வீரர்களைச் சரித்துக் கொண்டே வருவதையும் கண்டான். வளைந்து வளைந்து ஓடும் ரதத்தில் நின்றபடி, எப்போது அம்புகளை அள்ளியெடுக்கிறாள், எப்போது நாணேற்றுகிறாள், எப்போது குறிவைத்து எய்கிறாள் என்று புரிபடாத வேகத்தில் அவன் முன்னே பறந்து வந்த அம்புகளையும், அவளது வேகத்தையும் கண்ட வீரர் தலைவன் பிரமித்து நின்றான்.

கோட்டை வாயிலை நெருங்கியதும் சேரலாதர் புரவி களைச் செலுத்தியபடியே தன் இருக்கையின் அடியி லிருந்த மெல்லிய சங்கிலியைப் பிடித்து மேற்புறமாக இழுத்தார். அந்த ஸங்க்ராம ரதத்தின் நீண்ட பேழை போன்ற பக்கப் பலகைகளின் மேற்பகுதி திறந்தது. உள்ளே யிருந்து அதிவேகத்தில் பெரும் ஈட்டிகள் சுழன்று முன்னாலிருந்த வீரர்களை நோக்கிப் பறந்து வந்து தாக்கத் தொடங்கின.

உள்ளே நுழைந்துவிட்ட ஈழ வீரர்கள் ஈட்டிகளி லிருந்தும் செல்வியிடமிருந்து மழையாகப் பொழிந்த அம்புகளிலிருந்தும் விலகி, கோட்டைச் சுவரின் பக்க வாட்டிலேயே உட்புறமாக ஓடித் தப்பிக்க முயன்றனர். பின்புறத்தில் தாக்கிய துறவி பலமாகக் குரல் கொடுத்தார். அவரது சீடர்கள் கோட்டைக் கதவுகளை நெருங்கி அங்கு மிச்சமிருந்த ஈழ வீரர்களையும் தாக்கி உள்ளே விரைய வைத்தனர். ரதம் கோட்டைக் கதவுகளின் வழியே அதீத வேகத்தில் பாய்ந்து வெளியே வந்து, இடது புறமாகத்

திரும்பி, தூரத்தே தெரிந்த தோப்புகளை நோக்கிப் பறந்தது.

ரதம் வெளியேறியதும் சீடர்கள் புரவிகளை விட்டுக் குதித்து இறங்கி, கதவுகளை மீண்டும் அடைத்து மூடி அதன் பலமான இருப்புத் தாழ்ப்பாள்களையும் தள்ளி மூடினார்கள். திட்டிவாயிலின் கதவுகளும் வெளிப்புறமாக தாழிடப்பட்டது.

ஏதோ ஈழத்து வீரர்களை உள்ளே அனுப்பி, கதவு களைத் தாழிடவே வந்தது போல் கர்ம சிரத்தையுடன் கதவுகளின் தாழ்ப்பாளைப் பரிசோதித்த சீடர்கள், திருப்தியுடன் தலையசைத்தபடி மீண்டும் புரவிகளில் தாவியேறினார்கள். சீடர்களின் புரவிகள் கோட்டை வாயிலிலிருந்து பல திசைகளிலும் பிரிந்து சற்றுத் தொலைவு வந்ததும் நின்றது. திரும்பிய சீடர்களின் விற்களிலிருந்து மீண்டும் எரியம்புகள் கோட்டைக்குள் பறந்து பல இடங்களிலும் விழுந்தது. கோட்டையின் உள்ளே மேலும் தீயின் ஜ்வாலை உயர்ந்து எழுந்தது. மரங்களும் மூங்கில்களும் வெடித்து தீக்கங்குகளோடு அவை கோட்டைக்கு மேலே புகையுடன் உயர்ந்து எழுந்தன. வீரர்களின் உடைகளும் மற்ற பொருள்களும் உடன் சேர்ந்து தீயும், புகையும், கரித்துகளாக மேலே உயர்ந்து காற்றில் பரவின.

பதின்மராகவும், இருபதாகவும் பிரிந்த சீடர்கள் ஒருபுறமும், கண்ணாகனாரின் புரவியும் உடன் சில சீடர்கள் மறுபுறமுமாக, கோட்டையின் எதிரே விரிந்த திடலில் புரவிகளைப் பாய விட்டுப் பல திசைகளிலும் சென்று மறைந்தனர்.

அதே நேரத்தில் விழிஞத்தின் கடற்கரைப்பகுதியில் கடல்நீர் வளைந்து உள்ளே தேங்கியிருந்த துறைமுகத்தில் நின்ற கலங்களில் இருந்த ஈழ வீரர்கள் முன்னதாக எரியம்புகள் பறப்பதையும், கோட்டையிலிருந்து தீயும் புகையும் உயர்ந்து மேலெழுவதையும் கவனித்ததும் தங்கள்

தலைவர்களிடம் ஓடித் தெரிவித்துவிட்டதால், தளங்களில் வந்து நின்ற உப தலைவர்களின் முகங்களில் பதற்றம் தெரிந்தது. படகுகளை உடனே இறக்கவும் வீரர்களை உடன் வரவும் உத்தரவிட்ட இரு உபதலைவர் களும் அடுத்த இரு நாழிகை நேரத்தில் கோட்டையின் வாயிலை அடைந்து கதவுகள் தாழிடப் பட்டிருப் பதையும், வெளியே ஒரு வீரன்கூட இல்லாததையும் கண்டு திகைத்தனர்.

பதற்றத்துடன் கதவுகளைத் திறந்தவர்களுக்குக் கோட்டையின் உள்ளே விரிந்த காட்சி கலவரமூட்டியது. ஆங்காங்கே அடங்கத் தொடங்கியிருந்த தீயின் உக்கிரம் இன்னும் மிச்சமிருக்க, வீரர்கள் பலர் அம்புகளும் ஈட்டிகளும் பாய்ந்து உருண்டு கிடந்தனர். எஞ்சிய மற்றவர்கள் தங்கள் இருப்பிடங்களில் தீயை அணைக்க முயன்று கொண்டிருந்தனர். கோட்டையின் பெரும் பகுதியும், மாளிகையும், வீரர்களின் இருப்பிடங்களும் ஏறக்குறைய முழுதுமாக அழிந்து போயிருந்தன. பாதிக்கும் மேல் உள்ளேயிருந்த வீரர்களின் சடலங்கள் கோட்டையின் உட்புறமெங்கும் சிதறிக் கிடந்தன. காயங்களுடன் தரையில் கிடந்த வீரர்கள் வாயிற்கதவுகள் திறக்கப்பட்டதும் மீண்டும் அந்த சீடர்கள்தான் வந்து விட்டார்களோ என்ற பதற்றத்துடன் தலைகளைத் தூக்கிப் பார்த்து உருண்டனர்.

திகைப்பிலிருந்து விடுபட்ட உபதலைவர்கள் பதற்றத்துடன் கீழே கிடந்த வீரர்களை நோக்கி ஓடினர். உடன் வந்த மற்ற வீரர்கள் தீயை அணைக்க முயன்று கொண்டிருந்தவர்களுக்கும் காயங்களுடன் உருண்டு கிடந்தவர்கள்ுக்கும் உதவ ஓடினார்கள்.

காயங்களுடன் கிடந்தவர்களையும், குற்றுயிராய்க் கிடந்தவர்களையும் கலங்களுக்கு எடுத்துச் செல்ல உத்தர விட்ட உபதலைவர்களுக்கு உள்ளே என்ன நடந்த தென்பது எளிதில் விளங்கவில்லை.

கோட்டையின் தலைவனைத் தூக்கிவந்து இருக்கை யொன்றில் அமர வைக்க உத்தரவிட்ட கலத்தின் உபதலைவன் "என்ன நேர்ந்தது தலைவரே? யாருடைய படைகள் உள்ளே வந்து தாக்கின? எத்தனை பேர் வந்தார்கள்?" என்றான்.

கோட்டைத் தலைவனின் பதில் அவனைத் திகைக்க வைத்தது. "கோட்டைக்குள் யாரும் வரவேயில்லை தலைவரே. உள்ளேயிருந்து இருவர் மட்டும் வெளியேறி னார்கள்" என்ற கோட்டைத் தலைவன் நடந்தவற்றை விவரித்தான்.

ஏற்கெனவே ஈழத்துக் கலவரத்தையும், மானா பரணனின் உத்தரவையும் எண்ணிக் குழப்பத்திலிருந்த கலங்களின் தலைவர்களுக்கு, நடந்த தாக்குதல் மேலும் குழப்பத்தையே அளித்தது.

தன் வீரர்களை அழைத்த மரக்கலத்தலைவன், கோட்டையைத் தாக்கியவர்கள் சென்ற பாதையில் அவர்களைக் குறித்து விசாரிக்கவும் உத்தரவிட்டான். ஒரு ஜாம நேரம் கழித்து திரும்பிய வீரர்களின் பதில் அவனை மேலும் குழப்பத்தில் ஆழ்த்தியது.

"எந்தப் பாதையில் சென்று விசாரித்தாலும் கிராமத்து மக்கள் அந்தப் பாதையில்தான் வெண்ணிற உடைகள் அணிந்து விற்களைத் தாங்கியவர்கள் சென்றார்கள் என்று பதில் வருகிறது தலைவரே" என்றனர் அவர்கள்.

நடக்கவிருக்கும் போருக்காகவே சேரலாதரைக் கொண்டுவந்து விழிஞத்துக் கோட்டையில் மானா பரணன் சிறைவைத்திருந்தான் என்பதை ஏற்கெனவே உணர்ந்திருந்த உப தலைவர்களின் சித்தம், சேர மன்னனைத் தப்ப விட்டதற்கு, அவனுக்கும் ஈழத்து மன்னனுக்கும் என்ன பதில் கூறுவது என்பது புரியாமல் குழப்பத்தின் உச்சிக்கே சென்றது.

இனி இந்தக் கோட்டையில் வீரர்கள் இருக்க வேண்டிய அவசியமில்லை என்பது மட்டும் தெளிவாகப்

புரிந்ததால், இறந்த வீரர்களின் சடலங்களை அங்கேயே தகனம் செய்துவிடவும், மற்ற வீரர்களைக் கலங்களுக்கு அழைத்துச். சென்றுவிடவும் உத்தரவிட்ட மரக்கலத் தலைவன் தன் உப தலைவர்களுடன் கலத்துக்குத் திரும்பினான்.

அன்றைய பொழுது முழுவதும் காயமடைந்த வீரர்களுக்கு மருந்திடவும், மேற்கொண்டு செய்ய வேண்டியவை பற்றித் தங்கள் போக்கிலேயே சிந்திப் பதிலேயும் கழித்த மரக்கலத் தலைவனும் உபதலைவர் களும், மாலைப் பொழுதில் மீண்டும் கலத்தின் தளத்தில் கூடினார்கள்.

தளத்தில் அவர்களுக்குப் போட்டியாகப் பெரும் கடல் நாரைகளும், பருந்துகளும் வந்து, தளத்தில் உலவிக் கொண்டும், ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டுமிருந்தன. பாய்மரத்தில் சுருட்டி வைக்கப் பட்டிருந்த பாய்கள் காற்றில் விரிந்து ஒருபுறமாகப் படபடத்துப் பறக்க முயற்சித்துக் கொண்டிருந்தது. மேலைக்கடலின் சீற்றம் மிகுந்த அலைகள் உயர்ந்து எழுந்து பக்கப்பலகைகளில் தாக்கி 'உடனே இங்கிருந்து சென்று விடு' என்று எச்சரித்துக் கொண்டிருந்தன. கடலுக்குச் சென்ற பரதவர்களின் படகுகளும் கட்டு மரங்களும் கரையை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தன.

மீண்டும் மீண்டும் நடந்த விவாதங்களுக்குப் பிறகு மரக்கலத் தலைவன் இறுதியாக அறிவித்தான்.

"உபதலைவர்களே, இந்தக் கலங்களுக்குத் தலைவன் நான்தான் என்றாலும் உங்கள் அனைவரின் கருத்து களையும் புறக்கணித்துவிட எனக்கு மனமில்லை. என்றாலும் மானாபரணரின் உத்தரவை மீறி, நாம் ஈழத்துக்குச் சென்றுவிடுவது நமக்கு வீண் அவப் பெயரையும், தொல்லைகளையும் ஏற்படுத்தும்"

"அது மட்டுமல்ல. மானாபரணர் மன்னரின் நெருங்கிய உறவினர் என்பதையும், நாம் கூறும் உண்மை

களை விட அவர் கூறும் பொய்களையே மன்னர் ஏற்றுக் கொள்வார் என்பதையும் மறந்துவிடக் கூடாது. என்றாலும் நாம் அனுப்பியிருக்கும் ஓலைக்கு மன்னரிட மிருந்து இதுவரை மறுமொழி வரவில்லை. எதற்கும் நாளைக் காலை வரையில் பொறுத்திருப்போம். நாளைக் காலை நாமே புறப்பட்டு, மன்னரைச் சந்தித்து விவரத்தைக் கூறலாம்”

மரக்கலத் தலைவனின் முடிவை மற்றவர்களும் ஏற்றார்கள். ஆனால் அடுத்து நேரப்போவதை உணராத மரக்கலத் தலைவனும் உபதலைவர்களும் கலத்தின் மேல் தளங்களில் பந்தங்களை ஏற்ற உத்தரவிட்டு, மீண்டும் கீழ்த்தளத்துக்கு இறங்கினார்கள்.

கடலிலிருந்து கரையை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்த படகுகளில் வடக்கேயிருந்து கரையோர மாகவே கலங்களின் அருகே வந்தது ஒரு படகு. இரு கரங்களையும் கட்டிக் கொண்டு மிக அமைதியாக கலங்களை உற்றுக் கவனித்தபடி படகில் அமர்ந்திருந் தான் சீடன் நம்பி.

# 30. திருவாழும்கோடு

**வி**ழிஞத்தின் மாலைப் பொழுது எப்போதும்போல் அழகாகவே இருந்தது. கூடு திரும்பிக் கொண்டிருந்த பறவைகளும், வீடு திரும்பிக் கொண்டிருந்த பரதவரும் துறைமுகத்தின் இருபுறமும் நீண்ட சிறிய கடற்புரத்திலும், வலிய கடற்புரத்திலும் நிறைந்து கிடந்தனர். கடலைத் தெய்வமாகக் கருதும் பரதவர் அன்றைய பொழுதுக்கு நன்றி கூறி, தங்கள் கரகரத்த குரலில் பாடிக் கொண்டே செல்வதற்குப் போட்டியாகக் கூடு திரும்பும் பறவைகளும் பலவித குரல்களில் இரைச்சலிட்டுக் கொண்டே பறந்தன. கதிரவனையும் அந்த மாலைப்பொழுதின் மயக்கம் ஆட்கொண்டு விட்டதால் வானிலிருந்து சரிந்து

கொண்டே சென்றவன் சிவந்த கதிர்களைப் பாய்ச்சிய படியே கடலில் இறங்கிக் கொண்டிருந்தான். நீரில் இறங்கிய பின்னும் தெளியாத மயக்கம் அவனைக் கடலுக்குள்ளேயே தள்ளி மூழ்கடித்தது. ஒளி மறைந்து இருள் சூழ முற்பட்டதால், செல்லும் வழியறியாத மேகக் கூட்டங்கள் பலதிசைகளிலும் பிரிந்து தவிப்புடன் மிதந்து சென்றுகொண்டிருந்தன.

படகில் பரதவரைப் போல உடையணிந்து அமர்ந்த படியே மாலைப் பொழுதை ரசித்துக் கொண்டிருந்த நம்பியின் விழிகள் அவ்வப்போது விழிஞத்தின் வடபுறத்துச் சிறிய கடற்புரத்தை நோக்கிச் சென்று திரும்பிக் கொண்டிருந்தன. தெற்கே நீண்ட கடற்கரையை மணல்வெளியாக அடித்திருந்த இயற்கை, சிறிய கடற்புரத்தைப் பாறைகள் நிறைந்ததாகவும், இடையே சேற்றுக் குழிகள் நிறைந்ததாகவும் மனித நடமாட்டமற்ற பகுதியாகவும் ஆக்கி வைத்திருந்தது. முதல் ஜாமம் தொடங்கி, இரு நாழிகைகள் கழித்த பின்னர் பாறைகளும் சற்று உள்ளே தள்ளி தென்னைகள் சூழ்ந்த அந்தப் பகுதியில் பந்தமொன்று ஏற்றப்பட்டு உயர்ந்து இடமும் வலமுமாக ஆடியது. பின்னர் பாறைகளின் இடையே நகர்ந்து, கடற்கரை வளைந்து உட்புறம் திரும்பிய துறைமுகப்பகுதியை அடைந்து பதுங்கியது.

இடைக்கச்சையிலிருந்து குறுவாட்கள் இரண்டை எடுத்துப் பற்களில் கவ்விக் கொண்ட நம்பி, சிறு துணி மூட்டையொன்றையும் பிரித்து, வெண்மணல் போன்று இருந்த பொருளையும் ஒருமுறை பார்த்து மீண்டும் கச்சை முடிப்பில் செருகிக் கொண்டான்.

அப்படியே சரிந்தவன் கவிழ்ந்தபடியே கடல் நீரில் விழுந்தான். அவன் நீரில் விழுந்த பின்னர் அந்தப் படகு அங்கிருந்து நகர்ந்து தெற்கே நீண்ட மணல்வெளியை நோக்கிச் சென்றது.

கடலுக்குள் விழிகள் பழக சற்றுநேரம் மெல்ல நீந்தியவன் குனிந்து இன்னும் சற்று ஆழத்துக்குச் சென்று

நீந்தத் தொடங்கினான். கலத்தை நெருங்க நெருங்க தளத்தின் மீதிருந்த பந்தங்களின் ஒளியில் நீர்ப்பரப்பு தெரிவதைக் கவனித்தபடியே பக்கப்பலகையைக் கரத்தால் தட்டிப்பார்த்துக் கலத்தின் அடிப்புறத்தை அடைந்தான். மறுபக்கம் நீண்ட பருத்த கயிறு ஒன்று கடலுக்குள் செல்வதைக் கவனித்து நங்கூரம் மாட்டித் தொங்கவிடப் பட்ட கயிறு அதுதான் என்பதைப் புரிந்து கொண்டவன் நீர்மட்டத்துக்கு கீழேயே அடைந்து அதை இறுகப் பற்றினான்.

அந்தக் கயிற்றைப் பிடித்து ஏற முயல்பவன்போல் கால்களாலும் கரங்களாலும் பற்றிக் கொண்டவன், இடைக்கச்சையிலிருந்த சிறு துணிமூட்டை எடுத்து விரித்து அதனுள் வெண்மணல் போலிருந்த பொருளை கைநிறைய அள்ளி அந்தக் கயிற்றின் மீது இரு கரங்களாலும் பூசினான்.

கடல்நீரில் நங்கூரக் கயிறுகள் எளிதில் பாதிக்கப் படாதிருக்க அதன் மீது பூசப் பட்டிருந்த முதலைக் கொழுப்பு அவன் பூசிய வெண்மணல் போன்ற பொருள் பட்டதும் கரையத் தொடங்கியது. இரண்டொரு கணங்கள் காத்திருந்த நம்பி தன் பற்களில் கவ்விக் கொண்டிருந்த இரு குறுவாட்களையும் எடுத்து லாகவமாக, இருகரங்களாலும் வெண்மணலைப் பூசிய இடத்தில் பதித்து முன்னும் பின்னுமாக இழுத்து அறுக்க ஆரம்பித்தான்.

அந்தப் பகுதியில் நாழிகை ஏறஏற கடல் மட்டம் சற்று உயர்ந்து அலைகள் பலமாக வீசத் தொடங்கிவிடும் என்பதை உணர்ந்திருந்த நம்பி, கலத்தின் ஆட்டம் அதிகரிப்பதைக் கவனித்து, மீண்டும் மூச்சை இறுக்கிப் பிடித்தபடி குறுவாட்களை அழுத்தமாகப் பதித்து இழுத்தான். விரலளவு இடைவெளி கொடுத்த பின்னர் கயிறு வேகமாக அறுபடத் தொடங்கியது. முழுதுமாகக் கயிற்றை அறுத்த நம்பி ஒருமுறை நீர்மட்டத்துக்கு வந்து

காற்றை உள்வாங்கிக் கொண்டு மீண்டும் நீரில் மூழ்கி பாறைகள் இருந்த பகுதியை நோக்கி நீந்தினான். அவன் பாறைகளைப்பற்றி ஏறி திரும்பிப் பார்த்த போது நங்கூரம் அறுக்கப்பட்ட கலம் அலைகளின் வேகத்தால், துறைமுகத்தின் உட்புறத்தை நோக்கி மெல்ல நகரத் தொடங்கி யிருந்தது.

அதே கணத்தில் அவன் தலைக்கு மேலாக ஜிவ்வென்று காற்றைக் கிழிக்கும் ஒலியுடன் அந்தப் பந்தங்கள் பறந்து மரக்கலத்தை நோக்கிச் சென்றன.

அவை வெறும் பந்தங்களல்ல, எண்ணெயில் நனைக்கப்பட்ட துணிகள் சுற்றப்பட்ட பெரும் அம்புகள் என்பதைப் புரிந்து வைத்திருந்த நம்பி, பந்தங்கள் வந்த திசையை நெருங்கினான்.

தன் தோழர்கள் ஐந்தாறு பேர் எரியம்புகள் பூட்டப் பட்ட விற்களுடன் நிற்க, முன்னால் நின்று கொண்டிருந் தாள் செங்கமலச் செல்வி. அவள் கரத்திலும் பெரும் தீயைக் கிளப்பிக் கொண்டிருந்த அம்புடன் கூடிய கோதண்டம் ஒன்று இருந்தது. மற்ற சீடர்களை நோக்கி அவள் குரல் சற்றுக் கடுமையுடன் ஒலிப்பது நம்பிக்குக் கேட்டது.

ஏதோ அப்போதுதான் பாடசாலையில் பயிற்சி யளித்துக் கொண்டிருப்பது போல் அவர்களை எச்சரித்துக் கொண்டிருந்தாள் அவள்.

"கலம் நகரத் தொடங்கிவிட்டதைக் கவனியுங்கள். அலைகள் பெரிதாக எழுந்து கொண்டிருப்பதால் அதன் ஆட்டமும் அதிகரித்திருக்கிறது. பாய்மரத்தின் நடுப் பகுதியை நோக்கி, கவனமாகக் குறிவைத்து எறிய வேண்டும். ஒரு அம்பு வீணாகிப் போனாலும் நான் கண்ணாகனாரிடம் கூற வேண்டியிருக்கும், எச்சரிக்கை" என்றவள் "ம். அடுத்த அம்புகளைச் சரியாகக் குறிவைத்து எறியுங்கள்" என்றாள்.

அம்புகள் பறந்ததும் அவளை நெருங்கி வணங்கிய நம்பியை நோக்கியவள் “வா நம்பி, உனக்குக் கோதண்டத்தில் பயிற்சி இருக்கிறதல்லவா?” என்றாள்.

“இருக்கிறது தேவி”

“நீ ஒருமுறை முயன்றுபார்” என்ற செல்வி, தன் கரத்திலிருந்த கோதண்டத்தை அவனிடம் நீட்டினாள்.

அவளிடமிருந்து கோதண்டத்தை வாங்கிய நம்பி எரியம்பு ஒன்றை அதில் லாகவமாகப் பொருத்தி நாணை இழுத்து விடுத்தான். மிகச் சரியாகப் பாய்ந்த அந்த அம்பு மரக்கலத்தின் பாய்மரத்தை நடுப்பகுதியில் தாக்கிப் பிளந்து அதில் செருகி நின்றது. ஏற்கெனவே பற்றிக் கொண்டிருந்த பாய்மரத்தில் மேலும் தீ பரவியது.

கலத்தின் மீது வீரர்கள் கலவரத்துடன் ஓடுவதையும், பாய்மரமும் அதில் சுற்றப் பட்டிருந்த பாய்களும் எரியத் தொடங்கிவிட்டதையும், கலம் அலைகளில் நகர்ந்தபடி அடுத்து நின்ற கலத்தின் மீது மோதுவதுபோல் சென்றதையும் கவனித்தாள் செல்வி. அவள் எதிர்பார்த்த படி அந்தக் கலம் இரண்டாவது கலத்தின்மீது மோதவும் செய்தது. பாய்மரம் நடுவில் பிளந்து எரிந்தபடியே இரண்டாவது கலத்தின்மீது சரிந்து அதைப் பற்றவைக்கவும் செய்தது.

திருப்தியுடன் தலையசைத்த செல்வி “சரி வாருங்கள். இங்கு நம் பணி முடிந்து விட்டது. மீதிப் பணியை எரிகின்ற அந்தக் கலம் கவனித்துக் கொள்ளும். நாம் விழிஞத்தை விட்டுப் புறப்பட வேண்டியதுதான்” என்றபடி முன்னால் நடந்தாள். சீடர்களும் நம்பியும் பின் தொடர்ந்தனர்.

பரலியா என்று மேலைநாட்டு வணிகர்களாலும், பரலியாற்றங்கரையில் இருந்ததால் பரலிமாநகர் என்று தமிழர்களாலும், பொன்னும், முத்தும், பவளமும், மாணிக்கங்களும் அதிகமாகப் புழங்கியதால் திரு

வாழுகின்ற மலைப்பகுதி என்ற பொருளில் திருவாழும் கோடு என்று மலைநாட்டு மக்களாலும் அழைக்கப்பட்ட அந்த நகரம் உண்மையில் இரு தலைமுறைகளுக்கு முன் அதீத செல்வச் செழிப்போடு விளங்கிக் கொண்டுதான் இருந்தது.

சோனகர் என்று அழைக்கப்பட்ட சீனர்கள் மேலைக் கடலில் தங்கள் கலங்களைப் பாய்விரிக்கும் முன்பாகத் தங்குமிடமாகத் தேர்ந்தெடுத்ததால், சீனத்துப்பட்டு விற்க வந்த சீனர்களும், தமிழகத்தின் கிழக்கு துறைமுகங் களுக்கும், கடாரம், ஈழம், சாவகம், சீனம் என்று கீழை நாடுகளுக்கும் செல்ல முயன்ற மேலை நாட்டவர் பலரும் அந்த நகரத்தின் அழகால் கவரப்பட்டு அங்கேயே தங்கிவிடவும் செய்தனர். நகரின் மக்களில் பெரும் பாலோர் வெளிநாட்டவராகவே தென்பட்டனர்.

தமிழரையும், யவனரையும், அராபியர்களையும், சீனரையும் கவர்ந்து இழுக்கக் கூடிய அழகை அந்த நகரில் இயற்கை கொட்டிக் குவித்திருந்தது. ஒருபுறம் ஓயாத சீற்றத்துடன் அலை வீசும் கடலும், மறுபுறம் உயர்ந்து எழுந்து நின்ற மலையும், அரண்களாக அமைந்த அந்த நகரம் சேர மன்னர்களால் புறக்கணிக்கப்பட்ட பல நகரங்களில் ஒன்றாக மாறியது மட்டுமின்றி, இருதலை முறைக்கும் மேல் அருகிலிருந்த பாண்டியரிடம் சிக்கி அதன் அழகைப் பெரும்பாலும் இழந்து போயிருந்தது. சேர நாட்டு மன்னர்களாலும் மக்களாலும் புறக்கணிக்கப் பட்டதால், அங்கு வெளிநாட்டவரின் செல்வாக்கு சுங்கத்துறையிலும், துறைமுகத்திலும் விரவிக்கிடந்தது.

நகரைச் சுற்றிச் சென்ற கோட்டைச் சுவர்கள் பராமரிப் பின்றி இடிந்தும் சரிந்தும், மேற்புறத்துக் காவல் கூடங் களும், அம்பு எறியும் பொறிகள் வைக்கும் மாடங்களும், செடிகொடிகள் வளர்ந்து சுவரையே மூடிக் கிடந்தது. கோட்டைக் கதவுகளில் அழகுக்காகவும், பாதுகாப்புக் காகவும் செருகப் பட்டிருந்த பெரும் தந்தங்கள்

காணாமற்போய் அந்த இடங்களில் வெறும் துளைகள் மட்டும் தூசி படர்ந்து கிடந்தன.

ஆனால் உள்ளே ஆலயப் பிராகாரங்களைப் போல் நீண்ட சதுரத்தில் அமைந்திருந்த வீதிகளில் ஓரளவு சேரநாட்டு மக்கள் தென்பட்டனர்.

மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் சேர மன்னனும், பெரும் ரசிகனுமான ஸ்தாணுரவியால் நிர்மாணிக்கப் பட்ட பரலிமாநகரின் அரண்மனை, சிற்பங்களால் ஆன தோரணங்களும், வாயில்களும், பெரும் கூடங்களும், கல்லினாலேயே நேர்த்தியாகச் செதுக்கப்பட்ட இருக்கைகளுமாக அழகாகவே காட்சியளித்தது. பராமரிப்புக் குறைந்து போனதால் தூசும், வீதிகளில் செல்லும் வணிகர்கள் செல்லும் தேர்கள் கிளப்பும் புழுதியும் படர்ந்து கிடந்தாலும் அத்தனை அழகிய சிற்பங்களும், அழகும் புகையால் மூடப்பட்ட நெருப்பு போலவே ஒளிர்ந்து கொண்டிருந்தது.

நகரைக் கைப்பற்றி, கோட்டையையும் வணிகர் களையும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்த உதயகிரி சுந்தர பாண்டியனும் பராமரிப்பில் கவனமின்றி நகரிலிருந்து கிடைக்கும் சுங்கத்திலும், வணிகர்கள் அளிக்கும் பரிசுகளிலுமே ஈடுபட்டுக் கிடந்தான். அதற்காகவே சிறிய காவற்படை ஒன்றை அந்த நகரில் உலவ விட்டிருந்தவன் அரண்மனையை அந்த வீரர்களின் தங்குமிடமாக மாற்றியிருந்தான். அவ்வப் போது வந்து அரண்மனையில் தங்கிய சுந்தர பாண்டியனுக்காக அரண்மனையின் மேல்தளம் மட்டும் ஓரளவுக்குப் பராமரிக்கப்பட்டு வந்தது.

அன்றும் சுந்தரபாண்டியன் வந்திருந்ததால் அரண் மனையில் வீரர் நடமாட்டம் சற்று அதிகமாகவே காணப் பட்டது. மேல் தளத்துக்கு எவரையும் அனுமதிக்கக் கூடாதென்ற அவன் உத்தரவை நிறைவேற்ற கூடத்தின் வாயிலிலும், மேலே செல்லும் படிகளின் தொடக்கத்திலும் வீரர்கள் காவலுக்கு நின்றிருந்தனர்.

மேல்தளத்துக் கூடத்தில் இருக்கையொன்றில் அமர்ந்த படி எதிரில் அங்குமிங்குமாக உலவிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியனைக் கவனித்துக் கொண்டிருந்த வீரகேரளனின் சிவந்த முகத்தில் உஷ்ணம் அதிகமாகவே தெரிந்தது. அதைவிட அமைதியின்றி உலவிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியனின் பெருவிழிகள் சிவந்து அவனும் அதீத சினத்தின் வசப்பட்டிருப்பதை உணர்த்தியது. சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த இரு உபதலைவர்களின் முகங்களில் குழப்பம் முழுவதுமாகப் படர்ந்து கிடந்தது.

உலவிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியனை அழைத்த வீரகேரளன் "சுந்தர பாண்டியரே, நாம் இப்படி சினத்தின் வசப்பட்டோ, குழப்பத்தில் ஆழ்ந்திருப்பதிலோ எந்தப் பயனும் இல்லை. அடுத்துச் செய்ய வேண்டியதைப் பற்றிப் பேசவேண்டும் என்று நீங்கள் அழைத்ததாலேயே என் படைகளை விட்டு நான் இங்கு வந்தேன்" என்றான்.

உலவுவதை நிறுத்திய சுந்தர பாண்டியன் திரும்பி வீர கேரளனை நோக்கினான் "குழப்பங்கள் ஒன்றிரண்டல்ல வீர கேரளரே. கொல்லத்திலிருந்து திடீரென்று அத்தனை ஈழ வீரர்களையும் அழைத்துக் கொண்டு மானாபரணன் புறப்பட்டுவிட்டார். கடலில் இருந்த பன்னிரு கலங்களும் உடன் சென்றுவிட்டன. நம் திட்டங்களில் மாற்றம் இருப்பதானால் மானாபரணன் அதைப்பற்றி ஏன் ஏதும் தெரிவிக்கவில்லை? அவர் சென்ற பிறகு விழிஞத்தின் கோட்டை தாக்கப்பட்டிருக்கிறது. கோட்டையிலிருந்த ஈழ வீரர்களில் முக்காலுக்கும் மேல் அழிக்கப் பட்டிருக்கிறார்கள். சேரலாதர் அங்கிருந்து வெளியேறி விட்டார்" படபடவெனப் பொரிந்த சுந்தர பாண்டியன் "அது மட்டுமல்ல வீரகேரளரே, மலைப்பகுதிக்குச் சென்ற விக்கிரம பாண்டுவின் உடல் மட்டும்தான் வந்திருக்கிறது. உடன் சென்ற வீரர்கள் எவரும் உயிரோடு திரும்ப வில்லை" என்றான்.

"சுந்தர பாண்டியரே, பாண்டிய நாட்டைச் சேர நாட்டுடன் இணைக்கும் மலைக் கணவாயில்தான் நானும் பாசறை அமைத்திருக்கிறேன். எம்மைக் கடந்து எந்தப் படைப்பிரிவும், ஏன் ஒரு வீரன்கூடச் செல்ல வில்லை. விக்கிரமபாண்டுவுடன் இருநூறு வீரர்களுக்கு மேல் சென்றார்கள். அவர்களை அழிக்க அதைவிடவும் வலிமையான படை தாக்கியிருக்க வேண்டும்"

"என்ன கூறுகிறீர்கள் வீரகேரளரே?" சுந்தர பாண்டியனின் தலை வெடித்து விடும் போலிருந்தது.

"வடக்கே மன்னர் காழிவர்மரது வீரர்கள் இரவும் பகலும் எல்லைகளில் உலவுகிறார்கள். இடையிலுள்ள மலைப்பகுதி முழுக்க அடர்ந்த வனப்பகுதி. அதில் வாழும் காட்டு இனத்தவர் மகா மூர்க்கர்கள். அன்னியர் எவரும் நுழைய முடியாது. நுழைந்தாலும் கொல்லப் படுவார்கள். சேர நாட்டைச் சேர்ந்தவர் எவரோதான் இதைச் செய்திருக்க வேண்டும்" என்றான் வீரகேரளன்.

"அப்படியானால்..."

"ஆம். திருவஞ்சிக்களத்தை நான் தாக்கியபோது அங்கு சேரலாதரின் மக்களும் இல்லை, அதிக வீரர்களும் காணப்படவில்லை. அவர்கள் முன்னதாகவே வெளியேறி யிருக்க வேண்டும். ஒருவேளை அவர்கள் இதைச் செய்திருக்கலாம்"

சுந்தரபாண்டியனின் முகம் இன்னும் கறுத்தது.

வீரகேரளனின் குரல் தொடர்ந்து ஒலித்தது "சோழர் வசம் இருக்கும் பாண்டிய நாட்டில், சோழர்கள் உதவியோடு சேரலாதர் ஆலயம் கட்டுவது சேர நாட்டையே அவமதிப்பதாக எண்ணுகிறேன். அவரது முயற்சியைத் தடுக்க ஆரம்ப முதலே நான் எவ்வளவோ முயன்றேன். ஆனால் இயலவில்லை. இப்போது மானாபரணர் அவரைச் சிறைசெய்து வைத்திருந்தும் பயனில்லை. சேரலாதரை அத்தனை குறைவாக எண்ணி

விடமுடியாது சுந்தர பாண்டியரே. விக்கிரமபாண்டுவின் மரணத்துக்கு அவர்தான் காரணமாக இருக்க வேண்டும்"

வீரகேரளன் இன்னும் தொடர்ந்தான் "சேரலாதரின் வீரர்கள் திருவஞ்சிக்களத்திலிருந்து முன்னதாகவே சென்று மலைப்பகுதியில் மறைந்திருக்க வேண்டும். விக்கிரமபாண்டுவை அவர்கள்தாம் கொன்றிருக்க வேண்டும்"

வீரகேரளன் கூறி முடிக்கவும் வாயிலில் நின்ற வீரனொருவன் உள்ளே நுழையவும் சரியாக இருந்தது. உள்ளே நுழைந்த வீரன் தலை வணங்கினான்.

"மன்னவா, மானாபரணரின் கலங்களைத் தொடர்ந்து சென்ற நம் வீரர்கள் வந்திருக்கிறார்கள்" என்றான்.

"அழைத்து வா" உத்தரவிட்டான் சுந்தரபாண்டியன்.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்த இருவரின் உடைகளும் பரதவர் உடைகளாக இருந்தன. அவர்கள் முகங்களில் தெரிந்த பதற்றமும், அலை வீச்சின் காரணமாக உடலோடு ஒட்டிக் கிடந்த ஈர உடைகளும், முழங்கால்வரை ஒட்டிக் கிடந்த மணல் துகள்களும், அவர்கள் அப்போதுதான் கரையில் வந்து இறங்கி ஓடி வந்திருக்கிறார்கள் என்பதைப் புலப்படுத்தின.

"என்ன நேர்ந்தது சொல்" உத்தரவிட்ட சுந்தர பாண்டியன் குரல் வறண்டு கிடந்தது. அவர்கள் கூறப்போவதை அவன் எதிர்பார்த்திருந்ததாகவே தோன்றியது.

"மன்னவா, மானாபரணரின் கலங்கள் கொற்கைக்குச் செல்லவில்லை..."

"பின் எங்கே சென்றன?"

சற்றுத் தயங்கிய வீரன் "மானாபரணரின் கலம் ஈழத்தை நெருங்கும்போது வல்வெட்டித் துறையிலிருந்தும், காங்கேசன் துறையிலிருந்தும் ஈழத்துப் போர்க்கலங்கள்

வந்து வழிமறித்தன. ஈழ வீரர்கள் மானாபரணரைச் சிறை செய்து ஈழத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டார்கள். மற்றக் கலங்கள் அனைத்தும் அனலைத் தீவுக்கருகே நிறுத்தப்பட்டிருக்கின்றன" என்றான்.

வீரன் கூறியதைக் கேட்ட வீரகேரளன் திரும்பி, பாண்டிய மன்னனை நோக்கினான்.

சுந்தர பாண்டியனின் முகம் வேப்பங்காயை விழுங்கியது போலிருந்தது.

# 31. மகாலானா மேகா

**ம**னிதன் ஒன்றை நினைத்துச் செயல்படும்போது அதை அப்படியே முடித்துவைத்து விட்டால் தெய்வம் என்று ஒன்றிருப்பதையே மறந்துவிடுவான் என்பதால், அதை வேறுவிதமாக நடத்திவிடுவது தெய்வத்தின் வாடிக்கை என்று ஒரு தமிழ்ப் பழமொழி கூறுகிறது.

மானாபரணன் நினைத்ததும் அப்படித்தான் நடந்து கொண்டிருந்தது. இத்தனைக்கும் வெகு எச்சரிக்கையுடன் தன் கலத்தையும் தன்னைத் தொடர்ந்த கலங்களையும் ஈழத்துக் கரைப்பகுதி புள்ளியாகத் தென்பட்டதும், அதை விட்டு வெகு தூரம் தள்ளிக் கடலில் செலுத்தி, ஈழத் துறைமுகங்களை விடுத்துக் கொற்கையை நோக்கிச் செலுத்த முயன்றான். ஆனால் தமிழகத்துக் கடற் பகுதியில் நுழைந்த சில நாழிகைகளில் ஈழப் போர்க் கலங்கள் நான்கு அவனை நோக்கி வரத் தொடங்கின.

தூரத்தில் அவற்றைக் கண்டதுமே தளத்திலிருந்த வீரர்களை எச்சரித்துக் கீழ்த்தளத்துக்கு அனுப்பிவிட்டுத் தானும் மரக்கலத் தலைவன் அறையின் சாளரம் வழியே கலங்களைக் கவனித்துக் கொண்டு நின்றான். அந்தக் கலங்களின் துடுப்புகள் வேகமாகத் துழாவப் படுவதையும், வேகத்துடன் தன்னை நெருங்குவதையும்

கவனித்த மானாபரணன் அந்தக் கலங்களைக் கவனிக்கா மலே செல்பவனைப் போல் தன் கலத்தைத் துரிதப்படுத்த உத்தரவிட்டான். ஆனால் அந்தப் போர்க்கலங்களின் வேகம் அபரிமிதமாயிருந்தது.

அவற்றில் இரண்டு வந்த பாதையிலிருந்து விலகி, அரைவட்டமாகத் தன்னை மடக்கிவிடும் உத்தேசத்தில் முன்னே செல்ல முயன்றதையும் கண்டான். முன்னால் வந்த கலத்தில் ஈழக்கடற்படைத் தலைவன் மகாலானா மேகா மேல்தளத்தில் நிற்பதையும் அருகில் வீரர்கள் பலர் ஆயுதமேந்தி நிற்பதையும் கவனித்த மானாபரணன் பிடரியில் குளிர் பரவியது. மானாபரணனை விட வயதில் மூத்தவனானாலும் கடற்படைத்தலைவனின் உயரமும், இடைவிடாத பயிற்சிகளின் காரணமாக, வைரம் பாய்ந்த தேகமும், முறுக்கப்பட்டு வானை நோக்கிக் குறிவைத்த மீசையும் பார்வைக்குச் சற்று அச்சம் ஏற்படுத்தவே செய்தது.

அந்த ஈழத்துப் போர்க்கலங்கள் மானாபரணனைச் சூழ்ந்து கொண்டன. கடற் படைத்தலைவனின் கலம் இடித்துவிடுவதுபோல் நெருங்கி வந்து நின்றது. ஒரே தாவலில் மானாபரணின் கலத்தில் குதித்து, வீரர்கள் பின் தொடரத் தன்னை நெருங்கிய கடற்படைத் தலைவனது வேகத்தையும், உக்கிரமாகச் சிவந்துகிடந்த விழிகளையும் கண்ட மானாபரணனின் சித்தத்தில் அச்சம் பரவியது.

ஆனாலும் ஏதோ நெருங்கிய உறவினரைக் கண்டது போல் முகத்தை மலர வைத்துக் கொண்ட மானா பரணன், தன்னை நெருங்கிய கடற்படைத்தலைவனை முன்னால் சென்று வரவேற்றான்,

“வரவேண்டும், வரவேண்டும். கடற்படைத் தலைவரைக் கண்டு நாட்கள் பல ஆகின்றன. மன்னர் நலமாக இருக்கின்றாரா?” என்றான் சிரித்த முகத்துடன்.

மகாலானாமேகாவின் முகம் கல்லாயிருந்தது. சகஜமாக உரையாடவோ, முறுவலிக்கவோ அவன் முயலவில்லை. அவன் கையசைவில் உடன் நின்ற வீரர்கள் மானா பரணனைச் சுற்றி வளைத்து நீட்டிய ஈட்டிகளுடனும், உருவிய வாட்களுடனும் நின்றனர்.

கடற்படைத் தலைவனின் குரல் இரும்பாக ஒலித்தது "மானாபரணா, உன்னைச் சிறைசெய்து அழைத்து வரும்படி மன்னர் உத்தரவிட்டிருக்கிறார். புறப்படு என்னுடன்"

தன்னைச் சுற்றி ஆயுதபாணிகளாய் நின்ற வீரர் களையும் கடற்படைத் தலைவனின் குரலில் ஒலித்த கடுமையையும் கண்ட மானாபரணன் "தலைவரே, நீங்கள் மன்னர் அழைத்ததாக ஓலை விடுத்திருந்தாலே போதும். ஏதோ தப்பியோடும் எதிரியைச் சுற்றி வளைப்பதுபோல் இத்தனை வீரர்களை அழைத்து வரவோ, என்னைச் சுற்றி நின்று அவர்கள் வேடிக்கை பார்க்கவோ அவசியமில்லையே"

கடற்படைத்தலைவன் மசிந்ததாகத் தெரியவில்லை. "மானாபரணா, நமது கரைப் பகுதியை விட்டு வெகுதூரம் தள்ளி, உனது கலங்கள் வந்தது எதற்காக? கரையில் இருப்பவர்கள் பார்வையிலிருந்து தப்பிவிடலாம் என்ற எண்ணத்தினால்தானே? நமது போர்க் கலங்கள் வருவது தெரிந்த பின்னரும் ஏன் உடனே நிற்க முயலவில்லை?"

"தலைவரே, காற்று வீசும் திசையையும் வேகத்தையும் நீங்கள் கவனிக்கவில்லையா? நம் கரைப்பகுதியில் உள்ள பாறைகளில் கலங்கள் மோதிவிடும் அபாயம் இருப்பதைக் கவனிக்கவில்லையா? நான் கொற்கையை விரைவில் அடைந்துவிடும் உத்தேசத்தில் இருந்ததால் நம் போர்க்கலங்களைக் கவனிக்கவில்லை... நீங்கள் என்னை அழைத்துச் செல்ல வந்திருப்பதாகத் தெரியவில்லை. அவமதிக்கவே வந்திருப்பதாகத் தெரிகிறது. நான்

மன்னரின் உறவினன் என்பது நினைவிருக்கட்டும்” என்ற மானாபரணனின் குரல் உயர்ந்து ஒலித்தது.

“நன்றாகவே நினைவிருக்கிறது. அதிருக்கட்டும். உன்னுடன் வந்த இளவரசர் விக்கிரம பாண்டு எங்கே?” மகாலானாமேகாவின் குரலில் விபரீதத் தொனி ஒலித்தது.

மானாபரணன் பதிலேதும் கூறவில்லை. அவனைச் சுட்டுவிடுபவன்போல் பார்த்த கடற்படைத் தலைவன் தன் வீரர்களுக்குச் சைகை காட்டவே, அவர்கள் தடதட வென்று கலத்தின் தலைவன் அறைக்கும், கீழ்த்தளத் துக்கும் விரைந்தார்கள்.

“உன் மீது ராஜத்துரோகக் குற்றம் சாட்டப் பட்டிருக்கிறது மானாபரணா. மன்னரை எதிர்த்துக் கலவரம் செய்யும் விஜயபாகுவும் மன்னரின் உறவினன் தான். உறவுகளைக் கூறிக் குற்றத்திலிருந்து தப்பிக்க முடியாது. வா என்னுடன்” என்ற மகாலானாமேகா வீரர்களுக்கு சமிக்ஞை செய்துவிட்டுத் திரும்பி நடந்தான்.

வீரர்கள் மானாபரணனைச் சுற்றி வளைத்துத் தள்ளாத குறையாக நடத்தி, போர்க் கலத்தின் தளத்தின் நடுவில் அமர வைத்துச் சூழ்ந்து நின்றனர். கலம் காங்கேசன் துறைக்கும் வல்வெட்டித் துறைக்கும் இடையே நின்றிருந்த போர்க்கலங்களினூடே சென்றது. கலங்களின்மீது நின்றபடி தன்னைக் கொலைப் பார்வை யாகப் பார்த்த வீரர்களைக் கண்ட மானாபரணன், இனி தான் தப்பிக்கவோ, போராடவோ நினைக்கவும் இடமில்லை யென்பதைப் புரிந்து கொண்டதால் சுற்றி நின்ற வீரர்களை வெறித்துப் பார்த்தபடியே அமர்ந்திருந் தான். கலம் துறைமுகத்தை அடைந்ததும் ரதமொன்றில் மானாபரணனை ஏற்றிய கடற்படைத்தலைவன் வீரர்கள் சுற்றிவர அப்போதே தலைநகரை நோக்கிப் புறப்பட்டான்.

துறைமுகத்தை அடுத்த சாவகச்சேரியெங்கும் வீரர்களின் பாசறை நிறைந்திருந்தது. வழியெங்கும் ஏதோ போர்க்களத்துக்குச் செல்வது போல் ஆயுதங்கள் தாங்கிய வீரர்கள் பூரண போர்க்கவசங்களுடன் தற்பளை பாசறை யிலிருந்து தெற்கு நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள். விஜயபாகு மன்னருக்கெதிராக நடத்தும் புரட்சியும், கலவரமும் எத்தனை வலுவானதாக இருக்க வேண்டும் என்பது அந்தப் படைவீரர்களின் நீண்ட வரிசைகளி லிருந்து புலப்பட்டது. மானாபரணன் எதிர்ப்பையும் மீறி அவன் கரங்கள் பிணைக்கப்பட்டு, ரதத்தில் அமர்ந் திருக்க, கடற்படைத்தலைவன் செலுத்திய அந்த ரதம் அன்று மாலைப் பொழுதில் அனுராதபுரத்தை அடைந்தது. சித்தம் கொதிக்க ஏதும் செய்ய வகை யில்லாமல் ரதத்தில் அமர்ந்து வந்த மானாபரணனின் உஷ்ணம்கூட தூரத்தில் தெரிந்த அனுராதபுரத்தின் அழகிய வாயிலைக் கண்டதும் சற்று குளிரவே செய்தது.

பாண்டுகபாயன் என்ற ஈழ மன்னனால் நான்காம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டதாகவும், விஜயன் என்ற பாரதத்து மன்னனின் அமைச்சன் அனுராதனால் உருவாக்கப்பட்டது என்றும் மாற்றிமாற்றிக் கூறப்பட்ட அந்த அனுராதபுரத்தை உருவாக்கியவர் எவரானாலும் அவன் பெரும் ரசிகனாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

அதுமட்டுமின்றி நகரத்தை உருவாக்கிய அந்த மன்னன் தமிழகத்தின் காஞ்சி நகரைக் கண்டு ரசித்து, அதேபோல். ஒரு நகரை உருவாக்கவும் முயன்றிருக்க வேண்டும்.

காஞ்சிமா நகரின் இருபுறங்களிலும் சோம குண்டம், சூரிய குண்டம் என்னும் பெரும் ஏரிகள் இரண்டு இருப்பதைப்போல், ஈழத்து அனுராதபுரத்தின் கிழக்கிலும், மேற்கிலும் நுவாரா வீவா, திஸ்ஸா வீவா என்று இரு ஏரிகள் அந்த மாலைப்பொழுதில் நகரத்தின் மாளிகை களும், கோபுரங்களும் ஜாஜ்வல்யமாக வீசிய விளக்கு களைப் பிரதிபலித்து, நீர்ப்பரப்பில் இன்னொரு நகரம் இருப்பதைப் போல் மின்னின.

நகரத்தின் வாயிலிலேயே கடுமையான காவல் தொடங்கி விட்டிருப்பதையும், உள்ளே நுழைபவர் எவரானாலும் பலத்த சோதனைக்கும், பல கேள்வி களுக்கும் பிறகே அனுமதிக்கப்படுவதையும் கவனித்த படியே ரதத்தில் அமர்ந்திருந்தான் மானாபரணன். கடற்படைத்தலைவனின் ரதத்தைக் கண்டதும் காவலர்கள் வணங்கி விலகியதால் ரதம் நிற்காமலேயே உள்ளே நுழைந்து அகன்று விரிந்த வீதிகளில் வேகமாகச் சென்றது.

வழியெங்கும் ஆங்காங்கே கம்பீரமாக எழுந்து நின்ற ஸ்தூபிகளையும், புத்த ஆலயங்களையும், வீதிகளின் இருபுறங்களிலும் நின்ற பெரும் மாளிகைகளையும் கவனித்தபடி வந்த மானாபரணனின் சித்தத்தில் உஷ்ணம் என்னவோ குறையத்தான் செய்தது. ஆனால் அதற்குப் பதிலாக, அரண்மனையை நெருங்க நெருங்க அச்சம் அந்த இடத்தை நிரப்ப முயன்றது. தன்மீது கடற் படைத்தலைவன் கூறிய குற்றத்தை எண்ணியவன், மன்னன் பராக்கிரமபாகுவின் விசாரணை முறைகளை ஏற்கெனவே அறிந்திருந்ததால், அவன் சித்தத்தில் எழுந்த அச்சம் மெல்ல மெல்ல உயர்ந்து அவனை மேற்கொண்டு சிந்திக்கவிடாமல் அடித்தது.

அரண்மனை வாயிலில் நின்ற வீரர்கள் கடற்படைத் தலைவனின் ரதத்தைக் கண்டதும் வணங்கி, வழி விட்டனர். மானாபரணனைக் கீழே இறக்கி கைப் பிடியாகப் பிடித்த மகாலானா மேகா படிகளில் தடதட வென ஏறி உள்ளே விரிந்த கூடத்தை நோக்கி நடந்தான். கூடத்தில் நடமாடிய வீரர்களின் பார்வை வெறிக்க, அரண்மனை ஸ்தானிகரின் அடர்ந்த புருவங்கள் மானா பரணனைக் கண்டதும் நெறித்தன. வீரர்களை அழைத்து மானாபரணனை ஒப்படைத்த மகாலானா மேகா உள்ளே நடந்தான். அவன் உள்ளே சென்ற ஒரு நாழிகைக்கெல்லாம் உள்ளேயிருந்து மானாபரணனை

விசாரணை மண்டபத்துக்கு அழைத்துவர உத்தரவு வந்தது.

விசாரணை மண்டபத்துக்குச் செல்லும் வழிநெடுக பலர் கரங்கள் பிணைக்கப்பட்டு, காவலர்களால் நிறுத்தப் பட்டிருப்பதையும், உள்ளேயிருந்து விசாரணை முடிந்து வெளியேறும் குற்றவாளிகள் முகங்களில் பீதியுடன் வருவதையும் கண்ட மானாபரணனின் இதயம் வேகமாகத் துடிக்கத் தொடங்கியது. சாதாரணமாகக் காலைப் பொழுதில் தொடங்கி நடக்கும் விசாரணை சபை உச்சிப்பொழுதுக்குள்ளேயே முடிந்து விடும் என்றாலும், நடக்கும் புரட்சியும் கலவரமும் விசாரணைகளை மாலை வரை நீட்டித்திருக்கிறது என்பதும் புரிந்தது அவனுக்கு.

விசாலமாக வடக்கு தெற்காக விரிந்திருந்த அந்த மண்டபத்தின் தூண்கள் நெடுக வீரர்கள் நின்றிருக்க, பிரதானிகளும், படைத்தலைவர்களும் வரிசையாக அமர்ந்து நடப்பவற்றைக் கவனித்துக் கொண்டிருந்தனர். சந்தேகிக்கப்பட்ட குற்றவாளிகளின் கரங்கள் கட்டப் பட்டு ஒருபுறம் நின்றிருக்க, அவர்களைப் பிடித்துவந்த வீரர்கள் அவர்களுடனே நின்றிருந்தனர். மண்டபத்தின் நடுவே கொண்டுவந்து நிறுத்தப்பட்ட மானாபரணன் ஒருமுறை சுற்றிலும் பார்த்துவிட்டு, நேர் எதிரே அவனைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த மன்னனை ஏறெடுத்தான். மன்னன் விக்கிரமபாகுவின் சிவந்த விழிகள் அவனைக் கிழித்துவிடுவது போல் பார்த்தன. சாதாரண உயரத்தில் சற்றுப் பருமனான தேகத்துடனும் அரியணையில் அமர்ந்திருந்த விக்கிரமபாகு பார்வைக்கு பூதாகாரமாகவே தெரிந்தான். அவன் விழிகளில் காலைமுதல் விசாரணை நடத்திய அலுப்பும், சினமும் தெளிவாகவே புலப்பட்டது. அருகில் நின்றிருந்த கடற்படைத் தலைவன் மகாலானா மேகா மன்னனிடம் ஏற்கெனவே அனைத்தும் ஒப்பித்துவிட்டதால், சலனமற்ற விழிகளுடன் மானாபரணனை வெறித்தபடி நின்றிருந்தான்.

மன்னனின் முதல் கேள்வி கடுமையுடன் ஒலித்தது "மானாபரணா, உறவு முறைகளை மனதில் வைத்துக் கொண்டு பதிலளிக்க வேண்டாம். இது விசாரணை நடத்துமிடம். உன் பொறுப்பில் நம்பிக்கையுடன் அனுப்பிவைத்த இளவரசன் விக்கிரம பாண்டு ஏன் கொல்லப்பட்டான்? அவனைக் கொன்றது யார்? அவன் இறப்புக்கு, நீயும் காரணம்தானே?"

ஒருகணம் நிதானித்த மானாபரணன் "மன்னவா, நமது பரம விரோதிகளான சோழருக்குத் தற்போது படைபலம் மிகக்குறைவாகவே இருக்கிறது. இப்போது அவர்களை வெல்வது எளிது. எனவே அவர்களுக்கு எதிராகச் சேரர் சிற்றரசுகளை முதலில் ஒன்றாக இணைக்கும் பணியில் ஈடுபட்டேன். அவர்களின் மன்னர் சேரலாதர் ராஜ சிம்மனை மீறி, மற்றவர்கள் எந்தப் பணியிலும் ஈடுபட மாட்டார்கள். எனவே அவரை நானே சென்று சிறை யெடுத்து வந்தேன். அவரைப் பணியவைக்க அவரது இளவல் பாஸ்கர ரவிவர்மனையும், மகளையும் பிடித்து வர இளவரசர் விக்கிரமபாண்டு சென்றார். சென்ற இடம் கானகம் அடர்ந்திருக்கும் மலைப்பகுதி. அங்கு நடந்தது என்னவென்பது விளங்கவில்லை. மூன்று தினங்கள் கழித்து அவரது உடல் கொண்டுவரப்பட்டது. இதில் என் குற்றம் ஏதுமில்லை மன்னவா" என்றான்.

"குற்றம் ஏதுமில்லையா? இளவரசரின் உடலை உடனே தலைநகருக்கு ஏன் கொண்டுவரவில்லை? என்னிடம் தெரிவிக்கவோ, விவரம் கூறவோ வரவில்லை. எதற்காகத் தலைநகருக்கு வராமல் கொற்கைக்குக் கலங்களைக் கொண்டு சென்றாய்?"

சற்று மௌனம் சாதித்த மானாபரணன் தயங்கிய படியே தொடர்ந்தான் "மன்னா, இளவரசர் உடல் என்னிடம் வந்து சேர்ந்த அன்றுதான் இங்கு புரட்சியும் கலவரமும் நடப்பதைப் பற்றி வணிகர்கள் என்னிடம் கூறினார்கள். கடற்படைத் தலைவர் சந்தேகிப்பதுபோல்,

என்னையும் இங்கு நடக்கும் புரட்சிக்குக் காரணமான விஜயபாகுவையும் தொடர்புபடுத்தி யாரும் கூறலாம். மேலும்...”

“மேலே சொல்”

“கொற்கையில் எனது இரு மகன்களையும் சோழர்கள் சிறை செய்துவிட்டதாகச் செய்தி வந்தது. கொற்கையை அடைந்தபிறகு விக்கிரமபாண்டுவின் உடலை மன்னருக்கு அனுப்பி விவரம் தெரிவிக்கலாம் என்றுதான்...” என்ற மானாபரணன் தனக்கு வந்த ஓலையையும் எடுத்து நீட்டினான்.

ஓலையைப் பெற்று மன்னரிடம் அளித்த கடற்படைத் தலைவனின் குரலில் உஷ்ணம் தெறித்தது, “நமது கலங்களைக் கண்டபிறகும் ஏன் நிற்கவில்லை? கரைப் பகுதியை விட்டு வெகுதூரம் தள்ளி உன் கலங்களைச் செலுத்தி வந்தது ஏன்?”

“உமது சந்தேகத்துக்கு ஆதாரம் அளிக்காமலிருக்க. ஈழத்தின் தென் பகுதியில் எங்கு நான் கலத்தை நிறுத்தி யிருந்தாலும் விஜயபாகுவுடன் தொடர்பு கொள்ள ஏதுவாக இருக்கும். மன்னர் அப்படி நினைக்க இட மளிக்காமலிருக்கவே, ஈழத்தின் எந்தத் துறைமுகத்தையும் நான் நெருங்கவில்லை. கடற்படைத் தலைவரே, எதற்கும் மன்னரின் விசாரணையில் நீர் குறுக்கிடாமலிருப்பது உசிதம்” மானாபரணின் பதிலும் வேகத்துடன் வந்தது.

மன்னன் ஏதும் கூறவில்லை. அவன் ஏதோ தீவிரமாகச் சிந்திப்பது புலப்பட்டது. சற்று நேரம் மௌனமாக இருந்த மன்னனின் குரல் தெளிவாக ஒலித்தது,

“மானாபரணா, புரட்சிக்கும் உனக்கும் தொடர் பில்லை என்பதை ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் இள வரசர் விக்கிரமபாண்டுவை மலைப்பகுதிக்கு அனுப்பி வைக்கும் முன்னர் நீ எச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டும். ஒற்றர்களை அனுப்பி அங்கு எதிரிகள் நட

மாட்டம் இருப்பது பற்றி விசாரித்திருக்க வேண்டும். உன்னைத் தூக்கிலிடவே நான் தீர்மானித்திருந்தேன்... ஆனால்...”

மன்னனின் கனத்த மௌனம் மானாபரணனைத் திகில் கொள்ள வைத்தது.

“விக்கிரமபாண்டுவின் முரட்டு சுபாவமும் மூர்க்கத் தனமும் நாமறிந்தவைதான். உன் மீது குற்றமேதுமில்லை என்றே தீர்மானிக்கிறேன். சோழர்களுக்கு எதிரான படையெடுப்பை நீ சென்று கவனிக்கலாம். ஆனால் எச்சரிக்கையாக இரு. சென்று வா” விக்கிரமபாகுவின் குரலின் உஷ்ணம் இறங்கியிருந்தது.

கடற்படைத் தலைவன் முகத்தில் ஏமாற்றம் தெரிந்தது. மானாபரணன் நின்ற இடத்தை விட்டு அசையவில்லை. மௌனமாக சற்று நேரம் நின்றவன் மன்னனை ஏறிட்டான்,

“மன்னவா, நாம் இதுவரை சோழர்களிடம் அடைந்த தோல்விகளுக்குப் பழி தீர்க்கவே நான் அவர்களுக்கு எதிராகப் படை திரட்டும் முயற்சியில் சேரநாட்டுக்குச் சென்றேன். எனது முயற்சிக்கு ஆதரவாகத்தான் மன்னர் பன்னிரண்டு போர்க்கலங்களும் வீரர்களையும் அளிப்பதாக வாக்களித்தீர்கள்”

ஒருகணமே சிந்தித்த மன்னன் “கொடுத்த வாக்கை மீறினான் பராக்கிரமபாகு என்ற அபக்யாதி இதுவரை இல்லை மானாபரணா. நம் எதிரிகளை அழிக்கும் முயற்சிக்கு அந்தக் கலங்கள் உனக்கு உதவட்டும். சோழருடனான போர் முடிந்த பின்னர் அவற்றைத் திருப்பியனுப்பிவிடு, போதும்” என்றான்.

“நன்றி மன்னவா” மன்னனை வணங்கி வெளியேறினான் மானாபரணன்.

அவன் செல்வதை வெறித்துப் பார்த்தபடியே நின்றிருந்தான் கடற்படைத் தலைவன் மகாலானா மேகா.

"மேகா..." விக்கிரமபாகுவின் நிதானமான குரல் கடற்படைத் தலைவனை அழைத்தது. திரும்பி மன்னனை நோக்கிய மகாலானா மேகாவின் ஏமாற்றம் நிறைந்த விழிகளை நோக்கிய மன்னன் "மேகா, இருக்கும் சூழ்நிலையைப் புரிந்துகொள். புரட்சி நடத்துபவர்கள் அரச குடும்பத்தவர்தான். இங்கிருப்பவர்களில் யார் நண்பர், யார் எதிரி என்பது புரியாத சூழலில் நமக்கு வெளிப்படையான ஆதரவைத் தெரிவிப்பவர்களை நாம் பகைத்துக் கொள்ளக் கூடாது. நம் எதிரிகளான சோழர்களுடன் போராட மானாபரணனுக்கு இப்போது நம் உதவி தேவை. அதைச் செய்துகொடுப்பது பின்னால் நமக்கு உதவும். எனவே போர்க்கலங்களை அவனுக்கு உதவியாக அனுப்பிவை" என்றான் தீர்மானமாக.

கடற்படைத்தலைவனின் முகத்திலும் சற்று சந்தேகம் விலகியிருந்தது. ஆமோதிப்பதற்கு அடையாளமாகத் தலையசைத்தான் அவன்.

# 32. கொற்கை

**ப**ன்னிரு போர்க்கலங்கள் பின் தொடர கொற்கையை நோக்கி, அப்போதே புறப்பட்ட மானாபரணனின் சித்தத்தில் ஒருபுறம் தப்பித்துவிட்ட மகிழ்ச்சியும், மறுபுறம் தன் இரு மகன்களும் சோழரால் சிறைப்பட்டுவிட்ட சோகமும் விரவிக் கிடந்தது. அவர்களை எப்படி மீட்பது என்ற கேள்விக்கு அத்தனை சுலபத்தில் விடைகிடைக் காததால் சலித்துக் கொண்டவன், தான் ஏற்கெனவே திட்டமிட்டபடி போரைத் தொடங்கி விடுவதுதான் ஒரே வழியென்று தீர்மானித்தான். தமிழகத்தின் கரைப்பகுதி தென்பட்டவுடன் சுந்தர பாண்டியனுக்கும், வீர கேரளனுக்கும் தான் தாக்குதலைத் தொடங்கப் போவதாகவும், தயாராக இருக்கும்படியும் ஓலைகள் எழுதி, வீரர் இருவரிடம் தனியே அனுப்பி வைத்தான்.

கொற்கையை நெருங்க நெருங்க துறைமுகத்தையும், தூரத்தே தெரிந்த கோட்டையையும் கவனித்தவன் விழிகளில் சந்தேகம் படரத் தொடங்கியது. முத்துக் குளிப்பதிலும், வணிகத்திலும் புகழ்பெற்று விளங்கிய அந்த கொற்கைத் துறைமுகம் வெறிச்சிட்டுக் கிடந்தது. துறைமுகத்தை அடைத்து நிற்கும் கலங்களில் ஒன்றுகூட அவனுக்குத் தென்படவில்லை. பரதவர்களின் சிறு கலங் களும், படகுகளும் மட்டுமே துறைமுகத்தின் வாயிலில் அலைகளில் ஆடியபடி மிதந்து கொண்டிருந்தன. எப்போதும் நிறைந்து கிடக்கும் துறைமுகத்திலும் சுங்கச்சாவடியிலும் வீரர் நடமாட்டமோ, வணிகர்கள் இருப்பதாகவோ தெரியவில்லை. பொருநையின் சங்கமத் துறையைத் தாண்டி, தூரத்தே தெரிந்த கோட்டையிலும் எப்போதும் தென்படும் வீரர் நடமாட்டம் அடியோடு குறைந்து ஓரிருவர் மட்டுமே தென்பட்டனர்.

தான் எதிர்பாராத சூழ்நிலை கொற்கையில் நிலவுவதைப் புரிந்து கொண்டவன் எச்சரிக்கையுடனேயே துறைமுகத்தை நெருங்க முற்பட்டான். தன்னுடன் வந்த பன்னிரு ஈழப் போர்க்கலங்களையும் பொருநையின் முகத்துவாரத்துக்கருகிலேயே நிற்க உத்தரவிட்டவன் தானிருந்த கலத்தை மட்டும் துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்ச உத்தரவிட்டுத் தன் இரு உபதலைவர்களுடன் கோட்டையை நோக்கிப் புறப்பட்டான்.

கோட்டை வாயிலில் வழக்கமான காவல் ஏதும் காணப்படவில்லை. பெயருக்குக் கோட்டை முகப்புச் சுவரிலும், வாயிலிலும் ஓரிரு சோழ வீரர்கள் தென் பட்டனர். அவர்களது அலட்சிய பாவத்தையும், லேசாகத் தலையசைத்துத் தன்னை வரவேற்றதையும், விழிகளில் தெரிந்த விஷமத்தையும் கவனித்தவன் ‘இந்தச் சோழர்கள் அனைவருமே விஷமிகள்தான்’ என்று மனதுக்குள் சபிக்கவும் செய்தான்.

கோட்டையின் உட்புறமும் வீரர் நடமாட்டமின்றி வெறிச்சிட்டுக் கிடந்தது. அரண்மனையை நெருங்கி உள்ளே நுழைந்த மானாபரணனைச் சற்றுத் தாமதமாகவே வந்து வரவேற்ற ஸ்தானிகரின் முகமும் கல்லாக இருந்தது. அவரைத் தொடர்ந்து சில சோழ வீரர்களும் வந்தனர். உடன் வந்த சோழ வீரர்களை அரண்மனைக் கூடத்தின் மறு முனையிலேயே நிற்க வேண்டிக்கொண்ட ஸ்தானிகர் மானாபரணனை நெருங்கி வரவேற்றார்.

சம்பிரதாயமான முகமன் கூறி வரவேற்றவரை நோக்கிய மானாபரணனின் கேள்விகள் தொடர்ந்து வந்தன, "ஸ்தானிகரே, ஏன் உமது முகம் இப்படிக் கசந்து கிடக்கிறது? என்ன நேர்ந்தது? என் மகன்களை ஏன் சிறைசெய்தார்கள்? இங்கிருந்த சோழப் பிரதிநிதி மகேந்திர தேவர் எங்கே? மற்ற சோழ வீரர்கள் அத்தனை பேரும் என்னவானார்கள்?"

உடனே பதிலேதும் கூறாமல் மானாபரணனை ஏறெடுத்த ஸ்தானிகரின் முதியமுகத்தில் வறண்ட முறுவலொன்று நெளிந்தது "மானாபரணா, சோழப் பிரதிநிதியும் மற்ற வீரர்களும் மதுரைக்குச் செல்வதாகக் கூறிச் சென்றார்கள். இந்தக் கொற்கையை விட்டு நீ உடனே வெளியேறிவிடுவது நல்லது. கொற்கையில் நீ காலடியெடுத்து வைத்தால் உன்னையும் சிறைசெய்ய உத்தரவிருக்கிறது" என்ற ஸ்தானிகர் 'உன்னையும்' என்ற பதத்தில் சற்று அழுத்தம் கொடுத்தே உச்சரித்தார்.

ஸ்தானிகரின் வார்த்தைகளையும் முகபாவத்தையும் கவனித்த மானாபரணனின் சித்தத்தில் எச்சரிக்கை பரவத் தொடங்கியது. அவனது கேள்வியிலும் எச்சரிக்கை தொனித்தது "ஸ்தானிகரே, முதலில் என் மகன்களை ஏன் சிறைசெய்தார்கள்? என்னை ஏன் சிறைசெய்ய வேண்டும்?"

"இம்முறை உனது மகன்கள் இருவரும் இங்கு வந்தபோது அதீத உற்சாகத்திலிருந்தார்கள். மதுக்குப்பி

களைக் காவலர்கள் மீது வீசினார்கள். ஈழ மன்னன் விக்கிரமபாகு சோழர்கள் மீது கூறும் வசைச் சொற்களை இரைந்து பாடினார்கள். போதாக்குறைக்குப் பணிப் பெண்களைச் சீண்டவும் துணிந்தார்கள். சோழப் பிரதிநிதி அவர்களை எச்சரித்தார். பதிலுக்கு அவரை மிரட்டவும் துணிந்தார்கள். நீ கொற்கைப் பாண்டியர் வம்சத்தைச் சதி செய்து அழித்ததையும், வீரபாண்டியத் தேவரைக் கொலை செய்ததையும் கூறி, அதேபோல் சோழப் பிரதிநிதியையும் கொன்றுவிடுவதாக மிரட்டி னார்கள். திடீரென்று வாட்களை உருவிக் கொண்டு அவர்மீது பாயவும் செய்தார்கள்”

மானாபரணன் திகைப்பில் அப்படியே உறைந்து போய் நின்றான் சோழப்பிரதிநிதி மகேந்திரதேவரைக் கொல்லத் தன் மகன்கள் முயன்றார்களா?

‘மகா வீரர் என்றும், வாட்போரில் சோழ ராஜேந் திரனுக்கு இணையானவர் என்று எதிரிகளாலேயே ஒப்புக் கொள்ளப்பட்டவரும், சோழ இளவல் விஜயராஜேந் திரனுக்கு வாட்போரின் நுணுக்கங்களைப் போதித்தவரு மான மகேந்திர தேவருக்கு எதிராகத் தன் இரு மகன்களும் வாளை உயர்த்தத் துணிந்தார்களா?’ மானாபரணனின் திகைப்பு அடங்க வெகு நேரமானது.

“பின் என்ன ஆயிற்று?”

“என்ன ஆயிற்று... வாளை உயர்த்தியவனது கரம் முறிபட்டது. மற்றொருவன் மூர்ச்சையானான். இருவரையும் அப்போதே சிறைசெய்தார் மகேந்திர தேவர். இருவரையும் உயிருடன் விட்டுவைத்ததே ஆச்சரியம். அதேநாளில் சோழ மன்னரிடமிருந்து ஓலையொன்றும் வந்தது. உடனே காவலுக்குச் சிலரைமட்டும் இங்கு நியமித்துவிட்டு, மற்ற சோழ வீரர்கள் அனைவரையும், சிறைப்பட்டவர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டார்” ஸ்தானிகரின் குரலில் வெறுப்பு தொனித்தது.

அடித்து வைத்த சிலையாகவே நின்றான் மானாபரணன். இனி போரைத்தவிர வேறுவழியேதுமில்லை என்பது தெளிவாகவே புரிந்தது அவனுக்கு. விழிகளில் வெறுப்பு வழிய நின்ற ஸ்தானிகரையும், அந்தக் கூடத்தையும், தூரத்தில் நின்ற சோழ வீரர்களையும் வெறித்துக் கொண்டு நின்றவனுக்குத் திடீரென்று வேறு நினைவு வந்தது. அடுத்து அவன் ஸ்தானிகரை அழைத்த குரலில் போலியான அன்பும் பணிவும் குழைந்து ஒலித்தது.

“ஸ்தானிகரே...”

“சொல் மானாபரணா”

“கொற்கையிலிருந்து சோழ வீரர்களை அழைத்துக் கொண்டு சென்றுவிட என்ன காரணம் என்பது தெரியுமா உமக்கு?”

“நன்றாகவே தெரியும்”

“என்ன காரணம்?”

“நீயும் சுந்தர பாண்டியனும், வீரகேரளனுடன் சேர்ந்து முல்லைநாட்டு எல்லைப் பகுதியிலிருந்து சோழரைத் தாக்கத் திட்டமிட்டிருக்கிறாய் என்பதும், ஈழத்துப் படைகள் சேரநாட்டிலிருந்தும், இந்தக் கொற்கையிலிருந்தும் புறப்படப் போகிறது என்பதும், போர் மூண்டதும் கொற்கை தாக்கப்படப் போகிறது என்பதும் தான்”

“உண்மைதான் ஸ்தானிகரே. ஆனால் போருக்கு முன்னால் என் மகன்களைச் சிறை மீட்க வழியேதும் இருக்கிறதா, கூறுங்கள்”

“இருக்கிறது” ஸ்தானிகரின் பதில் உடனே வந்தது.

“என்ன வழி?”

“நீயும் உன் சகாக்களும் போர் ஏற்பாடுகளை நிறுத்தி விட்டு, சோழ மன்னர் ராஜேந்திர தேவரிடம் சென்று

சரணடைந்துவிடு. உன் மகன்களுக்காக நீ சென்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டால் அவர்கள் விடுதலை பெறலாம்"

"ஸ்தானிகரே..." மானாபரணனின் குரல் உயர்ந்து ஒலித்தது.

தொடர்ந்த அவன் குரலில் எச்சரிக்கை தொனித்தது "ஸ்தானிகரே, மதுரையின் அரண்மனைக்கும் சிறைச் சாலைக்கும் செல்ல ரகசியவழியொன்று இருப்பது பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். உமக்கு அதைப்பற்றி ஏதும் தெரியுமா?"

"தெரியும். ஆனால்..." ஸ்தானிகர் இழுத்தார்.

"ஆனால் என்ன...?"

"உன்னிடம் கூற இயலாது. அது உண்மையான பாண்டிய அரச வம்சத்துக்காகப் பல தலைமுறைகளாகக் காப்பாற்றப்பட்டு வரும் ரகசியம்"

"ஸ்தானிகரே, இப்போது நீர் அதைக்கூறாவிட்டால் இந்த அரண்மனைக்கு வேறு ஸ்தானிகரைத் தேட வேண்டியிருக்கும்" மானாபரணின் குரலில் மிரட்டல் ஒலித்தது.

ஸ்தானிகரின் பதில் வெகு நிதானமாக வந்தது "தாராளமாகத் தேடிக் கொள்ளலாம் மானாபரணா. நானும் இன்றுதான் இந்தப் பணியைவிட்டுச் செல்லத் தீர்மானித்தேன். வருகிறேன்" என்றவர் நிதானமாகத் திரும்பி, சோழ வீரர்களை நோக்கி நடந்தார்.

சற்றுத் தொலைவு நடந்த ஸ்தானிகர் நின்று திரும்பினார் "மானாபரணா, வீர பாண்டியத் தேவரின் தந்தை செய்த தவறு நீ. இருந்தாலும் இந்த அரண் மனையில் உனக்கு உரிமை இருக்கிறது. அதற்காக என் கடமையை இறுதியாகச் செலுத்தி விடுகிறேன்... மதுரையின் ரகசிய வழி மணலூர் குலசேகர பாண்டி

யனிடம் உள்ளது. அவனைக் கேள். இனி என்னைத் தேடாதே” என்றவர் மீண்டும் திரும்பி நடந்து உள் பகுதியில் சென்று மறைந்தார்.

அவரைத் தொடர்ந்து வாளை உருவியபடி நடக்க முற்பட்ட மானாபரணன் சட்டென்று நின்றான். கூடத்தின் மறுகோடியில் நின்ற சோழ வீரர்கள் வாட்களை உருவிக் கொண்டு தன்னையும் தன் உபதலைவர்களையும் நோக்கி, மெல்ல நகரத் தொடங்கிவிட்டதைக் கவனித்த அவனது வாள் மீண்டும் உறைக்குள் புகுந்தது.

அதுவரை மௌனமாக நின்றிருந்த தன் இரு உப தலைவர்களையும் நோக்கிய மானாபரணன் “வாருங்கள். இனி இங்கிருப்பது அபாயம். உடனே நாம் நம் வீரர்கள் இருக்குமிடத்தை அடைந்துவிட வேண்டும்” என்றபடி கூடத்தைவிட்டு வாயிலை நோக்கி விரைந்தான்.

அரண்மனையை விட்டு வெளியேறிய மானாபரணனும் உப தலைவர்களும் பொருநையின் மணலடித்த பகுதியைக் கடந்து, தென்கரையை நோக்கி விரைந்தார்கள். கரையை அடைந்ததும் அப்போதே பன்னிரு ஈழக் கலங்களிலிருந்தும் வீரர்களையும் ஆயுதங்களையும் இறக்க உத்தரவிட்டான் மானாபரணன்.

பெரும் கூச்சல்களுடன் கலங்களிலிருந்து இறங்கிய வீரர்களுடன் புரவிகளும், வாட்களும், விற்களும், கட்டுக்கட்டாக ஈட்டிகளும் அம்புகளும் இறங்கின. வீரர்களை அழைத்துக் கூடாரமொன்றை அமைக்கவும் உத்தரவிட்ட மானாபரணன் தன் உபதலைவர்களை அழைத்துப் போர்முறையைப் பற்றிக் கூறத் தொடங்கினான்.

முதலில் கோட்டாற்றுக்கரையில் சோழர் நிலைப் படையைத் தாக்க வேண்டும் என்பதையும், மேற்கே யிருந்து சுந்தரபாண்டியனின் படைகளும் உதவிக்கு வந்துவிடும் என்பதையும், சோழர்களின் படைபலம்

குறைவாக இருப்பதையும் விளக்கியவன் மறு தினம் காலையில் புறப்பட்டுவிடலாம் என்றும் அறிவித்தான்.

காலைப்பொழுதில் அணிவகுத்து நின்ற ஈழத்து வீரர்களுடன் மானாபரணன் மேற்கு நோக்கிப் புறப் பட்டான். கோட்டாற்றை அடைய சில காதங்கள் இருக்கையில் படையை நிறுத்தியவன், முன்னோடி வீரர் இருவரை அழைத்து கோட்டாற்றின் நிலையைக் கண்டுவர அனுப்பி வைத்தான்.

சென்ற வீரர்கள் ஒரு ஜாம நேரத்தில் திரும்பினர். சென்ற பொழுது இருந்ததை விட அவர்கள் திரும்பிவந்த வேகம் அதிகமாகவே இருந்தது. கோட்டாற்றின் நிலையைப் பற்றி அவர்கள் கூறிய விவரம் மானா பரணனைத் திகைக்க வைத்தது.

“பிரபு, கோட்டாற்று நிலைப்படை இருந்த இடத்தில் தற்போது ஒரு வீரன்கூட இல்லை. படைத்தலைவரின் இல்லமும், வீரர்களின் விடுதிகளும் சுத்தமாகத் துடைத்து வைத்தது போலிருக்கின்றன. அவர்கள் எங்கு சென்றார்கள் என்பதும் தெரியவில்லை” என்றான் அந்த வீரன்.

# 33. மந்திராலோசனை

**பொ**திகை மலையும், அத்திரி மலையும் சுற்றியிருக்கும் அடர்ந்த கானகப் பகுதிகளும் எப்போதும் போலவே இருந்தன. இல்லத்தைச் சுற்றிச் சுற்றி ஓடும் சிறு குழந்தைகளைப்போல் மேகத் துணுக்குகள் மலையைச் சுற்றி மிதந்து ஓடிக் கொண்டிருந்தன. மலைச்சரிவிலிருந்து சிலீரென்று வீசிய காற்றில் எப்போதும் போலவே மூலிகைகளின் மணம் கமழ்ந்தபடியேதான் இருந்தது. மலைச்சரிவிலும், அடிவாரத்துத் தோப்புகளிலும், பச்சைப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டிருந்த வயல்

வெளிகளிலும், கிளிகளும், மைனாக்களும், சிச்சிலிப் பறவைகளும், நாரைகளும், அவ்வப்போது இனிமையாகக் குரல்கொடுத்த குயில்களும் சுற்றித்திரிந்தபடி கொடுத்த இன்னிசை கேட்டுக் கொண்டுதான் இருந்தன. மனித வாழ்க்கைக்கும், மங்கையருக்கும், நதிக்கும், வளைவுகளும் திருப்பங்களும் சுழல்களும்தான் அழகும் சுவாரசியத்தை யும் கூட்டுகின்றன என்பதை நிரூபித்துக் கொண்டிருந்த கருணையாறு எப்போதும்போல் வளைந்து வளைந்து துள்ளியபடி ஓடிக் கொண்டிருந்தது.

சில காத தூரத்தில் அந்த முல்லை நாட்டைத் தாக்கப் பாண்டியனும் சேரனும் பாசறைகள் அமைத்து, ஆயுதங்களைத் தயார் செய்து கொண்டிருப்பதைப் பற்றியோ, அன்னியனான ஈழத்து மானாபரணன் வீரர்களுடன் முல்லைநாட்டை நோக்கி வந்து கொண்டிருப்பதைப்பற்றியோ இயற்கையின் எந்தப் பகுதியும் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை.

துள்ளியோடிய கருணையாறு திருவாலீஸ்வரத்தை அடைந்ததும் சற்றுத் திகைத்து நின்றுவிட்டுப் பின் தன் வழியே சென்றது. அதுவரை அங்கு காணப்பட்ட வீரர்களும், பாசறைகளும், காணாமற் போயிருக்க, வீரர் தங்கும் விடுதிகள் வெறிச்சிட்டுக் கிடந்தன. அத்தனை வீரர்களுக்கும் உணவு சமைப்பதால் எழும் புகையும் வாசமும் காணாமற் போயிருந்தன. திருவாலீஸ்வரத்து ஆலயத்தில் மட்டும் வழக்கம்போல வேதகோஷங்களும், திருமுறைகள் ஓதப்படும் ஒலிகளும், வழிபாடுகள் நடைபெறும் மங்கல ஒலிகளும் கேட்டன. மக்கள் நட மாட்டம் அங்கு சற்று காணப்பட்டது. இளங்கோகுடியை நெருங்க நெருங்க வீரர் நடமாட்டம் அதிகரித்துக் காணப் பட்டது. ஊர் எல்லையில் ஆலயம் கட்டும் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்த சிற்பிகள் குறைவாகவே தென் பட்டனர். அங்கு தொடங்கிய பாதை இளங்கோகுடியை அடையும்போது வீரர்களாலும், புரவிகளாலும், போர் ரதங்களாலும், நிறைந்து தென் திசைத் தண்டநாயகர்

விழுப்பரையரின் இல்லத்தை அடைந்தபோது கூட்டம் கூட்டமாக நின்ற வீரர்களால் நிறைந்து கிடந்தது.

அங்கு நின்ற வீரர் கூட்டத்தில் சோழ வீரர்கள் மட்டுமின்றி, சோலக இனத்து வீரர்களும், கண்ணா கனாரின் சீடர்களும், நேரிமங்கலத்து வீரர்களும் தென் பட்டனர்.

அத்தனை வீரர் கூட்டமும் அடிக்கடி அத்திரி மலையை நோக்கிச் சென்ற பாதையை உற்றுப் பார்ப்பதும், அமைதியின்றி பேசிக் கொள்வதுமாகவே இருந்தனர். விழுப்பரையரின் இல்லத்தின் மேல்தளத்தில் மந்திரா லோசனை நடந்து கொண்டிருந்ததால் கூடத்தில் நின்றிருந்த உபதலைவர்கள் அமைதி காத்துக் கொண்டிருந்தாலும், யாரையோ எதிர்பார்த்து அடிக்கடி வாயிலை நோக்கிப் பார்ப்பதும், தங்களுக்குள் ஏதோ கூறிக்கொள்வதுமாகவே இருந்தனர். ஓரிருவர் வாயிலுக்கு வெளியே வந்து பாதையைப் பார்த்துவிட்டு மீண்டும் உள்ளே சென்றனர்.

மலையை நோக்கி நீண்ட பாதையில் தூரத்தில் புழுதிப் படலம் மெல்ல எழுந்து இளங்கோகுடியை நோக்கி வரத் தொடங்கியது. வீரர்களிடையே பரபரப்பு தொற்றிக் கொள்ளப் பாதையை ஆவலுடன் உற்று நோக்கத் தொடங்கினர். சற்று நேரத்தில் அந்தப் பாதையில் அதிவேகமாகப் பாய்ந்து வந்து கொண்டிருந்த ரதம் ஒன்று புலப்பட்டது. ரதம் பார்வையில் புலப்பட்டவுடன் வீரர் கூட்டத்திடையே ஆரவாரம் எழுந்து மெல்ல மெல்ல உயர்ந்து பெரும் கூச்சலாக ஒலிக்கத் தொடங்கியது. உள்ளே நின்ற உபதலைவர்கள் வெளியே ஓடிவந்து வரவேற்கும் பாவனையில் நின்றார்கள்.

மேல்தளத்தில் நடந்து கொண்டிருந்த மந்திரா லோசனையிலிருந்து தண்டநாயகர் விழுப்பரையரும் தடதடவென்று கீழிறங்கி வாயிலுக்கு விரைந்து வந்தார்.

வீரர்களின் பலத்த ஜெய கோஷத்துக்கிடையே அந்த ரதம் விழுப்பரையரின் இல்லத்து வாயிலில் வந்து நின்றது. வந்த வேகத்தில் புரவிகள் சட்டென்று நிற்க இயலாமல் அப்படியும் இப்படியுமாக கால்களை மாற்றி வைத்து நிதானிக்க முயன்றன. புழுதியும் தூசும் படர்ந்து கிடந்தாலும் தந்தத்தால் முழுவதும் இழைக்கப் பட்டிருந்த அந்த ரதத்தின் பக்கப்பலகைகளும், முன்புறம் நீண்ட சட்டங்களும், சக்கரங்களின் மீது தெரிந்த பேழை போன்ற அமைப்பும், அதிலிருந்து தலை நீட்டிக் கொண்டிருந்த ஈட்டிகளும் அம்புகளும் வீரர்களின் வியப்பையும் ஆவலையும் உயர்த்தின.

ரதத்திலிருந்து இறங்கியவர்களைக் கண்ட வீரர் கூட்டத்தின் ஆரவாரம் உயர்ந்து ஒலிக்கத் தொடங்கியது. மெல்லிய இருப்பு வலையொன்று ஆடையை மூடியிருக்க, இடையில் தரித்த நீண்ட வாளுடன், தோளின் பின்புறம் அம்புகள் நிறைந்த தூளியொன்று தொங்க, இறுக்கிக் கட்டப்பட்டிருந்தாலும் ரதம் வந்த வேகத்தில் காற்றில் அலைபாய்ந்த குழற்கற்றைகள் முன்புறம் வந்து அழகிய முகத்தில் எட்டிப்பார்க்க, சோழ வீரர்களைக் கண்ட மகிழ்ச்சியில் சிவந்த இதழ்கள் முறுவலிக்க, வீரர்களை நோக்கிக் கரத்தில் பிடித்த வில்லை உயர்த்தி அசைத்த செங்கமலச்செல்வியைக் கண்ட சோழ வீரர்களின் உற்சாகம் கரைபுரண்டது. உடன் வந்திறங்கிய சேரலாதன் ராஜசிம்மனையும் சேர்த்து வாழ்த்தொலி பெரிதாக எழுந்தது. சோலக இனத்து முத்துவனும், உடன் வந்த சோலக வீரர்களும், நேரிமங்கலத்து உபதலைவனும் ஓடிவந்து சேரலாதனைத் தலைதாழ்த்தி வணங்கி னார்கள்.

வாயிலில் நின்ற தண்டநாயகர் விழுப்பரையர் சேரலாதருக்கு முறுவலுடன் முகமன் கூறிவிட்டு, செல்வியை அழைத்துக் கொண்டு உள்ளே நடந்தார். இல்லத்தின் உள்ளிருந்து விரைந்து வந்து செல்வியை

அணைத்துக் கொண்ட வரகுணவல்லியின் விழிகளில் ஈரம் கசிந்து கொண்டிருந்தது.

**தெ**ன்திசைப் பாண்டியர்களை அடுத்த அரை நூற்றாண்டுக்குத் தலையெடுக்கவொட்டாமல் அடித்ததும், பிற்காலச் சேர நாட்டு மன்னர்களின் வரலாற்றை ஏறக்குறைய முழுவதுமாக அழித்து விட்டது மான அந்தப் போருக்கான மந்திராலோசனை விழுப் பரையரின் இல்லத்து மேல் தளத்தில் நடந்து கொண் டிருந்தது. தென்திசைத் தண்டநாயகர் உத்தமசோழ விழுப்பரையர் புதிதாக வடித்திருந்த சிம்மாசனம் சோழ நாட்டு வேங்கைக்காக வைரம் பாய்ந்த வேங்கை மரத்தில் இழைக்கப்பட்டு, கைப்பிடியிலும், தலைப்பகுதியிலும் செதுக்கப்பட்டிருந்த புலியின் விழிகளுக்கு இரு மாணிக்கக்கற்கள் பதிக்கப்பட்டுப் பார்ப்பதற்கே ஒரு அச்சத்தையும், கம்பீரத்தையும் அளித்துக் கொண்டிருந்தது. அந்த சிம்மாசனத்தில் அமர்ந்து சுற்றிலும் அமர்ந் திருந்தவர்களைக் கவனித்துக் கொண்டிருந்த சோழ இளவல் விஜயராஜேந்திர சோழ தேவனின் விழிகள் அசல் வேங்கையின் விழிகளாகவே தெரிந்தன. அருகில் ஆசார்யர் கண்ணாகனாரும், தண்டநாயகரும், அவரது படைத்தலைவர்களும், காஞ்சியிலிருந்து வந்திருந்த இரு படைத் தலைவர்களும், சோழர் படையில் புதிதாகப் பொறுப்பேற்றுக்கொண்ட சாளுக்கிய விஜயாதித்த விக்கி யண்ணனும் அமர்ந்திருந்தனர். ஆசார்யருக்கு அருகே இருந்த இருக்கையில் சேரலாதன் ராஜசிம்மனும், செங்கமலச் செல்வியும் அமர்ந்திருந்தனர். செல்வியின் அழகிய நீண்ட விழிகளில் பயணத்தின் களைப்பையும் மீறி ஒரு வேகம் தென்பட்டது.

தண்டநாயகர் விழுப்பரையர் எழுந்து இளவலை நோக்கித் தலைதாழ்த்தி விட்டு, அவையை ஒருமுறை பார்த்துவிட்டுக் கூறத் தொடங்கினார் “ஆசார்யரே, படைத் தலைவர்களே, உள்ள நிலைமையும் நமக்கெதி ராகக் கூடியிருக்கும் எதிரிகளைப் பற்றியும் புதிதாகக் கூற

எதுவுமில்லை. சோழர் படைபலம் சற்று குறைந்திருக்கும் இந்தத் தருணத்தில் நம் எதிரிகளின் ஒற்றுமை அதிகரித் திருக்கிறது. சுந்தர பாண்டியன் இந்த முல்லைநாட்டின் தென் எல்லையிலும், மலைக்கணவாயில் வீர கேரளனும் ஈழத்து மானாபரணனின் ஓலைக்காகக் காத்திருக் கிறார்கள். மானாபரணன் கொற்கையிலிருந்து புறப்பட்டு விட்டதாகச் செய்தி வந்திருக்கிறது. நாளை மாலைக்குள் அவன் கோட்டாற்றை அடைந்து விடுவான். முல்லை நாட்டில் ஆலயம் கட்டிக்கொள்ளவும், அதற்கு உதவியாக சிற்பிகளையும், பணியாட்களையும், இறையிலி நிலங் களையும் சேரலாதருக்கு அளித்து இரு ஆண்டுகளுக்கு மேல் ஆகின்றது. சோழ மன்னரின் அந்த உத்தரவு இன்னும் நிறைவேற்றப்படவில்லை. இந்த எதிரிகள்தான் அதற்குத் தடையாக இருப்பவர்கள். இதுவரை மறைவிலிருந்து எதிர்ப்பைக் காட்டியவர்கள், தற்போது நேரிடையாக வரத் துணிந்திருக்கிறார்கள்" விழுப்பரையர் சற்று நிதானித்தார்.

விழுப்பரையரின் விழிகள் அடுத்து சாளுக்கிய விஜயாதித்த விக்கியண்ணன் மீது சென்று பதிந்தன. "கோட்டாற்று நிலைப்படையில் புதிதாகப் பொறுப் பேற்றிருக்கும் விஜயாதித்த விக்கியண்ணன் ஒரு போர்த் திட்டத்தை வகுத்திருக்கிறார். ஏற்கெனவே நான் வகுத்திருந்த திட்டத்தை ஒத்திருக்கும் அதைச் சோழ இளவலும், ஆசார்யரும் ஏற்றுக் கொள்கிறார்களா என்பதை அறிய வேண்டும்" என்றவர் விஜயாதித்த விக்கி யண்ணனை நோக்கித் தலையசைத்தார்.

சாளுக்கிய அரசவம்சத்தில் பிறந்தாலும், மக்களைக் காக்க மறந்து அதர்ம வழியில் சென்ற மேலைச் சாளுக்கிய மன்னனையே எதிர்த்தவனும், சோழர் படையில் விரும்பி வந்து சேர்ந்து கொண்டவனுமான விஜயாதித்த விக்கியண்ணன் நெடுநெடுவென்று எழுந்து நின்றான். அதீத உயரமும், அனாவசிய சதைப்பிடிப்பின்றி உருவி விடப் பட்ட சாட்டை போலிருந்த அவனது தோற்றமும்,

சாளுக்கிய வம்சத்துக்கே உரிய நீண்ட முகமும், இடையிலிருந்து அபரிமிதமாக நீண்டு நுனியில் வளைந்த அகன்ற வாளும் பார்வைக்கே ஒரு அச்சத்தை ஏற்படுத்தின. அவையையும் சோழ இளவலையும் வணங்கியவன் தன் கரகரத்த குரலில் கூறத் தொடங்கினான் "எதிரிகளைச் சேர்ந்தவனாயிருந்தாலும், சரணடைந்தவர்களுக்கு அன்பையும் மதிப்பையும் காட்டுவது மட்டுமின்றி, தனது படைத்தலைவர்களுக்கு மத்தியில் முதலில் போர்த்திட்டத்தைக் கூற அனுமதிக்கும் சோழ இளவலுக்கு என்றும் நான் கடமைப் பட்டிருக்கிறேன். மேலைச்சாளுக்கியரைப் போலவே இப்போது சோழநாட்டைச் சூழ்ந்து கொண்டிருக்கும் எதிரிகளும் யுத்த தர்மத்தை மதிக்காதவர்கள் என்று தெரிகிறது. எதிரிகள் மூன்று அணியாகப் பிரிந்திருக் கிறார்கள். இவர்களை ஒன்று சேர விடுவது அபாயம். எனது திட்டம் இவர்களை இணைய விடாமல் அடிப்பது மட்டுமின்றி, தனித்தனியே எதிர் கொள்வது தான். ஈழத்துப் படையைக் கோட்டாற்றிலிருந்து வலப் புறமாகத் திருப்பி, வடதிசையில் செல்ல விடலாம். பொருநை நதியைக் கடந்து வடக்கே திரும்பும் அவர்களை அழிக்க நம் வீரர்களை நதியின் வடகரையில் கானகப் பாதையில் நிறுத்தியிருக்கிறேன்"

"கோட்டாற்றின் நிலைப்படையின் வீரர்கள் அதிகமில்லை விக்கியண்ணரே. மானாபரணனின் பன்னிரண்டு கலங்களில் வந்திருக்கும் வீரர்களை எப்படி எதிர்கொள்ள முடியும்?" உபதலைவன் ஒருவன் வினவினான்.

விக்கியண்ணனது பதில் தெளிவாக வந்தது "எண்ணிக்கை மட்டும் போரின் வெற்றியை நிர்ணயிப்ப தில்லை உபதலைவரே. மானாபரணனையும் அவன் வீரர்களையும் தடுத்து வடக்கே திருப்பிவிடுமாறு தண்டநாயகர் உத்தரவிட்டிருக்கிறார். அதை நிறை வேற்றுவது என் பொறுப்பு"

"தவிர, மானாபரணனைத் தடுத்து வடக்கே திருப்பி விட்டாலும், அவன் சென்று வீரகேரளனுடன் இணைந்து கொண்டால்.. அவர்கள் படைபலம் உயர்ந்து விடுமே..." மற்றொரு படைத்தலைவன் மீண்டும் சந்தேகம் எழுப்பினான்.

செல்வி எழுந்தாள் "குறுக்கிடுவதற்கு மன்னிக்க வேண்டும். இதுவரையில் கோட்டாற்றுப் படைத்தலைவர் கூறியது சரிதான். தண்டநாயகரும் இதே போன்ற திட்டம்தான் வகுத்திருந்தார். ஆனால் மானாபரணன் பொருநையைத் தாண்டி வடக்கே நேரே செல்ல மாட்டான் என்பதும், மலைக்கணவாயை நோக்கித் திரும்புவான் என்பதும் சரிதான். அவனை அப்படியே செல்ல விடலாம்"

"தேவி, அவன் மலைக்கணவாயிலிருக்கும் வீர கேரளனுடன் இணைந்து கொள்ள முயல்வான். அவர்கள் படைபலம் உயர்ந்து விடுமே" சோழர் படை உபதலைவனின் சந்தேகம் நியாயமானதுதான் என்பது அவையிலிருந்த அனைவருக்குமே புரிந்தது.

"உயராது" செல்வியின் பதில் திடமாக வந்தது.

"எப்படி....?"

"அங்கு ஆறாயிரம் சோலக வீரர்களை என் சகோதரன் வல்லபன் நிறுத்தியிருப்பதாகவும், போர்ப் பொறிகள் சிலவும் செய்து வைத்திருப்பதாகவும், தண்டநாயகர் கூறினார்.. சோலகரிடம் போர்க் களிறுகளும் இருக்கின்றன. எனவே வீர கேரளனது படைகள் மலைக் கணவாயைவிட்டு வெளியேறும்போது பாதியாகிலும் குறைக்கப்படும். மீதமிருப்பவற்றை நான் கவனித்துக் கொள்கிறேன். அதுவுமன்றி மானாபரணனை நான் அத்திரிமலையைத் தாண்டும் முன்பு சந்திப்பேன்"

"அப்படிச் செல்வது அபாயம் தேவி. வீரகேரளனின் படைகளுக்கும் மானாபரணனுக்கும் இடையில் சிக்கினால்....?"

“கவலை வேண்டாம் விக்கியண்ணரே. என்னுடன் நேரிமங்கலத்து வீரர்களைத் தண்டநாயகர் அனுப்பி வைக்கிறார். உடன் ஆசார்யரின் சீடர்களும் இருக்கிறார்கள். விக்கியண்ணரே, இந்தப் போரின் போக்கே இப்படித்தான். எதிரிகளை மொத்தமாக எதிர்த்து அழிக்குமளவுக்கு நம்மிடம் படைபலம் இல்லை. அவர்களைப் பிரித்துத் தனித்தனியே பாதிப்பாதியாகக் குறைத்து விட்டால், இறுதிப்போரில் முழுதுமாக அழிக்கலாம். நமது படைகளுக்கும் சேதம் சற்று அதிகம் ஏற்படும். வேறு வழியேதுமில்லை” செல்வியின் குரல் திடமாக ஒலித்தது.

திட்டத்தை அனைவருமே ஒப்புக்கொண்டாலும் நடைமுறைச் சந்தேகங்களையும், தாக்கும் இடங்களையும் பற்றி விவாதித்துக் கொண்டிருக்க, சோழ இளவல் விஜயராஜேந்திரனின் கூர்விழிகள் சேரலாதனைக் கவனித்துக்கொண்டிருந்தன. சேர ராஜசிம்மனின் முகத்திலும் விழிகளிலும் சோகம் அப்பிக்கிடப்பதையும், மனம் வருத்தத்தில் ஆழ்ந்து கிடப்பதையும் உணர்ந்து கொண்ட இளவல் முறுவலுடன் கரத்தை உயர்த்தினான். சட்டென்று அடங்கிய அந்தச் சபையில் மௌனம் படர்ந்தது.

இளவலின் கூர்விழிகள் சேரலாதனை ஊடுருவின. குரலில் கேள்வி ஒலித்தது “சேரலாதரே, நீங்கள் இந்தத் திட்டத்தை ஒப்புக் கொள்ளவில்லையா?”

சேரலாதனின் முகத்தில் சோகம் தெரிந்தது. அவன் குரலிலும் வருத்தம் ஒலித்தது, “இளவரசே, ஆசார்யரே, இவர்கள் கூறும் திட்டத்தை நீங்கள் ஒப்புக் கொண்டாலும், இப்போதுள்ள நிலையில் இதைவிடச் சிறந்த திட்டம் வேறில்லை என்றாலும், என் மனம் ஏற்றுக் கொள்ள மறுக்கிறது. எப்போதும் நேரிடையான போரையும், எதிரிகளைக் கலங்க வைக்கும் வியூகங் களையும், அசாதாரணமான வேகத்தையும் காட்டும்

சோழர் படையும், சோழ இளவலும் இந்த நிலைக்கு ஆளானது என் பொருட்டுத்தான். இரு ஆண்டுகளுக்கு முன் எனக்காக இடப்பட்ட சோழ மன்னரின் ஆணையை நிறைவேற்றிக் கொள்ள என் சிற்றரசுகளை நான்தான் அடக்கியிருக்க வேண்டும். பாண்டியருடனும் ஈழத்தவருடனும் என் சிற்றரசுகள் இணைவதை நான்தான் தடுத்திருக்க வேண்டும். சோழர் படைபலம் குறைவாக உள்ள நிலையில் இப்படியொரு போர் நிகழ நான் காரணமாகிவிட்டேன்"

இளவலின் முகத்தில் முறுவல் விகசித்துக் கிடந்தது. சேரலாதனை நோக்கிய அவன் விழிகளிலும், குரலிலும் பரிவு தெரிந்தது "சேரலாதரே, வருந்த வேண்டாம். உம்மீது தவறேதுமில்லை. ஆலயம் கட்ட முற்பட்டிருக்கும் உங்களை அந்த வைகுந்தனின் திருவுள்ளம் காக்க முற்பட்டிருக்கிறது. புரிந்து கொள்ளுங்கள்"

இளவலை ஏறெடுத்த சேரலாதனின் விழிகளில் கேள்வி இருந்தது.

"சற்று சிந்தித்துப் பாருங்கள். கோட்டாற்றின் நிலைப் படைத்தலைவர் விக்கியண்ணன் கூறியது போல் எதிரி தர்மத்தை மதிப்பவனே அல்ல. உங்களை மீறித்தான் வீர கேரளனையும் மற்ற சிற்றரசுகளையும் பாண்டியருடன் இணைத்திருக்கிறான். தனியே உங்களை அழிப்பது அவர்களுக்கு ஒரு பொருட்டே அல்ல. நடந்தவை அனைத்தும் நன்றாகவே நடந்திருக்கிறது. உங்கள் பிரதிநிதியாகத்தான் நான் இந்தப் போரை நடத்துகிறேன் என ஏற்றுக் கொள்ளுங்கள். ஓரளவுக்கு அது உண்மையும் கூட"

சேரலாதன் விழிகள் நன்றாக விரிந்தன "என் பிரதிநிதியாகவா? சோழ இளவலா? ..." சேரலாதன் சற்றுத் திகைப்பது நன்றாகவே புலப்பட்டது. அடுத்து அவன் முகத்தில் சிந்தனை படர்ந்தது "அப்படியானால்

இளவரசே, நான் அளிப்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும்”

“ஏற்றுக் கொள்ள வேண்டுமா?... எதை?”

சேரலாதன் விழிகளை தண்டநாயகர் விழுப்பரையரின் மீது திருப்பினான். அவன் பார்வையின் பொருளைப் புரிந்து கொண்ட விழுப்பரையரின் முகத்திலும் மந்தகாசம் பரவியது. இருக்கையை விட்டு எழுந்தவர் படிகளில் இறங்கிக் கீழே சென்று, சற்றுக் கழித்து ஒரு அழகிய தந்தப் பேழையுடன் திரும்பினார். அந்தப் பேழையை சேரலாதனிடமே அளித்தவர் “இதைத் தாங்களே இளவலுக்கு அளித்து விடுங்கள்” என்றார் முறுவலுடன்.

பேழையைப் பெற்றுக்கொண்ட சேரலாதனின் விழிகள் ஜொலித்தன. அனைவர் முன்பாகவும் அந்த தந்தப் பேழையைத் திறந்தான் அவன்.

உள்ளே இருந்து செக்கச்செவேலென்ற ஒளியை அந்தக் கூடம் முழுதும் அள்ளித் தெறித்தது ஒரு மாணிக்க மாலை. ஒவ்வொரு மாணிக்கக்கல்லும் மேலும் கீழும் சிறுத்து நடுவே நீள்வட்டவடிவில் இழைக்கப்பட்டு, பொன்னிழைகளால் கோர்க்கப்பட்ட வஞ்சி மாலையாக மிக நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டிருந்தது. மாணிக்கக் கற்கள் வீசிய சிவந்த ஒளியில் மூழ்கி சற்றுநேரம் பிரமித்து நின்றிருந்தது அந்தச்சபை.

மென்மையாக ஒலித்த சேரலாதனின் குரல் அவர்கள் பிரமையை உடைத்தது. “இளவரசே, ஆசார்யரே, இந்த வஞ்சிமாலையை என் சேரநாட்டுக்காகப் போரிடப் போகும் சோழ இளவல் ஏற்றுக் கொண்டு போரில் இறங்க வேண்டும்”

சோழ இளவலை நெருங்கி, அவனது கழுத்தில் வஞ்சிமாலையை அணிவித்த சேரலாதன் முகத்தில் திருப்தி தெரிந்தது.

இளவலின் முகத்தில் ஏற்றுக்கொண்ட மகிழ்ச்சி தென்பட்டாலும், சந்தேக இழையொன்று ஊடே புலப் படுவதைக் கவனித்த சேரலாதன், அவன் சந்தேகத்துக்குக் காரணத்தை யூகித்துவிட்டதால் முறுவலுடன் பதிலளித் தான், “இளவரசே, இது எமது முன்னோர்களுக்கு இந்திரனால் அளிக்கப்பட்டதாகக் கருதும் செங்கதிர் மாலையேதான். *ஹாலஹால வகையைச் சேர்ந்த மாணிக்கக்கற்களால் செய்யப்பட்ட இது தகுதியுடைய வரைத்தான் சென்று சேரும். சோழ மன்னருக்கு எம் தந்தை அளித்த பின்னர் அது எங்கெங்கோ பயணித்து விட்டு, இறுதியாக சோலக இளவரசி குந்தவியால் மீட்கப் பட்டு, செல்வியின் சகோதரன் ஸ்ரீ வல்லபனால் விழுப்பரையருக்கு அனுப்பி வைக்கப்பட்டது. விழிஞத்தி லிருக்கும் போதே எனக்கு அவர் செய்தியனுப்பியிருந்தார். என் விருப்பப்படி அது வஞ்சிமாலையாக மாற்றப்பட்டது. இதன் எஞ்சிய கற்கள்தான் நீங்கள் அமர்ந்திருக்கும் சிம்மாசனத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது” கூறிமுடித்த சேரலாதனின் விழிகள் செல்வியை நோக்கித் திரும்பின.

செங்கமலச்செல்வி திகைப்பில் உறைந்துபோய் அமர்ந்திருந்தாள். சேரலாதனை ஏறிட்ட அவளது விழிகளில் சற்று உஷ்ணமும் தெரிந்தது.

சேரலாதனின் குரலில் வருத்தம் ஒலித்தது “செல்வி, உயிரைப் பணயம் வைத்து நீ என்னைக் காப்பாற்ற வந்திருந்தாலும், உன்னிடம் கூட இதைப்பற்றி நான் தெரிவிக்கவில்லை. இந்த மாலை உரிய இடத்தைச் சென்று அடையும்வரை அதன் ரகசியத்தைக் காப் பாற்றும் கடமை எனக்கிருக்கிறது. மன்னித்துக் கொள்”

சேரலாதனின் வார்த்தைகள் செல்வியின் உஷ்ணத்தைத் தணித்திருக்க வேண்டும். வயதில்

**★ ஹாலஹாலம், கோமளம், நீலகாந்தி, தாலம், சாத்தம் – மாணிக்கக்கற்களின் வகையாக 'தஞ்சை கல்வெட்டுகளில் ரத்தினங்கள்' என்னும் நூல் குறிப்பிடுபவை**

மூத்தவனான சேர மன்னன் மன்னிப்புக் கேட்டதால் சற்றுப் பதற்றமும் அவள் முகத்தில் தெரிந்தது. இரு கரங்களையும் உயர்த்தி, அவனை நோக்கித் தடுக்கும் பாவனையில் கூப்பினாள் செல்வி.

அடுத்து அவள் முகமும் விழிகளும் சகோதரனை எண்ணியதால் சற்றுக் கனிந்தது. 'செங்கதிர்மாலை சோலக இளவரசியால் மீட்கப்பட்டதாக அல்லவா சேரலாதர் கூறினார்? அதை எப்படி வல்லபன் பெற்றான்? அவளிருப்பது எங்கோ மலைகளும், கானகமும் அடர்ந்த பகுதியென்று கேள்விப்பட்டிருக்கிறோமே? அவனை நேரில் சந்தித்தால்தான் செங்கதிர்மாலையைச் சோலக இளவரசி மீட்டதும் அதை இவன் பெற்றதுமான கதை தெரியும்... அவனை விரைவில் சந்தித்தால்...'

செல்வியின் முகமும் விழிகளும் அவள் எண்ண ஓட்டத்தைத் தெளிவாகப் புலப்படுத்தியிருக்க வேண்டும்.

ஆசார்யரிடமிருந்து அடுத்த உத்தரவு பிறந்தது "சரி, இந்தச் சபை முடிந்தது. செல்வி... நீ இப்போதே சோலக இனத்தவர் வாழும் பகுதிக்குப் புறப்படலாம். சோலக யானைப் படைத்தலைவன் முத்துவன் உன்னை அழைத்துச் செல்லக் காத்திருக்கிறான். காஞ்சியிலிருந்து வந்திருக்கும் இருவரும் இளவரசருடன் செல்லுங்கள். விஜயாதித்த விக்கியண்ணன் கோட்டாற்றை இப்போதே சென்று அடையலாம். என் சந்தேகம் உண்மையானால் நாளை பிற்பகலில் கோட்டாற்றில் போர் தொடங்கி விடும். சித்தமாக இருங்கள்"

ஆசார்யரின் கணிப்பு மிகச் சரியாக இருந்தது. மறுநாள் கதிரவன் சரியாக உச்சிக்கு வந்தபொழுதில் சேரநாட்டுச் சரித்திரத்தில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தியது மட்டு மின்றி, சேரர் சிற்றரசுகளை முழுதுமாகச் சிதறடித்து விட்ட அந்தப் போர் துவக்கத்திலேயே அசுர வேகத்தில் தொடங்கியது.

# 34. விக்கியண்ணன் வியூகம்

கொற்கையை விட்டுப் பலத்த கூச்சல்களுடனும், ஆரவாரத்துடனும் புறப்பட்ட மானாபரணனும் அவன் ஈழத்து வீரர்களும் பொருநையின் தென்கரையிலேயே பயணித்தார்கள். இடைப்பட்ட கிராமங்களைக் கடக்கும்போதெல்லாம் ஈழ வீரர்கள் தமிழக மக்கள் மீதும் மன்னர்கள் மீதும் கொண்டிருந்த வெறுப்பும், துவேஷமும் நன்றாகவே புலப்பட்டது. ஆண்களையும், பெண்களை யும், வயது முதிர்ந்தவர்களையும் அச்சுறுத்தி, உணவும் தேவையான மற்ற பொருள்களையும் பெற்றுக் கொண்ட தோடல்லாமல் எதிர்த்தவர்களைக் காயப்படுத்தியும் விரட்டினார்கள். பதினாயிரம் வீரர்களுக்குக் குறையாத அந்தப் படையை எதிர்க்கவோ, மக்களைக் காக்கவோ கொற்கையில் சோழ வீரர்களும் சோழப் பிரதிநிதியும் இல்லையென்ற செய்தியும், மானாபரணன் வீரர்களுடன் வரும் செய்தியும் வேகமாகப் பரவியதால், நதியை ஒட்டிய கிராமத்து மக்கள் முன்னதாகவே கிராமங்களைவிட்டு அவசர அவசரமாக வேறிடங்களுக்குப் பெயர்ந்தார்கள். அந்த மக்களுக்கு இயற்கை ஆதரவளிக்க முன்வந்தது.

மாரிக்காலம் முடிவடைந்து பனிபொழியும் காலம் நெருங்கிக் கொண்டிருந்த அந்தத் தருணத்தில் மேகங்கள் தமிழக மக்களைக் காக்கவேண்டுமென்று தோன்றிய தாலோ, அல்லது ஈழத்து மானாபரணனையும் அவன் வீரர்களையும் வழிமறிக்க வேண்டுமென்று தோன்றிய தாலோ, கீழ்த்திசைக்காற்று மேகங்களை பொதிகையை நோக்கி விரட்டியதாலோ, கறுத்துப் பெருத்த மேகக் கூட்டங்கள் குவிந்து வானில் மிதந்தபடியே திசை களையும் பூமியையும் நடுங்க வைக்கும் இடிகளைப் பெரிதாக முழக்கின. தரையிலிருந்து வானத்தின் உச்சியை நோக்கித் தாறுமாறாக வரைந்த ஒளிக் கோடுகளாய் கண்களைப் பறிக்கும் விதமாய் மின்னல்கள் மின்னி பளிச்சிட்டு மறைந்தன. சற்று நேரத்தில் நீர்த்துளிகளைச்

சிதறவிட்டுச் சடசடவென்று பெரும் வேகத்துடன் மழை பொழிந்து தள்ளத் துவங்கியது.

வானை நோக்கி விழிகளை உயர்த்திய மானாபரணனின் முகத்தில் சினம் தெறித்தது. இயற்கையை எதிர்த்து ஏதும் செய்ய இயலாத ஆற்றாமை முகத்தில் பிரதிபலிக்க, வீரர்களைத் தயங்காமல் பொருநையின் தென்கரைப் பாதையிலேயே முன்னேறுமாறு உத்தரவிட்டான்.

அன்று கதிரவனின் பாதியொளியும் மறைந்து இருள் பரவும் நேரத்தில் கோட்டாற்றை நோக்கிப் பிரியும் பாதையை அடைந்தவன், தன் முன்னோடி வீரர்களை அனுப்பிக் கோட்டாற்றுக் கரையின் நிலையைக் கண்டுவர உத்தரவிட்டான். அந்த வீரர்கள் திரும்பிவந்து கூறிய செய்தி அவனைத் திகைக்கவைத்தது.

"என்ன?... என்ன?... இன்னொருமுறை சொல்" மானாபரணனின் குரலில் திகைப்பு பூரணமாக ஒலித்தது.

அந்த ஈழத்து வீரனின் பதில் மீண்டும் தெளிவாகவே ஒலித்தது "ஆம் பிரபு, கோட்டாற்றுக்கரையில் ஒரு சோழ வீரன்கூட இல்லை. வீரர்களின் விடுதிகளும், படைத் தலைவர் இல்லமும் சுத்தமாகத் துடைத்து வைத்திருக்கிறது. ஆயுதசாலையே நிராயுதபாணியாய் நிற்கிறது"

மானாபரணனின் திகைப்பு அடங்க சற்று நேரமாயிற்று. அந்த ஈழவீரனைத் திகைப்புடன் நோக்கியவன், அடித்துப் பெய்துகொண்டிருந்த மழையினூடே தெற்கே நீண்ட கோட்டாற்றுப் பாதையை வெறித்தான்.

'இல்லை... இது உண்மையாயிருக்க முடியாது. சோழர்கள் படைபலம் குறைவாக இருப்பதால், போரைத் தவிர்க்க ஓடிவிட்டார்களா என்ன? கொற்கையில் சோழப் பிரதிநிதியையும் வீரர்களையும் சோழமன்னன் அழைத்துக் கொண்டதுபோல் இங்கேயும்...நிச்சயம் இருக்க முடியாது. இது அவர்களின் போர்த் தந்திரம். ஒரு வேளை

சுந்தரபாண்டியரின் பெரும்படையை எதிர்க்க முல்லை நாட்டுக்குச் சென்று விட்டார்களா? நான் படையுடன் வருவதை எதிர்பார்க்கவில்லையா?' மானாபரணனின் சித்தம் சற்று நேரம் குழப்பத்தில் ஆழ்ந்தது.

அடுத்து, கோட்டாற்றை விடுத்து நேரே முல்லை நாட்டை நோக்கிச் செல்லத் தீர்மானித்தவன் அன்றிரவு பொருநையின் கரையிலிருந்த ஆலயமொன்றில் தங்கவும், அங்கிருந்த பெரும் மண்டபங்களில் வீரர்களை ஒதுங்கவும் உத்தரவிட்டான்.

மறுதினம் கருக்கலிலேயே மீண்டும் முல்லைநாட்டை நோக்கிப் புறப்பட்ட மானாபரணன் எதிரில் நீண்ட பாதை கரடுமுரடாக இருப்பதையும், சிறு குன்றுகளும், புதர்களும் அடர்ந்து ஆங்காங்கே சிறுசிறு மரக் கூட்டங்கள் தூரத்தில் தென்படுவதையும் கவனித்து, தன் வீரர்களை எச்சரிக்கையுடன் செல்லப் பணித்தான். இரவு முழுதும் பெய்த மழையின் வேகம் சற்று மட்டுப்பட்டு, சாரலாக மாறியிருந்தது. மழைத்துளிகளினூடே படையை நடத்தியவனுக்கு எதிர்பாராத அபாயம் ஏதோ காத்திருப்பதாகத் தோன்றியது.

பாதை சற்றுத் தொலைவில் உயர்ந்த குன்றும் சுற்றிலும் அடர்ந்த தோப்புகளுமாக இருந்த பகுதியின் ஊடே சென்றது... குன்றைச் சுற்றி மறுபுறம் வந்த மானா பரணனுக்கும் அவன் வீரர்களுக்கும் எதிர்பார்த்த அபாயம் என்னவென்பது புரிந்தது.

புலிக்கொடி படபடவென்று காற்றில் ஒலியெழுப்ப, வீரர்களின் கவசங்களும், ஈட்டிகளும், உயர்த்திய வாட்களும் நனைந்து கதிரொளியில் மின்ன, எதிரில் அணிவகுத்து நின்றிருந்தது சோழர்படை. தான் அது வரையில் கண்டிராத வகையில் எதிரில் நின்ற அந்த அணிவகுப்பைக் கண்ட மானாபரணன் திகைத்தான். தன் படையை விட, பார்வைக்குக் குறைவான வீரர்களே தென்பட்டாலும், சோழர்படை சக்கரவட்டமாக வியூகம்

வகுத்திருப்பதையும், அதுவரை கண்டிராத புதியவன் ஒருவன் படைகளின் முகப்பில் நிற்பதையும் கவனித்தான் மானாபரணன்.

முன்னணியில் நின்றவனது அசாத்திய உயரமும், வைரம் பாய்ந்த மெல்லிய உடலும், நீள்வட்டமான முக அமைப்பும், அவன் ஒரு சாளுக்கியன் என்பதைப் புரிய வைத்ததால், மானாபரணனின் வியப்பு இன்னும் உயர்ந்தது.

'சாளுக்கியர்கள் சோழர்களின் பரம எதிரிகளாயிற்றே? எப்படி இவன் சோழர் படையில், அதுவும் படைத் தலைவனாக வந்து சேர்ந்தான்? நமது முதல் போரில் இவனையா எதிர்கொள்ள வேண்டும்?' மானா பரணனின் சித்தம் சலித்தது.

அந்த சாளுக்கிய படைத்தலைவனின் கனத்த குரல் ஒலித்தது. சோழர் படை மெல்ல மானாபரணனை நோக்கி நகர்ந்தது. மானாபரணன் பார்த்துக் கொண் டிருக்கும்போதே திடீரென சோழர் படையின் வேகம் உயர்ந்து முன்னணியிலிருந்த புரவிகள் கால்களை உயர்த்திப் பாய்ந்து வந்தன.

அவை நெருங்கியதும்தான் மானாபரணன் அந்த விந்தையை கவனித்தான். சக்கரவட்டமாக அணிவகுத் திருந்த சோழர்படையின் புரவிகளும், பக்கவாட்டில் வந்த போர்ரதங்களும், பெரும் விற்களைத் தாங்கிய வீரர்களும் இடம்வலமாக நகர்ந்தபடியே வந்தனர். அணிவகுத்திருந்த அந்த சக்கரவியூகம் சுழன்றபடியே வருவதைப் போலத் தோற்றமளித்தது. ஈழப்படையை நெருங்க நெருங்க வியூகத்தின் வேகம் மேலும் உயர்ந்து, அந்தப் போர்ச் சகடம் சுழன்றது. மானாபரணனின் வியப்பு அடங்கு வதற்கு முன்னால் ஈழத்துப் படையில் அந்த வியூகம் ஊடுருவி விட்டது. புரவிகளிலிருந்த வீரர்களின் ஈட்டிகள் ஒரே சீராக உயர்ந்து ஈழ வீரர்களை நோக்கி ஜிவ்வென்று இறங்கின. உள்பகுதியிலிருந்து பக்கவாட்டில் பறந்த

அம்புகள் வியூகத்தின் வெளிவட்டத்தினருகே நெருங்கிய ஈழ வீரர்களை மளமளவென்று வீழ்த்தின. போர் ரதங்கள் சீராக இரண்டிரண்டாகப் பாய்ந்து வந்தன. ரதங்களின் பின்பகுதியிலிருந்த பொறிகள் கட்டுக்கட்டாகப் பெரும் ஈட்டிகளை எடுத்து எறிந்தன. விவசாயியின் கரங்களி லிருந்து வயல்வெளியில் தூவப்படும் விதைநெற்களைப் போல் அந்த ஈட்டிகள் சீராகப்பிரிந்து அணிவகுத்திருந்த ஈழ வீரர்களை நோக்கிப் பறப்பதையும், ஏக காலத்தில் தன் வீரர்கள் பலர் சரிந்து விழுவதையும் கவனித்தான் மானாபரணன்.

ஈழத்து உபதலைவர்கள் அந்தப் பகுதியில் இரு பிரிவுகளாகப் பிரிந்து சோழவீரர்களைப் பக்கவாட்டிலும் நேர் எதிரிலும் தாக்கத் தொடங்கினார்கள். வியூகத்தை ஊடுருவி ஓரளவு உள்ளே முன்னேறவும் செய்தார்கள். காற்றைக் கிழித்தபடி அம்புகள் சர்சர்ரென்று பாய்ந்த ஒலிகளும், புரவிகளின் கனைப்பொலிகளும், வீரர்களின் கூச்சலும் பலமாக எழுந்தன. சக்கர வியூகத்தின் சுழற்சி சற்று வேகம் குறைந்தது. அந்த சாளுக்கியனின் கனத்த குரலில் உத்தரவுகள் ஒலித்தன. அவன் வாளும் உயர்ந்து ஏதோ சமிக்ஞை செய்தது. அடுத்து சக்கரவியூகத்தின் நடுப்பகுதியிலிருந்து போர்ரதங்கள் முன்னேறி வந்தன. ஈழ வீரர்கள் ஊடுருவிய பகுதியில் புகுந்த ரதங்களின் பின்புறத்துப் பொறிகள் சுழன்று, ஈட்டிகளை வரிசையாக எறிந்தன. ரதங்களிலிருந்து குதித்து இறங்கிய சோழ வீரர்கள் வாட்களை உருவிக் கொண்டு ஈழத்து வீரர் களிடையே புகுந்தனர். மறுபுறத்தில் அணிவகுத்திருந்த வீரர்கள் தங்கள் போர் விற்களைத் தரையில் நாட்டிக் கொண்டு அம்புகளைப் பொழியத் தொடங்கினர். அடுத்த இரு நாழிகை நேரத்தில் ஈழ வீரர்கள் முக்காலுக்கும்மேல் அழிக்கப்பட்டு, எஞ்சியவர்கள் பின்வாங்கிப் போராடியபடியே சக்கரவியூகத்தைவிட்டு வெளியே வந்தனர். மீண்டும் போர் ரதங்கள் நடுப் பகுதியை அடைய, அந்த போர்ச்சகடம் சுழலத்

தொடங்கியது. சுழன்றபடியே ஈழவீரர்களின் அணி வகுப்பை ஊடுருவி மறுபுறம் வந்து, வலம் இடமாகச் சுழலத் தொடங்கியது.

மானாபரணன் தனது படையின் அணிவகுப்பு இரண்டாக உடைக்கப்பட்டு, ஏறக்குறைய பாதிக்கும் சற்றுக் குறைவாக அழிக்கப்பட்டுவிட்டதையும், அந்தப் போர்ச்சகடம் சுழன்றபடியே மீண்டும் தானிருந்த பகுதியை நோக்கி வரத்தொடங்கி விட்டதையும் கவனித் தான். இரண்டாகப் பிரிந்துவிட்ட தன் அணிவகுப்பைப் பின்புறம் சுற்றிவளைக்கவும், தானிருந்த பகுதியிலுள்ள சோழவீரர்களைப் பக்கவாட்டில் வளைக்கவும் தன் உபதலைவர்களுக்கு உத்தரவிட்டு, தன் புரவியை அந்த சாளுக்கியனை நோக்கிப் பாயவிட்டான்.

சுற்றிவளைக்கப்பட்ட அந்தச் சோழர் படையின் வியூகத்தின் சுழற்சி வேகம் குறைந்து நின்றது. ஈழ உப தலைவர்கள் தாங்கள் நின்ற பகுதியிலிருந்து ஊடுருவி, வியூகத்தின் உள்ளே நுழைந்து போராடத் தொடங்கி விட்டதால் வியூகத்தின் பல பகுதிகளிலும் போர்க்கூச்சல் பலமாக எழுந்தது. தன் முன்னால் வாளைச் சுழற்றியபடி, புரவியில் பாய்ந்து வந்த மானாபரணனைக்கண்ட சாளுக்கிய விஜயாதித்த விக்கியண்ணனது முகத்தில் முறுவலொன்று நெளிந்தது. தனது நீண்ட கனத்த வாளை எடுத்துக் கொண்டவன் சோழ வீரர்களைச் சற்று விலகி மானாபரணனுக்கு வழிவிடுமாறு உத்தரவிட்டான்.

சித்தத்திலும், ரத்தத்திலும் உஷ்ணம் பூரணமாக ஏறிக் கிடந்ததால் வாளை உயர்த்தியபடி பாய்ந்த மானா பரணன் விக்கியண்ணனை நெருங்கியதும் பலமாக இரைந்தான். வாட்கள் மோதும் ஒலிகளும், அம்புகள் காற்றைக் கிழித்துப் பாயும் ஒலிகளும், வீரர்கள் கூச்சலும், போர்ரதங்களின் சக்கரங்கள் கடகடவென உருளும் ஒலிகளும் நிறைந்த அந்தப் போர்ச்சூழலில் மானா பரணனின் கோபக்குரல் சேர்ந்து ஒலித்தது "அடேய்...

யார் நீ? உன்னைக் கண்டால் சாளுக்கியனாகத் தெரிகிறது. சாளுக்கியருக்கும் என் ஈழத்துக்கும் சோழர்கள் பரமவிரோதிகளாயிற்றே... நீ எப்படி சோழர் படையில் சேர்ந்தாய்?"

விக்கியண்ணனின் கனத்த குரல் நிதானமாகப் பதில் வந்தது "அதுபற்றி உன்னிடம் கூற அவசியமில்லை மானாபரணா. நீ இப்படியே ஈழத்துக்குத் திரும்பிவிடு. இலலை யென்றால் உன்னையும் உன் வீரர்களையும் காப்பாற்ற அந்த ஈழமே திரண்டு வந்தாலும் முடியாது"

விக்கியண்ணனின் அலட்சிய பதில் மானாபரணனின் உஷ்ணத்தை இன்னும் உயர்த்தியது. அதற்குமேல் ஏதும் பேசிக்கொண்டிருக்க விரும்பாத விக்கியண்ணனின் நீண்ட வாள் உயர்ந்து சுழன்று மானாபரணனை நோக்கி இறங்கியது.

தன் வாளை உயர்த்தி விக்கியண்ணனைத் தடுத்து, அந்த வாளின் வேகத்தை உணர்ந்த மானாபரணன் வாளைச் சுழற்றியபடியே பாய்ந்தான். அதே வேகத்தில் தன் புரவியின் இடப்புறம் செருகப்பட்டிருந்த பெரும் ஈட்டியொன்றையும் கனவேகத்தில் எடுத்து, விக்கியண்ணனை நோக்கிப் பறக்கவிட்டான். வாளின் வேகத்திலேயே அதைத் தடுத்து இரண்டாக முறித்த விக்கியண்ணனின் வாள் கனவேகத்தில் சுழலத் தொடங்கியது. அதுவரை சாளுக்கியருடன் எந்த மோதலிலும் ஈடுபட்டறியாத மானாபரணன், விக்கியண்ணன் அணிவகுத்துத் தாக்கிய வியூகத்தையும், சோழர்களின் வாள்வீச்சுக்கு எந்த வகையிலும் விக்கியண்ணனின் வீச்சு குறைந்ததல்ல என்பதையும் நேரிடையாகக் கண்டதால், வடக்கே ஓயாமல் தாக்கிய சாளுக்கியர்கள் சோழர்களுக்கு எத்தனை பலமான எதிரிகளாக இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டான். தொடர்ந்து தன் வாளைப் பலமாக வீசியவன், விக்கியண்ணனின் வீச்சில் சோழர் முறையும் கலந்திருப்பதையும், நேரம்

கூடக்கூட அந்த வீச்சின் வேகமும் கூடிக் கொண்டே வருவதையும், எந்தத் திசையிலிருந்து தாக்கினாலும் விக்கியண்ணனின் வாள் முன்னதாகவே வந்து நின்று தடுப்பதையும் கண்டவன், அவன் ஏதோ தனக்கு வாட் பயிற்சியளிக்க வந்தவன் போல வெகு அனாயாசமாக வாளைச் சுழற்றிக் கொண்டிருக்கிறான் என்பதையும் புரிந்து கொண்டான்.

வாளைச் சுழற்றி, மானாபரணனின் தாக்குதலைத் தடுத்த விக்கியண்ணனின் இடக்கரம் உயர்ந்து ஏதோ சமிக்ஞை செய்தது. அடுத்து போரின் வேகத்தில் கலைய முற்பட்ட சோழர்படையின் வியூகம் சரசரவென்று மீண்டும் வேறு வடிவில் கூடத் தொடங்கியது. வீரர்களுக் கிடையேயிருந்த இடைவெளி குறைந்து நான்காகவும் ஆறாகவும் சேர்ந்த வீரர்கள் வலமும் இடமுமாக நகர்ந்த படியே போரிட்டு, புதுவியூக மொன்றை வகுத்தனர். இரு நாழிகை நேரத்தில் சக்கரவியூகமாக இருந்த சோழர் படையின் வியூகம் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து அர்த்தசந்திர வியூகங்களாக மாறத் தொடங்கியது. தன் வீரர்கள் இருபுறங்களிலும் நெருக்கப்படுவதைக் கவனித்த மானாபரணன் விக்கியண்ணனுடன் தன் உப தலைவர்கள் இருவரை மோதவிட்டுப் பின்வாங்கி சோழர்களின் வியூகத்தின் நடுப்பகுதியை நோக்கிச் செல்ல முயன்றான். ஆனால் அது அத்தனை எளிதாக இல்லை. அவன் புரவிக்குக் குறுக்கே பாய்ந்த சோழர் உப தலைவர்களின் புரவிகள் அவனை வழிமறித்தன. அவர்களை நோக்கி வாளை வீசிய மானாபரணனுக்குச் சோழர் படை பின்வாங்கிச் செல்கிறதா, அல்லது தன்னையும் தன் வீரர்களையும் வடக்கு நோக்கி இழுத்துச் செல்கிறதா என்ற சந்தேகம் பலமாக எழுந்தது. அதன் காரணத்தைச் சற்றுத் தாமதமாகவே புரிந்து கொண்டவனுக்கு விக்கியண்ணனின் தந்திரம் என்ன வென்பதும் புரிந்தது.

பொருநை நதி வளைந்து திரும்பும் பகுதியை அடுத்துத் தெரிந்த பெரும் கருங்கற்பாலத்தையும், மரங்களடர்ந்த தோப்புகள் சற்றுத் தொலைவில் தெரிவதையும், தானும் தன் வீரர்களும் அதே திசையில் மெல்ல இழுக்கப் படுவதையும் கவனித்தாலும் அதைப்பற்றி அதிகம் கவலைப்படாத மானாபரணனுக்குத் தோப்புகளை நெருங்கியதும்தான் விஷயம் விளங்கியது.

தோப்புகளை நெருங்கியதும் மானாபரணனையும் அவன் வீரர்களையும் நோக்கி, தோப்பின் உட்பகுதியி லிருந்து சரசரவென்று அம்புகள் பாய்ந்து வந்தன. வந்த அம்புகளும் பூமிக்குச் சற்று உயரத்திலிருந்து வருவதையும், குறைந்த எண்ணிக்கையில் அம்புகள் வந்து தாக்கு வதையும் கவனித்த ஈழ வீரர்களின் ஒரு பிரிவு தோப்பை நெருங்க முற்பட்டது. ஏதோ பத்துப் பதினைந்து வீரர்களே அங்கு இருக்க வேண்டும் என்று எண்ணிய மானாபரணனும் ஈழத்து வீரர்களும் தோப்பை நெருங்கியதும் திகைத்தனர்.

தோப்பின் உட்பகுதியிலிருந்து ஐம்பதுக்கும் குறையாத போர்க்களிறுகள் தடதடவெனப் பூமி அதிர வெளியே வந்தன. ஒவ்வொன்றிலும் பாகனைத் தவிர இரண்டு மூன்று பேராக இளைஞர்கள் அமர்ந்து வந்தனர். அந்த இளைஞர்களையும், அவர்களது வெண்ணிற உடை களையும், கரங்களில் பிடித்திருந்த பெரும்வடிவிலான விற்களையும் கண்ட மானாபரணனுக்கு, தன்னை கொல்லத்தின் அஷ்டமுடி ஏரிக்கரையில் வந்து சந்தித்து, விக்கிரமபாண்டுவின் உடலை ஒப்படைத்துச் சென்ற இளைஞனும் அவனுடன் வந்து தன் வீரர்களை அழித்த இளைஞர்களின் நினைவும் வந்தது. அந்த இளைஞர் களின் விற்கள் சரமாரியாக அம்புகளைப் பொழியத் தொடங்கி விட்டதையும், மூன்றாகவும், ஐந்தாகவும் பறந்த அம்புகள் இம்மிபிசகாமல் தன் வீரர்களைத் தாக்கிச் சரிப்பதையும். போதாக்குறைக்கு அந்தப் போர்க்களிறு களும் ஈழ வீரர்களினிடையே புகுந்து கால்களால்

துவைக்கவும், துதிக்கைகளால் தூக்கியெறியத் தொடங்கி விட்டதையும் கண்டான் மானாபரணன்.

அவன் சித்தத்தில் மீண்டும் குழப்பம் படர்ந்தது. சேரலாதனைச் சிறையெடுத்த பின்னர் நடந்தவற்றுக் கெல்லாம் ஏதோ தொடர்பிருப்பதுபோலவும், சுந்தர பாண்டியனோ, வீரகேரளனோ, தானோ அறியாத வலை சோழர்களால் பின்னப்பட்டிருப்பதாகவும், அதைப் பற்றி உணராமலே தான் பாண்டியருடனும், சேரச் சிற்றரசர் களுடனும் திட்டங்களை வகுத்து, படையெடுப்பிலும் ஈடுபட்டிருக்கிறோம் என்ற எண்ணம் அவனை அலைக்கழிக்கத் தொடங்கியது. அப்படியானால் தான் சுந்தரபாண்டியரின் படைகளுடன் இணையச் செல்வதையும் சோழர்கள் உணர்ந்திருக்க வேண்டும்.

தன் வீரர்கள் பலர் காயங்களுடன் விழுந்துவிட்டதைக் கவனித்தவன், ஈழத்து வீரர்களைப் பின்வாங்கவும், பொருநை வளைந்து திரும்பிய பகுதியில் கரையோர மாகவே செல்லவும், சற்று வடக்கே சென்றதும் முறப்ப நாடு என்ற அந்தப் பகுதியில் பொருநையின் அகலம் குறைவாக இருப்பதால் நதியைக் கடந்துவிடவும் தீர்மானித்தான்.

பொருநையின் மறுகரையில் வந்து கூடிய தன் வீரர்கள் பாதிக்கும்மேல் குறைந்துவிட்டிருப்பதையும், எதிர்க் கரையில் அந்த சாளுக்கியன் மீண்டும் சோழ வீரர்களை அணிவகுத்துத் தன்னை நோக்கி வரத் தொடங்கி விட்டதையும் கவனித்த மானாபரணன் நேர் வடக்கே சென்ற பாதையில் தன் வீரர்களுடன் வேகமாகச் செல்லத் தொடங்கினான்.

சற்றுத் தொலைவு சென்றபின் திரும்பிப் பார்த்த மானாபரணன் பார்வையில் சோழர்படையேதும் புலப்படவில்லை. அடுத்துப் பலமாக மீண்டும் பொழியத் தொடங்கிய மழை அவன் பார்வையை மறைத்தது.

# 35. ஞானாரண்யம்

வேதங்கள் நான்கும், உபவேதங்கள் நான்கும், முக்கிய உபநிஷத்துகள் பத்தும், வித்யைகள் முப்பத்தியிரண்டும், யாகங்கள் முப்பதும், கலை அறுபத்திநான்கும், புராணங்கள் பதினெட்டும், இதிகாசங்கள் இரண்டும் ஒரு காலத்தில் சதாசர்வ காலமும் ஓதப்பட்டு வந்ததால் மட்டுமின்றி, அந்தப் பூமியில் பிறந்த உதயநங்கை என்னும் பாக்கியவதி, வேதத்தைத் தமிழ்செய்த பிரான் மாறனைப் பெற்றெடுத்ததால், ஞானாரண்யம் என்று அழைக்கப் பட்ட அந்தப் பூமியின் வடகிழக்குப்பகுதியில் வெகு அமைதியாக நின்றிருந்தது அந்த ஆலயம்*.

இராமகாதையில் உடன் வந்து பக்தனாக மாறிப்போன அரக்கனும், ஸ்ரீவைகுண்டத்தையே மறுத்துப் பூமியில் பக்தனாக இருந்துவிட்ட அனுமனும் மட்டுமின்றி, அவர்களைவிட இராமனிடம் ஈடுபட்டதால் அரசும், அரியணையும், நாடும், நகரமும் என சகலத்தையும் துறந்துவிட்ட சேரமன்னனும் வந்து சேவிக்கும் இடம் என்று கருதப்பட்ட அந்த ஆலயத்தில் மனிதர் நட மாட்டம் மட்டும் அற்றுப் போய்க் கிடந்தது. மக்கள் வருகையை எதிர்பார்க்காமல் சேவையைத் தொடர்ந்து கொண்டிருந்த ஆலயத்துப் பட்டருடன் அவரது விருந்தாளியாக வந்திருந்த ஒருவரும் நின்று கொண்டிருந்தார். நெடுநெடுவென்று உயரத்துடன், உறுதியான தேகத்துடன் காவியுடையில் நின்று சேவித்துக் கொண்டிருந்த அந்த விருந்தாளியையும், எதிரே அமர்ந்த கோலத்தில் சேவை சாதித்துக் கொண்டிருந்த திருவாழ் மார்பனையும் மாறிமாறிப் பார்த்த பட்டரின் முகத்தில் ஆனந்தம் அதிகமாகவே தெரிந்தது. இரு ஆண்டுகளாக

★ அம்பலவன் நின்றடியான் - திருவாலீஸ்வரம் ஆலயத்தைக் கட்டிய சோழர் படைத்தலைவன். - திருமலை, ஜஏஎஸ் எழுதிய ஆய்வுநூல் 'தி பாண்டியன் டவுன்ஷிப்ஸ்'

அந்த ஆலயமும், ஆலயத்துப் பட்டரும் அனுபவித்திருந்த துன்பங்களை மாற்றிவிடவே அந்த வைகுந்தன் இந்தத் துறவியை அழைத்திருக்கிறான் என்ற உணர்வால் அவர் விழிகளில் சற்று ஆனந்தபாஷ்யமும் துளிர்த்திருந்தது.

பூஜையை முடித்துக் கொண்ட பட்டர் துறவியின் கரங்களில் திருத்துழாயை அளித்துவிட்டு, பிரசாதக் கூடையை எடுத்துக் கொண்டார். "நாம் புறப்படலாமா கண்ணாகனாரே?" என்ற அவரது கேள்வியிலும் ஆனந்தம் மிதந்தது.

கண்ணாகனாரின் கூர்விழிகள் பட்டரை ஏறெடுத்தன. "செல்லலாம் பட்டரே, இனி நடந்தவற்றைக் கூறும்" என்றபடி பட்டருடன் நடந்தார்.

பட்டரின் கரங்கள் பழகிய வேகத்தில் ஆலயத்தின் கதவுகளைப் பூட்டி, சாவியை மடியிலிருந்த காவித் துணியில் சுற்றி வைத்துக்கொண்டன. நடந்தபடியே அவர் அளித்த பதிலில் சற்று வருத்தமே ஒலித்தது "என்னவென்று கூறுவது கண்ணாகனாரே, இந்த ஆலயத்தில் எந்தப் பிரளயமே வந்தாலும் நித்யப்படி ஆராதனைகளோ, உற்சவங்களோ தடைப்பட்டது கிடையாது. அம்பலவன் நின்றடியான்* திருவாலீஸ் வரத்து ஆலயத்துக்கு இறையிலி நிலங்கள் வழங்கியபோது இந்த ஆலயத்துக்கும் வழி பாடுகள் தொடர்ந்து நடக்க ஏற்பாடுகள் செய்திருந்தார். அந்த வருவாயைத் தற்போது பாண்டியன் தடுத்து விட்டான். அது போதாதென்று சென்ற இரு ஆண்டுகளாக உதயகிரி சுந்தரபாண்டியன் உதவிக்கு வந்திருக்கும் ஈழத்து வீரர்களை இந்தப் பகுதிகளில் கொள்ளை யடிக்கவும், அட்டூழியங்கள் புரியவும் விட்டுவிட்டான்"

"அவனுக்கு இறுதி நெருங்கிவிட்டது" கண்ணா கனாரின் குரலில் உஷ்ணம் தெரிந்தது.

---

★ அம்பலவன் நின்றடியான் இக்கோயிலைக் கட்டி நிலங்கள் நிவந்தமாக அளித்துள்ளான்

"அந்த ஈழத்து வீரர்கள் இருமுறை உற்சவகாலத்தில் வந்தனர். மக்களை அச்சுறுத்திக் கொள்ளையடித்தனர். அனுமன் கேட்டுக்கொண்டதால் அகத்தியர் இராமாயணம் ஓதியதாகக் கூறப்படும் மண்டபத்தை இடித்தனர். குலசேகர ஆழ்வார்** இந்த ஆலயத்துக்கு அளித்திருந்த அனுமன் விக்கிரகத்தையும், வாகனத்தையும் சேதப்படுத்திவிட்டனர். கோபுரத்திலிருந்த அனுமன் சிற்பத்தை உடைத்துவிட்டனர். அனுமன் ஈழத்தை எரித்தவனாம்"

கண்ணாகனாரின் விழிகளில் அனல் பறந்து கொண்டிருந்தது.

பட்டர் தொடர்ந்தார் "அதன்பிறகு மக்கள் இங்கு அதிகம் வருவதில்லை. எந்த உற்சவங்களும் நடைபெறவில்லை. இரவுக்காலங்களில் எப்போது என்று எதிர்பாராதபடி ஈழத்தவர் கிராமத்துக்குள் வந்து கொள்ளையை நடத்தத் தொடங்கிவிட்டனர். இங்கு மட்டுமல்ல, தென்கோடிக் கிராமங்கள் அனைத்திலும் இரு ஆண்டுகளுக்கு மேல் இதே கதைதான்"

எப்போதும் உணர்ச்சிகளுக்கு அதிகம் ஆட்படாதவர் என்று பெயரெடுத்திருந்த கண்ணாகனாரின் முகத்தில் வருத்தமும், சினமும் தெரிந்தது.

பட்டரின் இல்லம் நெருங்கியது. "வாருங்கள், நீங்கள் என் இல்லத்துக்கு வந்து பல ஆண்டுகளாகிவிட்டன" பட்டரின் அழைப்பும், உள்ளிருந்து ஓடிவந்து வரவேற்ற பட்டரின் துணைவியாரின் கனிவும், கண்ணாகனாரைக் கண்டதும் பணிவுடன் வந்து முறைப்படி வணங்கிய பட்டரின் மகனும் கண்ணாகனாரின் சித்தத்திலிருந்த உஷ்ணத்தைத் தணித்ததால், அவர்கள் அன்புடன் அளித்த எளிய உணவை அருந்திவிட்டு, மீண்டும் கூடத்தில் வந்து அமர்ந்தார்.

---

**★★ குலசேகர ஆழ்வார் இந்த ஆலயத்துக்குத் திருப்பணிகள் பல செய்திருக்கிறார்– திருவண்பரிசாரம் தலவரலாறு**

“பட்டரே, வருந்தவேண்டாம். இன்னும் இருதினங்களில் நிலைமை மாறிவிடும்” கண்ணாகனாரின் குரலில் தொனித்த உறுதி பட்டரின் முகத்தில் மலர்ச்சியைக் கொண்டு வந்தது.

கூடத்தின் மூலையில் வைக்கப்பட்டிருந்த பெரும் பேழையொன்றை அணுகிய பட்டர் அதிலிருந்து கோர்க்கப்பட்ட ஓலைகள் சிலவற்றைக் கொண்டு வந்து நீட்டினார் “சரி, கண்ணாகனாரே, நீங்கள் கேட்டிருந்த விவரங்களை இந்த ஓலைகளில் எழுதியிருக்கிறேன். நீங்கள் ஒருமுறை சரிபார்த்துவிடுங்கள்” என்றார்.

ஓலையைப் பெற்றுக் கொண்ட கண்ணாகனாரின் விழிகள் அந்த ஓலையின் வரிகளில் சரசரவென்று படர்ந்து ஓடின.

பட்டரின் குரல் ஒலித்தது “கண்ணாகனாரே, இந்த ஓலைகளில் மலைப்பகுதி கிராமங்களும், கானகப் பகுதிக்குள் செல்லும் பாதைகளின் விவரங்களும், ஈழத்தவர் படைப்பிரிவுகளின் விவரங்களும் இருக்கின்றன. நமது ஆலயத்துக்கு நேர்மேற்கே இந்த மலைத்தொடரின் தெற்குமுனை இருக்கிறது”

கண்ணாகனார் நிமிர்ந்தார்.

“அந்தப் பகுதியிலிருந்து அடர்ந்த கானகத்தினூடே செல்லும் பாதை சேர நாட்டின் திருவாழும்கோடுவரை செல்கிறது. காந்தளூர்ச் சாலையிலிருந்து வரும் ஈழத்துப் படைகள் கானகத்தின் வழியே மலைத்தொடரின் தெற்கு முனையில் தமிழகத்தில் நுழைந்து, மூன்று காத தூரம் வரை செல்கிறது. பிறகு நமக்கு வடக்கேயிருக்கும் தாடகை மலைக்கு வந்து, பின் மகேந்திர கிரியை நோக்கிச் செல்கிறது. எனவே படைப்பிரிவின் நடமாட்டம் வெளிப்படையாகத் தெரியவில்லை”

கண்ணாகனாரின் முகத்தில் வியப்பு தெரிந்தது “நீங்கள் இதை எப்படிக் கண்டறிந்தீர்கள்?”

பட்டரின் பார்வை திரும்பி இல்லத்தின் உள்ளே சென்றது. விளக்கொன்றின் ஒளியில் ஓலைச்சுவடிகளைப் பார்த்துக் கொண்டிருந்த அவரது இளம் மகனை நோக்கியவர் "ஒருமுறை கொள்ளை நடந்தபோது எங்கிருந்து வந்து தொலைத்தார்களோ என்று சலித்துக் கொண்டேன். அன்றே என் மகன் ஆதித்தநாராயணன் தோழர்களுடன் ஈழத்தவரைப் பின்தொடர்ந்து சென்றான். பரலியாற்றங்கரைவரையில் அவர்களைத் தொடர்ந்துசென்று இந்தப்பாதையைப் பற்றிய விவரத்தைக் கூறினான்" என்றவர் தன் மகனை அழைத்து கண்ணாகனாரின் முன் நிறுத்தினார்.

சிறுபிள்ளையாகவுமில்லாமல், இளைஞனாக வுமில்லாமல் துறுதுறுவென்ற விழிகளுடன் எதிரே நின்றவனை ஏறெடுத்த கண்ணாகனாரின் முகத்தில் முறுவல் நெளிந்தது.

"மகனே, ஈழத்தவரைப் பின்தொடர்வது அபாய மல்லவா? அவர்கள் பயிற்சி பெற்ற வீரர்கள். உனக்கோ, உன் தோழர்களுக்கோ போர்ப்பயிற்சி கிடையாதே. ஏன் அப்படிச் சென்றாய்?"

அந்தச் சிறு பிள்ளையின் நிச்சலனமாக விழிகள் ஆசார்யரை ஏறெடுத்தன, "ஆசார்யரே, மன்னிக்க வேண்டும். ஆயுதங்களோ, பயிற்சியோ கருவிகள்தான். மனத்துணிவுதான் முதல் தேவை. அது எங்களிடம் நிறையவே இருக்கிறது. என் கிராமத்து மக்களுக்காக ஏதேனும் செய்ய வேண்டும் என்ற உணர்வு இருக்கிறது. என்றேனும் உதவும் என்பதற்காக நானும் என் தோழர்களும் அவர்களைப் பலமுறை பின் தொடர்ந்து கண்காணித்தோம். தாடகை மலையில் அவர்கள் ஆயுதங்களைக் குவித்து வைத்திருப்பதைக் கண்டு பிடித்தோம். பாதையில் அவர்களை மறித்து அழிக்கவும் பல திட்டங்கள் வகுத்தோம். அவை அத்தனை வலுவானதாக இல்லையென்பதை உணர்ந்து காத்திருந்

தோம்” அவனது விழிகளிலும் சொற்களிலும் தெரிந்த வேகம் ஆசார்யரை வியக்க வைத்தது.

“சரி, இறுதியாக எப்போது அந்தப் பாதையில் சென்றாய்?”

“இரு தினங்களுக்கு முன். அப்போது அவர்கள் தாடகை மலையிலிருந்து மகேந்திரகிரியை நோக்கிச் செல்லத் தொடங்கியிருந்தார்கள். போர் நடந்து ஒருவேளை பின்வாங்க நேரிட்டால் உதவுவதற்காகத் தாடகை மலையிலேயே அகத்தியர் ஆலயத்தின் பின் பகுதியில் ஆயுதங்கள் பலவற்றையும் மறைவாக வைத்துச் செல்வதையும் கண்டோம்”

ஆசார்யரின் முகத்தில் சிந்தனை படர்ந்தது. “ஆதித்யா, அந்தப் பாதையில் எவர் கண்ணிலும் படாமல் சென்று வந்திருக்கிறாய் என்பது புரிகிறது. நாளைக் காலை என் சீடன் நம்பி இங்கு வருவான். நீ அவனுடன் சென்று அந்தப் பாதையைக் காட்டு. நீங்கள் தாக்க உத்தேசித் திருந்த இடங்களையும் மற்ற விவரங்களையும் கூறு. அதுமட்டுமல்ல...”

கண்ணாகனாரின் விழிகள் பட்டரை நோக்கித் திரும்பின “பட்டரே, உமது மகன் எப்படிப்பட்ட உதவியைச் செய்திருக்கிறான் என்பது உமக்குப் புரியாது. இந்தப் போர் முடிந்ததும் அவனது தோழர்களுடன் என் பாடசாலைக்கு அழைத்துச் செல்வதாக இருக்கிறேன், என்ன சொல்கிறீர்?”

பட்டரின் திகைப்பு அடங்க சில கணங்களாயிற்று. “நான் என்ன சொல்வது ஆசார்யரே. அவனே பலமுறை என்னிடம் கேட்டிருக்கிறான். அரச வம்சத்தவருடன் சமமாகப் பயில்வது அத்தனை உசிதமாக இருக்காதென்று மறுத்துவந்தேன். இப்போது தாங்களே அழைத்துச் செல்வதாகக் கூறுகிறீர்கள். அவனும், அவனைப் பெற்ற நாங்களும் அந்தத் திருவாழ்மார்பனை நாள் தவறாது சேவிப்பதோடு ஏதோ புண்ணியமும் செய்திருக்கிறோம்

என்று தெரிகிறது” பட்டரின் சொற்களில் பூரண ஆனந்தம் ஒலித்தது.

ஆதித்யநாராயணன் மீண்டும் ஆசார்யரை வணங்கி எழுந்தான்.

**ம**றுதினம் காலைப்பொழுது அந்தச் சிறு அழகிய கிராமத்தில் மனோகரமாக இருந்தது. கானகத்துக் குயில் களும், கிள்ளைகளும், ஆலயத்துக் கோபுரத்தில் வசித்த புறாக்களும் ஊருக்குள் வந்து வட்டமிட்டு ஆனந்தமாகக் குரல் கொடுத்தன. பட்டருக்கும் அவரது மகனுக்கும் இன்னும் ஆனந்தம் அளிக்க உதயகாலத்திலேயே வாயிலில் வந்து நின்றான் ஆசார்யரின் சீடன் நம்பி. நம்பியின் பின்னால் புரவிகளும் மற்ற சீடர்களும் தயாராக நின்றனர்.

முதன்முதலாகப் புரவியேறிய ஆதித்யனும் அவன் தோழர்களும் அதீத உற்சாகத்தில் நம்பியுடன் சென்றனர். பட்டருடன் மீண்டும் ஆலயத்துக்குச் சென்ற ஆசார்யர் திருவாழ்மார்பனைச் சேவித்துவிட்டு, இல்லத்துக்குத் திரும்பியவுடன், ஓலைகளை மடியில் அடுக்கி வைத்துக் கொண்டு பரபரவென்று எழுத்தாணியை அசைத்து அசைத்து எழுதத் தொடங்கினார்.

நம்பியுடன் சென்ற ஆதித்யனும் அவன் தோழர்களும் சரியாக உச்சிப் பொழுதில் திரும்பி வந்தனர்.

எழுதிய ஓலைகளைச் சீடர்களிடம் அளித்து, வடக்கிலும் கிழக்கிலும் அனுப்பிய ஆசார்யர் பட்டரிடம் விடைபெற்றுக் கொண்டு தாமும் புறப்பட்டார். ஒரு ஜாம நேரத்துக்குப் பின் நம்பியும் மற்ற சீடர்களும் விற்களைத் தோளில் மாட்டிக் கொண்டு தாடகைமலையை நோக்கிச் சென்றனர்.

**ம**கேந்திரகிரியின் அடிவாரம் முதல் நம்பியாற்றின் கரைப்பகுதிவரை பரந்து கிடந்த சமவெளியிலிருந்த ஓரிரு தோப்புகளும், வயல்களும் பாண்டிய வீரர்களாலும், ஈழத்து வீரர்களாலும் மிதிபட்டுக் கொண்டிருந்தன.

முன்னணியில் நின்ற வீரர்களின் வாட்களும், கேடயங்களும், பெரும் ஈட்டிகளும் இரவின் முதல் ஜாமத்து இருளில் பளபளக்க, பக்கவாட்டில் நின்றிருந்த புரவிப் படையில் அவ்வப்போது எச்சரிக்கைக் குரல்களும், புரவிகளின் கனைப்பொலிகளும் எழுந்தன. வரிசைகட்டி நின்றிருந்த போர் ரதங்களில் பெரும் ஈட்டிகளை எடுத்து வீசும் யந்திரங்களையும், ஆயுதங்களையும் அடுக்கிக் கொண்டிருந்த பாண்டிய வீரர்கள் அந்த அரையிருளில் ஏதோ பிசாசுகளைப் போல் நடமாடிக் கொண்டிருந்தனர்.

பாண்டிய வீரர்கள் ஒரு பிரிவாகவும், சற்றுத் தள்ளி ஈழத்து வீரர்கள் ஒரு பிரிவாகவும் அணிவகுத்திருக்க, அந்தப் பெரும்படை இருளில் பெரும் ஸர்ப்பம் போல் அசைந்து வளைந்து அதிகம் ஓசையின்றி முன்னே நகர்ந்து கொண்டிருந்தது. இறுதியாக, போர்க்களிறுகளுடன் வந்து கொண்டிருந்த சேர வீரர்களின் முகங்களில் அத்தனை உற்சாகமோ, வேகமோ தென்படவில்லை.

முன்னணியிலிருந்த வீரர்களின் முன்னால் மீன் வடிவில் கற்கள் பதிக்கப்பட்ட கிரீடமொன்றை அணிந்து, பெரும் குண்டலங்கள் ஆட, கவசத்தையும் பெரும் வாளையும் தரித்து, தன் பழுப்புநிறப் புரவியை நடத்தியபடியே அணிவகுப்பைத் திரும்பிப் பார்த்த சுந்தர பாண்டியனின் கறுத்துப் பெருத்த ராட்சத உடல் சிலிர்த்தது. அருகில் புரவியிலமர்ந்திருந்த கொல்லத்தின் தற்காலிக மன்னன் கோவர்த்தன மார்த்தாண்டனை நோக்கியவன் “மார்த்தாண்டரே, விடிவதற்குள் நாம் முல்லைநாட்டை அடைந்துவிட வேண்டும். முல்லை நாட்டு இளங்கோகுடியில்தான் சோழ இளவல் இருக்கிறானாம்”

“இளங்கோகுடியில் சோழர் படை பலம் குறித்து ஏதேனும் தெரிந்ததா?” மார்த்தாண்டனின் கேள்வியில் சந்தேகம் ஒலித்தது.

சுந்தர பாண்டியனின் பதில் வேகத்துடன் வந்தது "அங்கு படைபலம் ஏதும் வலுவாக இல்லை மார்த் தாண்டரே. சந்தேகமே வேண்டாம். சோழர்களின் படை பலம் மிகக் குறைவாக இருக்கும் இந்தத் தருணத்தை வைத்துத்தான் மானாபரணர் திட்டமே வகுத்தார்"

"மானாபரணர் ஏன் இன்னும் வந்து சேரவில்லை? கொற்கையிலிருந்து இரு தினங்களுக்கு முன்பே புறப்பட்டதாகக் கூறினீர்களே?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை. நான் அனுப்பிய வீரர்களும் வந்து சேரவில்லை. அவர் கொற்கையிலிருந்து புறப்பட்ட இரண்டாவது நாள் இரவில்தானே நம்மை முல்லைநாட்டை நோக்கி வருமாறு கூறினார். ஒருவேளை அவர் முல்லை நாட்டின் எல்லையில் வந்து சந்திக்கலாம். அப்படி வந்தால் இருபுறமும் சோழ இளவல் தாக்கப்படுவான். இம்முறை அவனை ஒழித்துவிடுவது என்று தீர்மானித்திருக்கிறேன். அடுத்து நேரே மதுரையை நோக்கிச் செல்ல வேண்டியதுதான்"

உதயகிரி சுந்தரபாண்டியனின் தீர்மானத்தை உடைக்கவும், பாண்டியரின் அந்தப் பெரும்படையை வெவ்வேறு முனைகளில் தாக்கவும் சரியாக ஐந்தாவது காதத்தில் சோழ இளவலுடன் காத்திருந்தார் தென்திசைத் தண்டநாயகர் உத்தம சோழ மூவேந்த விழுப்பரையர்.

# 36. பாணாந்தகாரம்

**மே**லைக்காற்று வேகமாக வீசியதாலோ, அல்லது மலையடிவாரத்துப் பாதையில் பெரும் ஸர்ப்பம் வளைந்து வளைந்து செல்வதைப்போல் உதயகிரி சுந்தர பாண்டியனின் பெரும்படை ஊர்ந்து கொண்டிருப் பதைக் கண்டதால் ஏற்பட்ட அச்சத்தாலோ, கறுத்துக் கிடந்த மேகக்கூட்டங்கள் சேர்த்து வைத்திருந்த நீரைப்

பொழியாமல் அதிவேகமாக தெற்கே நீண்டுகிடந்த மலைப் பகுதியை நோக்கி விரைந்து கொண்டிருந்தன. கதிரவனின் ஒளி தோன்றுவதற்கு முன்னால் இயற்கை ஒருமுறை தன் கண்களை மூடித்திறக்கும் அந்தக் கருக்கல் நேரத்தில் திடீரென மையிருட்டு சூழ்ந்ததால், முன்னணியில் சென்றுகொண்டிருந்த சுந்தர பாண்டியன் திடீரென்று அணிவகுப்பை நிறுத்தவும், சற்று நேரம் அங்கேயே காத்திருக்கவும் உத்தரவிட்டான். முல்லை நாட்டின் எல்லைக்கு நிலைமையைக் கண்டுவர அனுப்பிய முன்னணிவீரர்களும், ஒற்றர்களும் அதுவரை திரும்பாதது அவனுக்குச் சந்தேகத்தை அளித்திருக்க வேண்டும். உபதலைவன் ஒருவனை அழைத்தவன் எதற்கும் ஒருமுறை சென்று கண்டுவரவும் உத்தரவிட்டான்.

அதுவரை அணிவகுப்பு மாறாமல் இரவு முழுவதும் பயணம் செய்த அலுப்பைப் போக்கிக் கொள்ள வீரர்கள் ஆங்காங்கே தரையிலும், மரக்கிளைகளிலும், புல்வெளி யிலும் அமர்ந்து ஆசுவாசப்படுத்திக் கொண்டிருக்க, உப தலைவர்கள் சற்று மறைவான இடங்களைத் தேர்ந் தெடுத்துப் படுக்கவும் செய்தனர். கருக்கல் முடிந்து ஒரு நாழிகைநேரம் ஓடிய பின்னர் கனவேகத்தில் புரவியைச் செலுத்திக் கொண்டு திரும்பிய உபதலைவனின் முகம் பேயறைந்தது போலிருந்தது. மூச்சிரைக்கப் புரவியை விட்டு ஓடிவந்தவன் சுந்தரபாண்டியனின் அருகில் வந்ததும் “மன்னவா... நாம் மோசம் போய் விட்டோம்... மானாபரணர்... மானாபரணரை...” என்று திணறினான்.

சுந்தரபாண்டியனின் முகத்தில் அனல் பறந்தது “அடேய், சொல்வதைத் தெளிவாகச் சொல். என்ன மோசம் போனோம்? மானாபரணருக்கு என்னவாயிற்று?

உபதலைவனின் முகம் வேப்பங்காயை விழுங்கியது போலிருந்தது. “மன்னவா, நம் முன்னணி வீரர்கள் அனைவரும் கொல்லப்பட்டிருக்கிறார்கள். தப்பிய ஒற்றன்

ஒருவன் மட்டும் அரைக்காத தூரத்தில் காயங்களுடன் விழுந்து கிடக்கிறான்"

"என்ன சொல்கிறாய்?" சுந்தரபாண்டியன் இரைந் தான்.

"பிரபு, நாம் எதிர்பார்த்த்துபோல் சோழர்படைகள் முல்லைநாட்டில் இல்லை. நமக்கு நேர் எதிரே இரண்டு காத தூரத்தில் தயாராகக் காத்திருக்கிறது"

"அது மட்டுமல்ல பிரபு" உபதலைவன் தயங்கினான்.

"வேறென்ன... சொல் உடனே"

"நாம் எதிர்பார்த்தபடி மானாபரணர் முல்லை நாட்டுக்கு வரவில்லை. அவரை வழிமறித்து முறப்ப நாட்டருகே சோழர்கள் போரிட்டு, வடக்கே அனுப்பி விட்டார்கள். நேற்று முன்தினமே இந்தப் போர் நடந்திருக்கிறது. மானாபரணர் நமக்குச் செய்தியனுப்பிய வீரர்கள் வழியிலேயே சிறைப்பட்டிருக்கிறார்கள். நான் சென்ற வழியில் காயங்களுடன் கிடக்கும் நம் ஒற்றன்தான் கூறினான்"

"சோழர்கள் தந்திரத்தைக் காட்டத் துவங்கி விட்டார்கள். மானாபரணர் விரட்டப்பட்ட செய்தி நம்முடன் இருக்கும் ஈழவீரர்களுக்கு எட்ட வேண்டாம். நம் வியூகம் கலையாமல் மீண்டும் நம் வீரர்களை அணிவகுத்துப் புறப்படத் தயாராக்குங்கள். அந்த சோழர் சிறுபடையை நாமே அழிக்கலாம்" படபடவென்று பொரிந்தான் சுந்தர பாண்டியன்.

உபதலைவன் திரும்ப யத்தனிக்கையில் மீண்டும் அவனை அழைத்த சுந்தர பாண்டியன் "உபதலைவரே, இந்த மலைப்பாதையோரமே இருவரை அனுப்பி மலைக் கணவாயில் இருக்கும் வீரகேரளருக்குச் செய்தியனுப்பி விடுங்கள்" என்றான்.

அடுத்த இரு நாழிகைகளில் அந்தப் படைப்பிரிவு மீண்டும் துடித்து எழுந்தது. உபதலைவன் தெரிவித்த செய்திகளால் கொதித்துக்கிடந்த சுந்தர பாண்டியனின்

திடீர் கோபத்துக்கும், ஆத்திரத்துக்கும் காரணம் தெரியாத கோவர்த்தன மார்த்தாண்டனும் மற்ற ஈழ உபதலைவர்களும் திகைத்தாலும், உடனடியாகப் புறப்படச் சித்தமானார்கள்.

கதிரவன் உதித்து ஒரு நாழிகையில் சுந்தர பாண்டியனும் அவனது படைப் பிரிவும் மீண்டும் நின்றது.

நேர் எதிரே பூரண கவசங்களுடன் தன் அத்திவாரணத்தின் மீது ஆரோகணித்து, அம்பாரியில் பெரும் புலிக்கொடி காலைக் காற்றில் படபடக்க, தோளில் மாட்டிய பெரும் போர் வில்லுடன் போருக்குச் சித்தமாக நின்றிருந்தான் சோழ இளவல் ராஜகேசரி ராஜாதிராஜ சோழ தேவன். அவன் பின்னால் அணி வகுத்திருந்த களிறுகளையும், பக்கவாட்டில் உள்வாங்கி மீண்டும் இருபுறமும் விரிந்து பெரும் இறகுகளைப் போல் அணிவகுத்திருந்த போர் ரதங்களையும், பின்னணியில் நின்ற புரவி வீரர்களையும் காலாட்படைகளையும் கண்ட சுந்தர பாண்டியனுக்குத் தான் ஸர்ப்ப வியூகமாக அணிவகுத்து வந்து கொண்டிருப்பதை அறிந்தே சோழ இளவல் கருட வியூகம் அமைத்திருக்கிறான் என்பதும், தான் நினைத்ததுபோல் சோழர் படை ஒன்றும் அத்தனை பலமற்றதல்ல என்பதும் தெளிவாகவே புரிந்தது.

திகைத்து நின்றிருந்த சுந்தர பாண்டியனையும் அவன் வீரர்களையும் இன்னும் திகைக்க வைக்க, எதிரேயிருந்த கருட வியூகத்தின் பக்கவாட்டில் நின்ற ரதங்கள் ஒன்றிலிருந்து இறங்கி, புரவியொன்றின் மீது ஆரோகணித்து நெருங்கி வந்தான் ஒரு வீரன். வந்தவன் கச்சையில் வாளோ, குறுவாளோ எதுவும் தென்படவில்லை. நிராயுத பாணியாக சுந்தர பாண்டியனை நோக்கி வந்தவன் நெடுநெடுவென அதீத உயரமாக இருந்தான். இருப்புச் சலாகை போன்று விரிந்து கிடந்த அவன் மார்பில் கவசமேதும் அணிந்திருக்கவில்லை. அருகில் நெருங்கிய

பின்னரே, அவன் நீண்ட முகத்தையும், உயரத்திலிருந்து இரையைத் தேடும் பருந்து போன்ற கூர்விழிகளையும், ஏதோ இரும்பினால் வார்க்கப்பட்டது போல் உறுதியான உடலையும் கண்டவன் 'யாரிவன்? சோழ வம்சத்துக்கே பரம எதிரிகளான சாளுக்கியரைப் போல் இருக்கிறானே?' என்ற குழப்பம் ஏற்பட்டது.

வந்தவன் நேராக சுந்தர பாண்டியனின் எதிரே வந்து நின்றான். அவனது கனத்த குரலும் உறுதியாக ஒலித்தது "நான் சாளுக்கிய விஜயாதித்த விக்கியண்ணன், கோட்டாற்றுக்கரை படைத்தலைவன். முள்ளி நாட்டுப் பாண்டிய பரமேஸ்வரன் வம்சத்து உதயகிரி சுந்தர பாண்டியா, நான் கூறப்போவது சோழ பாண்டியரென்று கூடல்மா நகரின் கொற்றவனாக முடிசூட்டித் தென் திசைக் காவலரான ராஜகேசரி ராஜாதிராஜ சோழ தேவரின் வார்த்தைகள். அன்னியரான ஈழத்தவருடன் சேர்ந்து கொற்கை வீர பாண்டியர் வம்சத்தைச் சதிசெய்து அழித்தாய், ஈழத்தவன் சேரலாதரைச் சிறையெடுக்க உடந்தையாயிருந்தாய். பேராசை கொண்டு அவர் களுடன் சேர்ந்து மதுரையைக் கைப்பற்றவும் துணிந்து வந்திருக்கிறாய் போரைத் தவிர்த்து நீ சரணடைந்தால் உன் முள்ளிநாட்டு வீரமங்கலமும், உதயகிரியும் பிழைத்திருக்கும். இல்லையேல் நீயும் அழிக்கப்படுவாய். நீயும் சேரர் சிற்றரசுகளும் இடமளித்திருக்கும் விழிஞமும் காந்தளூர்ச்சாலையும் அழிக்கப்படும். உன் பதிலைச் சொல் இப்போதே"

பதிலுக்கு இரைந்தான் சுந்தர பாண்டியன் "அடேய், போர்த்தூது வந்திருக்கும் நீயே தமிழ் மண்ணுக்கு அன்னியன்தான். அன்னியனுக்குச் சோழர் படையில் இடமளித்திருப்பது உன் சோழபாண்டியனுக்குக் குற்ற மில்லையா? ஈழத்தவரும் சேரரும் பாண்டியருக்கு அன்னியரல்ல, உறவினர்தான். கூடல்மாநகர் பாண்டியரின் முதல் தலைநகர். அதைப் பிடித்துக் கொண்ட உன் சோழஇளவலுக்குப் பேராசையில்லையா?

யார் யாரை அடக்குகிறார்கள் என்பதைப் போர் முடிவு செய்யட்டும்”

விக்கியண்ணன் முகத்தில் வறண்ட முறுவல் நெளிந்தது “சரி, அப்படியானால் இன்னும் ஒரு நாழிகையில் போருக்குத் தயாராக இரு. உன் முள்ளி நாட்டு உதயகிரியையும், உன்னுடன் வந்திருக்கும் சேரர் சிற்றரசுகளையும் இழக்கத் தயாராகிவிடு. இந்தப் போர் இங்கு மட்டுமல்ல, சேரநாட்டிலும் தொடரும்” என்றவன் நிதானமாகத் திரும்பித் தன் புரவியில் ஏறி, சோழர் போர் ரதங்களை நோக்கி விரைந்தான்.

சரியாக ஒரு நாழிகையில் போர்த்தாரைகள் பலமாக ஒலித்தன. இரு பக்கங்களிலும் ஜெயகோஷங்கள் பலமாக எழுந்தன. ஒன்றையொன்று வேகத்துடன் நெருங்கிய படைப்பிரிவுகள் பலத்த கூச்சலுடன் மோதின. சோழ இளவலின் அத்திவாரணம் பலமாகப் பிளிறலொன்றை வெளியிட்டுத் துதிக்கையை உயர்த்தியபடி நிலம் அதிரத் தடதடவென சுந்தர பாண்டியனிருந்த பகுதியை நோக்கி வந்தது. காற்றைக் கிழித்து அம்புகளும் ஈட்டிகளும் பறந்து ஜிவ்வென்று இறங்கின. வாட்கள் மோதும் ஒலி பலமாக எழுந்தது.

சோழர் போர் ரதங்கள் கருடவியூகத்தின் இறக்கைப் பகுதியிலிருந்து சுழன்று சுழன்று பெரும் ஈட்டிகளைக் கோவர்த்தன மார்த்தாண்டனிருந்த பகுதியில் எறிந்தன. சேரர் சிற்றரசுகளின் படைகளோடு வந்திருந்த கொல்லத்து மன்னன் கோவர்த்தன மார்த்தாண்டனின் வீரர்களிடையே புகுந்த போர் ரதங்கள் தரைக்குச் சற்று உயரத்தில் வீசிய ஈட்டிகள் புரவி வீரர்களை மளமள வெனச் சரித்தபடி முன்னேறியதைக் கண்ட மார்த் தாண்டன் தன் புரவியைச் செலுத்திக் கொண்டே விஜயாதித்த விக்கியண்ணனை நெருங்கினான். ரதங்களை முன்னேற ஆணையிட்ட விக்கியண்ணன் தன் பட்டையான நீண்ட வாளுடன் ரதத்திலிருந்து குதித்து

இறங்கி, மார்த்தாண்டனின் புரவியை நெருங்கினான். விக்கியண்ணன் நெருங்குமுன் மார்த்தாண்டனின் இடதுகரம் புரவியின் பக்கவாட்டிலிருந்த ஈட்டி யொன்றை எடுத்துப் பலமாக விக்கியண்ணனை நோக்கி வீசியது.

விக்கியண்ணனின் தேகம் சட்டென்று இடப்புறம் விலகிச் சரிந்து அந்த ஈட்டியின் பாதையிலிருந்து லேசாக விலகியது. அதே நேரத்தில் வலக்கரத்திலிருந்த அந்தப் பட்டையான வாள் உயர்ந்து வலப்புறம் பறந்த ஈட்டியை இரண்டாக வெட்டி எறிந்தது. முகத்தில் லேசான முறுவலொன்றும் நெளிய நெருங்கிய விக்கியண்ணனின் வாள் சுழன்ற விதத்தில் மார்த்தாண்டன் புரவியிலிருந்து குதித்து இறங்கிப் போராட வேண்டியிருந்தது. துவக்கத்தில் சாளுக்கியர் வாள் வீச்சின் முறைகளை யொட்டித் தலைக்கு மேல் உயர்ந்து வேகத்துடன் பக்க வாட்டில் தாழ்ந்த விக்கியண்ணனின் வாள் போகப்போக அதிவேகத்துடன் சுழன்று சோழர் முறைக்கு மாறியது. மார்த்தாண்டனின் வாள் எந்தத்திசையிலிருந்து வந்தாலும் தடுத்து முகத்துக்கருகே அடிக்கடி வந்து விழிகளைத் துருவிவிடுவதுபோல் சுழன்ற அந்த வாளின் வேகம் கூடிவிட்டதையும், ஏதோ சம்மட்டி கொண்டு அடிப்பது போல் வேகத்துடன் இறங்கித் தன் வாளை உடைத்து விடுவதுபோல் தாக்குவதையும் கண்ட மார்த்தாண்டனின் ஆவேசம் கூடியது. இடையிலிருந்து குத்துவாளையும் எடுத்துக் கொண்ட மார்த்தாண்டன் வலக் கரத்தால் விக்கியண்ணனின் வாளைத் தடுத்து இடக்கரத்தால் அவன் மீது பாய்ச்சவும் முயன்றான். ஆனால் அதிவேகமாகச் சுழன்ற விக்கியண்ணனின் வாள் எதிரில் குத்துவாளுடன் நீண்ட இடது கரத்தில் பலமாக இறங்கியது. அதே வேகத்தில் மீண்டும் சுழன்று மேலே வந்து மார்த்தாண்டனின் வலது தோளிலும் இறங்கியது.

அப்படியே சரிந்து தன் புரவி மீதே விழுந்தான் கோவர்த்தன மார்த்தாண்டன்.

விக்கியண்ணன் திரும்பி மீண்டும் நிதானமாகத் தன் வாளை உயர்த்தியபடி எதிர்ப்பட்ட சேர வீரர்களை விலக்கியபடி ரதத்தை நோக்கி நடந்தான். கொல்லத்து மன்னன் சரிந்ததைக் கண்ட சேர வீரர்கள் ஓடிவந்து தங்கள் மன்னனைப் புரவியில் ஏற்றிப் பக்கவாட்டில் பின்வாங்கத் தொடங்கினர்.

மீண்டும் தன் ரதத்தில் ஏறிய விக்கியண்ணனின் வாள் உயர்ந்து இடமும் வலமுமாக அசைந்தது. வலப்புறத்து வியூகத்தின் இறகு தழைந்து உயரும் பருந்தின் சிறகைப் போல உள்வாங்கி, சோழர் போர்ரதங்கள் சுந்தர பாண்டியனின் படைப்பிரிவை நோக்கி நகர்ந்தன.

தூரத்தில் சேர வீரர்கள் பின்வாங்குவதையும், கோவர்த்தன மார்த்தாண்டன் சரிந்துவிட்டதையும் கவனித்த சுந்தரபாண்டியன் தன் வீரர்களைப் பெரும் ஸர்ப்பம் போல படைப்பிரிவை இடப்புறமாகச் சுற்றி வளைக்க உத்தரவிட்டு, தன் புரவியைச் சோழ இளவலை நோக்கிச் செலுத்தினான். இடப்புறத்தில் தென்திசைத் தண்டநாயகர் விழுப்பரையர் எதிரில் ஸர்ப்பத்தின் வால்பகுதி வளைந்து தாமிருந்த பகுதியை வளைக்க முயல்வதையும், ஈழத்து வீரர்களுடன் சேர்ந்து பாண்டியரின் போர் ரதங்கள் அணிவகுத்துத் தம்மை நோக்கி வருவதையும் கவனித்தார். திரும்பி சற்றுத்தள்ளி பின்னணியிலிருந்த ஆசார்யரை நோக்கிக் குரல் கொடுத்தார்.

ஆசார்யரும் எதிரில் வந்த ரதங்களை ஏற்கெனவே கவனித்துவிட்டார் என்பது அவர் இட்ட உத்தரவுகளி லிருந்து புரிந்தது.

தண்டநாயகர் இருந்த பகுதியிலிருந்த வீரர்களிடையே இடைவெளி சட்டென்று அதிகரித்து, ஊடே ஆசார்யரின் சீடர்கள் வரிசையாக வந்து மண்டியிட்டுத்

தங்கள் கரங்களிலிருந்த பெரும் விற்களைத் தரையில் நாட்டினர். அடுத்து ஆசார்யர் சுட்டிக் காட்டிய பகுதியில் மூன்றாகவும் ஐந்தாகவும் சரசரவென்று அம்புகளைப் பொழிய ஆரம்பித்தனர். சரியான உயரத்தில் குறிதவறாது பாய்ந்த அம்புகள் மளமளவென்று எதிரில் விரைந்து வந்த ரதங்களின் சாரதிகளையும், நின்றிருந்த வீரர் களையும், பொறிகளை இயக்குபவர்களையும் தாக்கிச் சரிக்கத் தொடங்கின. அம்புகள் பாய்ந்த வேகத்தையும், அவை குறிதவறாது தாக்குவதையும், முன்னால் சென்ற ரதங்கள் நிலைதடுமாறித் தாறுமாறாக ஓடத் தொடங்கி விட்டதையும் கண்டு பின்னால் வந்த ரதங்கள் இரு பிரிவாகப் பிரிந்து பக்கவாட்டில் நெருங்கத் தொடங்கின. அவை இரு பிரிவாகப் பிரிந்ததால் ஏற்பட்ட இடை வெளியைக் கவனித்த விழுப்பரையரின் புரவிப் படைப்பிரிவு சட்டென்று வேகத்துடன் பாய்ந்தது.

இரு பிரிவுகளுக்கிடையே பாய்ந்து விட்ட விழுப் பரையரின் படைப் பிரிவு ஸர்ப்பத்தின் வால்பகுதியி லிருந்த பாண்டிய வீரர்களைத் தாக்கத் தொடங்கிய அதே கணத்தில் ஆசார்யர் தமது சீடர்களில் ஒரு பிரிவை வலப்புறம் ரதங்களுக்குப் பின்னாலிருந்த ஈழ வீரர்களை நோக்கிச் செல்ல உத்தரவிட்டார்.

ஆசார்யரின் சீடர்கள் பொழிந்த அம்புமழையையும் அதனால் தன் போர் ரதங்கள் பயனற்று விட்டதையும், ஸர்ப்பத்தின் வால்பகுதி இரு துண்டுகளாகப் பிரிக்கப் பட்டு அழிக்கப்படுவதையும் தூரத்திலிருந்து கவனித்த படியே போரிட்ட சுந்தர பாண்டியனின் சித்தத்தில் உஷ்ணம் ஏறியது.

நேர் எதிரே அத்திவாரணத்தின்மீது அமர்ந்து ஈட்டி களைப் பறக்கவிட்டபடியே வீரர்களுக்கு நிலைமைக்கேற்ப உத்தரவிட்டுக் கொண்டிருந்த சோழ இளவலை நோக்கியவன், தன் பின்னால் நின்ற உபதலைவனொரு வனைப் புரவி வீரர்களுடன் தன்னைப் பின்

தொடருமாறு கூறிவிட்டு, சோழ இளவலை நோக்கி முன்னேறினான். சோழ இளவலும் சுந்தர பாண்டியன் நெருங்கிவிட்டதைக் கவனித்திருக்க வேண்டும். அத்திவாரணம் அந்தப் பகுதியே அதிரும்படி பிளிற லொன்றை வெளியிட்டது. பின் திரும்பி நேர் எதிரே தடதடவென சுந்தர பாண்டியனை நோக்கி ஓடிவரத் தொடங்கியது. அத்திவாரணத்தின் மீதிருந்த சோழ இளவலின் கரத்தில் பெரும் கோதண்டம் ஒன்று எழுந்தது. அடுத்து அதிலிருந்து அம்புகள் பறக்கத் தொடங்கின. அம்புகளை எடுப்பதும் தொடுப்பதுமான மத்திம காலத்தின் அளவு போகப்போகக் குறைந்து வேகம் அதிகரித்து, மூன்றாகவும் ஐந்தாகவும் ஏககாலத்தில் அம்புகள் பறந்து சுந்தர பாண்டியனிருந்த பகுதியை நோக்கிப் பாய்ந்து சரமாரி பொழியத் தொடங்கியது.

*பாணாந்தகாரம் என்னும் சொல்லை அதுவரை புராணங்களில் கேள்விப்பட்டதோடு அறிந்திருந்த சுந்தர பாண்டியன் அன்று அதன் பொருளை நேரிலேயே கண்டான். ஏதோ மழைச்சாரலினூடே பார்ப்பது போல் எதிரிலிருந்த அத்திவாரணமும் அதன்மீது கோதண்டத்தைத் தாங்கிய சோழஇளவலும் தெரிவதையும், தன் உபதலைவர்களும், வீரர்களும் தரையில் உருள்வதையும் கண்ட சுந்தர பாண்டியன் திகைத்தான். அது போதாதென்று முன்னால் பாய்ந்து வந்த சோழர் புரவிப்படை சுந்தர பாண்டியனிருந்த பகுதியை ஊடுருவிப் பலமாகத் தாக்கத் தொடங்கியது. இடப்புறம் அந்த சாளுக்கியனால் சேரர் சிற்றரசுகளின் வீரர்கள் அழிக்கப்படுவதையும், இரண்டாக உடைக்கப் பட்ட ஸர்ப்ப வியூகத்தின் வால்பகுதியிலிருந்த ஈழ வீரர்கள் முற்றிலும் அழிந்துவிட்டதையும், எஞ்சிய பாண்டிய வீரர்களின் ஆயுதங்கள் ஆசார்யரின் சீடர்

**★ பாணாந்தகாரம் – பாரத யுத்தத்தின் பதினோராவது நாள் அர்ச்சுனனுக்கும் துரோணருக்கும் ஏற்பட்ட போரில் பாணங்களால் வானம் மூடப்பட்டது – வியாச பாரதம்**

களால் பயனற்றுப் போய் விட்டதையும் கவனித்த சுந்தர பாண்டியனின் சித்தத்தில் மெல்ல அச்சம் படரத் தொடங்கியது. சோழ இளவலை நோக்கிப் பெரும் ஈட்டியொன்றை எறிய முயன்றவன் வலது தோளில் பாய்ந்தது ஓர் அம்பு. அடுத்து அவன் கவசத்தின் இணைப்பை உடைத்து, விலாப்பகுதியிலும் பாய்ந்தது மற்றோர் அம்பு. அவன் தலையிலிருந்த கற்கள் பதிக்கப் பட்ட மகுடமும் தரையில் உருண்டது. தன் கழுத்தைக் குறிவைத்து அம்புகள் பாய்வதைக் கவனித்த சுந்தர பாண்டியன், பாண்டிய வீரர்களைப் பின்வாங்கிச் செல்ல உத்தரவிட்டுப் புரவியைத் திருப்பினான்.

அவன் பின்வாங்கத் தொடங்கியதைக் கவனித்த சோழ இளவலின் குரல் பலமாக ஒலித்து, சோழர் போர்க்களிறுகள் பின்பகுதியிலிருந்து முன்னணிக்கு வந்து இருபிரிவாகப் பிரிந்து, சுந்தரபாண்டியன் பின்வாங்கிய தால் ஏற்பட்ட இடைவெளிகளில் புகுந்தன. சோழர் புரவிப்படையும், போர்ரதங்களும் மறுபுறம் ஸர்ப்ப வியூகத்தைப் பல துண்டுகளாக உடைத்துக் கொண்டிருப் பதையும், தன் வீரர்கள் கூட்டம்கூட்டமாகப் பிரிக்கப் பட்டு அழிக்கப்படுவதையும் கண்டான் சுந்தர பாண்டியன். ஈழத்து வீரர்கள் இருந்த பகுதியில் விழுப் பரையரும் ஆசார்யரும் தொடுத்த தாக்குதல்களில் அவர்கள் ஏற்கெனவே பின்வாங்கி ஓடத்தொடங்கி விட்டதையும், இடப்புறம் அந்த சாளுக்கியன் சேரர் பிரிவுகளை அழித்துக் கொண்டிருப்பதையும் கண்டவன் போரிட்டபடியே தான் வந்தவழியிலேயே தெற்கே விரைய ஆரம்பித்தான்.

மகேந்திரகிரியின் அடிவாரத்திலும் அகத்தியர் ஆலயத்திலும் ஆயுதங்கள் பலவற்றைக் குவித்து வைத் திருப்பது நினைவில் எட்டவே, சுந்தர பாண்டியனும் அவன் வீரர்களும் நேர் தெற்கே வேகமாகச் செல்லத் தொடங்கினர்.

# 37. பிரிவுபசாரம்

பருவக்காற்றினால் உந்தப்பட்டு, மலைப்பகுதிகளை நோக்கி விரைந்து கொண்டிருந்த கறுத்த மேகக் கூட்டங்களா, அல்லது மகேந்திரகிரியை அடைந்துவிடும் உத்தேசத்தில் எஞ்சிய தன் வீரர்களுடன் புரவிகளை விரட்டிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியனா, யார் முதலில் தென்கோடிப்பகுதியை அடைவது என்ற போட்டி நடந்து கொண்டிருந்தது. தோளிலும், விலாப் பகுதியிலும், புரவி மீதும் பாய்ந்த அம்புகளைப் பிடுங்கி எறிந்து விட்டதால் குருதி உடலெங்கும் வழிந்திருக்க, களைத்திருந்த புரவியை விரட்டிக் கொண்டிருந்த சுந்தர பாண்டியனின் சித்தத்தில் மானாபரணன் என்ன வானான், அவன் ஏன் திட்டமிட்டபடி வந்து சேர வில்லையென்ற கேள்வி எழுந்தது. சரியான வியூகம் அமைத்து, பலவீனமான பகுதிகளில் தாக்குதல் நடத்தி, படைப்பிரிவுகளை ஈழத்தவர், சேர நாட்டவர் என்று தனித்தனியே உடைத்துத் திறமையாலும் வேகத்தாலும் தனது பெரும்படையை நிர்மூலமாக்கிவிட்ட சோழ இளவலின் போர் முறையைக் குறித்து சற்றுப் பொறாமையும் எழுந்தது அவன் உள்ளத்தில். யார் அந்த இளைஞர்கள், பார்வைக்குச் சிறுவர்களைப் போல் தோற்றமளிக்கும் அவர்கள் கரத்தில் அந்த விற்கள் எப்படி ஏக காலத்தில் அத்தனை அம்புகளைப் பொழிகின்றன என்ற சந்தேகமும் எழுந்தது அவனுக்கு.

பின்தொடர்ந்த சோழர் புரவிப்படையையும், போர்ரதங்களையும் ஒருமுறை திரும்பிக் கவனித்தவன், ஆசார்யரும் அந்த இளைஞர்களும் தனியே பிரிந்து மலைப் பகுதியை நோக்கி விரைவதையும், சோழ இளவலும் தண்டநாயகரும் வீரர்களுடன் தன்னைத் தொடர்வதையும் கண்டான். திரும்பி நின்று எதிர்த்துப் போராட முயன்ற சுந்தர பாண்டியன் எஞ்சியிருந்த தன்

வீரர்களில் பாதிப்பகுதியை இழந்ததால், பின் வாங்கி மகேந்திரகிரியை நோக்கி மீண்டும் விரைந்தான்.

மகேந்திரகிரியின் அடிவாரத்திலும், அகத்தியர் ஆலயத்திலும் வைக்கப்பட்டிருந்த ஆயுதங்களைக் கொண்டு மீண்டும் போராட எண்ணியிருந்தவனுக்கு, மலையடிவாரத்தை நெருங்கியதும் அதிர்ச்சி காத் திருந்தது. அகத்தியர் ஆலயத்திலும், அடிவாரத்திலும் ஆயுதங்களையும் எடுத்துவர அதிவிரைவாகச் சென்ற வீரர்கள் அதே வேகத்தில் திரும்பி வந்தனர். வந்தவர் களின் முகங்கள் பேயறைந்தது போலிருந்தது. சுந்தர பாண்டியன் இரைந்தான் "என்ன ஆயிற்று உங்களுக்கு? ஏன் இப்படி விழிக்கிறீர்கள்? எங்கே ஆயுதங்கள்?"

மென்று விழுங்கிய அந்த வீரர்களில் ஒருவன் பதிலளித்தான் "ஆயுதங்களைக் காணவில்லை பிரபு. பாறைக் குகைகள் சுத்தமாகத் துடைக்கப் பட்டிருக் கின்றன. அகத்தியர் ஆலயத்திலும் ஆயுதங்கள் காணப்பட வில்லை."

"என்ன உளறுகிறாய்? ஆயுதங்களைக் காண வில்லையா? அங்கு காவலுக்கு இருந்தவன் என்ன ஆனான்?"

"தெரியவில்லை பிரபு. நம் காவலர்கள் எவரையும் காணவில்லை. யாரோ நம் ஆயுதங்கள் அனைத்தையும் எடுத்துச் சென்றிருக்க வேண்டும் பிரபு. தாடகை மலையிலும் நாம் ஆயுதங்கள் வைத்திருந்தோம். ஒரு வேளை அங்கும்..." இழுத்த அந்த வீரனை எரித்து விடுபவன் போல் பார்த்த சுந்தர பாண்டியன் திரும்பி தூரத்தே சோழர் படைகள் கிளப்பிய புழுதி மண்டலம் நெருங்கிக் கொண்டிருப்பதைக் கவனித்தான்.

தயங்கி நிற்க இது சமயமல்ல என்பது புரிந்ததால் "சரி, வாருங்கள். சோழர் படை நெருங்குகிறது" என்றபடி, தன் புரவியைத் திருப்பினான்.

தோல்வியால் ஏற்கெனவே நிலைகுலைந்து போயிருந்த சுந்தர பாண்டியனுக்கு ஆயுதங்கள் காணாமற் போயிருந்தது மேலும் அதிர்ச்சியை அளித்ததால், பின் தொடர்ந்து வரும் சோழர் படையிடமிருந்து இனி உயிர் பிழைத்தாலே போதும் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டிருந் தான். எப்படி அந்த ஆயுதங்கள் காணாமற்போயிருக்கக் கூடும், யார் எடுத்திருப்பார்கள் என்ற குழப்பம் வேறு அவனை அலைக்கழித்தது. தாடகை மலையிலிருந்து திரும்பி மலைத்தொடரை ஒட்டிச் செல்லும் பாதையின் இறுதியில், மேற்குமலையின் முனையை அடையும்போது அவன் குழப்பத்திற்கான விடை புலப்பட்டது.

அகத்தியர் ஆலயத்திலும், மகேந்திரகிரி தாடகை மலைக்குகைகளிலும் கைப்பற்றிய ஆயுதங்களுடன் ஆசார்யரின் சீடன் நம்பி மலைத்தொடர் முடியும் இடத்தில் மேற்கு நோக்கித் திரும்பும் வளைவில் சுந்தர பாண்டியனுக்காகக் காத்திருந்தான்.

வேகத்துடன் மலைப்பாதையில் வந்துகொண்டிருந்த சுந்தர பாண்டியனின் புரவி திடீரெனக் கயிறுகள் இழுக்கப்பட்டதால் பெரும் கனைப்புடன் நிற்க முயன்றது. பின்தொடர்ந்த எஞ்சிய வீரர்களும் நின்றனர். அவர்களுக்கு எதிரே பாதையை மறித்துப் புரவிகள் பல வரிசைகளில் நின்றிருந்தன. வெண்ணிற உடைகளை அணிந்து, பெரும் விற்களையும் ஈட்டிகளையும், வாட்களையும் தாங்கிய இளைஞர்கள் பலர் புரவிகளில் அமர்ந்து சுந்தர பாண்டியனின் வீரர்களை உற்று நோக்கிக் கொண்டிருந்தனர்.

ஒரே கணம் சிந்தித்த சுந்தர பாண்டியன் போராடு வதைத் தவிர வேறு வழியேதுமில்லை என்பதைப் புரிந்து கொண்டதால், தன் வாளை உயர்த்திக் கொண்டு முன்னால் பாய்ந்தான். அவன் வீரர்களும் வாட்களை உருவிக் கொண்டு பெரும் கூச்சலுடன் தொடர்ந்தனர்.

எதிரிலிருப்பவர்கள் ஆசார்யரின் சீடர்கள் என்பதைப் புரிந்து கொண்ட சுந்தர பாண்டியன் எதிர்பார்த்தபடி நம்பியும் மற்றவர்களும் அம்புகளைப் பொழியவில்லை.

மாறாக, அவர்கள் கரங்களிலிருந்து பெரும் ஈட்டிகள் ஏக காலத்தில் வானை நோக்கி உயர்ந்து ஜிவ்வென்று சுந்தரபாண்டியனின் வீரர்களை நோக்கி இறங்கின. அவர்கள் கரங்களிலிருந்த வாட்களைக் கொண்டு போராட முயலவில்லை. அவற்றைப் பாண்டிய வீரர்களை நோக்கி லாகவமாகச் சுழற்றி எறிந்தார்கள். கழுத்திலும் மார்பிலும் தோளிலும் பாய்ந்த வாட்களுடனும் ஈட்டிகளுடனும் பாண்டிய வீரர்கள் சரிந்து விழ, சுந்தர பாண்டியனின் பின்னால் ஒரு உபதலைவனும் முப்பதுக்கும் குறைவான வீரர்கள் மட்டுமே காயங்களுடன் நின்றார்கள். எதிர்பாராத அந்தத் தாக்குதலால் ஆத்திரம் வெடிக்க வாளை உயர்த்திய சுந்தரபாண்டியன் எதிரில் நிற்கும் இளைஞர்களைத் தாக்க உத்தரவிட்டுத் தன் புரவியை முன்னால் செலுத்த முயன்றான். ஆனால் அவர்களின் வேகம் சட்டென்று நிதானப்பட்டது. ஓரிரு அடிகள் முன்னால் சென்ற புரவிகளும் நின்றன.

எதிர் வரிசையிலிருந்து விலகி நம்பியின் புரவி நிதானமாக சுந்தர பாண்டியனை நோக்கி சமத்கார நடையில் வந்தது. அவனது கோதண்டம் புரவியின் மீது குறுக்கே கிடக்க வலக்கரத்தில் கொத்தாகப் பிடித்த அம்புகளுடன் சுந்தரபாண்டியனை நெருங்கிய நம்பி நின்றான்.

சுந்தரபாண்டியனுக்குச் சற்று வியப்பை அளிக்க அவனை ஒருமுறை வணங்கி நிமிர்ந்த நம்பியின் குரல் தெளிவாக ஒலித்தது "பாண்டிய மன்னவா, இப்போது நாங்கள் எறிந்தவை மகேந்திரகிரியிலும் அகத்தியர் ஆலயத்திலும் வைத்திருந்த ஆயுதங்கள்தாம். உமது வீரர்கள் அவற்றை ஏற்கத் தெரியாமல் விழுந்திருக்

கிறார்கள். தாங்கள் இப்படியே தெற்கே முள்ளிநாட்டுக் கானகத்தைக் கடந்து, முல்லையூரிலும் வீரதவமங்கலத்தி லும் உள்ள உமது உறவினரை அடைந்தால் உயிர் தப்பலாம். மேற்கே திரும்பி சேரநாட்டை அடையும் எண்ணமிருந்தால் என்னையும் என் தோழர்களையும் கடந்துதான் செல்ல வேண்டும். என்ன செய்யப் போகிறீர்கள்? சொல்லுங்கள்”

சுந்தரபாண்டியனின் விழிகள் திரும்பி, பின்னால் விழுந்திருந்த தன் வீரர்களை நோக்கிவிட்டு நம்பியை வெறித்தன. அவன் வார்த்தைகள் மேலுக்குப் பணிவுடன் வந்தாலும், அதில் மிரட்டும் தொனியே ஒலிப்பதையும், தூரத்தில் நின்ற இளைஞர்கள் கரங்களில் தயாராக விற்களை ஏந்தி நிற்பதையும் கவனித்தான். இந்தச் சிறுவர்கள் தன்னை மிரட்டுவதா என்ற எண்ணம் சித்தத்தில் அனலை வாரிக் கொட்டியதால் நம்பியை நோக்கி இரைந்தான் “அடேய் சிறுவனே, உன்னையும் சேர்த்து அங்கே நிற்பது இருபது பேருக்கு மேலிராது. உன்னை அழித்துவிட்டே நான் சேர நாட்டிலிருக்கும் என் ஈழத்து நண்பர்களிடம் செல்கிறேன்”

நம்பி இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. சுந்தர பாண்டியனை ஏறெடுத்த விழிகளில் பரிதாபம் தெரிந்தது. “பாண்டிய மன்னா, நீ போரில் தோற்றபின் சோழ இளவலோ, தண்டநாயகர் விழுப்பரையரோ, உன்னைத் தொடர்ந்துவரவில்லை.

அவர்கள் பரலிமாநகரிலும் காந்தளூர்ச்சாலையிலும் இருக்கும் ஈழத்தவரை அழிக்கச் செல்கிறார்கள். என்னையும் என் தோழர்களையும் அழிப்பதும் அத்தனை எளிதல்ல. எங்களுடன் போரிட முனைந்தால் தொடர்ந்துவரும் சோழர் படைகள் உமது முள்ளி நாட்டு வீரதவமங்கலத்தையும் முல்லையூரையும் அழித்துவிட்டே சேரநாட்டுக்குச் செல்லும். சம்மதம் எனில், இன்னும் அரை நாழிகையில் எங்களைத் தாக்கத் தொடங்கலாம்”

என்ற நம்பி புரவியைத் திருப்பி, தன் தோழர்களை நோக்கிப் பாயவிட்டு இரண்டொரு கணங்களில் அவர்களுடன் சேர்ந்து தன் கோதண்டத்தையும் ஏந்தித் தயாராக நின்றான்.

சுந்தர பாண்டியனின் பின்னால் நின்றிருந்த பாண்டிய உபதலைவன் சற்று முன்னால் நகர்ந்து மெல்லிய குரலில் "மன்னவா, இந்தச் சிறுவன் கூறுவது உண்மைதான். நாம் தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் நம்மை அபாயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்தச் சிறுவர்களும் லேசுப்பட்டவர்கள் அல்ல. நாமும் களைத்திருக்கிறோம். உங்கள் காயங்களிலிருந்து குருதி வெளியேறிக் கொண்டிருக்கிறது. நாம் வீரதவமங்கலத்தை விரைவில் அடைந்துவிடுவதே உசிதம்" என்றான்.

அவன் கூறுவது உண்மையென்பது புரிந்தது சுந்தர பாண்டியனுக்கு. தனது பெரும்படையை அழித்த சோழ இளவலுக்கு வீரதவமங்கலத்திலும், முல்லையூரிலும் இருக்கும் சொற்ப வீரர்களையும் அழிப்பது ஒரு பொருட்டே அல்ல என்பதும், எதிரில் நிற்கும் கண்ணாகனாரின் சீடர்களைக் குறைவாக மதிப்பிடுவதும் தவறு என்பதும் புரிந்ததால் ஒருமுறை நம்பியையும் அவன் தோழர்களையும், துடிப்புடன் தங்களைக் குறிவைத்த கணைகளையும் வெறித்தான். பின் புரவியை முள்ளிநாட்டுக் கானகத்தை நோக்கித் திருப்பித் தன் எஞ்சிய வீரர்கள் பின்தொடர விரைந்தான்.

அவர்கள் செல்வதைச் சலனமற்ற விழிகளுடன் நோக்கியபடி நின்ற நம்பி, கோதண்டத்தை மீண்டும் தோளில் மாட்டியபடி புரவியில் அமர்ந்திருந்தான். பின்னால் நின்ற தோழனொருவன் வினவினான் "நம்பி, இவர்களைச் சுலபமாக அழித்திருக்கலாம். ஆசார்யர் ஏன் அப்படி உத்தரவிட்டார்? எதிரியை உயிருடன் தப்பிக்க விடுவது உசிதமா?"

அடுத்த இரு நாழிகைகளில் நெருங்கி வந்து நின்ற சோழர் படையின் தண்டநாயகரிடமிருந்தும் அதே கேள்வி உக்கிரத்துடன் வந்தது "நம்பி, சுந்தர பாண்டியன் உயிருடன் தப்பிவிட்டானா? ஏன் அவனைச் செல்ல விட்டாய்?"

தென்திசைத் தண்டநாயகர் விழுப்பரையரின் உக்கிரமான முகத்தையும் குரலையும் கேட்ட நம்பி, அவரை வணங்கி நிமிர்ந்தான். அவன் விழிகள் சற்றுத் தள்ளி அத்திவாரணத்தின் மீது அமர்ந்து அவனை நோக்கி முறுவலித்த சோழ இளவலின் மீது பதிந்தன. நம்பியின் முகத்தில் சற்று வருத்தமும் படர்ந்தது.

இருவரையும் நோக்கித் தலைதாழ்த்திய நம்பியின் குரல் தெளிவாக ஒலித்தது "சோழர் படைத் தண்டநாயகர் மன்னிக்க வேண்டும். ஆசார்யர் உத்தரவின்பேரில் நான் அவர்களைச் செல்லவிட்டேன்"

"என்ன? ஆசார்யர் சுந்தர பாண்டியனை உயிருடன் தப்பவிடுமாறு உத்தர விட்டாரா?" விழுப்பரையரின் விழிகள் ஒருமுறை சோழ இளவலின் மீது பதிந்து மீண்டன.

"ஆம். அப்படித்தான் உத்தரவிட்டார். நெருப்பு, பகை, கடன் மூன்றையும் முழுதுமாக அழிக்கவேண்டும் என்று சாத்திரங்கள் கூறினாலும், அப்படி அழிந்துவிட அனுமதிப்பது சரியல்ல என்றார். இல்லங்களை அழிக்கும் நெருப்பை முழுதும் அழிக்கலாம். இல்லத்தின் உள்ளே உணவைச் சமைக்க நெருப்பு தேவை. எந்தக் கடனையும் தீர்க்கலாம். பிறவிக்கடனையும், இயற்கைக் கடனையும் தீர்க்க முடியாது. பகையென்பதே இல்லையெனில் வீரத்துக்கும் ஆயுதங்களுக்கும் வேலை கிடையாது. எனவே இவற்றை அளவோடு அனுமதிப்பதே தர்மம் என்றார் ஆசார்யர்"

நம்பி கூறி முடிக்குமுன்பாக சோழ இளவலிடமிருந்து கடகடவென்று பெரும் நகைப்பொன்று உதிர்ந்தது. அந்த நகைப்பு தென்திசைத் தண்டநாயகரையும் தொற்றிக் கொண்டதால் அவர் முகத்திலும் முறுவல் நெளிந்தது.

“நம்பி..., ஆசார்யரின் உத்தரவை நிறைவேற்றியது சரிதான். ஆனால் உன் முகத்தில் வருத்தமும் தெரிகிறது” ராஜாதிராஜ சோழ தேவனின் குரலில் கேள்வி ஒலித்தது.

ஒரு கணம் தயங்கிய நம்பி “நீங்கள் அங்கு போரிட்டுக் கொண்டிருந்த வேளையில் எங்களை இந்த மேற்குமலைத் தொடரின் இறுதிக்கு அனுப்பிவிட்டார் ஆசார்யர். இங்கு எங்களை எதிர்க்க சுந்தர பாண்டியருடன் குறைவான வீரர்களே இருந்தனர். அவர்களும் போரிடாமல் முள்ளி நாட்டுக்குச் சென்றுவிட்டனர். எங்கள் கோதண்டத்துக்கு வேலையில்லாமற் போய்விட்ட வருத்தம்தான் இளவரசே, வேறொன்றுமில்லை” என்றான் குரலில் வருத்தம் தொனிக்க.

மீண்டும் கடகடவென நகைத்த சோழ இளவல் “கவலைப்பட வேண்டாம் நம்பி. இங்கு உன் பணி முடிந்துவிட்டது. இனி நீயும் உன் தோழர்களும் மலைக் கணவாயை நோக்கிச் செல்லலாம். அங்கு உன் மற்ற தோழர்களுடன் செங்கமலச்செல்வியும் உனக்காகக் காத்திருக்கிறாள். இப்போதே நீ புறப்படலாம்” என்றான்.

செல்வியின் பெயரைக் கேட்டதும் தங்கள் கோதண்டத்திற்கு வேலை வந்துவிட்டதை உணர்ந்த நம்பியின் முகத்திலும், அவன் தோழர்கள் முகங்களிலும் தோன்றிய உற்சாகத்தைக் கண்ட இளவல் மீண்டும் நகைத்தான் பலமாக.

ராஜாதிராஜசோழ தேவனிடமும் தென்திசைத் தண்ட நாயகரிடமும் விடை பெற்றுக்கொண்ட நம்பியும் அவன் தோழர்களும் அப்போதே மலைக்கணவாயை நோக்கிப் புறப்பட்டனர். அவர்களை வழியனுப்பிய சோழ

இளவலின் அத்திவாரணம் மீண்டும் அந்த மலையை ஒட்டி வளைந்து வளைந்து நீண்ட மலைப்பாதையில், குறுக்கிட்ட ஆறுகளையும், கானகப் பகுதியையும் கடந்து சேரநாட்டை நோக்கி நடந்தது.

அன்று மாலைப்பொழுதில் பரலி மாநகரை அடைவதற்கு ஒரு காத தூரமிருக்கையில் படைகளை நிறுத்திய சோழ இளவல், தண்டநாயகரை அழைத்தான்.

"விழுப்பரையரே, எதிரிலிருக்கும் பரலிமாநகரில் சேர மக்களின் மீது மேலை நாட்டு வணிகர்களின் ஆதிக்கம் பெருகிவிட்டது. எனவே நாளைக் காலையில் அவர்களை முழுதுமாக வெளியேற்றிவிடுங்கள். அங்கிருக்கும் ஈழத்துப் படையையும் முழுதும் அழித்து விடுங்கள். இன்னும் ஒரு ஜாமநேரத்தில் நான் காந்தளூர்ச்சாலையை அடைந்து விடுவேன். மலைக்கணவாயில் நாம் மீண்டும் சந்திப்போம்" என்றவன் தன் அத்திவாரணத்தின் மீது தாவியேறினான்.

இளவலின் உத்தரவு என்னவோ வெகு சாதாரண மாகத்தான் வந்தது. விழுப்பரையரும் அதைத் தலை வணங்கி ஏற்றுக் கொள்ளவும் செய்தார். ஆனால் இரவின் இரண்டாவது ஜாமத்தில் உபதலைவனுடன் மலைப் பாதையில் தமது புரவியில் அமர்ந்தபடி, பரலிமாநகரின் மாற்றத்தைக் கவனித்தவருக்கு அதைத் தாக்குவதும் கைப்பற்றுவதும் அத்தனை எளிதல்ல என்பது புரிந்தது.

# 38. விழுப்பரையர் திட்டம்

ஒருபுறம் மலைத்தொடரும், மறுபுறம் மேலைக்கடலும் அரணாக அமைந்திருந்த பரலி மாநகரை மலைப் பாதையின் உயரத்திலிருந்து கவனித்த விழுப்பரை யருக்குக் கண்களுக்கெதிரே விரிந்த காட்சி பிரமிப் பூட்டியது. பார்வைக்குச் சிறியதாகத் தெரிந்தாலும்,

வலுவாகத் தெரிந்த கோட்டைச்சுவரின் பல பகுதிகளிலும் ஏற்றப் பட்டிருந்த பந்தங்களாலும், வாயிற் கதவுகளில் செருகப் பட்டிருந்த நீண்ட தந்தங்களில் எரிந்த விளக்குகளாலும், உட்புறம் ஆலயப் பிராகாரங் களைப் போல் சதுரம் சதுரமாகத் தெரிந்த வீதிகளிலும், மாளிகைகளிலும் ஏற்றப்பட்டிருந்த விளக்குகளாலும் வெகு ஜாஜ்வல்யமாக ஜொலித்துக் கொண்டிருந்தது பரலிமாநகர். கோட்டைச் சுவரின் மதில்கள் மீதும், தூரத்தே வருபவர்களைக் கவனிக்கும் விதமாக அமைக்கப்பட்டிருந்த மாடங்களிலும் வீரர்கள் நட மாட்டம் அதிகமாகவே தெரிவதைக் கவனித்தார் விழுப்பரையர். சேர மன்னர்களால் புறக்கணிக்கப்பட்டு, அன்னிய வணிகர்களால் ஆளப்பட்டு வருவதாகக் கேள்விப்பட்டிருந்த அந்த நகரில் வெகு சமீபத்தில் ஏதோ பெரும் மாற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது புரிந்தது அவருக்கு. வேணாட்டு மன்னர்களின் இலச்சினையாக இருபுறங்களில் நீண்ட தந்தங்களை உடைய யானைகளுக்கிடையே வெண்சங்கு கோட்டையின் பெரும் கதவுகளில் பொறிக்கப்பட்டிருந் தாலும், வாயிலில் கடற்காற்றில் படபடத்த கொடியில் மாற்றம் தெரிந்தது. கோட்டையில் ஏற்றப்பட்டிருந்த அந்தக் கொடியில் பந்தங்களின் ஒளியில் யாளியின் உருவம் தெரிவதைக் கவனித்தவருக்கு பரலிமாநகரை விழிஞத்திலிருந்த ஈழத்துக் கலங்களின் தலைவன் வசப்படுத்தியிருக்க வேண்டும் என்பது புரிந்தது. நகருக்கு நேர் மேற்கே கடலில் தெரிந்த இரு கலங்களின் விளக்கு களும், அவற்றின் அமைப்பும் அவை ஈழத்துக் கலங்கள் என்பதைத் தெளிவாக்கியதோடு பரலிமாநகரின் மாற்றத்துக்கான காரணத்தையும் புலப்படுத்தின.

சுந்தர பாண்டியனுடன் சென்ற கொல்லத்து மன்னன் கோவர்த்தன மார்த்தாண்டனுடன் சேரவீரர்கள் அகன்ற பிறகு, விழிஞத்திலிருந்த ஈழத்துக் கலங்களின் தலைவன் பரலிமாநகரைக் கைப்பற்றியிருக்க வேண்டும் என்பதும்,

கோட்டை தற்போது ஈழத்தவர் வசம்தானிருக்கிறது என்பதும் புரிந்தது அவருக்கு. கோட்டை வாயிலின் இரு புறங்களிலும் தெரிந்த பெரும் மாடங்கள் அவசரமாகச் செப்பனிடப்பட்டிருப்பதும், அவற்றிலிருந்து வெளியே தலைகாட்டிய அம்பு வீசும் யந்திரங்களின் முகப்பையும் கவனித்தவர் கோட்டை வாயிலை நேரடியாக அணுகு வது எத்தனை அபாயம் என்பதைப் புரிந்து கொண்டார். பின்புறம் நின்றிருந்த சோழர் உபதலைவனை அழைத் தவர் "உபதலைவரே, கோட்டையைக் கவனித்தீரா?" என்றார்.

"கவனித்தேன் பிரபு, போர்க்கலங்களிலிருந்த யந்திரப் பொறிகளைக் கொண்டு வந்து கோட்டைச்சுவரில் பொருத்தியிருக்கிறார்கள். அவற்றை இயக்கும் வீரர்கள் நிற்க, பக்கவாட்டில் அதிகமாகவே இடைவெளி கொடுத்திருக்கிறார்கள்"

"வேறென்ன கவனித்தீர்?"

"கோட்டைச்சுவர் முழுதுமாகச் செப்பனிடப்பட வில்லை. சுவரின் கீழே பாறைகள் சிதறிக்கிடக்கின்றன. கோட்டைச்சுவரின் மீது உலவும் வீரர்களின் எண்ணிக்கையை வைத்துப் பார்க்கும்போது உள்ளே ஆயிரம் வீரர்களுக்குச் சற்று அதிகமாக இருக்கலாம் என்பது புரிகிறது. கோட்டையின் வலதுபுறத்துக் கதவின் நிழல் சற்று உள்ளடங்கியிருக்கிறது. சுவரோடு இணைக்கும் பகுதி பலவீனமாகத் தெரிகிறது. யந்திரப் பொறிகளை இயக்குபவர்களின் கவனத்தை சற்றுக் கவர்ந்தால் கதவுகளை எளிதாகத் தகர்த்துவிடலாம் படைத்தலைவரே"

விழுப்பரையரின் முகத்தில் திருப்தி தெரிந்தது. "சரி. வேறென்ன கவனித்தீர்?"

"கோட்டைக்கு கிழக்கிலும் மேற்கிலுமாக இரு வாயில்களே இருக்கின்றன"

உபதலைவனுக்குத் தன் திட்டம் தெளிவாகவே புரிகிறது என்பதைத் தெரிந்து கொண்ட விழுப்பரையர் அதற்குமேல் ஏதும் கேட்கவில்லை.

"உபதலைவரே, கருக்கல் முடியும் நேரத்தில் நீர் இந்தப் பிரதான வாயிலைத் தாக்கத் தொடங்கலாம்"

"பாக்கியம் தலைவரே"

"அதற்கு முன் ஈழத்துக் கலங்கள் தீப்பிடித்து எரியும்"

"ஆகா"

"நான் தெற்கு வாயிலின் வழியே உள்ளே நுழைந்து விடுவேன்"

"மகிழ்ச்சி தலைவரே"

அப்போதே திரும்பிய விழுப்பரையர் வீரர்களை இரு பிரிவாகப் பிரித்து, உப தலைவனை மலைப்பாதைக்கு அனுப்பிவிட்டுத் தாம் கோட்டையைச் சுற்றிக்கொண்டு மேற்கே கடற்கரையை நோக்கிச் சென்றார். கடற்கரையில் பரதவர் இல்லங்களை நோக்கித் தம் வீரர் இருவரை அனுப்பியவர் அவர்களுடன் வந்த பரதவர்களிடம் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

மேலைக்கடலின் காற்று எப்போதும் போல் ஆக்ரோஷத்துடன் வீசிக்கொண்டிருக்க, கருக்கல் தொடங்குமுன்பாக மங்கிய நிலவொளியில் வீரர் களுடன் பரதவரின் படகுகள் ஈழத்துப் போர்க் கலங்களை நோக்கிச்சென்றன.

**பா**தித் தேய்ந்து போயிருந்த நிலவு அச்சத்தில் இன்னும் வெளுத்துக் கிடந்ததால் அதைப் பரிகசித்துச் சிரித்த விண்மீன்கள் கண்களைச் சிமிட்டி, இன்னும் பிரகாசமாக ஒளி வீசின. வழக்கமாகவே மூர்க்கமாக வீசும் மேலைக் கடலின் அலைகள் அன்று இன்னும் வேகமாக எழுந்து, கரையைத் தாக்கிக் கொண்டிருக்க, லாகவமாக துடுப்புகளைத் துழாவிய பரதவர்கள் கரையை நோக்கிய

பகுதியை விடுத்து, ஈழத்துக் கலங்களின் மறுபுறமாகத் தங்கள் படகுகளைச் செலுத்தி, கலங்களின் அடிப் பகுதியை நெருங்கி நிறுத்தினர். நங்கூரம் பாய்ச்சப்பட்ட கலங்களைத் தாக்கிய அலைகள் அதன் மேலிருந்த வீரர்களை எச்சரிக்க முயன்றுகொண்டிருக்க, படகுகளிலிருந்து கொக்கிகளுடன் கூடிய கயிற்றை வீசிய சோழ வீரர்கள் அவற்றைப் பிடித்தபடி சரசரவென்று மேலே ஏறத் தொடங்கினர். கலத்தின் மீது அரை உறக்கத்திலிருந்தபடியே ஏதோ ஒலிகள் கேட்பதை உணர்ந்து எழுந்து தளத்தின் மீதிருந்து குனிந்து பார்த்த காவலன் அதே வேகத்தில் இழுத்துத் தள்ளப்பட்டதால் பெரும் கூக்குரலுடன் கடலை நோக்கிப் பறந்தான். மற்ற ஈழ வீரர்கள் கூக்குரலைக் கேட்டு விழித்துக் கொண்டாலும் தளத்தின் மீது சொற்ப வீரர்களே இருந்ததால் சோழ வீரர்களின் அந்த எதிர்பாராத தாக்குதலைச் சமாளிக்க இயலாமல் இரு நாழிகை நேரத்தில் உயிரற்றும் காயங்களுடனும் மேல் தளத்தின்மீது உருண்டு விழுந்து கிடந்தனர்.

ஈழத்து வீரர்களை எளிதில் வீழ்த்திய சோழ வீரர்கள் கலங்களின் அடித் தளத்திற்கு மளமளவென்று இறங்கி, துடுப்புகள் துழாவும் பகுதியில் அச்சத்துடன் விழித்த பல தேசத்து அடிமைகளைத் தப்பிச் செல்லும்படி கூறிவிட்டுப் பக்கச் சுவர்களில் எரிந்த பந்தங்களை எடுத்து வீசி தீப்பிடிக்கச் செய்துவிட்டு மேல் தளத்துக்கு வந்து மறுபுறத்தில் படகுகள் காத்திருந்த பகுதியில் கடலை நோக்கிப் பாய்ந்தனர். கலங்களிலிருந்த சிறுபடகுகளில் அடிமைகள் தப்பிச்செல்ல அவகாசம் அளித்த நெருப்பு அடுத்த ஓரிரு நாழிகைகளில் உக்கிரமாக மேல்நோக்கி எழுந்து கலத்தின் பல பகுதிகளில் பரவியது. ஏதோ கடலில் பெரும் தீபங்கள் ஏற்றி வைத்ததைப் போல் எரிந்த கலங்களிலிருந்து மரங்கள் வெடித்துச் சிதறி, புகையும் சிறு துகள்களும் கரையை நோக்கிப் பறந்தன.

கோட்டையிலிருந்த ஈழத்து வீரர்கள் கடலில் நின்றிருந்த தங்கள் கலங்கள் தீப்பிடித்து எரிவதைக் கவனித்து எச்சரிக்கைக் குரல் எழுப்பவே, அவசர அவசரமாகக் கோட்டையின் மற்ற பகுதிகளிலிருந்து மேற்கு வாசலுக்கு விரைந்த வீரர்கள் கடற்கரைக்கு விரைய தெற்கு வாசலைத் திறந்து வெளியேறி ஓடி வந்தனர். வாயிற் கதவுகள் திறக்கப்பட்டதும் வெளியே வந்தவர்கள் மணற்பரப்பில் கால்வைத்ததும் திகைத்து நின்றனர். கோட்டைச் சுவரை ஒட்டி இருபுறமும் அணி வகுத்து நின்றிருந்த சோழ வீரர்களையும், முன்னால் தமது பெரும் புரவியில் கரத்தில் பெரும் வாளுடன் நின்றிருந்த விழுப்பரையரையும் கண்டவர்கள் பெரும் கூச்சல்களுடன் முன்னால் பாய்ந்தனர். விழுப்பரை யரின் வாள் உயர்ந்து அந்தக் கருக்கல் தொடங்கிய நேரத்தில் பளிச்சிட்டு அரைவட்டமாகச் சுழன்று சமிக்ஞை செய்தது.

அடுத்து விழுப்பரையரின் புரவி பெரும் வேகத்துடன் கோட்டைக் கதவுகளை நோக்கிப் பாய்ந்தது. சோழ வீரர்களின் புரவிகளும் தொடர்ந்து கதவுகளினூடே உள்ளே புகுந்தன. ஈழத்து வீரர்கள் திகைத்தாலும் மெல்ல சுதாரித்துக் கொண்டு தங்கள் வாட்களை வீசித் தடுக்க முயன்றனர். அரண்மனைக்குள்ளிருந்து அவசரமாக வெளியேறி, தென்பகுதியை அடைந்த மரக்கலத் தலைவன் கடலில் தனது கலங்கள் எரிவதையும், வீரர்கள் தாக்கப்படுவதையும் கண்டு ஒரு கணம் திகைத்தாலும், தன் வாளை உருவிக் கொண்டு ஈழ வீரர்களை அணி வகுக்கவும், எதிர்த்தாக்குதல் தொடுக்கவும் உத்தரவுகளை மளமளவென்று பிறப்பித்தான். வீரர்களும் திகைப்பி லிருந்து விடுவித்துக் கொண்டு வாட்களை உருவிக் கொண்டு போராடினர். விழுப்பரையரின் வாள் அசுர கதியில் சுழன்று, ஈழத்து வீரர்களை மளமளவென்று சரிப்பதையும், சோழ வீரர்களின் தாக்குதலின் வேகம் அபரிமிதமாக இருப்பதையும் கவனித்த மரக்கலத்

தலைவன் தன் புரவியை விழுப்பரையர் இருந்த இடத்தை நோக்கிச் செலுத்தினான். ஈழத்து மரக்கலத் தலைவனின் பட்டையான கனத்த வாள் விழுப்பரையரின் நீண்டு வளைந்த மெல்லிய வாளுடன் தீப்பொறி பறக்க உரசியது. விழுப்பரையரின் கரத்தில் அனாயாசமாகச் சுழன்ற அந்த நீண்ட வாள் தன் வாளைத் தடுத்துப் பக்கவாட்டிலும், நேராகவும், கழுத்துக்கு வெகு அருகிலும் விழிகளின் மிக அருகிலும் தோன்றி மறைவதையும், எந்தக் கணத்திலும் அது மார்பிலோ கழுத்திலோ பாய்ந்து விடலாம் என்பதையும் உணர்ந்த மரக்கலத் தலைவன் தன் வீரர்களை நோக்கிக் குரல் கொடுத்தான். அடுத்து ஈழத்து வீரர்கள் பலர் மரக்கலத்தலைவனுடன் சேர்ந்து ஏககாலத்தில் விழுப்பரையரைத் தாக்கத் தொடங்கினர்.

கடுமையான போரினால் இயற்கையாகவே சந்துஷ்டியடையும் சுபாவமுடைய விழுப்பரையரிடமிருந்து பெரும் நகைப்பொன்று உதிர்ந்தது. அடுத்து அந்த நீண்டு வளைந்த வாளின் வேகம் திடீரென்று அதிகரித்து அனாவசியச் சுழற்சிகள் ஏதுமின்றி குறுக்கிலும், பக்கவாட்டிலுமாகப் பின்வாங்கி எதிர்மறையாகச் சுழன்று சுற்றி நின்ற ஈழத்து வீரர்களின் கழுத்திலும், விலாப்பகுதியிலும் புகுந்து புறப்பட்டது. இடப்புறத்தில் மிக அருகில் நெருங்கியவனின் கழுத்தில் ரத்தக்கோடு வரையப்பட்டுத் தலை திடீரெனச் சரிந்தது. நேர் எதிரில் நின்ற இருவீரர்களின் கரங்கள் மணிக் கட்டிலும், தோளிலுமாக வெட்டப்பட்டு செயலிழந்தன. வலப்புறமிருந்த மரக்கலத் தலைவனின் விலாப்பகுதியில் போர்க் கவசம் உடைக்கப்பட்டு, வாளின் முனை உள்ளே புகுந்து வெளிவந்தது. அருகில் நின்ற மற்றொரு வீரனின் விழிகளில் ஒன்று துருவப் பட்டதால் அவன் பயங்கரமாக அலறினான்.

அவன் அலறலைத்தொடர்ந்து கோட்டையின் கிழக்கு வாயிலிலிருந்து பெரும் கூச்சல் எழுந்தது. கோட்டைக்

கதவுகளை அடுத்திருந்த பெரும் மாடங்களில் யந்திரப் பொறிகளுடன் நின்றிருந்த வீரர்கள் மேற்குவாயிலில் நடந்த சண்டையைக் கண்டு இறங்கி விரைந்து விட்ட தால் சுவரின் அருகில் விழுந்து கிடந்த பாறைகளின் மீது தாவியேறிய சோழ உபதலைவனின் வீரர்கள் கேட்பாரற்றுக் கிடந்த பொறிகளைக் கயிறுகள் கொண்டு வீசி இழுத்துக் கீழே தள்ளினர்.

புரவிகளின் மீது நின்றபடி கோட்டைக் கதவுகளில் பொருத்தப்பட்டிருந்த பெரும் தந்தங்களின் மீது தாவிய சோழ வீரர்கள் வலப்புறக்கதவைக் கோட்டைச் சுவரில் இணைத்த பகுதிகளில் வாட்களைச் செலுத்தி சட்டங் களைப் பெயர்த்தனர். கானகப் பகுதியிலிருந்து வெட்டிக் கொண்டுவரப்பட்ட பெரும் மரத்தைத் தாங்கி சோழ வீரர்கள் வேகமாக வந்து மோதிய வேகத்தில் வலப்புறக் கதவு உட்புறமாகச் சரிந்து, மற்றொரு கதவையும் இழுத்துக் கொண்டு பெரும் ஒலியுடன் விழுந்து பலகைகளும், சட்டங்களும் ஆணிகளுமாகச் சிதறியது. கதவுகளுடன் கீழே உருண்ட பெரும் தந்தங்களை வெற்றிக்கு அடையாளங்களாக எடுத்து முதுகில் கட்டிக் கொண்ட சோழ வீரர்கள், அடுத்து வாட்களை உயர்த்திக் கொண்டு புரவிகளில் தாவி எதிரில் பிராகாரங்களைப் போல் சதுரம் சதுரமாக நீண்ட வீதிகளில் கூச்சலுடன் பாய்ந்தனர். வீரர்களின் ஒரு பிரிவை வணிகர்கள் இருந்த வீதிகளில் செலுத்திய சோழர் உப தலைவன் அன்னிய வணிகர்களை ஒரே இடமாகக் குவிக்கத் தொடங்கினான்.

பரலிமாநகரை அன்னிய வணிகர்களின் ஆதிக்கத்தி லிருந்து விடுவித்து திருவாழும்கோடாக மீண்டும் மாற்றியதும், ஈழத்தின் தலையீட்டை அடுத்த அரை நூற்றாண்டுக்கு ஒழித்ததுமான அந்தப் போர், விடிந்து ஒரு ஜாமம் வரையிலும் கூட நீடித்தது. ஈழ வீரர்களை முற்றிலுமாக அழித்தபிறகு அன்னிய வணிகர்களை வீதி நிறைய நிற்க வைத்த விழுப்பரையர் அவர்களது

அத்தனை உடைமைகளையும் சேர மக்களிடம் ஒப்படைத்துத் தங்கள் அடிமைகளுடன் உயிரோடு அன்று மாலைக்குள் வெளியேறிவிடலாம் என்றும், மறுப்பவர்கள் அப்போதே அந்த வீதியிலேயே கொல்லப் படுவார்கள் என்றும் அறிவித்தார். கோட்டைக் குள்ளிருந்த சேர வணிகர்களில் மூத்த வணிகராகத் தெரிந்தவரையும், ஊர்த்தலைவராக இருந்தவரையும் அழைத்துப் பொருள்களைப் பிரித்துக் கொடுக்கவும், அரண்மனையை நிர்வகிக்கவும், சோழர் தலைநகருக்கு ஆண்டுதோறும் வந்து சேரவேண்டிய திறைப்பொருட்கள் பற்றியும் அப்போதே ஆணையிட்டார்.

உச்சிப் பொழுதுக்குப் பின் சோழர் படை மீண்டும் கோட்டைக்கு வெளியே அணிவகுத்து நின்றது. தமது உபதலைவனைச் சோழஇளவலுக்கு வெற்றிச் செய்தியை அறிவிக்கக் காந்தளூர்ச்சாலைக்கு அனுப்பிவைத்த விழுப்பரையர், வீரர்களை மலைக் கணவாயை நோக்கிச் செல்ல உத்தரவிட்டார்.

விழுப்பரையர் பரலிமாநகரில் தாக்குதலைத் தொடங்கிய அதே நேரத்தில் காந்தளூர்ச்சாலையில் பயிற்சிபெற்றுக் கொண்டிருந்த ஈழத்து வீரர் கூட்டத்தையும், விழிஞத்திலிருந்த ஈழக்கலங்களையும், வீரர்களையும் அடுத்தடுத்துத் தாக்கி அழிக்கத் தொடங்கியிருந்தான் சோழ இளவல் ராஜாதிராஜ சோழ தேவன்.

# 39. கொலைக் கணவாய்

**மே**கங்கள் சதா உலவியதாலும், மேலைக்காற்று எப்போதும் பலமாக வீசிக்கொண்டிருந்ததாலும் குளிர் நிரம்பிக் கிடந்த மலைக்கணவாயின் பாதை பாறைகளும், செடிகொடிகளும் முட்புதர்களும் நிறைந்தே கிடந்தது. இருபுறங்களிலும் உயர்ந்து எழுந்த மலைப்பகுதி

ஆங்காங்கே உள்வாங்கி, குகைகளையும் சரிவுகளையும், மழைநீர் தேங்கிய குட்டைகளையும் சிருஷ்டித்திருந்தது. அவற்றில் இரைக்காகவும், மழைக்காகவும் அவ்வப்போது வந்து தங்கிச் சென்ற பெரும் வேங்கைகளும், நரிகளும், கூட்டமாக சரிவுகளில் இறங்கிய காட்டு யானைக் கூட்டங்களும், மற்ற துஷ்டமிருகங்களும் மனித நடமாட்டத்தை அடியோடு அற்றுப்போக வைத்திருந்தது. பாதை செல்லச்செல்ல சில இடங்களில் குறுகியும், விரிந்தும், வளைந்தும் சென்றதால் நடமாட்டம் குறைந்து போயிருப்பதாலும், வளைவுகளில் பதுங்கியிருந்த அபாயங்களாலும், அவ்வப்போது பெய்த ஆலங்கட்டி மழையும் கணவாயின் நடுப்பகுதியில் பாசறை அமைத்துப் பத்து தினங்களுக்கு மேல் காத்திருந்த வீர கேரளனின் வீரர்களுக்கு வெறுப்பும் சலிப்பும் அதிகரித்திருப்பதை முதல் பார்வையிலேயே உணர முடிந்தது. ஆங்காங்கே பாறைகளில் ஆயுதங்களைத் தீட்டிக் கொண்டிருந்த விதத்திலும், குறுவாட்களை வேகத்துடன் எறிந்து பழகிக் கொண்டிருந்த விதத்திலும் சலிப்பு தென்படுவதைக் கவனித்துக் கொண்டிருந்த வீரகேரளன் இனியும் அங்கேயே தாமதிப்பது அத்தனை உசிதமல்ல என்பதை உணர்ந்ததால், மறுதினம் காலை யிலேயே புறப்பட்டு விடலாம் என்று தீர்மானித் திருந்தான். உபதலைவர்களை அழைத்து விவாதித்தவன் இன்னும் ஒரு தினம் காத்திருக்கவும், பின்னர் புறப்பட்டு அந்தக் கணவாய் தமிழகத்தில் நுழையும் இடமான தேன்மலையென்று அழைக்கப்பட்ட பகுதியையும், கணவாயின் முகப்பிலிருந்த புலியாராவையும் அடைந்து விடலாம் என்றும் தீர்மானித்தான். மானாபரணனிட மிருந்தோ, சுந்தரபாண்டியனிடமிருந்தோ எந்தச் செய்தியும் வராததற்குக் காரணமும் புலப்படவில்லை அவனுக்கு.

போதாக்குறைக்கு இருபுறங்களிலும் உயர்ந்து எழுந்த மலைப்பகுதியில் சென்ற இரு தினங்களாக யானைகளின்

நடமாட்டம் அதிகரித்திருப்பதை அவற்றின் பிளிறல் களும், தடதடவென அந்த மலைப்பகுதியே அதிர வைக்கும் ஒலிகளும் தெரிவித்தன. ஆனால் ஊடே ஒலித்த மனிதக்குரல்களும், ஏதோ சக்கரங்கள் உருளுவது போன்ற ஒலிகளும் குழப்பத்தை விளைவித்ததால் வீரர்கள் இருவரை மேற்பகுதிக்கு அனுப்பி, கண்டுவர உத்தரவிட்டிருந்தான். அந்த வீரர்கள் சிரமத்துடன் பாறைகளில் ஏறி மேற்பகுதிக்குச் சென்று வெகுநேர மாகியும் திரும்பாதது வேறு அவனைக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

மறுதினம் அதிகாலையிலேயே வீரர்களைப் புறப்பட உத்தரவிட்டவன் முன்னோடி வீரர்கள் பதின்மரை முன்னால் செல்ல உத்தரவிட்டு, தானும் புரவியொன்றில் அமர்ந்து சூழ்ந்து கிடந்த மலைப்பகுதியையும், சரிவு களையும், மேலே எழுந்த யானைகளின் பிளிறல்களையும் கவனித்தபடியே தேன்மலையை நோக்கிச் செலுத்தினான்.

வளைந்து வளைந்து சென்ற அந்த மலைக்கணவாயின் பாதையில் அபாரமான அழகையும், அதீத அபாயத்தையும் கொட்டிக் குவித்து வைத்திருந்தது இயற்கை. பாதை சற்று விரியத் தொடங்கியிருந்தது. சரிந்து இறங்கிய பகுதிகளில் செடிகொடிகளும், வானை நோக்கிச் செங்குத்தாக எழுந்த மரக்கூட்டங்களும் ஓயாமல் வீசிய காற்றில் வளைந்தும் நிமிர்ந்தும் ஆடிக் கொண்டிருக்க, வீரர்களின் ஆரவாரத்தால் வேங்கைகள் பல மரக்கூட்டங்களிடையேயிருந்து பாய்ந்து பெரும் கர்ஜனைகளுடன் வெளியேறின. சில உயரமான பகுதிகளிலிருந்து கூட்டமாக அமர்ந்து வீரர்களைக் கண்டு உறுமின. இடப்புறத்துக் கானகத்தின் உட்பகுதியிலிருந்து யானைக் கூட்டங்களின் பிளிறல்கள் ஒலித்தன. ஊடே மலைப்பகுதியிலிருந்து ஓடையொன்று கிளம்பி, பாதையின் ஓரத்தில் சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது. காற்றில் உடலை உறையவைக்கும் குளிர்ச்சியும், மூலிகை களின் மணமும் கலந்து வீசிக் கொண்டிருந்தது. மலைக்

கணவாயின் பாதை தேன் மலையை நெருங்க நெருங்க ஓரங்களிலும், குறுக்கிலும் பாறைகள் பல முளைத்து வீரர்களை வழிமறித்தன. எச்சரிக்கையுடன் வருமாறு வீரர்களுக்கு உத்தரவிட்ட வீரகேரளன் பாதை வளைந்து திரும்பிய இடத்தில் சற்றுத் தொலைவு சென்றதும் சட்டென்று நின்றான்.

தேன்மலையென்று அழைக்கப்பட்ட அந்தப் பகுதியில் பாறைகள் பல செங்குத்தாக உயர்ந்து எழுந்து மறைவிடங்களைச் சிருஷ்டித்திருக்க, பெரும் உருவத்துடன் ஒற்றை யானையொன்று பாதையின் குறுக்கே நின்றிருந்தது. தன் கூட்டத்திலிருந்து விலகிய ஏதோ ஒரு காட்டு யானை வழியில் நிற்கிறது என்றே எண்ணிய வீரகேரளன் வீரர்களின் கூட்டத்தைக் கண்டு அந்தக் களிறு சென்று மறைந்துவிடும் என்று எதிர்பார்த்தான். மாறாக, அவனுக்கு வியப்பும் அதிர்ச்சியும் அளிக்கத் திரும்பிய அந்தக் களிறு பாறையொன்றின் மறைவிலிருந்து கனமான அடிமரமொன்றைத் துதிக்கையால் வளைத்து எடுத்துக்கொண்டு வீரகேரளனை நோக்கி அடியெடுத்து வைத்தது. அதே கணத்தில் பாதையின் பக்கவாட்டுச் சரிவில் பிளிறல்கள் ஒலித்தன. தடதடவென நிலம் அதிர, களிறுகள் பல துதிக்கைகளில் மரக்கட்டைகளுடன் இறங்கி வீர கேரளனின் வீரர்களை நோக்கி ஓடிவந்தன. களிறுகளின் மீது கானகத்து வீரர்களாகத் தெரிந்தவர்களின் கரங்களில் விற்களும், வீரர்களைக் குறிவைத்த அம்புகளும் இருக்க, பக்கவாட்டில் பெரும் ஈட்டிகள் தொங்கின.

அந்தக் கானகத்து வீரர்களை நோக்கிய வீர கேரளனுக்கு இன்னும் அதிர்ச்சியளிக்க, முன்னால் வந்த களிற்றின்மீது திடகாத்திரமான கறுத்த பாகனுக்குப் பின்னால் ஆரோகணித்து, கூரிய அம்பு வீர கேரளனைக் குறிவைத்திருக்க, கரத்தில் பிடித்த வில்லும், செவிகள் வரை இழுத்த நாணும் தாங்கி வந்து கொண்டிருந்தாள்

ஓர் அழகிய பெண். அவள் குறுகிய இடையில் நீண்ட வாளுக்குப் பக்கத்தில் குறுவாட்கள் பல செருகப் பட்டிருந்தன. அதுவரை அவன் கண்டிராத அளவில் பெரிய மாணிக்கங்கள் கோர்க்கப்பட்ட மாலையொன்று அவள் கழுத்தில் வேகத்துடன் அசைந்துகொண்டிருக்க, மகர வடிவில் செவிகளில் அணிந்திருந்த குழைகள் ஆடின.

'யாரிந்தக் கானகத்து வீரர்கள்? ஏன் தன்னைத் தாக்கு கிறார்கள்? இந்த அழகிய பெண் யார்?' வீரகேரளன் குழப்பத்துடன் ஓரிரு கணங்கள் நின்றாலும் நிலைமையின் அபாயத்தை உணர்ந்து சுதாரித்துக் கொண்டு வீரர்களைக் களிறுகள் இறங்கிய இடத்தில் இடைவெளி விடவும், வில்லாளிகளைக் களிறுகளின் மீதிருந்த வீரர்களை நோக்கித் தாக்கவும் உத்தரவிட்டான். அந்தப் பெண்ணின் கரத்திலிருந்து விடுபட்ட அம்புகள் மிக அபாயகரமாயிருப்பதையும், அவள் தன்னைக் குறிவைத்துக் களிற்றைச் செலுத்துவதையும் கவனித்தவன் தன் முன்னே இருந்த வீரர்களை அழைத்து அந்தப் பெண்ணைத் தாக்க உத்தரவிட்டான்.

களிறுகள் அந்த அடிமரங்களைச் சுழற்றிக் கொண்டே சேர வீரர்களை நெருங்கித் தாக்கத் தொடங்கின. புரவிகளிலிருந்த வீரர்கள் விடுத்த அம்புகள் பாய்ந்த பின்னர் அவற்றின் வேகம் அதிகரித்து, அந்த வீரர்களை அடிமரத்தால் அறைந்து வீழ்த்தி புரவிகளைத் தந்தங்களால் மோதித் தள்ளின. அந்தப் பெண்ணின் கரத்திலிருந்து விடுபட்ட அம்புகள் வேகத்துடன் சேர வீரர்களைத் தாக்கி வீழ்த்தின. அதைவிட அவள் அவ்வப்போது எடுத்து வீசிய குறுவாட்களின் வேகம் அபரிமிதமாயிருந்தது. காற்றில் அம்புகளும், ஈட்டிகளும் பாயும் ஒலிகளும், தாக்கப்பட்ட சேர வீரர்களின் கூச்சல்களும், புரவிகளின் கனைப்பொலிகளும் மலைக் கணவாயை கொலைக்கணவாயாக மாற்றத் தொடங்கின.

பாறைகளும், முட்புதர்களும் நிறைந்துகிடந்த அந்த குறுகலான மலைக் கணவாயின் பாதையில், நின்று போராட இருந்த இடைவெளி களிறுகளின் வரவால் குறுகி விட்டதாலும், களிறுகளின் வேகம் அபரிமிதமாக இருந்ததாலும், சேர வீரர்களின் எதிர்ப்பு அத்தனை வலுவாக இல்லை. ஆனால் அந்தப்பெண்ணும் அவளுடன் வந்த கானகத்து வீரர்களும் தாக்குதலைத் தொடரவில்லை. மாறாக சேரவீரர்களின் வரிசையை ஊடுருவி களிறுகளுடன் மறுபுறம் சென்று எதிர்ப்புற மிருந்த மலைக் கணவாயின் சரிவில் போரிட்டபடியே மீண்டும் மேலே ஏறிச்சென்று கானகத்தில் மறைந்தனர். ஒன்றரை ஜாம நேரமே நடந்த அந்தத் தாக்குதல் சட்டென்று ஒரு முடிவுக்கும் வந்தது.

களிறுகள் அடிமரங்களை ஏந்தித் தாக்கியதால் பல புரவிகளும் மலைப் பாதையின் குறுக்கேயும் பாறைகளின் மீதும் ஓரங்களிலும், சேர வீரர்களுடன் உயிரற்றும் காயங்களுடனும் விழுந்து கிடப்பதையும், ஏறக்குறைய தனது படை சரிபாதிக்குக் குறைந்து விட்டதையும் திகைப்புடன் கவனித்தபடி நின்றான் வீரகேரளன். வந்தவர்கள் அணிந்திருந்த மாலைகளும், தலையில் செருகப்பட்டிருந்த இறகுகளும், வளைந்த பட்டையான வாட்களும் அவர்கள் மேலைமலைக் கானகத்தின் சோலகர் இனத்தவர் என்பதை அவனுக்குப் புரியவைத் திருந்தன. விக்கிரமபாண்டுவும் உடன் சென்ற வீரர்களும் கானகத்தில் கொல்லப்பட்டதும் அவன் சித்தத்தில் எழுந்தது. பாண்டிய வம்சத்து வழி வந்தவர்களான சோலகர் எப்படி சோழர்களுக்குத் துணையாயிருக்க முடியும் என்ற கேள்வியும் எழுந்தது அவனுக்கு. விக்கிரம பாண்டு கொல்லப்பட்டபோதே மலைப் பகுதியில் நடப்பவற்றை அறிந்துகொள்ள யத்தனிக்காதது எத்தனை அபாயம் என்பதும் புரிந்தது அவனுக்கு.

இனியும் அந்தப் பகுதியில் தாமதிப்பது பெரும் அபாயம் என்பதை உணர்ந்த வீர கேரளன் இறந்த புரவிகளையும், வீரர்களையும் அங்கேயே எரித்துவிடவும் எஞ்சிய வீரர்களைத் தேன்மலையைத் தாண்டி, புலியாராவை விரைவில் அடைந்து விடவும் உத்தர விட்டான். அடுத்த ஒரு ஜாம நேரத்தில் மீண்டும் மலைக் கணவாயின் பாதையில் பயணத்தைத் தொடங்கிய வீரகேரளனின் வீரர்கள் சுற்றிலுமிருந்த கானகப் பகுதியைக் கவனித்தபடியே நடந்தனர். சற்றுத் தொலைவு வந்ததும் மீண்டும் கானகத்தினுள் களிறுகளின் பிளிறல் களும், சோலக வீரர்களின் எச்சரிக்கைக் குரல்களும் கேட்டுக் கொண்டேயிருப்பதாகத் தோன்றியது அவர்களுக்கு.

சற்றுத் தொலைவு சிந்தித்தபடியே வந்த வீர கேரளனின் சித்தத்தில் அந்த சந்தேகம் உதயமாயிற்று. வீரர்களைத் தாமதிக்க உத்தரவிட்டவன், அங்கேயே பாறையொன்றின் மீது அமர்ந்தான். சிலீரென்று தாக்கிய குளிர்காற்றையும் மீறி அவன் முகத்தில் வியர்வைத் துளிகள் அரும்பிக்கிடந்தன. நெற்றியின் நரம்புகள் புடைத்து அவன் சிந்தனையின் தீவிரத்தையும், மலைப்பகுதியை இமைக்காமல் வெறித்த விழிகள் அவன் குழப்பத்தையும் காட்டின. வீரர்களுக்கிடையேயிருந்து முன்னால் வந்த உபதலைவர்கள் மெல்ல அவனை நெருங்கி ஏதும் பேசாமல் மௌனமாக வெறித்தபடி நின்றனர்.

வீரகேரளனின் விழிகள் சுற்றிலும் நின்ற உபதலைவர் களை ஒருமுறை நோக்கி உருண்டன. “படைத் தலைவர்களே, நடந்தவை ஏதோ கானகத்தின் சோலக இன மக்கள் குறுக்கிட்டதால் நடந்த தாக்குதல் அல்ல, நம் அசைவுகளைக் கவனமாகக் கவனித்து மிக நேர்த்தியாகத் திட்டமிட்டு நடத்தப்பட்ட தாக்குதல். இப்படி அணிவகுத்துத் தாக்கும் முறைகளும், களிறுகள் மரக்கட்டைகளைத் தாங்கிச் சுழற்றி கச்சிதமாகப்

புரவிகளையும், வீரர்களையும் தாக்கும் பயிற்சிகளையும் இவர்களிடம் இதுவரை கண்டதில்லை. இவர்கள் இந்தப்பகுதியில் அதிகமாக நடமாடுவதுமில்லை. வந்தவன் இவர்களது தலைவன் சுந்தர சோலகனுமில்லை. அவர்களது இளவரசி. இவர்களுக்குப் பயிற்சியளித்து வழிநடத்துபவன் வேறெங்கோ இருக்க வேண்டும்”

உபதலைவனொருவனின் குரல் குறுக்கிட்டது “மன்னவா, நாம் இந்த மலைக் கணவாயில் ஏறக்குறைய பதினைந்து தினங்களாகக் காத்திருக்கிறோம். மானா பரணரோ, சுந்தர பாண்டியரோ செய்தியேதும் அனுப்ப வில்லை. நாம் நகரத் தொடங்கியதும் இந்தத் தாக்குதல் நடந்திருக்கிறது. நம்மை இவர்கள் கண்காணித்துக் கொண்டு இருந்திருக்க வேண்டும். அப்படியானால்...?”

வீரகேரளனின் விழிகள் அந்த உபதலைவனை வெறித்தன “உமது சந்தேகம் உண்மைதான் உபதலைவரே, நாம் இதே பாதையில் தொடர்ந்தால் மீண்டும் தாக்கப் படுவோம். சோலக வீரர்களும் களிறுகளும் மீண்டும் புலியாராவை அடையுமுன்னர் நம்மைத் தாக்கலாம்” என்ற வீரகேரளன் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தான்.

அந்த உபதலைவன் மீண்டும் ஏதோ கூற முற்படுவதும், தயங்குவதும் வீர கேரளனுக்குப் புலப்பட்டது. “உபதலைவரே, நீர் கூறவந்ததைத் தயங்காமல் கூறலாம். புலியாராவின் நிலைமை தெரியாமல் நாம் முன்னேறுவது அத்தனை உசிதமல்ல என்பது எனக்கும் புரிகிறது” என்றான் வீரகேரளன்.

“மன்னவா, இந்தப் பாதையில் சற்றுத் தொலைவு சென்றால் தெற்கே ஒரு கிளைப்பாதை பாலருவியின் பக்கமாகச் செல்கிறது. அதைக் கடந்தால் ராஜதோட்டம் என்னும் மலைக்கிராமம் இருக்கிறது. நமக்கு உணவும் தங்க இடமும் அங்கே கிடைக்கும். அது மட்டுமல்ல...”

“மேலே சொல்லுங்கள்”

"அங்குள்ள மலையின் மீதிருந்து புலியாராவையும், முல்லைநாட்டின் பல பகுதிகளையும் கண்காணிக்க இயலும். படைகள் ஏதும் இருந்தால் எளிதில் கண்டு விடலாம். நான் சென்று நிலைமையைக் கண்டு வருகிறேன்"

சற்று சிந்தித்த வீரகேரளனுக்குத் தன் உபதலைவனின் வார்த்தைகளில் விஷயம் இருப்பதாகப் பட்டது. வீரர்களைப் பாலருவியை நோக்கிச் சென்ற பாதையில் செல்ல உத்தரவிட்டவன் தன் உபதலைவனுடன் புரவியை முன்னால் செலுத்தினான். பாதை கரடுமுரடாயிருந்தாலும் இயற்கை விரித்திருந்த அழகும், கானகத்திலிருந்து ஒலித்த உறுமல்களும், பிளிறல்களும், ஊடே வினோதமாகக் குரலெழுப்பிய பட்சிஜாலங்களும் அருவி உயரத்திலிருந்து சீறிப் பாய்ந்த அழகும் பயங்கரம் கலந்த அழகாயிருந்தது. பாலருவியினருகே நெருங்கும் வேளையில் இருள் கவிந்துவிட்டதால் பந்தங்களை ஏற்றிக்கொண்ட வீரர்கள் பாறைகளையும், வழிமறித்த காட்டுக் கொடிகளையும் கடந்து ராஜதோட்டத்தை நோக்கி உயரே சென்ற பாதையை அடையும்போது முதல் ஜாமம் முடிந்துகொண்டிருந்தது.

உடன் வந்த உபதலைவன் வீரகேரளனை நெருங்கி "மன்னவா, அதோ தெரியும் மலையின் உச்சியை* அடைந்தாலே போதும், அங்கிருந்து புலியாராவையும், முல்லை நாட்டின் பகுதிகளையும் காணமுடியும்" என்றான்.

உபதலைவனின் வார்த்தைகளைத் தொடர்ந்து புரவியைத் துரிதமாக நடத்திய வீர கேரளன் மலைச்சிகரத்தை அடைந்ததும் பிரமித்து நின்றான். அவன் சந்தேகித்தபடி புலியாராவின் சமவெளியைப் பட்டப்பகலாக அடித்த பந்தங்களின் ஒளியில் சோழ வீரர்களின் கூடாரங்களும், வீரர்கள் நடமாட்டமும், போர்ரதங்களும் சிறு பொம்மைகளைப் போலத்

★ **(*Mr. Shinu*) திரு. ஷைனு, ஆசிரியர் திருவனந்தபுரம் பயணக் கட்டுரைத் தொகுப்பு.**

தெரிந்தன. மலைக்கணவாயில் அவன் தொடர்ந்து சென்றிருந்தால் என்ன நேரிட்டிருக்கும் என்பதும் புரிந்தது அவனுக்கு.

# 40. உக்கிரன் கோட்டை

**மா**லைப்பொழுது கவியத் தொடங்கியதுமே காற்றை நடுங்கவைக்கும் குளிர் ஊடுருவிக்கிடந்த அந்தப் பகுதியில், மலைக்கிராமமான ராஜதோட்டத்தை அடைந்துவிடும் உத்தேசத்தில் காட்டுப்பாதையில் வந்து மலையின் உச்சியை அடைந்து நின்ற வீர கேரளனுக்கும், அவனைத் தொடர்ந்து வந்த சேரவீரர்களுக்கும் தூரத்தே விரிந்த காட்சி அவர்களின் உடலில் மட்டுமல்லாமல் உள்ளத்திலும் நடுக்கத்தைக் கொடுக்கக் கூடியதாகவே இருந்தது. தூரத்தே தெரிந்த புலியாரானையும், முல்லைநாட்டு வட பகுதியையும் நோக்கிய வீரகேரளன் அங்கு தெரிந்த பந்தங்களையும், கூடாரங்களையும், சிறு புள்ளிகளாக நடமாடிக் கொண்டிருந்த வீரர்களையும், புரவிகளையும், போர் ரதங்களையும் கண்டு தங்களது எண்ணப்படி புலியாரானை அடைந்திருந்தால் என்ன நேரிட்டிருக்கும் என்பதைத் தெளிவாகவே புரிந்து கொண்டதால் திகைப்பில் உறைந்துபோய் நின்றான் வெகுநேரம். தங்களது ஒவ்வொரு அசைவையும் சோழ இளவல் அறிந்திருக்கிறானென்பதையும், அவனுக்குத் துணையாக மலைப்பகுதியின் சோலகர் இனத்தவரும் சேர்ந்திருக்கிறார்கள் என்பதும் தெளிவாகவே புரிந்தது அவனுக்கு. அதே கணத்தில், இனி தான் முன்னோக்கிச் செல்வதோ, அல்லது மலைக்கணவாய் வழியே திரும்பிச் செல்ல முயல்வதோகூட அபாயம் என்பதும் புரிந்தது அவனுக்கு.

தன் உபதலைவனைத் திரும்பி நோக்கினான் வீரகேரளன். உபதலைவன் முகம் பேயறைந்தது

போலிருப்பதையும், திகைப்பில் உறைந்து நிற்பதையும் பந்தந்தின் ஒளியில் கவனித்தவன் "உபதலைவரே..." என அழைத்தான்.

"உள்ள நிலை புரிகிறதா உமக்கு?"

"நன்றாகவே புரிகிறது மன்னவா"

"இனி நாம் முன்னோக்கிச் செல்வது இயலாது"

"வந்தவழியே திரும்புவதும் உசிதமல்ல மன்னவா. நம்மைத் தாக்கிய சோலகர்களின் போர்க்களிறுகள் இன்னும் கானகத்தினுள்ளேதான் இருக்கின்றன. மலைக் கணவாயில் இறங்கினால் மீண்டும் அவை நம்மைத் தாக்கக்கூடும்" என்ற உபதலைவன் வீரகேரளனை உற்று நோக்கினான்,

வீரகேரளனின் முகம் கல்லாக இறுகியிருந்தது. "வேறு வழியில்லை உபதலைவரே, புலியாராவில் சோழ வீரர்கள் நம்மை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். நாம் அங்கு வந்து சேரவில்லையென்றால் இந்தக்கானகம் சலிக்கப் படும். எப்படியும் தாக்கப்படுவோம்"

"உண்மைதான் மன்னவா, இனி ஒரு நாள் பொழுதுக்கு மேல் சோழருடன் மோதலைத் தவிர்க்க இயலாதுதான். மானாபரணரும், சுந்தரபாண்டியரும் என்னவானார்கள் என்பது தெரியவில்லை. இந்த நிலையில் நமக்கு உதவக்கூடியவர் அருகில் ஒருவர் மட்டுமே இருக்கிறார்" என்றான் உபதலைவன்.

வீரகேரளனின் முகத்தில் வியப்பு தெரிந்தது "யார் நமக்கு உதவக்கூடும்?" என்றான் குரலில் வியப்பு தொனிக்க.

உபதலைவன் முகத்தில் சிந்தனை தெரிந்தது "மன்னவா, இங்கிருந்து பன்னிரு காதத்தில் உக்கிரப் பாண்டியர் இருக்கிறார். அவர் உதவிக்கு வந்தால் நாம் தப்ப இயலும். அவர் கிழக்கிலிருந்து புலியாராவைத் தாக்க

ஒப்புக் கொண்டால், நாம் இந்தச் சரிவில் இறங்கி மறுபுறம் தாக்கலாம். ஆனால் அவரை ஒப்புக்கொள்ள வைப்பது அத்தனை எளிதல்ல. சுந்தர பாண்டியர் ஏற்கெனவே விடுத்த கோரிக்கைக்கு அவர் இணங்கவில்லை. வேறு வழியேதும் புலப்படவில்லை எனக்கு" என்றான்.

வீரகேரளனின் முகத்தில் மாறுதல் தெரிந்தது. "உபதலைவரே, புலியாராவில் உள்ள சோழர் படைகளைத்தாண்டி உக்கிரப்பாண்டியரை அடைய வழியேதும் இருக்கிறதா?"

"இருக்கிறது பிரபு. நான் அதைத்தான் கூறவந்தேன். நான் சென்று உக்கிரப் பாண்டியரைக் கண்டுவருகிறேன். இந்தக் குளிரும் மையிருளும் நல்ல பாதுகாப்பு. மன்னர் உத்தரவிட்டால் விடிவதற்குள் அவரைக் கண்டுவிட்டு வந்துவிடுகிறேன்" என்ற உபதலைவனை உற்று நோக்கிய வீரகேரளன் ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டானென் பதை அவனது அடுத்த வார்த்தைகள் தெரிவித்தன.

"உபதலைவரே, நம் வீரர்களை எச்சரிக்கையாக இருக்க உத்தரவிட்டுப் புறப்படுங்கள். நானும் உங்களுடன் வருகிறேன். சுந்தரபாண்டியரைப் பற்றியும் மானா பரணரைப் பற்றியும் ஏதேனும் தெரிந்து கொள்ளலாம் என எண்ணுகிறேன். இப்போதே புறப்படலாம்"

அடுத்த ஒரு நாழிகையில் உபதலைவன் காட்டிய வழியில், அந்த மலைப் பாதையின் கரடுமுரடான கொடிவழியொன்றில் இருவரது புரவிகளும் சென்றன. பாதை வெகு கடினமாகத் தெரிந்தாலும், எவர் கண்ணிலும் படாமல் உக்கிரப் பாண்டியரின் கோட்டையை அடைய அதைவிடச் சிறந்த வழி வேறு ஏதுமில்லை என்பதைப் பயணம் தொடங்கிய சில நாழிகைகளில் உணர்ந்தான் வீரகேரளன்.

**சி**த்ராநதியின் வடகரையில் அமைந்திருந்த அந்தக் கோட்டையைப் பார்வைக்குச் சிறியதாகக் காட்டிய

அதன் சுற்றுச்சுவர் சற்று உயரம் குறைந்தே தெரிந்தது. ஆனால் கோட்டையின் சுவர்கள் நான்கடிக்குக் குறையாத அகலத்துடனும் ஆங்காங்கே அம்புகளையும் பெரும் ஈட்டிகளையும் எடுத்து வீசும் பொறிகளுடனும், இரும்புத் தகடுகளால் மூடப்பட்ட பெரும் வாயில் களுடனும், உயர்த்திய வேல்களுடன் சதா உலவிய வீரர்களுடனும் எந்த நேரத்திலும் இயங்கத் தயாராக நின்று அதைத் தாக்க முற்படுவதோ கைப்பற்றுவதோ அத்தனை எளிதல்ல என்பதை நிரூபித்துக் கொண் டிருந்தது. கோட்டையின் வெளியே நதியின் மறுகரையில் கூடாரங்களை அமைத்து, கூட்டம் கூட்டமாகத் தங்கி யிருந்த ஈழத்து வீரர்கள் அவ்வப்போது கோட்டையை ஏறெடுத்துப் பார்ப்பதும் தங்கள் ஆயுதங்களை எடுத்துத் தீட்டுவதும் மீண்டும் கோட்டைவாயிலை நோக்குவது மாக இருந்தனர்.

கோட்டையின் உட்புறம் விரிந்த திடலை அடுத்து நீள் சதுரமாகச் சென்ற வீதிகளும், அவற்றில் நின்றிருந்த இல்லங்களும், அடுத்துத் தெரிந்த மாளிகைகளும் உக்கிரன் கோட்டையில் வாழ்ந்த மக்களின் செழிப்பைக் காட்டிக்கொண்டிருந்தன. நடுப்பகுதியில் உயரமாக நின்ற பெரும் அரண்மனையின் மேன்மாடத்தில் நின்றபடி அந்தச் சிறிய நகரத்தைக் கவனித்துக் கொண்டிருந்த உக்கிரப்பாண்டியனின் பெரு விழிகளில் திருப்தியே நிலவியது. அதிகாலையில் எழுந்துவிடும் வழக்கமுடைய உக்கிரப்பாண்டியன் அன்றும் விரைவாகவே ஸ்நானாதி பாதிகளை முடித்துக் கொண்டு நெற்றியை நிறைத்த வெண்ணீறுடன் கைகளைக் கூப்பியபடி நின்று கதிரவனை வணங்கிக்கொண்டிருந்தான். சற்றுத்தள்ளி பின்னால் இருக்கையில் அமர்ந்திருந்த மானாபரணன் மீண்டும் மீண்டும் விடுத்த அழைப்புகளோ, குழப்பம் நிறைந்த குரலில் எழுப்பிய கோரிக்கைகளோ உக்கிரப் பாண்டினின் செவிகளில் விழுந்ததாகவே தெரிய வில்லை. தன் நீண்ட வழிபாட்டை முடித்துக் கொண்டு

திரும்பி நோக்கிய உக்கிரப் பாண்டியனின் விழிகளில் சற்று அலட்சியமே தென்பட்டது. அடுத்து உதிர்ந்த அவன் வார்த்தைகளிலும் அது தொனித்தது.

"மானாபரணரே, நேற்று நான் உமக்கு அளித்த பதிலில் ஏதும் மாற்றமில்லை. உண்மையைக் கூறவேண்டுமானால் சுந்தர பாண்டியரின் அந்நாளைய நட்புக்கு மதிப்பளித்தே உமக்கும் உமது வீரர்களுக்கும் இடமும் உணவும் அளிக்கிறேன். மற்றபடி நீர் கூறுவது போல் உம்முடன் சேர்ந்து சோழர்களை எதிர்க்கவோ, போரிடவோ நான் விரும்பவில்லை"

"நீங்கள் கூறுவது விசித்திரமாயிருக்கிறது உக்கிரப் பாண்டியரே, சுந்தரபாண்டியர் எம்முடன் சேர்ந்து சோழர்களை எதிர்க்கும்போது நீர் தயங்குவது ஏன் என்பது புரியவில்லை. ஆபத்தில் உதவுவதுதானே நட்பு? யாரும் உதவியென்று கேட்பதை மறுக்காமல் செய்யும் வம்சமாயிற்றே உமது வம்சம். இந்திரனையும் வருணனையும் அடக்கி மேகங்களைச் சிறைசெய்த ஆரஞ்சாத்து பாண்டியரின்* வம்சத்தில் வந்தவராயிற்றே, இப்போது ஏன் எமக்கு உதவ மறுக்கிறீர்?"

உக்கிரப் பாண்டியனின் பெருமீசை ஒருபக்கமாக இழுபட்டு அவன் முறுவலிப்பதை உணர்த்தியது.

"மானாபரணா, எமது வம்சத்தின் பெருமையைக் கூறி என்னை இணங்க வைக்க முயல்கிறீர். எனது முன்னோர் செய்தவையெல்லாம் மக்களின் நலன் கருதித்தான். இப்போது நான் உம்முடன் சேர்ந்து சோழருடன் போரிட மறுப்பதும் அதே மக்களின் நலன் கருதித்தான். சோழர்கள் வம்சாவளியாக எம்முடன் நட்புடன் இருப்பவர்கள். சோழருடன் இணக்கமாக இருப்பதால் என் மக்கள் அச்சமற்று மனநிம்மதியுடன் இருக்கிறார்கள். மன்னனின் சுயவிருப்பு வெறுப்புக்காகவோ, பெருமை

★ **தேவர்களாலும் தாங்கமுடியாத இந்திரனின் மாலையைத் தாங்கிய பாண்டியன் – அபிதான சிந்தாமணி**

கூறிக்கொள்ளவோ மக்களை வருத்துவது தவறு என்பதுதான் என் முன்னோர் காட்டிய வழி”

மானாபரணனின் விழிகளிலும் முகத்திலும் தெரிந்த பணிவும், உக்கிரப் பாண்டியனிடம் காட்டிய மதிப்பும் எத்தனை போலி என்பது அவனது அடுத்த சொற்களில் தெளிவானது. “உக்கிரப்பாண்டியரே, மக்களுக்காக நீர் சோழருடன் இணக்கமாக இருக்க வேண்டும் என்கிறீர். ஆனால் உமது படைத்தலைவர் கோச்சடையரும், இரண்டொரு உபதலைவர்களும் அதைக் கோழைத்தனம் என்று நினைக்கிறார்களே. உமது வீரர்களில் பெரும் பாலோரும் அதை ஆதரிக்கவும் செய்கிறார்களே…” மானாபரணனின் குரலில் அதே போலியான மரியாதை தொனித்தது.

உக்கிரப் பாண்டியனின் பெருவிழிகளில் உஷ்ணம் தெரிந்தது “என் படைத்தலைவர்களின் எண்ணம் உனக்கு எப்படித் தெரிந்தது மானாபரணா?”

மானாபரணன் நகைத்தான் “நான் இங்கு வந்து இரு தினங்களாகின்றன, உமது படைத்தலைவர் அழைப்பின் பேரிலேயே இங்கு வந்தேன். அது மட்டுமல்ல”

“வேறென்ன?”

“நான்கைந்து தினங்களுக்கு முன்பாக கொற்கையி லிருந்து புறப்பட்ட சோழர் பிரதிநிதி மகேந்திர தேவரிட மிருந்து ஓலை வந்ததையும் அறிந்தேன். அவரது அச்சுறுத்தல்தான் உமது தயக்கத்துக்குக் காரணம் என்பதையும் புரிந்து கொண்டேன். உமது படைத் தலைவரும், இரு உபதலைவர்களும், வீரர்கள் பலரும் பாண்டிநாட்டைச் சோழர்களிடமிருந்து விடுவிக்கும் இந்தப் போரில் கலந்து கொள்ளவும் துடிக்கிறார்கள் என்றும் புரிந்து கொண்டேன். எனவே…”

“எனவே…?” உக்கிரப்பாண்டியனின் குரலில் சந்தேகம் தொனித்தது.

“எனவே, உமது இந்த அத்தாணி மண்டபத்தை விட்டு ஒரு ஜாம நேரத்துக்கு நீர் அசையாமல் இருந்தால் போதுமானது. இங்கிருக்கும் எனது வீரர்கள் அதைக் கவனித்துக்கொள்வார்கள். உமது படைத்தலைவரும் உடன் இரண்டாயிரம் வீரர்களும் சித்ரா நதியின் மறுகரைக்குச் சென்று காத்திருக்கிறார்கள். கோட்டாற்றில் என்னைத் தாக்கிய சோழர்படை புலியாராவில் பாசறை அமைத்திருக்கிறது. நான் புறப்பட்ட பின்னர் இங்கிருக்கும் எனது வீரர்களும் விலகிவிடுவார்கள். சற்று அதுவரை காத்திருங்கள் போதும்” என்ற மானாபரணன் எழுந்து கரங்களைத் தட்டினான்.

அத்தாணி மண்டபத்துத் தூண்களின் மறைவிலிருந்து ஈழவீரர்கள் பலர் ஈட்டிகளையும் வாட்களையும் ஏந்தி வெளியே வந்தனர்.

உக்கிரப் பாண்டியனின் பெருவிழிகள் சிவந்து கிடக்க, அவன் கரம் வாளின் பிடியில் அமர்ந்து இறுகப் பற்றியது.

மானாபரணனின் குரலில் எச்சரிக்கை ஒலித்தது “உக்கிரப் பாண்டியரே, நான் உமக்கு எதிரியல்ல, நானும் பாண்டிய வம்சம்தான். இப்போதைக்கு என் கருத்துக்கு நீர் உடன்படாததால்தான் இப்படிச் செய்ய முற்பட்டேன். பாண்டிய நாடு சோழருக்கு அடிமைப் பட்டுக் கிடப்பதை விரும்பாத உமது படைத்தலைவரும் வீரர்களும் எனக்கு உதவுகிறார்கள், அவ்வளவே. இந்தப் போர் முடிந்த பின்னர் நீரும் சுதந்திர மன்னனாக உக்கிரன் கோட்டையை ஆளப்போகிறீர். எனவே எதிர்க்க முயல வேண்டாம்” என்றவன் எழுந்து தன் வீரர்களை நோக்கி எச்சரித்தான் “வீரர்களே, இன்னும் ஒரு ஜாமம் கழித்து வந்துவிடுங்கள். நீங்களாக மன்னரைத் தாக்க முயலவேண்டாம். அவர் எதிர்க்க முயன்றால்...” என்றவன் கரத்தால் சைகை செய்துவிட்டு, உக்கிரப் பாண்டியனை ஒருமுறை நோக்கிவிட்டு வெளியேறினான்.

அவன் மண்டபத்தை விட்டு வெளியேறிய பின்னர் உக்கிரப் பாண்டியன் முகம் சிவக்க அத்தாணி மண்டபத்தில் அங்குமிங்குமாக சற்று நேரம் உலவினான். தூண்களுக்கருகில் உருவிய வாட்களுடனும், ஈட்டி களுடனும் நின்ற ஈழத்து வீரர்களையும் அவர்கள் விழி களில் தெரிந்த அச்சத்தையும் கவனித்தான். உலவுவதை நிறுத்தி மண்டபத்தின் நடுவில் நின்றவன் உறையிலிருந்து தன் அகலமான வாளை எடுத்து நீட்டினான்.

ஈழத்து வீரர்கள் சற்றுத் திகைத்தாலும், வாளையும் ஈட்டிகளையும் நீட்டியபடி முன்னே நகர்ந்தார்கள். அவர்களைத் தேக்கியது அடுத்து ஒலித்த உக்கிரப் பாண்டியனின் குரல் “ஈழத்து வீரர்களே, இந்த அத்தாணி மண்டபத்தை விட்டு அடுத்த ஒருஜாம நேரத்துக்கு நான் வெளியேற மாட்டேன். எனது இந்த வாளின்மீது ஆணை. நீங்கள் இங்கு காத்திருக்க அவசியமில்லை. வெளியேறலாம்” என்றவன் பின்னால் நகர்ந்து வாளை மீண்டும் உறையிலிட்டபடி தன் அரியணையில் அமர்ந்து சாய்ந்து கொள்ளவும் செய்தான்.

ஈழ வீரர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். அவர்களின் தலைவனாகத் தெரிந்தவன் முகத்தில் குழப்பம் படர மற்றவர்களை நெருங்கி ஏதோ பேசினான். அதிக நேரம் அங்கிருப்பதில் உள்ள அபாயமும் அவனுக்குப் புரிந்திருக்க வேண்டும். மன்னனை நெருங்கியவன் “தாங்கள் கொடுத்த வாக்கை மீறமாட்டீர்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது மன்னவா, நாங்கள் செல்கிறோம்” என்றவன் தன் வீரர்களை அழைத்துக்கொண்டு வெளியேறினான்.

ஈழத்து வீரர்கள் வெளியேறிய பின், உக்கிரப் பாண்டியனின் போக்கில் மாறுதல் தெரிந்தது. அதுவரை அவன் முகத்திலிருந்த உஷ்ணம் மறைந்து பெரும் ஆறுதல் படர்ந்தது. அரியணையிலிருந்து எழுந்தவன் ஒரு மூலைக்குச் சென்று வேலைப்பாடமைந்த பெரும்

பேழையொன்றைத் திறந்தான். பேழை நிறைய ஓலைக்குழல்களும், சுவடிகளும் கிடந்தன. அவற்றின் மேல் சோழர் முத்திரை பதிக்கப்பட்ட குழலொன்றும் இருந்தது. அதை எடுத்தவன் சாவதானமாகப் பேழையை மூடிவிட்டு மீண்டும் தன் அரியணையில் வந்து அமர்ந்தான்.

ஓலைக் குழலைப் பிரித்து உள்ளிருந்த ஓலையை எடுத்தவன் நிதானமாக அதை மீண்டும் வாசித்தான். ஐந்து தினங்களுக்கு முன் சோழர் பிரதிநிதி தன்னை அச்சுறுத்த எழுதப்பட்ட ஓலை என மானாபரணன் கூறிய ஓலை அது.

“உக்கிரப்பாண்டியரே, உமது மைத்துனனும் படைத்தலைவனுமான கோச்சடையனுக்கும், இரு உபதலைவர்களுக்கும் ஈழத்தவருடனான தொடர்பு பற்றி இனி கவலைப்படவேண்டாம். மானாபரணன் ஈழவீரர் களுடன் கொற்கையை நெருங்கி விட்டான். கொற்கையி லிருந்து முல்லைநாட்டுக்குச் செல்ல இருக்கும் அவனால் கோட்டாற்றைக் கடந்து செல்ல இயலாது. எனவே புலியாராவை அடுத்த மலைக் கணவாயிலிருக்கும் வீரகேரளனுடன் சேர்ந்து கொள்ள உமது கோட்டையைக் கடந்துதான் செல்ல வேண்டியிருக்கும். கோச்சடையனும், ஈழத்துடன் தொடர்பு கொண்ட வீரர்களும் தாமாகவே வெளியேறி, மானாபரணனுடன் சேர்ந்துகொள்வார்கள். அவன் சென்ற இரண்டாவது தினம் நீர் மற்ற வீரர் களுடன் மதுரைக்கு வந்து எம்முடன் சேர்ந்து கொள்ளலாம்... சோழ மாமன்னர் கோப்பரகேசரி ராஜேந்திர சோழ தேவர் ஆக்ஞைப்படி சோழர் பிரதிநிதி மகேந்திர தேவன்” என்றது ஓலை.

உக்கிரப் பாண்டியனின் பெருமீசை ஒருபக்கம் இழுபட்டு அவன் முறுவலிப்பதை உணர்த்தியது.

# 41. படைத்தலைவி

கருணையாற்றின் கிழக்கு நோக்கிப் பாய்ந்த பிரவாகம் தன் அலைக் கரங்களால் கரையைத் தட்டித்தட்டித் 'திரும்பிச் சென்றுவிடு' என எச்சரித்துக் கொண்டிருந்தது. மேற்குப்புறத்து மலைத்தொடரிலிருந்து வீசிய குளிர் காற்றும் எதிர்த் திசையில் வீசி ஆற்றின் கரையோரப் பாதையில் பாய்ந்து வந்த புரவிகளைத் தடுக்க முயன்றது. ஆனால் மானாபரணன் எந்த எச்சரிக்கையையும் ஏற்கும் நிலையில் இல்லை. அவனுடன் வந்த கோச்சடையனும், பாண்டிய வீரர்களின் புரவிகளும், புரவிகளைத் தொடர்ந்து அம்புகளையும் பெரும் ஈட்டிகளையும் எடுத்து வீசும் பொறிகளைத் தாங்கிய வண்டிகளும், புலியாராவை நோக்கி வெகு வேகத்துடன் சென்று கொண்டிருந்தன. பத்து காதத்துக்குமேல் வீரர்களை எங்கும் நிற்க விடாமல் பயணம் செய்த மானாபரணன் புலியாராவை நெருங்க இன்னும் ஓரிரு காதங்களே இருந்தபோது அவனது வேகத்தைத் தடுக்கவும், உடன் வந்த வீரர்களுக்குச் சற்று ஆறுதலளிக்கவும் எதிரே வந்தன இருபுரவிகள்.

வீரர்களைச் சற்றுத் தாமதிக்க மானாபரணன் தன் வலக்கரத்தை உயர்த்தி, சமிக்ஞை செய்தான். புரவிகளின் கயிறுகள் திடீரெனப் பலமாக இழுக்கப்பட்டதாலும் புழுதியைக் கிளப்பிக் கொண்டு நிற்க முயன்ற புரவிகளின் கனைப்பொலியாலும், அக்கம்பக்கத்தில் வந்த வீரர்களின் ஆயுதங்கள் உரசியதாலும் ஏற்பட்ட ஒலிகள் அந்தப் பகுதியில் பலமாக எதிரொலித்தன. மானாபரணனின் விழிகளில் எதிரே வந்த புரவிகளையும், அவற்றில் அமர்ந்து வந்தவர்களையும் கண்டதும் வியப்பின் சாயை பலமாகப் படர்ந்தது.

எதிரில் வந்த இரு புரவிகளும் மானாபரணின் முன்பாக வந்து நின்றன. முதல் புரவியிலிருந்தவனை

நன்றாக ஏறெடுத்த மானாபரணனின் குரலில் வியப்பு பலமாகவே தொனித்தது

"வீர கேரளரே, நான் இந்தப் பாதையில் வருவது உங்களுக்கு எப்படித் தெரிந்தது? மன்னனுக்குரிய உடைகள் இன்றி இது என்ன சாதாரண உடை? நீர் மலைக்கணவாயில் அல்லவா இருக்க வேண்டும்? உமது வீரர்கள் எங்கே?"

வீரகேரளனின் கரம் உயர்ந்து மானாபரணனைத் தடுத்தது. "மானாபரணா, கேள்விகளை ஒவ்வொன்றாகக் கேள். முதலில் நான் உம்மைச் சந்திக்க வரவில்லை. நீர் இந்தப் பாதையில் வருவதும் தெரியாது. மலைக் கணவாயில் காத்திருந்து காத்திருந்து உம்மிடமிருந்தும், சுந்தர பாண்டியரிடமிருந்தும் எந்தச் செய்தியும் வராத தால் நானே புலியாராவை நோக்கி என் வீரர்களுடன் முன்னேறினேன். ஆனால் புலியாராவை நெருங்கு முன்பாக மலைக்கணவாயில் தாக்கப்பட்டேன்"

மானாபரணனின் முகத்தில் வியப்பு இன்னும் உயர்ந்தது. "என்ன மலைக் கணவாயில் உம்மைத் தாக்கினார்களா? அங்கு சோழர் படையேதும் இல்லையே, புலியாராவில் அல்லவா பாசறை அமைத் திருக்கிறார்கள்?"

வீரகேரளனின் தலை பக்கவாட்டில் அசைந்து மறுத்தது "இல்லை மானாபரணா, என்னையும் என் வீரர்களையும் தாக்கியது சோழர் படையல்ல. இந்த மலைப்பகுதியில் வாழும் சோலக இனத்து இளவரசி. கானகத்தில் திரியும் முரட்டுக் களிறுகளுடன் புயல் வேகத்தில் வந்து என் வீரர்களைத் தாக்கிவிட்டு மீண்டும் கானகத்தில் மறைந்து விட்டாள்"

மானாபரணனின் முகத்தில் வியப்புடன் குழப்பமும் படர்ந்தது. "பிறகு?"

வீரகேரளன் தொடர்ந்தான் "அந்தத் தாக்குதல் எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தவே பாதையை மாற்றி நானும் கானகத்தினுள் சென்றேன். அங்கு சிறு மலைக் கிராமமான ராஜதோட்டத்தின் சிகரத்திலிருந்து புலியாரா வில் சோழர்களின் பாசறையைக் கண்டேன். என் வீரர் களைக் காத்திருக்கப் பணித்துவிட்டு, உக்கிரப் பாண்டியரின் உதவியை நாடிச் சென்று கொண்டிருக் கிறேன். ஆனால், முல்லை நாட்டைத் தாக்கிவிட்டு சுந்தர பாண்டியருடன் வருவதாகக் கூறிய நீர் எப்படி இங்கு வந்தீர்?"

மானாபரணன் மெல்ல நகைத்தான் "வீர கேரளரே, நீர் உக்கிரப் பாண்டியரைச் சென்று காண்பதில் பயனேது மில்லை. நான் இரு தினங்களாக அங்கிருந்துவிட்டே வருகிறேன். நமக்கு உதவ அவர் மறுத்துவிட்டார். ஆனால் அவரது படைத்தலைவர் கோச்சடையரும், இரு உபதலைவர்களும் இரண்டாயிரம் வீரர்களுடன் நம்முடன் இணைந்து விட்டார்கள்"

வீரகேரளன் முகத்தில் திகைப்பு தெரிந்தது.

மானாபரணன் முகத்தில் சிந்தனை படர்ந்தது "நான் முல்லை நாட்டுக்குச் செல்லும் வழியில் கோட்டாற்றின் அருகே சோழர்படை என்னை வழிமறித்துத் தாக்கியது. ஆனால் போர் தொடர்ந்து நடக்கவில்லை. நான் பொருநையைக் கடந்து வடக்கே திரும்பியதும் தாக்குதல் நிறுத்தப்பட்டது. என்னைத் திசைதிருப்பிவிடுவதே அவர்கள் நோக்கமாக இருக்க வேண்டும். உம்மைத் தாக்கியதும் உமது படைபலத்தைக் குறைக்கத்தான். நமது திட்டங்களை சோழர்கள் முன்னதாகவே யூகித்திருக்க வேண்டும். நாம் ஒன்றுசேர்வதைத் தடுக்கவும், நமது பலத்தைக் குறைக்கவும் முயன்றிருக்கிறார்கள்"

"அப்படியானால்..." இழுத்தான் வீரகேரளன்.

"ஆம் வீரகேரளரே, நாம் ஒன்று சேர்ந்து தாக்கினால் எதிர்கொள்ளுமளவுக்கு சோழர்கள் படைபலம் இல்லை

என்பது தெளிவாகிறது. எனவேதான் இந்தத் தந்திரங்கள். ஆனால் சுந்தர பாண்டியரின் நிலைபற்றி ஏதும் தெரியவில்லை. அவரிடமிருந்து ஓலையேதும் வரவும் இல்லை”

“அவரும் வழிமறிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அவரது பெரும் படையை முற்றிலும் அழிக்கவோ, தடுத்து நிறுத்தவோ சோழர்படை பலம் போதாது. எப்படியும் தாமதமாகவேனும் வந்து சேர்ந்துவிடுவார். ஆனால் நாம் காத்திருக்க அவசியமில்லை. தாக்குதலைத் தொடங்கி விடலாம்” என்றான் மானாபரணன் தீர்மானமாக.

புரவியிலிருந்து இறங்கிய இருவரும் கருணையாற்றின் கரையோரப் பாதையோரத்திலிருந்த பெரும் மரமொன்றின் நிழலில் அமர்ந்து தாக்குதலைப் பற்றி வெகு நேரம் விவாதித்தனர். வீரகேரளனின் எந்த எச்சரிக்கையையும் ஏற்கும் நிலையில் மானாபரணன் இல்லை. சுந்தரபாண்டியனின் நிலைபற்றி அறிந்து கொள்ளவோ அவன் வருகைக்காகக் காத்திருக்கவோ தயாராகவும் இல்லை. அவன் சித்தம் முழுவதும் மதுரையின் சிறையிலிருக்கும் தன் இரு மகன்களும் நிறைந்து கிடந்தனர். எதிரே புலியாராவிலிருக்கும் படைகளைத் தாக்கி அழித்துவிட்டால், பின் மதுரைக்குச் செல்லும் பாதையில் மறிப்பதற்கோ தாக்குவதற்கோ எவரும் இல்லையென்று பூரணமாக நம்பிய மானா பரணன் அங்கேயே அந்த இரவுப்பொழுதைக் கழிக்கவும், வீரகேரளன் திரும்பிச் சென்று தன் வீரர்களுடன் காலைப்பொழுதில் தாக்குதலைத் தொடங்கத் தயாராக இருக்கவும் தீர்மானித்தான். தயக்கத்தையும், எச்சரிக்கை யையும் முதலில் காட்டிய வீரகேரளனையும் இணங்க வைத்தான். கோச்சடையனையும் அழைத்து, வீரர்களை அங்கேயே கருணையாற்றின் கரையிலேயே தங்கவும், மறுதினம் கதிரவன் உதித்து, ஒரு ஜாமம் கழித்து தாக்குதலுக்குச் சித்தமாகும்படியும், இரு முன்னோடி

வீரர்களை அனுப்பி புலியாராவின் நிலைபற்றி அறிந்துவரவும் உத்தரவிட்டான்.

இரவு கவியத்தொடங்கிய இரண்டாவது ஜாமத்தில் அந்த இரு வீரர்களும் திரும்பினர். புலியாராவில் ஆறாயிரம் வீரர்களுக்கு மேல் இல்லையென்றும், போர்க்களிறுகளும், ரதங்களும் எண்ணிக்கையில் குறைவாகவே இருப்பதையும் அறிவித்தான்.

“ஆனால் பிரபு...” இரு வீரர்களில் ஒருவன் சற்றுத் தயங்கியபடி நின்றான். அவன் முகத்தில் குழப்பம் படர்ந்து கிடந்தது.

“ஏன் தயங்குகிறாய்? மேலே சொல்” மானாபரணனின் உத்தரவு ஒலித்தது.

“பிரபு, நாங்கள் இருவரும் மறைந்து நின்று சோழர் பாசறையைக் கவனித்துக் கொண்டிருந்தோம். அப்போது...”

“என்ன அப்போது?” மானாபரணனின் குரலில் எரிச்சல் தெரிந்தது.

“நாங்கள் மறைந்துநின்ற இடத்தின் பின்புறத்திலிருந்து சோழவீரர்கள் திடீரெனத் தோன்றினார்கள். ஆனால் எங்களைத் தாக்கவோ, சிறைசெய்யவோ முயலவில்லை”

“என்ன உளறுகிறாய்?” மானாபரணனின் குரல் உயர்ந்து ஒலித்தது.

“உளறவில்லை பிரபு. உண்மையில் நடந்தைத்தான் கூறுகிறேன். எங்களைக் கைப்பிடியாகப் பிடித்த சோழ வீரர்கள் அழைத்துக் கொண்டு சோழர் பாசறைக்குச் சென்றார்கள். மிக இளைஞனாகத் தெரிந்த ஒரு வாலிபன் சிரித்தபடியே எங்களை வரவேற்றான். நாம் கொற்கையிலிருந்து புறப்பட்டது முதல் நடந்த அனைத்தையும் அவன் அறிந்திருக்கிறான். ஆறாயிரம் வீரர்கள் இருப்பதாகவும், போர் ரதங்கள் முன்னூாற்றுக்கும் சற்றுக்

குறைவாக இருப்பதையும், போர்க்களிறுகள் இருநூற்றுப் பத்து இருப்பதையும் அவனே தெரிவித்தான். இறுதியாக...”

அந்த ஈழ வீரர்களின் முகத்திலிருந்த குழப்பம் மானாபரணனையும் தொற்றிக் கொண்டது. “இறுதியாக...?”

“அங்கு சோழர் படைக்குத் தலைமை தாங்குவது அந்த வாலிபனின் சகோதரி என்றும் தெரிவித்தான்”

“என்ன? சோழர் படைக்குத் தலைமை தாங்கிவந் திருப்பது ஒரு பெண்ணா?”

“ஆம் பிரபு. இதில் ஏளனத்திற்கு ஏதும் இல்லை. அந்தப் பெண்ணை நாங்கள் நேரிலும் பார்த்தோம். அவள் சோழர் படைத்தலைவர் அரையன் ராஜராஜனின் வளர்ப்பு மகளாம். பெயர் செங்கமலச் செல்வி என்றார்கள். ஆனால் உண்மையில் அவள் பாண்டி நாட்டைச் சேர்ந்தவள்தானாம்”

மானாபரணன் திகைத்தான். எங்கோ காஞ்சியில் இருக்கும் அரையன் ராஜராஜனின் பெயர் செவிகளில் விழுந்து அவனை உறைய வைத்தது. ‘அரையன் ராஜராஜனது வளர்ப்பு மகளா, கங்கைப் போரில் உடன் சென்றதாகவும் சாளுக்கிய ஜெயசிம்மனை வாட்போரில் கதற அடித்தாகவும் கேள்விப்பட்ட அந்தப் பெண்ணா?’ மானாபரணன் திரும்பி அருகில் நின்றிருந்த கோச்சடையனை நோக்கினான். கோச்சடையனின் திறந்த வாயும், செய்தி கொண்டுவந்த ஈழவீரனை வெறித்த விழிகளும் அவற்றில் படர்ந்துகிடந்த கலவரமும் அவனது அதிர்ச்சியைத் தெரிவித்தன.

மானாபரணன் ஏதும் கூறுமுன்பாக கோச்சடையனின் கேள்வி ஒலித்தது “மானாபரணரே, நாம் இப்படியே திரும்பிவிடலாமா?” என்று.

மானாபரணன் குரலில் கடுமை ஒலித்தது “கோச்சடையரே, நீர் அஞ்சுவதாக இருந்தால் இப்படியே திரும்பி, உமது மன்னரிடம் செல்லலாம். ஆனால்

உக்கிரப் பாண்டியரை மீறி என்னுடன் வந்த உம்மை மன்னர் எப்படி ஏற்றுக் கொள்வார் என்பது குறித்து நான் ஏதும் கூறஇயலாது. அரையன் ராஜராஜன் எங்கோ காஞ்சியில் இருக்கிறான். வீணாக அஞ்ச வேண்டாம். விடிவதற்கு இன்னும் இரண்டு ஜாமங்களே இருக்கின்றன. சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளும்"

சோழர் பாசறைக்குச் சென்றுவந்த ஈழ வீரர்களை மற்ற வீரர்களிடம் ஏதும் கூறவேண்டாம் என்று எச்சரித்த மானாபரணன் கோச்சடையனை அழைத்துக் கொண்டு கருணையாற்றின் கரையில் மணல் பரவிக்கிடந்த பகுதியில் சென்று அமர்ந்தான். கோச்சடையனுக்குப் புலியாராவிலிருக்கும் சோழர் படைப்பிரிவை அழித்து விட்டால் மதுரையை நோக்கிச் செல்லவும், அங்கிருக்கும் காவல்படையை வென்று கோட்டையைக் கைப்பற்றுவது பற்றியும் சுருக்கமாக விளக்கிவிட்டு, மணல்வெளியில் கால்களை நீட்டிப் படுத்தான்.

ஈழவீரர்களும், பாண்டிய வீரர்களும் கலந்த அந்தப் படைப்பிரிவு கருணையாற்றின் கரையில் ஆங்காங்கே சரிந்தும், சாய்ந்தும், படுத்தும் ஓய்வெடுத்தது.

மறுதினம் உதய நேரத்தில் கோச்சடையன் விழித்த போது மானாபரணன் பூரண கவசத்துடன் எதிரே நின்றிருந்தான். ஈழத்து வீரர்கள் அணிவகுத்து நிற்க, பாண்டிய வீரர்கள் பக்கவாட்டில் தயாராக நின்றிருந்தனர். வேல்களை எடுத்துப் பலமாக வீசக் கூடிய பொறிகள் முன்னணியில் தயாராக நிறுத்தப்பட்டு, அவற்றை இயக்க இரு வீரர்கள் அவற்றினருகே நின்றிருந்தனர். புரவிப்படைப் பிரிவு ஆற்றின் கரையோரப் பாதையை விட்டு விலகி, சற்றுத் தொலைவில் பாயத் தயாராக நின்றது. புலியாராவின் சோழர்படையை இருபிரிவாகத் தாக்கவும், தாக்குதல் தொடங்கியதும், தென்புறத் திடலை நோக்கி மலைப்பகுதியிலிருந்து வீரகேரளன் வீரர்களுடன் வேகத்துடன் இறங்கித்

தாக்கவும் திட்டமிட்டிருந்த மானாபரணன் தனக்காகத் தான் காத்திருக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட கோச்சடையன் வேகத்துடன் எழுந்து அடுத்த இரு நாழிகைகளில் சித்தமாக வந்து நின்றான்.

அதன் பிறகும் மானாபரணனிடமிருந்து உத்தரவேதும் பிறக்கவில்லை. அவன் விழிகள் எதிரே இருந்த மலைப்பகுதியை உற்று நோக்கிக் கொண்டிருந்தன.

வெகுநேரம் கழித்து அவன் எதிர்பார்த்த சமிக்ஞை மலைச்சரிவில் தென்பட்டது. பசேலென்று விரிந்த மலைக் கானகத்தின் நடுவே கோடிழுத்தது போல் புலப் பட்ட பாதையிலிருந்து தீயின் ஜ்வாலை தெரிந்தது. தொடர்ந்து புகை மண்டலம் எழுந்து கறுத்த மேகங் களைப் போல வானை நோக்கி உயரத் தொடங்கியது.

மானாபரணன் முகத்தில் போர் வெறி முழுதுமாக ஏறத் தொடங்கியது. அவன் உத்தரவும் வேகத்துடன் வீரர்களை முன்னே பாய ஒலித்தது.

பதினாயிரம் பேர் கொண்ட அந்த ஈழ பாண்டியரின் கலப்புப் படை புலியாராவின் தென்புறத் திடலை நோக்கி முழு வேகத்துடன் பாய்ந்தது.

# 42. செல்வி அளித்த தண்டனை

**வீ**சிய காற்று வியர்த்துப் போயிருந்தது. வட்டமிட்டுக் கொண்டிருந்த வல்லூறுகள் பாதையை விட்டு விலகி இன்னும் உயரத்துக்குச் சென்றன. வீரர்கள் கரங்களி லிருந்த விற்களையும், வேல்களையும் அவை கவனித் திருக்க வேண்டும். மலைக்காற்று ஸ்தம்பித்ததால் மலை யோரத்து மரங்கள் அசைவற்று நின்றிருந்தன. கருணை யாற்றின் வெள்ளம் கவலையோடு சென்றுகொண்டிருந் தது. கலக்கப்போகும் குருதி பற்றி அது கவலை கொண் டிருக்க வேண்டும். அணிவகுத்து நின்றிருந்த சோழர்

படை அர்த்தசந்திரனைப் போல் வளைந்து சலனமற்று நின்றிருந்தது.

அணிவகுப்பின் முன்னால் அந்த சாம்பல் நிறப்புரவி கால்களை உயர்த்தி உயர்த்தி வைத்து சமத்கார நடை நடந்து உலவிக்கொண்டிருந்தது. ஐந்து கதிகளையும், பதினெட்டுச் சாரியைகளையும் கற்றிருந்த அந்தப் புரவிக்குப் போர்க்களம் புதிதல்ல என்பது அது திரும்பிய லாகவத்தில் புலப்பட்டது. உயர்ந்த வகை மதுவை ஒவ்வொரு குடம் மட்டும் அருந்திய போர்க்களிறுகள் பெரும் செவிகளையும், பருத்த உடல்களையும் அசைத்தபடி, துதிக்கைகளால் தரையைத் தடவிக் கொண்டு நின்றிருந்தன.

அர்த்த சந்திர வியூகத்தின் மறுமுனையில் புரவியில் ஆரோகணித்து அந்த சாம்பல்நிறப் புரவியையே கவனித்துக் கொண்டிருந்த ஸ்ரீ வல்லபனுக்குத் தன் தமக்கையைக் காண, சற்று அச்சம் பிறந்தது. அசாதாரண அமைதியுடன், புரவியின் கயிறுகளை ஒரு கரத்தால் பற்றியபடி அமர்ந்திருந்த செங்கமலச் செல்வியின் வேல் விழிகள் சலனமேயின்றி தென்திசையைக் கவனித்தன. அவள் மேனியைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த மெல்லிய சல்லடை போன்ற இரும்புக்கவசம் அவ்வப்போது உயர்ந்தும் தாழ்ந்தும் அவள் பெருமூச்சு விடுவதைப் புலப் படுத்திக் கொண்டிருந்தது. பக்கவாட்டில் நீண்டு வளைந்து தொங்கிய வாள் உறையிலிருந்து புறப்படத் தயாராக இருக்க, தோளின் பின்புறம் தொங்கிய வளைந்த தனுசு அந்த வாளுக்குச் சற்றுப் பொறுமையாயிருக்க போதித்துக் கொண்டிருந்தது.

கருணையாற்றின் கரையோரம் புழுதி கிளம்பியதும் அவள் விழிகள் ஆவலுடன் பளிச்சிட்டன. புழுதிப்புயல் சற்று நெருங்கி, புரவிகளின் பாய்ச்சல் பார்வையில் தெளி வானதும் அவள் வலக்கரம் உயர்ந்தது. எத்தனையோ போர்க்களங்களைக் கண்ட சோழ வீரர்கள் அந்தக்

கரத்தின் சமிக்ஞையைப் புரிந்து கொண்டு அணி வகுப்பை இறுக்கிக் கொண்டு கயிறுகளைச் சொடுக்கிப் புரவிகளைப் பாயவிட்டனர்.

அர்த்த சந்திர வியூகம் அப்படியே முன்னால் நகர்ந்தது. முன்னால் பாய்ந்து வந்த புரவிகளையும் அவற்றில் உயர்த்திய வாட்களுடன் வெறிக்கூச்சல்களுடன் வந்தவர் களையும் உற்றுக் கவனித்தாள் செல்வி. அவள் விழிகள் அவர்கள் மீது உலவி, ஈழத்து உபதலைவர்களையும், கோச்சடையனின் பாண்டிய வீரர்களையும், இறுதியாக இடப்புறத்து ஓரத்தில் மானாபரணனையும் கண்டு மலர்ந்தன. தந்தையைக் கொன்றவனை, தாயையும் கொல்ல முயன்று தன்னையும் உடன் பிறந்தவனையும் தனித்தனியே பிரித்தவனை, தன் குடும்பத்தையே சிதற அடித்தவனை, தன்னை ஆதரித்த சோழரை சமயம் பார்த்துத் தாக்க முனைந்தவனைக் கண்ணெதிரே கண்டவளின் முகத்தில் போர்க்களங்களில் மட்டுமே மலரும் அந்த வறண்ட முறுவல் பூத்தது. அவள் தோளிலிருந்த தனுசு முன்னால் வந்து உயர்ந்தது.

அவள் வில்லை உயர்த்தியதுமே உடன் பறக்கத் தொடங்கிய வேல்களும், மற்ற சோழ வீரர்களின் விற்களி லிருந்து பறக்கத்தொடங்கிய அம்புகளும் ஜிவ்வென்று பாய்ந்து எதிரே வந்த வீரர்களின் மீது இறங்கின. மூன்றாகவும், ஐந்தாகவும் தொடங்கி மானாபரணன் இருந்த பகுதியில் பாய்ந்த செல்வியின் அம்புகள் ஒன்று கூட இம்மி பிசகாமல் இலக்குகளைச் சாய்த்ததையும், அரை நாழிகை நேரத்தில் அவனைச் சுற்றி வந்து கொண்டிருந்த ஈழ வீரர்கள் சரிந்துவிட்டதையும், அவளது புரவி புயல் வேகத்தில் தன்னை நோக்கிப் பாய்வதையும் கண்டான் மானாபரணன். அவனை நெருங்கியதும் கால்களை உயர்த்திப் பலமாகக் கனைத்த அந்த சாம்பல் நிறப் புரவி சரியாகத் தன் முன்பாக நெருக்கமாக வந்து இறங்குவதையும், அதே வேகத்தில் அந்தப் பெண்ணின் நீண்டு வளைந்த வாள்

கண்ணிமைக்கும் நேரத்தில் வெளிப்பட்டு தன் வலது தோளில் பாய முற்படுவதையும் கண்டவன், தன் பட்டையான வாளை எடுத்துத் தடுத்தபடி தாக்குதலைத் தொடங்கினான்.

செங்கமலச் செல்வியின் அந்த அழகிய முகத்தை இதற்குமுன் எங்கோ கண்டிருப்பதான நினைவும் ஏற்பட்டது அவனுக்கு. இவள் அரையன் ராஜராஜன் மகளா? பாண்டிய நாட்டைச் சேர்ந்தவள் என்று கோச்சடையன் கூறியதும் நினைவுக்கு வந்தது அவனுக்கு. அவனது சிந்தனை அதற்கு மேல் ஓடவில்லை. செல்வியின் வாள் சுழன்ற வேகமும், கண்களுக்கெதிரே துருவிவிடுவதைப் போல் அவ்வப்போது தோன்றி மறைந்த விதமும், தனது பட்டையான கனத்த வாளை வெகு அனாயாசமாகச் சுழற்றித் திசைதிருப்பிய லாகவமும் சோழர் படைத்தலைவன் அரையன் ராஜராஜன் அளித்திருந்த பயிற்சியைப் புரியவைத்தன. செல்வியின் வாளின் வேகம் இன்னும் உயர்ந்து, வலமும் இடமும் சுழன்று அவன் கழுத்திலும், தோள்களிலும் பதிந்து பதிந்து இழுபட்டது. இப்புறமும் அப்புறமும் தழைந்து தப்ப முயன்ற மானாபரணனின் விலாப்புறத்தில் மிகச் சரியாக அவன் கவசத்தின் இணைப்பைத் துண்டித்துக் கீழே விழவைத்தது. அடுத்து அவளது வாளின் வேகம் அதிகரித்து அவன் முகத்திலும், கரங்களிலும், வலது தோளிலும் இன்னும் ஆழமாக பதிந்து இழுபட்டது. அத்தனை வேகத்தில் வாளைச் சுழற்ற இயலும் என்பதையும், அந்த வேகத்துக்கு ஏற்ப அந்த மெல்லிய கரங்கள் லாகவமாக இயங்க முடியும் என்பதையும் வாழ்நாளில் அன்றுதான் கண்டான் மானாபரணன்.

செல்வியின் முகத்தில் நிதானமும், கரங்களில் வேகமும் அதிகரித்தன. அவனது கரத்திலிருந்த வாளைத் தட்டிவிடவோ, இரண்டாக முறித்துவிடவோ அவளால் எளிதில் இயலும் என்பதையும், அவன் மார்பில் தன்

வாளைப் பாய்ச்சி அவனை முடித்துவிடவும் இயலும் என்பதையும் பூரணமாக உணர்ந்திருந்த சோழ வீரர்கள் ஏன் இன்னும் அவனைக் கொல்லாமல் ஏதோ காட்டு விலங்கை நெருங்கி வேட்டையாடுவது போல் வாளை வீசிக் கொண்டிருக்கிறாள் என்பது புரியாமல் அவள் புரவியை நெருங்கி வந்தனர்.

சோழ வீரர்கள் நெருங்குவதை அவளும் கவனித்திருக்க வேண்டும். அவள் இடக்கரம் உயர்ந்து அவர்களைத் தேக்கியது. அவளது சலனமற்ற விழிகள் மானாபரணனின் மீதே பதிந்திருக்க, அவளது வளைந்து நீண்ட வாள் அவன் பட்டையான வாளைத் தடுத்து, அவனது உடல் முழுவதும் சரியான வேகத்தில் பதிந்து பதிந்து மீண்டு அவனைக் கொல்லாமல் உயிருடன் கொத்திக்கொத்தி எடுத்தது. மானாபரணனது பட்டையான வாளும், வாள்வீச்சும் பயனற்றுப் போவதைக் கவனித்த ஈழத்து வீரர்கள் நெருங்கவும், அவளைத் தடுக்கவும் முயன்ற போது அதீத வேகத்துடன் சுழன்ற செல்வியின் நீண்ட வாள் அவர்களை நெருங்கவிடாமல் அடித்தது.

தூரத்திலிருந்தபடியே செல்வியின் தாக்குதலையும், மானாபரணன் தவிப்பதையும் கவனித்த கோச்சடையன் தன் மெய்க்காவலர்களுக்கு எப்படியும் அவனை அவளிடமிருந்து பிரிக்கவும், மானாபரணனைக் காக்கவும் உத்தரவிட்டான். அதைத் தொடர்ந்து புரவிகளைத் திருப்பிக் கொண்டு பாய்ந்த இருபதுக்கும் மேற்பட்ட பாண்டிய வீரர்கள் செல்வியைத் தடுத்தபடியே நடுவில் புகுந்து அவளை வேறுபக்கத்தில் இழுக்க முயன்றனர். பின்புறத்திலிருந்த ஈழத்து உபதலைவர்கள் இட்ட உத்தரவால் ஈழ வீரர்கள் முன்பகுதிக்கு வரவும் சோழர் படையை முழுவேகத்தில் தாக்கவும் தொடங்கினர்.

அதே கணத்தில் மலைச்சரிவிலிருந்து பெரும் கூச்சல் ஒலித்தது. சரிவில் இறங்கிய பாதையில் வேகத்துடன் இறங்கிய புரவிப்படையொன்று சோழ வீரர்களின்

அணிவகுப்பின் நடுவே பாய்ந்து இறங்கியது. வருபவர்கள் மலைக்கணவாயில் தாக்கப்பட்ட சேர வீரர்கள் என்பதைக் கவனித்த ஸ்ரீ வல்லபன் முன்னணியில் வாளைச் சுழற்றியபடி பாய்ந்த வீரகேரளனையும், உடன் வந்த சேர வீரர்களையும் நன்றாக உள்ளே புக அனுமதித்தான்.

அதற்குமேல் தாமதிக்க விரும்பாத செல்வியின் நீண்ட வாள் உயர்ந்து இடமும் வலமுமாக அசைந்தது. மலைச் சரிவின் மறுபகுதியிலிருந்து தடதடவென நிலம் அதிர துதிக்கைகளில் பெரும் கட்டைகளைத் தாங்கிய களிறு களுடன் சோலக இனத்து இளவரசி குந்தவி வீரகேரளன் இருந்த பகுதியில் இறங்கினாள். அது போதாதென்று இறுதிப் பகுதியிலிருந்த ஈழத்து வீரர்கள் தங்களது பின்னால், சோழர் படைப் பிரிவொன்று அசுர வேகத்தில் புரவிகளில் பாய்ந்து வருவதையும், அவற்றின் முன்னணியில் வெண்ணிற உடைகளுடன் விற்களை ஏந்திய இளைஞர்கள் பலர் புரவிகளில் வருவதையும் கவனித்து திரும்பினர்.

அதிகமாகக் குருதி வெளியேறியதால் அரை மயக்கத்தில் அப்படியே புரவி மீது சரிந்துகிடந்த மானா பரணனுக்கு தூரத்தில் வீரகேரளனும் சேர வீரர்களும் சோலக இனத்துப் போர்க்களிறுகளால் தாக்கப்படுவதும், அவன் பின்வாங்கி மலைக்கணவாயை நோக்கி விரைவதும் புலப்பட்டது. தன் அணிவகுப்பின் பின்பகுதியில் ஈழத்து வீரர்கள் தாக்கப்பட்டதால் எழுந்த கூக்குரல்களும், சோழர்களின் தென்திசைத் தண்ட நாயகர் விழுப்பரையரின் கனத்த குரல் ஒலிப்பதும், அந்த வெண்ணிற உடையணிந்த இளைஞர்களிடமிருந்து காற்றைக் கிழித்து அம்புகள் பாயும் ஒலியும் கேட்டன. அதன் பிறகு நடந்தவற்றை அவன் அறியவில்லை. அவன் நினைவு பறந்தது.

**மா**னாபரணன் மீண்டும் கண்விழித்தபோது தான் இன்னும் உயிர் பிழைத்திருக்கிறோமா என்ற சந்தேகம்

எழுந்தது அவனுக்கு. புத்தியை உலுக்கிக் கொண்டவன் மெல்லத் தலையை உயர்த்தி, சுற்றிலும் பார்க்க முயன்றான். இருள் சூழ்ந்து கிடக்க மெல்லிய ஒளியை வீசிக் கொண்டிருந்த தீபமொன்றும், மேற்கூரையற்ற இடிந்த மண்டபமொன்றில் தான் கிடப்பதும் புரிந்தது அவனுக்கு. தன் உடல் முழுவதும், தோள்களிலும், கழுத்திலும், இரு கரங்களிலும் பச்சிலை வைத்துக் கட்டிய துணிகள் இருப்பதையும், எதிரே காயங்களுடன் கோச்சடையன் தன்னை உற்றுக் கவனித்தபடி அமர்ந் திருப்பதையும் கண்டான் மானாபரணன். அருகில் பாண்டிய நாட்டு வீரர்கள் சிலர் நின்றிருப்பதும் புலப் பட்டது அவனுக்கு. மீண்டும் நினைவு பறந்தது அவனுக்கு.

**ம**துரையம்பதியை விட்டு சில காதங்களே விலகி, உயர்ந்த மரங்களோ, செடிகொடிகளோ இன்றி வெறும் பாறைகளும், சிறு புதர்களுமாக நிறைந்து கிடந்தது அந்தக் குன்று. கூடல்மலையென்றும், சித்தர்மலையென்றும் அழைக்கப்பட்ட அந்தக் குன்றின்மீது அமைதியாக நின்றிருந்தது சிறிய குமரவேள் ஆலயம். நேர் எதிரே சற்றுத் தள்ளி உயர்ந்த மற்றொரு குன்றும், அதன் கீழிருந்த பரங்குன்றம் ஆலயமும் எப்போதும் மக்கள் நடமாட்டத் துடன் காணப்பட்டது. கூடல்மலையில் சித்தர்கள் நட மாடுவதாக நம்பப்பட்டதாலும், அந்த நடமாட்டத்தில் குறுக்கிடுவது கூடாதென்று அஞ்சியதாலும் கூடல்மலை யருகிலும், அதன் மீதிருந்த குமரவேள் ஆலயத்திலும் மக்கள் எவரும் காணப்படவில்லை. ஆலயத்தின் பின்புற மிருந்த மண்டபமொன்றில் சரிந்து கிடந்த கருங்கல் தூணொன்றின்மீது அமர்ந்து தூரத்தே தெரிந்த பரங்குன்றத்தையும், மாலை வெயிலில் பொன்னாலடித்த தகடு போல் பளபளத்த தெப்பக்குளத்தையும் வெறித்தபடி இருந்த மானாபரணனை பின்புறத்திலிருந்து ஒலித்த கனத்த காலடியோசை திரும்ப வைத்தது. கோச்சடையனும் சில வீரர்களும், உடன் காவியுடை

அணிந்த வயோதிகன் ஒருவனும் வந்து கொண்டிருந்தனர். அந்த வயோதிகனையும் அவன் கரங்களிலிருந்த சிறு குடுவை போன்ற மண்கலயத்தையும் கண்டதும் மானாபரணனின் முகம் கசந்து வழிந்தது.

அவன் முகக்கசப்பைக் கண்ட கோச்சடையன் "மானாபரணரே, இன்று ஒரு தினம் பொறுத்துக் கொள்ளுங்கள். அத்தனை காயங்களுடன், குருதியும் வெளியேறி அபாய நிலையில் இருந்த உங்களை இந்தக் கசப்பு மூலிகைதான் உயிர் பிழைக்க வைத்தது" என்றான்.

மானாபரணனின் முகம் சுளித்ததையோ, அவன் மறுத்துத் தலையசைத்ததையோ அந்த முதியவன் சட்டைசெய்வதாகத் தெரியவில்லை. அவனை நெருங்கி அந்தக் கருங்கல்லில் அப்படியே சாய்த்தவன், அவன் உடலில் ஏறக்குறைய வடுக்களாகவே மாறியிருந்த காயங் களின்மீது தன் மண்கலயத்திலிருந்த மூலிகைச்சாற்றை அதிலேயேயிருந்த மண் கரண்டியொன்றால் தடவினான். அவன் கரகரத்த குரலும் கட்டளையிடும் தொனியில் ஒலித்தது.

"மானாபரணா, வாயைத் திற. இன்றுடன் முடிந்தது இந்தக் கசப்பு" என்று கூறியபடி அவன் வாயில் அந்த மூலிகைச் சாற்றை விடவும் செய்தான்.

திரும்பி கோச்சடையனை ஏறிட்ட முதியவன் முகத்தில் வியப்பு பரவிக் கிடந்தது "கோச்சடையா, முன்னரே கேட்க நினைத்தேன். வாட்போரில் மிகச் சரியாக மூன்று விரற்கடை ஆழம் பாய்ந்து துருவும்படி இவனைத் தாக்கியது யார்? எத்தனை பயிற்சி பெற்றிருந்தாலும், போரில் இப்படி ஒருவனைத் தாக்குவது அரிது. இவனைத் தாக்கியவன் மனிதஉடலின் நாடிநரம்புகளைப் பற்றியும், அவற்றைத் தாக்கும் முறைகளையும் பூரணமாக அறிந்திருக்க வேண்டும். செங்குருதி பாயும் நரம்புகள் லேசாகக் கீறப் பட்டிருக்

கின்றன. இதன்பின் விலாப்பகுதியின் கீழே அல்லது இதயத்துக்குக் கீழே லேசாக இன்னுமொரு கீறல் விழுந்தாலும் போதும். காப்பாற்ற வழியே கிடையாது. இந்த கருஞ்செம்பருத்தியும் மூலிகைகளும் கலந்த ஜீவசஞ்சீவித் தைலத்தாலும் காப்பாற்றமுடியாது. காயமடைபவன் உயிரும் எளிதில் பிரியாது. ஆறேழு நாட்கள் கட்டைபோல் கிடக்க நேரிடும், நினைவு மட்டும் இருக்கும்"

மானாபரணன் முகத்தில் திகில் பரவிக்கிடந்தது. கோச்சடையன் முதியவனுக்குப் பதில் கூறாமல் சிலகணங்கள் அடித்து வைத்த சிலையாகவே நின்றான். அவனிடமிருந்து சொற்கள் ஏறக்குறைய குளறலாக வெளிவந்தன. "மானாபரணரே, இன்னொன்றையும் அறிந்தேன். உம்முடன் போரிட்ட அந்தப்பெண்... அரையன் ராஜராஜனின் வளர்ப்பு மகள் மட்டுமல்ல... அவள்... அவள்... கொற்கைப் பாண்டியரின் வம்சத்தைச் சேர்ந்தவளாம். உம்மால் கொல்லப்பட்ட வீரபாண்டியத் தேவரின் மகளாம். நீர் அனுப்பிய ஈழத்து வீரர்களிட மிருந்து அரையன் ராஜராஜனால் காப்பாற்றப்பட்டு வளர்க்கப்பட்டவளாம்"

மானாபரணன் பேயறைந்ததுபோல் நின்றான். தனக்கு எத்தகைய தண்டனையை அளிக்க செல்வி முயன்றிருக் கிறாள் என்பதும், அவள் யாரென்பதும் புரிந்தது அவனுக்கு. ஏதோ கூற முயன்ற அவனிடமிருந்து சொற்கள் ஏதும் வெளிவரவில்லை. ஆனால் அந்த முதிய வனின் குரல் இரைந்து ஒலித்து அந்த மண்டபத்தையே அதிர வைத்தது.

"கோச்சடையா, இவன் வீரபாண்டியத் தேவரைக் கொன்றவன் என்பது உண்மைதானா? வெறும் வதந்தி யென்றல்லவா இத்தனைகாலமும் எண்ணியிருந்தேன்? நீ கேட்டுக் கொண்டதாலேயே இவனுக்குச் சிகிச்சை யளிக்க ஒப்புக் கொண்டேன். இனி இவன் என்

பார்வையில் பட்டால் அரையனின் மகள் செய்ய எண்ணியதை நானே முடித்து விடுவேன். இனி என் முகத்தில் நீயும் விழிக்காதே" படபடவென்று பொரிந்த அந்த முதியவன் மண் கலயத்தை அங்கேயே போட்டு உடைத்து எறிந்துவிட்டுத் திரும்பியும் பாராமல் குன்றின் மறுபகுதியை நோக்கி விறுவிறுவென்று நடந்தான்.

மானாபரணன் நிதானத்துக்கு வருவதற்குச் சில கணங்கள் சென்றன. சற்றுக் கழித்து கோச்சடையனை ஏறிட்டவன் "கோச்சடையா, நான் நினைவிழந்த பின்னர் என்ன நடந்தது, சொல்" என்றான்.

கோச்சடையனின் முகத்தில் விரக்தி தெரிந்தது "நம் தாக்குதல் முற்றிலும் முறியடிக்கப்பட்டது மானா பரணரே, அந்தப் பெண் செல்வியின் சகோதரன் வல்லபனும் சோலக இளவரசியின் கானகத்துக் களிறு களும் வீரகேரளரையும் அவரது வீரர்களையும் சிதறடித்து விட்டனர். வீர கேரளர் மலைக் கணவாயின் வழியே தப்பிச்செல்ல முயன்றார்"

மானாபரணன் முகத்தில் சந்தேகம் வலுத்தது "முயன்றார் என்றால்...?"

கோச்சடையன் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டான் "உம்மைக் கோட்டாற்றுக்கருகே தாக்கித் திசை திருப்பிய சோழர்படை நம் சுந்தர பாண்டியரைப் பல திசைகளிலிருந்தும் தாக்கி, அவரது ஆயுதங்களைக் கைப்பற்றி முல்லையூரின் தென்கோடிக் கானகத்துக்கு விரட்டிவிட்டது. சோழ இளவல் அப்படியே பரலிமா நகரையும், காந்தளூர்ச்சாலையிலிருந்த உமது வீரர் களையும் அழித்துவிட்டு, மலைக்கணவாயின் வழியே திரும்பிக் கொண்டிருந்திருக்கிறான். தப்பிச் செல்ல முயன்ற வீர கேரளரையும் எதிர்கொண்டிருக்கிறான்"

மானாபரணனின் விழிகள் கோச்சடையனை வெறித்தன.

கோச்சடையன் தொடர்ந்தான் "வீரகேரளருடன் தப்பிய சேர வீரர்கள் அனைவருமே கொல்லப்பட்டனர். போரில் சோழனின் பட்டத்து யானை வீரகேரளனின் புரவியைக் கீழே தள்ளி மிதித்துக் கொன்றுவிட்டது. வீர கேரளன் சரிந்து அந்த யானையின் கால்களுக்கிடையே சிக்கிவிட்டார். அவரை அப்படியே கால்களால் இடுக்கி நசுக்கி எறிந்துவிட்டது அந்த அத்திவாரணம்"*

மானாபரணனிடமிருந்து சொற்கள் ஏதும் வெளிவரவில்லை. பிரமை பிடித்த அவன் விழிகள் கோச்சடையனை வெறித்தபடியிருந்தன.

சற்று நேரம் மௌனம் சாதித்த கோச்சடையன் மீண்டும் தொடர்ந்தான் "மானாபரணரே, மனங்கலங்கி விட வேண்டாம். நாம் இப்போது மதுரையம்பதியின் வெகு அருகில் இருக்கிறோம்.

நம்பிக்கை இழந்துவிட வேண்டாம். இப்போதும் உமது மகன்களைக் காப்பாற்றவும், மதுரையைக் கைப்பற்றவும் வழியிருக்கிறது"

மானாபரணன் முகத்தில் வியப்பு பரவியது "என்ன சொல்கிறாய் கோச்சடையா? என் இரு மகன்களையும் மதுரையின் சிறையிலிருந்து மீட்க இயலும் என்றா கூறுகிறாய்? எப்படி?" அவன் குரலில் திகைப்பும், வியப்பும் பூரணமாக ஒலித்தது.

கோச்சடையன் விழிகள் பளிச்சிட்டுக் கிடந்தன. "ஆம், மானாபரணரே, சேர நாட்டுக் கோலாத்திரி வம்சத்துக் காழிவர்மன் உமது திட்டங்களுக்கு உடன்படவில்லை. ஆனால் அவன் மதுரையைக் கைப்பற்ற வேறுவழியில் திட்டமிட்டிருக்கிறான்"

மானாபரணன் முகத்தில் வியப்பு வழிந்தது "மூஷிக மன்னன் காழிவர்மனா?"

---

**★ திருவாலங்காடு செப்பேடுகள் வார்வள வியகழல் வீரகேரளனை முனைவயிற் பிடித்துதன் ஆனைகிடுவித்து அத்திவாரணக் கயிற்றால் உதைப்பித்தருள். – ராஜாதிராஜ சோழன் மெய்கீர்த்தி.**

"ஆம். பூந்துறை இளவலோடு சாளுக்கியரைச் சென்று சந்தித்து உதவி பெற்றது மட்டுமல்ல, இப்போது சாளுக்கிய வீரநாராயணனோடு மதுரையை நெருங்கி வந்து கொண்டிருக்கிறான். இன்னும் இரு தினங்களில் வைகைக்கரையை அடைந்து விடுவான். எனது வீரர்களையும் எஞ்சிய உமது ஈழத்து வீரர்களையும் மதுரையின் வீதிகளில் சாதாரண மக்களாக உலவ விட்டிருக்கிறேன். மதுரை தாக்கப்படும்போது நாமும் காழிவர்மனுடன் சேர்ந்து கொள்ளலாம்"

மானாபரணனின் முகத்தில் தெளிவு பிறந்தது. இயற்கையான மூர்க்கத்தனமும், பழிவாங்கும் உணர்வும் அவன் விழிகளில் படரத் தொடங்கியது. சற்று நேரம் கோச்சடையனை வெறித்தவனிடமிருந்து கேள்வி யொன்றும் உதிர்ந்தது "கோச்சடையா, மதுரையைக் காழிவர்மனே கைப்பற்றட்டும். அரண்மனைக்குள்ளும், சிறைச்சாலைக்கும் செல்ல ரகசிய வழி இருப்பதாகக் கொற்கை அரண்மனையின் முதிய ஸ்தானிகர் கூறினார்... சரி, இந்த மணலூர் குலசேகர பாண்டியன் என்பவன் யார்? அவன் எங்கிருக்கிறான்?" மானாபரணனின் கேள்வி ஆவலுடன் வந்தது.

கோச்சடையன் விழிகளில் திகைப்பு பூரணமாகத் தெரிந்தது. அடுத்து அவன் அளித்த பதிலில் மானா பரணனையும் அந்தத் திகைப்பு தொற்றிக் கொண்டது "மானாபரணரே, மணலூர் குலசேகரப் பாண்டியன் மீனாட்சி ஆலயத்தின் குளத்தை வெட்டுவித்தவன். பாண்டியன் படித்துறை என்று அவன் பெயரில் படித்துறை இருக்கிறது. அவனது சிற்பமும் படித் துறையின் ஓரத்தில் செதுக்கப்பட்டிருக்கிறது" என்றான் கோச்சடையன்.

# 43. மானாபரணன் திட்டம்

"திருமன்னி வளர இருநில மடந்தையும்
போர்ச்செயப் பாவையும்
சீர்த் தனிச்செல்வியும் தன் பெருந்தேவி யராகி இன்புற.,
நெடிதியல் ஊழியுள் இடைதுறை நாடும்,
துடர்வனவேலிப் படர்வனவாசியும், சுள்ளிச்
சூழ்மதில் கொள்ளிப்பாக்கையும்..."

*கட்டியம் கூறுபவனின் குரல் கணீரென்று ஓங்கி ஒலித்துக் கொண்டிருக்க, பிரதானிகளும், ஐம்பெரும் குழுவும், அஞ்சுவண்ணத்தார் வணிகக்குழுவினரும், படைத்தலைவர்களும், நேர் எதிரே நின்றிருந்த மக்கள் கூட்டமும் எழுப்பிய வாழ்த்தொலி விண்ணை அதிர வைக்க, மகர தோரணங்களும் பொன்மணிமாலைகளும் கொடிகளும் அசைய, அவைக்குள் பிரவேசித்தான் மன்னாதி மன்னனான கோப்பரகேசரிவன்மனான ராஜேந்திரசோழதேவன். ஆறடிக்கும் குறையாத உயரமும், இடைவிடாத பயிற்சியைக் காட்டிய வைரம் பாய்ந்த தேகமும், கூர்விழிகளும் அவன் வயதை நிர்ணயிக்க விடாமல் அடித்திருக்க, அவையையும், முத்தாணி மண்டபத்தையும் ஊடுருவிய அந்த விழிகளில் சதா கனவுச்சாயையொன்றும் படர்ந்து கிடந்தது. மக்களுக்கும் அவைக்கும் தலைவணங்கி, சிம்மாசனத்தில் அப்புறமோ இப்புறமோ சாயாமல் நேராக அமர்ந்தவனின் விழிகள் தன் படைத்தலைவர்கள் நின்றிருந்த பகுதியை ஊடுருவின. செக்கச்செவேலென்ற நிறத்துடன் ஆஜானு பாகுவான ஆகிருதியுடன் நின்ற கிருஷ்ணன்ராமனான மும்முடிச் சோழன் பிரும்மராயனும், அவனை அச்சில் வார்த்ததுபோன்ற தோற்றத்துடன் சற்று இளைய வயதுடைய அவனது மகன் மாராயன் அருண் மொழியான உத்தமசோழ பிரும்ம மாராயனும், கொங்கு நாட்டு க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வானும் மன்னன் விழியசைப்புக்காகக் காத்திருந்தனர்.*

நேர் எதிரே நின்ற மக்கள் கூட்டத்தைக் கையசைத்து அருகில் அழைத்தவன், அவர்களில் முதியவர்களாகத் தெரிந்தவர்களையும், இளையவர்களையும் தனித்தனியே விசாரித்தான். அவர்களது குறைகளையும், கோரிக்கை களையும் வெகு நிதானமாகக் கேட்டுக் கொண்டவன் தக்க பதில்களையளித்த பின்னர் வணிகக் குழுவின ரையும் விசாரித்து அனுப்பினான். அமைச்சுக்குழுவுக்கும் தக்க ஆணைகளை அளித்து அனுப்பிவைக்க உச்சிப் பொழுதும் கடந்தது. அவை முடிந்த பின்னர் தன் படைத்தலைவர்களை அழைத்துக் கொண்டு முத்தாணி மண்டபத்தை அடுத்த பெரும் கூடமொன்றில் வந்து அமர்ந்தவன் விழிகள் கொங்காள்வானை நோக்கி கேள்விக்குறியுடன் விரிந்தது.

நெடுநெடுவென்ற உயரத்தில் உருவி விடப்பட்ட சாட்டைபோன்ற மெல்லிய தேகத்துடன் நின்ற கொங்காள்வானின் சொற்கள் அளவுடன் உதிர்ந்தன.

"மன்னவா, சாளுக்கிய வீர நாராயணன் காவிரி தெற்கே திரும்பும் பகுதியைக் கடந்துவிட்டான். உடன் பூந்துறையின் படைப்பிரிவும் இணைந்திருக்கிறது. எண்ணாயிரம் வீரர்களும், முன்னூற்றுக்கும் மேற்பட்ட போர்க்களிறுகளும் இருக்கின்றன பிரபு. அவன் நாளை மறுதினம் வைகையைக் கடந்துவிடுவான். மன்னர் உத்தர விட்டால்.." என்று இழுத்தவனைக் கையமர்த்திய மன்னனின் விழிகள் அமைச்சரும் படைத் தலைவரு மான கிருஷ்ணன்ராமனை நோக்கித் திரும்பின.

படைத்தவைனின் யானை விழிகள் மன்னனை ஏறெடுத்தன "பிரபு, மதுரை நகருக்குள் ஈழத்தவர் நட மாட்டம் இருதினங்களாக அதிகரித்திருக்கிறது. மானாபரணனும் இங்குதான் இருக்கிறான்" என்றார் சாவதானமாக.

"மானாபரணன் இருப்பதை எப்படி அறிந்தீர்?"

பதிலுக்கு தூரத்தில் நின்ற காவலர்களை நோக்கி சமிக்ஞை செய்த படைத் தலைவர் அடுத்து காவலர்கள் அழைத்துவந்த முதியவனை இழுத்து மன்னன் முன்பாக நிறுத்தினான்

“இவன் மதுரையின் தென்மேற்கிலிருக்கும் கூடல் மலையின் பூர்வகுடி மருத்துவன் பிரபு. மானா பரணனுக்கு சிகிச்சை அளித்து காப்பாற்றியிருக்கிறான். இரு தினங்களுக்கு முன்பாகத் தானே முன்வந்து என்னைக்கண்டு விவரம் தெரிவித்தான்”

அந்த முதியவனது கரங்கள் மன்னனை நோக்கிக் கூப்பின “மன்னவா, எமது பரம்பரைத் தொழிலுக்குரிய தர்மம் கருதித்தான் கோச்சடையன் அழைப்பின் பேரில் சென்றேன். உக்கிரப் பாண்டியர் எங்களைப் பல காலமும் ஆதரித்தவர். கொற்கை வீரபாண்டியத் தேவரைக் கொன்றவன் மானாபரணன் என்னும் உண்மையை அவன் மூலமே அறிந்தேன். அறிந்ததும் சிகிச்சையைப் பூர்த்தி செய்யாமல் வந்து படைத்தலைவரிடம் நடந்தவற்றைக் கூறினேன். என்னை மன்னித்துவிடுங்கள்”

மன்னனின் விழிகள் படைத்தலைவனை ஏறெடுத்தன.

கிருஷ்ணன்ராம பிரும்மமாராயனின் கரங்கள் அந்த முதியவனை வெளியேற சமிக்ஞை செய்தன. அவன் வெளியேறியதும் மன்னனை ஏறெடுத்தவன் “மன்னவா, மூன்று தினங்களுக்கு முன்னதாகவே ஈழத்து வீரர்கள் நடமாட்டம் அதிகரித்திருப்பதைக் கண்டேன். சாளுக் கியரின் படைப்பிரிவு மதுரையை நெருங்குவதைப் பயன் படுத்தி, மானாபரணன் தன் இரு மகன்களையும் தப்புவிக்க உத்தேசித்திருக்க வேண்டும். எனவே...”

“எனவே...?”

“எனவே நம் கொங்காள்வானின் திட்டப்படி அவரது படைப்பிரிவில் ஈழத்தவர் உரையாடும் முறையில்

பேசக்கூடிய வீரர்கள் இருபதின்மரை அவர் கொங்கு நாட்டிலிருந்து வரவழைத்துக் கொடுத்தார்”

க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வான் தொடர்ந்தான் “ஆம் பிரபு. படைத்தலைவர் கட்டளையின்பேரில் என் வீரர்களை வரவழைத்து, மதுரையில் மக்கள் அதிகம் கூடும் வீதிகளில் ஈழத்தவர் போல உரையாடச் செய்து உலவவிட்டேன். பின் மக்கள் பார்வையில் படும்படி நம் சோழ வீரர்களைக் கொண்டு அவர்களைச் சிறைசெய்து மானாபரணனது மகன்கள் இருக்கும் சிறைச்சாலையில் அடைத்து வைத்தேன்”

மன்னனது இதழ்களில் முறுவல் விரிந்தது.

“ஈழத்தவரைக் கண்டதும் சோழவீரர்கள் சிறைசெய் கிறார்கள் என்ற செய்தி பரவியதும் மானாபரணனின் வீரர்கள் அனைவரும் அவர்களின் மறைவிடங்களை நோக்கி விரைந்துவிட்டார்கள். அவர்களைப் பின் தொடர்ந்து சென்று அந்த இடத்தையும் கண்டறிந்து வைத்துக் கொண்டேன். சிறையில் நம் கொங்குநாட்டு வீரர்களின் நேரடிக் கண்காணிப்பில் மானாபரணனின் மகன்கள் இருக்குமாறும் செய்திருக்கிறேன்”

அடுத்து ராஜேந்திர தேவனின் விழிகள் கிருஷ்ணன் ராம பிரும்ம மாராயனை ஏறிட்டன. மன்னனது கூர் விழிகளில் தெரிந்த கேள்வியைப் புரிந்து கொண்ட படைத்தலைவரது கரம் கச்சையிலிருந்து ஓலைக் குழலொன்றை எடுத்து நீட்டியது. அவர் முகத்தில் சற்று வருத்தமும் தெரிந்தது.

படைத்தலைவரது யானை விழிகளில் புலப்பட்ட வருத்தத்தைக் கவனித்தபடியே அந்த ஓலைக்குழலைப் பெற்றுக் கொண்ட மன்னன் படைத்தலைவருக்கே எழுதப்பட்ட ஓலை அது என்பதையும், ஓலையில் ராஜமுத்திரை பொறிக்கப்பட்டிருப்பதையும் கண்டான். மன்னன் முகத்திலிருந்த முறுவல் நன்றாக விகசித்தது.

சோழ இளவல் ராஜாதிராஜ சோழதேவன் மானாபரணனும் கோச்சடையனும், முல்லைநாட்டுப் போரில் எஞ்சிய வீரர்களுடன் மதுரைக்குள் புகுந்துவிட்டதைப் படைத் தலைவருக்குத் தெரிவித்திருந்தான். மன்னரை எதிர்த்து வந்துகொண்டிருக்கும் சாளுக்கிய வீர நாராயணனைத் தானே நேரில் சந்தித்துவிட்டுத் திரும்புவதாகவும் வடக்கே காஞ்சியிலிருந்து அரையன் ராஜராஜனை அழைத்திருப்பதாகவும், சேரலாதர் பிரதிநிதியாக பூபேந்திரச் சோழனாக ஏற்றுக்கொண்ட பொறுப்பு முடிந்தபின்னர் பட்டணப்பிரவேசத்தை வைத்துக் கொள்ளலாமென்றும் உத்தரவிட்டிருந்தான்.

மன்னனுக்கும் தனியே ஓர் ஓலைக்குழல் அனுப்பியிருந்தான் சோழ இளவல்.

“வையை யன்ன வழக்குடை” மதுரையின் கோட்டை வாயில்களில்* வழக்கம்போல மக்கள் வந்துசென்று கொண்டுதானிருந்தனர். மாடங்களில் தீபங்களை ஏற்றிவைத்ததால் “நெய் படக் கரிந்த திண்போர்க்கதவும்” வழக்கம்போலவே காலைப் பொழுதில் வீரர்களால் சுத்தம் செய்யப்பட்டுக் கொண்டுதானிருந்தன. கதவுகளைக் கடந்ததும் ஆறு வற்றிக்கிடப்பது போல் அகன்று நீண்ட வீதிகளில் புரவிகளும், ரதங்களும், சிவிகைகளும் சாதாரணமாகச் சென்று கொண்டிருந்தன. மக்கள் நடமாட்டத்தில் எந்த. மாற்றமும் தென்படவில்லை. கோட்டை வாயில்களிலும், வீதிகளின் முகப்பிலும் உயர்ந்த கம்பங்களிலிருந்த புலிக்கொடிகள் படபடத்துப் பறந்து கொண்டிருந்தன. இல்லங்கள் தோறும் நின்ற தூண்களும், அகன்ற திண்ணைகளிலும் வாயிற்படிகளிலும் தெருக்களிலும் மஞ்சளும், காவியும் கலந்து இடப்பட்ட அழகிய கோலங்களும், தோரணங்களும் மதுரையின் குன்றாத மங்கலத்தைப் பறைசாற்றிக் கொண்டுதானிருந்தன. மதுரையின் அத்தனை செல்வங்களுக்கும், மகிழ்ச்சிக்கும் நானே பொறுப்பு என்று

★ மதுரைக்காஞ்சி, மதுரை கோட்டை வாயில் வர்ணனை.

முழங்கிய மீனாட்சி ஆலயத்தின் மணியோசை ஓயாது ஒலித்துக் கொண்டுதானிருந்தது.

பத்துகாதத் தொலைவில் மதுரையைக் கைப்பற்ற வந்து கொண்டிருக்கும் சாளுக்கியரின் படையைப் பற்றியோ, மதுரை நகருக்குள்ளேயே கலகமும், கலவரமும் தொடங்கக் காத்திருக்கும் ஈழத்து வீரர்களைப் பற்றியோ மக்கள் கவலை கொண்டதாகவே தெரியவில்லை. கோட்டையின் வாயிலுக்கு வெளியே கொண்டு செல்லப் பட்டு, வைகையில் நீராடித் திரும்பிய களிறுகளும், புரவி களும் மட்டும் வாயிலை அடுத்து நீண்ட மதிலின் ஓரங் களில் நிறுத்தப்பட்டிருந்தன. சோழ வீரர்கள் பயிற்சிகளை முடித்துவிட்டு, கோட்டையின் வடக்கு வாசலில் குழுமத் தொடங்கியிருந்தனர்.

நகரின் தென்பகுதியின் வாயிலில் தென்பட்ட காட்சி சற்று வேறாக இருந்தது. தெற்கேயிருந்து வந்த பொதி வண்டிகள் பல வீதியோரங்களில் நிறுத்தப்பட்டிருந்தன. வழக்கமான காட்சிதான் என்றாலும், சீனத்து, அராபிய, யவன வணிகர்களுடன் தமிழகத்தின் தென்பகுதியி லிருந்து வந்தவர்களும் கூட்டம் கூட்டமாக விவாதித்துக் கொண்டும், விலை பேசிக் கொண்டுமிருந்தனர். அந்த வணிகர்களிடையே பல புதிய இளைஞர்களும் தெரிந்தனர்.

தெற்கு வாயிலிலிருந்து கோட்டைக்கு வெளியே நீண்ட பாதையில் அரைக்காதத் தொலைவு சென்றதும் இருபுறமும் மரங்களடர்ந்த பகுதியும் தொடர்ந்து பசேலென்ற வயல்வெளியும் விரிந்தன. தென்னை, மா, பலா, புன்னை என அடர்ந்த தோப்பாகத் தெரிந்த பகுதி யில் உள்ளடங்கித் தெரிந்தது ஓர் இல்லம். இல்லத்தின் வாயிலில் கட்டவிழ்க்கப்பட்ட பொதிவண்டிகள் பலவும், அடிமரங்களில் கட்டப்பட்ட காளைகளும், புரவிகளும் நின்றிருந்தன. கறுத்த அடிமைகள் பலர் பொதிகளைப் பிரித்துக்கொண்டும் மறுபுறத்தில் கொட்டப்பட்டிருந்த

காய்கனிகளையும் கிழங்குகளையும் தரம் பிரித்துக் கொண்டும் அருகில் நின்ற மற்ற வணிகர்களிடம் விவாதித்துக் கொண்டும் இருந்தனர்.

பார்வைக்கு வணிகர் இல்லமாகவே தெரிந்தாலும் உட்புறத்தில் இல்லத்தின் வாயிலையும் தாழ்வரையையும் கடந்ததும் முற்றத்திலும் கூடத்திலும் வாட்களும், ஈட்டிகளும் குவிக்கப்பட்டு அருகில் வணிகர்கள் உடையில் ஈழத்துவீரர்கள் பலர் நடமாடிக் கொண்டிருப் பதும் உடன் பாண்டிய வீரர்களும் இருப்பதும் புலப் பட்டது. கூடத்தைக் கடந்து உள்ளே இருபுறங்களிலும் நீண்ட அறைகளிலும் வீரர்கள் நிறைந்து கிடந்தனர். இறுதியாக, கட்டிடத்தின் பின்புறம் உணவு சமைக்கப் பட்டுக் கொண்டிருந்தது.

சற்றுத் தள்ளி மற்றோர் கூரை வேய்ந்த சிறிய இல்லமும் அதன் வாயிலில் பல புரவிகளும் நின்றன. வாயிலில் நின்றவனிடம் அவ்வப்போது பாண்டிய வீரர்கள் ஏதோ கூறிவிட்டுச் செல்வதும், அவன் உள்ளே சென்று திரும்பு வதுமாக இருந்தான். உள்ளே தனியறையொன்றில் அமர்ந்து சாளரத்தின் வழியே தூரத்தில் தெரிந்த பொதி வண்டிகளையும், வணிகர்களையும் கவனித்துக் கொண்டிருந்தான் மானாபரணன். எதிரில் அமர்ந்து அவனையே கவனித்துக் கொண்டிருந்த கோச்சடை யனின் முகம் அவன் அமைதியிழந்திருப்பதைத் தெளி வாகவே புலப்படுத்தியது. அடுத்து ஒலித்த அவன் குரலிலும் சற்று வேகம் தொனித்தது.

“மானாபரணரே, நான்கு தினங்களாகியும் சாளுக்கியப் படைகள் ஏன் வந்து சேரவில்லையென்பது தெரிய வில்லை. நாம் அவர்களுடன் கலந்து மதுரையைத் தாக்கப் போகிறோமா என்பது புரியாமல் நம் வீரர்கள் அமைதியிழந்திருக்கிறார்கள். சற்று உமது திட்டமென்ன வென்பதைத் தெளிவாகக் கூறுங்கள்”

மானாபரணன் நிதானமாகத் திரும்பி கோச்சடையனை ஏறெடுத்தான். "கோச்சடையா, நம்மிடம் இருக்கும் வீரர்கள் மட்டும் மதுரையைக் கைப்பற்றப் போதாது என்பது உனக்கும் தெரியும். சாளுக்கியர்களுடன் வரும் மூஷிக மன்னனுக்கு ஓலையனுப்பியிருக்கிறேன். மறுமொழியேதும் இதுவரை வரவில்லை. எப்படியும் மதுரை தாக்கப்படும். இப்போதுதான் செய்தி வந்தது"

"என்ன செய்தி?"

"மதுரையின் வடக்கு வாயிலில் வீரர்களும், போர்ப் புரவிகளும் களிறுகளும் இன்று காலைமுதல் குவிக்கப்படுகின்றன. அதன் பொருள் விளங்குகிறதா உமககு?"

கோச்சடையன் முகத்தில் சற்று மலர்ச்சி தெரிந்தது. சற்று சிந்தித்தவன் "அப்படியானால்... சாளுக்கியப் படைகள் நெருங்கிவிட்டன. படைபலம் குறைவாக இருப்பதால் சோழன் மதுரையின் கோட்டைக்கு அருகில் எதிர்க்கவும், இயலாவிட்டால் உள்ளே இருந்து பாதுகாத்துக் கொள்ளவும் எண்ணுகிறான்" என்றான் சற்று உற்சாகம் தொனித்த குரலில்.

"ஆம், ஆனால் காழிவர்மனிடமிருந்து பதில் வராதது குறித்துத்தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன். அவன் இந்தத் தாக்குதலில் நாம் கலப்பதை விரும்பவில்லை என்றே எண்ணுகிறேன்" என்ற மானாபரணன் சற்று நேரம் மௌனம் சாதித்தான்.

மீண்டும் அவன் குரல் வெகு திடமாக ஒலித்தது "கோச்சடையா, சோழனை அத்தனை குறைவாக எடைபோட இயலாது. சாளுக்கியனின் தாக்குதலை எதிர்க்க ஏதேனும் தந்திரம் செய்துவிடுவான். நாம் இதில் கலந்து கொள்ளாமலிருப்பதும் ஒரு வகையில் நன்மைதான்"

கோச்சடையன் விழிகளில் மீண்டும் குழப்பம் படர்ந்தது.

மானாபரணன் தொடர்ந்தான் "போர் மூண்டதும் கோட்டையிலிருக்கும் சோழ வீரர்கள் அனைவரின் கவனமும் தாக்குதலை எதிர்கொள்வதில்தான் இருக்கும். அந்தச் சந்தர்ப்பத்தை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்"

"எப்படி?"

"கோட்டைக்குள் சோழர் படையின் மூன்று படைத் தலைவர்கள் இருக்கிறார்கள் சாளுக்கியரைச் சந்திக்க அவர்கள்தான் செல்வார்கள். சோழ ராஜேந்திரன் வெறும் படைத்தலைவர்களை எதிர்க்கச் செல்வது வழக்கமில்லை. அப்படிச் சென்றாலும் இறுதியாகத்தான் செல்வான்"

"சரி...?"

"கோட்டைக்கு வெளியே போர் நடக்கும்போது அரண்மனையில் காவல் வீரர்கள் மட்டுமே இருப்பார்கள்"

"உண்மைதான்"

"மணலூர் குலசேகர பாண்டியன் நமக்குக் காட்டிய வழியிருக்கிறதல்லவா? அதன் வழியே உன் வீரர்களை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குள் நுழைந்து விடு. இந்தத் தோப்பிலிருந்து செல்லும் ரகசிய வழியில் சிறைச்சாலைக்குள் புகுந்து என் மகன்களை மீட்டுக் கொண்டு நானும் அரண்மனைக்கு வந்துவிடுகிறேன். சோழ மன்னனை அரண்மனைக்குள்ளேயே தீர்த்து விட்டால், கோட்டை நம் வசமாகிவிடும். சாளுக்கியனும், காழிவர்மனும் பிறகு நம்மை அனுசரித்துத்தான் ஆக வேண்டும்"

கோச்சடையன் பிரமித்தான். திட்டம் என்னவோ மிகச்சரியாக நிறைவேற்றக் கூடியதாகவே தெரிந்தது.

வெகுநேரம் விவாதித்த கோச்சடையனின் நடைமுறைச் சந்தேகங்களுக்கு விளக்கமான பதில் அளித்த

மானாபரணன் விழிகளில் மெல்ல மெல்லக் குரூரமும், கொலைப்பார்வையும் ஏறத் தொடங்கியது.

அவர்களது விவாதம் முடியும் தருணத்தில், வாயிலில் நின்ற அந்த ஈழ வீரன் தடதடவென்று உள்ளே பிரவேசித்தான்.

"பிரபு...பிரபு... சாளுக்கியர் படைகள் வைகையைக் கடந்து கோட்டையை நெருங்கிக் கொண்டிருக்கிறது. நம் வீரன் இப்போதுதான் தெரிவித்தான்" என்றான் பதற்றத்துடன்.

மானாபரணன் விழிகளில் கொலைப் பார்வை பூரணமாகப் படர்ந்தது.

# 44. ஆசார்யர் புரிந்த குற்றம்

**வை**கையில் நீராடிவிட்டு, மதுரையின் கோட்டையைக் கடந்து, அகன்ற வீதிகளில் விளையாடி, அரண்மனையின் தென்புறத்தில் புகுந்து தவழ்ந்த மாலைநேரத் தென்றல், நந்தவனத்தின் அந்த அழகிய தடாகத்தில் மலர முற்பட்டுக் கொண்டிருந்த அல்லி மலர்களுடன் சற்று உறவாடிவிட்டு, மற்ற மலர்ச்செடிகளின் மீது தவழ்ந்து அத்தனை மணங்களையும் சுமந்து கொண்டு அரண் மனையின் மேன் மாடத்து உப்பரிகையை நோக்கி எழுந்தது. உப்பரிகையை நோக்கிப் படர்ந்து உயர்ந்த முல்லைக்கொடியொன்று தலையை நீட்டித் தன் மலர்க்கண்களால் உள்ளே எட்டிப் பார்க்க முயன்று அச்சத்தால் சட்டென்று தலையை இழுத்துக் கொண்டது. முல்லையின் அச்சத்தைப் போக்க அதை வருடிக் கொடுத்த தென்றல் உப்பரிகையில் இறங்கித் தூணொன்றைப் பிடித்தபடி நின்றுகொண்டிருந்த சோழ ராஜேந்திர தேவனைக் கண்டதும் சற்றுத் தயங்கிவிட்டு, மெல்ல அச்சத்தை உதறிக்கொண்டு அவனை நெருங்கி, தான் சுமந்துவந்த மணங்களைக் கொண்டு அவனைச்

சூழ்ந்து கொள்ளவும் முற்பட்டது. மலர்களின் மணத்தை நுகர்ந்ததாலோ, அல்லது நந்தவனத்து அல்லி மலர் களைவிட அழகிய விழிகளுடன் அந்தப் பெண் அவன் நின்றிருந்த உப்பரிகையை நெருங்கிய காலடியோசையைக் கேட்டதாலோ, சோழ மன்னனின் கூர் விழிகளில் அதுவரை நிலவிக்கிடந்த சிந்தனை மறைந்து, வாத்ஸல்யம் மலரத் தொடங்கியது. அந்த வம்சத்துக்கே உரிய நீள்வட்ட முகமும், அகன்ற நெற்றியில் சிந்தனையைக் குறிக்கும் கோடுகளும், வீரமும் அழகும் இணைந்த அந்த விழிகளும் எதிரே வந்து நின்ற அந்த மங்கையைக் கண்டதும் இன்னும் மலர்ந்து, அன்பைக் கொட்ட முற்பட்டன. அவன் இதழ்களிலிருந்து உதிர்ந்த சொற்களிலும் அன்பு விரவிக் கிடந்தது.

“செங்கமலச் செல்வி, ஏன் தயங்கி நிற்கிறாய்? வா மகளே, உன்னைக் கண்டு பல மாதங்கள் ஆகிவிட்டன. இரு தினங்களுக்கு முன்பே உன்னை எதிர்பார்த்தேன்”

மன்னனின் விழிகளிலும் உதிர்ந்த வார்த்தைகளிலும் தொனித்த அன்பு செல்வியின் உடலை ஒருமுறை சிலிர்க்க வைத்தது.

“மன்னவா, புலியாராவின் போர் முடிந்ததும் வருமாறு தந்தையிடமிருந்து ஓலை வந்தது. சென்று அவரைக் கண்டுவிட்டுத் திரும்பச் சற்றுத் தாமதமானது” என்றாள் செல்வி.

“காஞ்சிக்குச் சென்றாயா மகளே, அல்லது...”

“இல்லை மன்னவா, திருமோகூர் ஆலயத்தில் அவரைச் சந்தித்தேன்”

“இத்தனை அருகில் வந்துவிட்டானா அரையன்? உன்னைப் போல் உன் தந்தைக்கும் வேகம் அதிகம்தான்”

“இளவரசர் நாளை உச்சிப் பொழுதுக்குப்பின் சாளுக்கிய வீரநாராயணனைச் சந்திக்கலாம் என

எதிர்பார்க்கிறார். எனவே தந்தையாரைக் கிழக்கிலிருந்து தாக்கத் தொடங்குமாறு உத்தரவிட்டிருக்கிறார்”

“வீரநாராயணன் கோலாத்திரி மன்னன் காழிவர் மனுடன் இணைந்து வருவது சற்று வியப்பாகத்தான் இருக்கிறது. எப்படி அவர்கள் இணைந்தார்கள்?” ஏற்கெனவே அறிந்த விஷயத்தைப் புதிதாக ஏதோ சந்தேகம் கேட்கும் மாணவனைப் போல் எழுந்த மன்னனின் கேள்வி தொனித்த விதம் செல்வியை எச்சரித்தது. சற்று நேரம் மௌனம் சாதித்தாள் அவள்.

மன்னன் கேள்வியிலிருந்த சூட்சுமம் செல்விக்கு நன்றாகவே புரிந்தது. ஆசார்யரின் குற்றத்தை மன்னன் ஆராயத்தொடங்கியிருக்கிறான் என்பதும், சீடனாக வருபவனின் பூர்வோத்திரத்தை ஆராயாமல் பயிற்சி யளித்தது குற்றம்தான் என்பதும், அங்கு பயின்ற முகுந்தன்தான் சாளுக்கியரையும் மூஷிக மன்னனையும் இணைத்திருக்கிறான் என்பதை மன்னன் அறிந்திருக் கிறான் என்பதும், தான் சாட்சியாக்கப்படுவோம் என்பதும் புரிந்தது அவளுக்கு.

செல்வியின் அழகிய விழிகள் மன்னனை நன்றாக ஏறெடுத்தன. அவள் சொற்களும் திடமாக ஒலித்தன “மன்னவா, ஆசார்யரைவிட சமமாகப் பழகும் சீடர்கள் ஒருவரையொருவர் அறிந்திருப்பது இயல்பு. அந்த முகுந் தனை நான் முன்பே பாடசாலையில் கண்டிருக்கிறேன். என்னுடன் முல்லை நாட்டுக்கு ஆசார்யர் அனுப்பி வைத்ததும் அவனைத்தான். என்னாலும் அவனைப்பற்றி அப்போது அவனது உள்நோக்கத்தை அறிந்து கொள்ள இயலவில்லை. செங்கதிர் மாலையைக் களவாடிக் கொண்டு என்னுடனேயே வந்திருக்கிறான் அவன். ஆசார்யர் எத்தனை தூரம் அவனைப் பற்றி அறிந்திருக்க இயலும்?”

“இருந்தாலும் மகளே, நமக்கு எதிரியாக வருபவன் நம்மிடமே இத்தனை காலம் போர்முறைகளைப்

பயின்றிருக்கிறான். அதற்குக் காரணம் ஆசார்யர் அவனை ஆராயமல் அனுமதித்ததுதானே?"

செல்வி சற்று மௌனம் சாதித்தாள். அவள் விழிகளில் விஷமம் படர்ந்தது.

"மன்னவா, எதிரி நாம் அறியாதவகையில் வந்து போர் முறைகளைக் கற்பவன் ஒற்றனுக்குச் சமம். நம் மீதே கற்றதைப் பிரயோகிக்க எண்ணும் ஒற்றனுக்கு என்ன தண்டனை?"

"வேறென்ன, சிரச்சேதம்தான். போர்க்களிற்றின் கால்களால் தலையை இடர வைத்துவிடலாம்"

"அந்த ஒற்றனுக்கு உதவியாயிருப்பவருக்கு என்ன தண்டனை?"

"அவனுக்கும் அதே தண்டனைதான்"

"சோழர் நீதியில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்றோ, வேண்டியவர் வேண்டாதவர் என்றோ பாகுபாடு இருக்கிறதா?"

"நிச்சயம் கிடையாது. குற்றம் நிரூபிக்கப்பட்டால் யாராக இருந்தாலும் தண்டனை உண்டு" மன்னனின் குரல் உறுதியுடன் ஒலித்தது.

"அப்படியானால் ஆசார்யருக்கு உயர்ந்த பரிசு ஏதேனும் இருந்தால் கொடுத்துத் தண்டித்து விடுங்கள் மன்னவா"

"என்ன சொல்கிறாய் மகளே?"

"ஆம் மன்னவா. இதே செங்கதிர்மாலையை சோழர் பொக்கிஷத்திலிருந்து களவாடிய சேர ஒற்றன் ஜெயவர் மனுக்கு அதே மாலையைப் பரிசாக அளித்தார் உங்கள் சகோதரர். அவன் திருப்பியளித்தபோதும் தாங்கள் அதைப் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டீர்கள். அவனை உயிருடன் செல்ல அனுமதித்தது மட்டுமின்றி அவனுக்குப் பாதுகாப்பளிப்பதாகவும் கூறினீர்கள்"

மன்னன் சற்றுத் திகைத்தான். “ஜெயவர்மன் களவாடிய தால் சோழ நாட்டுக்கு அறிவாளியும் பெரும் வீரனொரு வனுமான என் சகோதரன் கிடைத்தான். கங்கை வரை சென்ற அரையன் ராஜராஜனுக்கு உறுதுணையாக இருந்த வனால் பெருமைதானே சோழ மண்ணுக்குக் கிடைத்தது? நாட்டுக்கும் மக்களுக்கும் நன்மை ஏற்படுமானால் குற்றத்தை மன்னிப்பதில் தவறேதுமில்லை மகளே” மன்னன் சொற்களில் உறுதி இருந்தது.

“நானும் சோழர்படையின் படைத்தலைவர்களும் ஆசார்யரிடம் பெற்ற பயிற்சி காரணமாகத்தானே சாளுக்கியரையும், மாசுணி தேசத்தையும், இந்திரதத் தனையும், உத்தரலாடத்தையும் வென்று கங்கை வரை செல்ல முடிந்தது? ஆசார்யரும் அவரது சீடர்களும் உதவியதால்தான் சுந்தரபாண்டியனை அடக்கவும், சேரநாட்டைக் கைப்பற்றவும் முடிந்தது. புலியாராவில் சோலக இளவரசியும், நம் சீடர்களும் இல்லையென்றால் நாம் வென்றிருக்கவே முடியாது. ஒரு சீடன் இழைத்த தவறுக்காக ஆசார்யரைத் தண்டிப்பது தர்மம் தானா மன்னவா?”

மன்னன் கடகடவென்று பெரிதாக நகைத்தான்.

செல்வியின் குரலில் இன்னும் வேகம் தெரிந்தது “ஆசார்யர் முகுந்தனுடன் என்னை அனுப்பிவைத்ததால் தான் என் உடன்பிறந்தவனைச் சந்திக்க முடிந்தது. சகோதரனால் என் பெற்றோரை அறிந்து கொள்ளவும், பெரிய தந்தையாரைக் காணவும் என் இல்லத்தை அடையாளம் கண்டுகொள்ளவும் மிக எளிதில் முடிந்தது. அரையன் ராஜராஜன் மகளுக்கு நன்மை செய்திருப்ப வரைத் தாங்கள் எப்படித் தண்டிக்க முடியும்? நானும் இந்த சோழநாட்டைச் சேர்ந்தவள்தான். சோழ நாட்டு மக்களுக்கு நன்மை செய்பவரை மன்னர் தண்டிக்க எண்ணுவார் என்பதை ஏற்றுக்கொள்ளவே இயலவில்லை. தவிர...”

"இன்னும் என்ன மகளே?" மன்னன் முகத்திலிருந்த நகைப்பு இன்னும் விகசித்தது.

"இருமுறை களவாடப்பட்ட அந்த செங்கதிர்மாலை வேறு வடிவில் மீண்டும் சோழ வம்சத்தையே அடைந்து விட்டது. சோலக இளவரசி குந்தவி அதை மீட்டு நம்மிடமே சேர்த்து விட்டாள். சேரமன்னர் ராஜசிம்மர் நம் இளவரசருக்குப் போருக்கு முன் அணிவித்த வஞ்சி மாலை அதுதான். தற்போது அதன் வடிவம் மட்டுமே மாறியிருக்கிறது"

மன்னன் பலமாக நகைத்துவிட்டு, செல்வியை நோக்கினான். அவன் விழிகள் அன்பைப் பொழிந்தன "வீரமும் இத்தனை விவேகமும் அழகும் பெற்ற உனக்கு நான் செய்ய வேண்டிய கடமையொன்றும் இருக்கிறது மகளே. உன் சம்மதத்தைச் சொல். சோழ வம்சத்திலேயே ஒரு வீரனைத் தேர்ந்தெடுத்து..."

செல்வியின் கரங்கள் உயர்ந்து மன்னனை நோக்கிக் கூப்பின. முகம் சட்டென்று இறுகியது. வறண்ட முறுவல் அவள் இதழ்களில் நெளிந்தது "மன்னவா, தாங்கள் அறியாததல்ல, அந்தக்கதை முடிந்துவிட்டது. வாளும் என் வில்லும்தான் இனி என் வாழ்வில் துணையாக வரப் போகின்றன. ஈழத்து விக்கிரமபாகு அடுத்து தமிழகத்தின் மீது பாய்வதற்குத் தயாராக இருக்கிறான். அதுவரை என் சகோதரனுடன், பெரிய தந்தையுடன், தாயுடன் என் இல்லத்தில் இருக்க அனுமதியுங்கள். இத்தனைக் காலமும் படைத்தலைவரைத் தவிர எந்த உறவுமின்றி வாழ்ந்தேன். இனியேனும்..." அவள் தலை கவிழ்ந்து கிடந்தது.

மன்னன் அவளை நெருங்கி அணைத்துக் கொண்டான். அவன் வலிய கரங்கள் உயர்ந்து அவள் கூந்தலை வருடின. "மகளே, சோழ அரச வம்சத்தில் உன்னையும் இணைத்துக் கொள்ள விரும்பினேன். அவ்வளவே. நீ இனி அரையனுக்கு மட்டுமல்ல, எனக்கும்

மகள்தான். உன் விருப்பத்தைத் தடுக்க யாருக்கும் அனுமதியில்லை” என்றான் கனிந்த குரலில்.

அவள் தோள்களைப் பற்றி நடத்திய மன்னன் கூடத்தினுள்ளிருந்த இருக்கையொன்றில் அமர வைத்தான். “மகளே, உன் பெரிய தந்தையுடன் நீயும் இருக்கலாம். இப்போது மட்டுமல்ல. அவருக்குப் பின் தென்திசைத் தண்டநாயகர் பதவியையும் நீ ஏற்றுக் கொள்ளலாம். சுந்தரபாண்டியனையும், ஈழத்தவரையும் கண்காணிக்கவும், சேரமன்னருக்கு ஆலயம் கட்டிமுடிக்க உதவியாகவும் நீ அங்கேயே இருக்க உத்தரவிட்டுப் பட்டயம் எழுதிவிடுகிறேன்”

செல்வியின் விழிகள் மன்னனை நோக்கி உயர்ந்தன “மன்னவா, சோழ இளவல் மிக முக்கியமான பணிக்காக இங்கு என்னை அனுப்பி வைத்திருக்கிறார். மதுரை நகருக்குள் நுழைந்துவிட்ட மானாபரணனும், கோச்சடையனும் இருக்குமிடம் தெரிந்து விட்டது”

“அவன் சாளுக்கியப் படைகள் மதுரையை நெருங்கும் போது சென்று கலந்து கொள்வான் என்று எதிர் பார்த்தேன்”

“இளவலும் அப்படித்தான் எதிர்பார்த்தார். ஆனால் காழிவர்மன் மானாபரணன் திட்டங்களுக்கு உடன்பட வில்லை. ம்துரையின் தென்புறச்சாலையில் தேர்ப் பொன்றின் நடுவே வணிகர் இல்லமொன்று இருக்கிறது. அங்கே தங்கியிருக்கிறான் மானாபரணன். கோச்சடை யன் மீனாட்சி ஆலயத்தினுள் சாதாரண மக்களோடு மக்களாக இரண்டொரு முறை வந்து சென்றிருக்கிறான். நம் வீரர்கள் கண்டிருக்கிறார்கள்”

“ஆலயத்துக்குள்ளா, அல்லது பொற்றாமரைக் குளத்தினருகிலா?” மன்னனின் கேள்வி செல்வியின் புருவங்களை உயரவைத்தது.

"ஆம் மன்னவா, குளத்தின் படித்துறைகளில் உலவிக்கொண்டிருந்ததாகத் தான் வீரர்கள் கூறினார்கள்" என்றாள் செல்வி சற்று வியப்புடன்.

"அப்படியானால் அரண்மனைக்குள் நுழைந்துவிடத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்பது சரிதான்"

"எனக்கு விளங்கவில்லை மன்னவா. படித்துறையில் உலவுவதற்கும் அரண்மனைக்குள் நுழைவதற்கும் தொடர்பிருக்கிறதா என்ன?"

"இருக்கிறது. பொற்றாமரைக் குளத்தில் பாண்டியன் படித்துறை இருக்கிறது. அதன் மேற்புறத் தூணில் அந்தக் குளத்தை வெட்டிய மணலூர் குலசேகர பாண்டியனின் சிலையும் இருக்கிறது. அந்தச் சிலையின் சூட்சுமம் தெரிந்தவர்கள் இப்போது யாரும் இல்லையென்று எண்ணியிருந்தேன். இருக்கிறார்கள் என்பது புரிகிறது. அதைக் கோச்சடையன் அறிந்திருக்கிறான் என்பதும் புரிகிறது. அதன் பின்னால் அரண்மனைக்குள் வரும் ரகசிய வழி இருக்கிறது" என்ற மன்னன் நகைத்தான்.

"ரகசிய வழியில் அரண்மனைக்குள் நுழைந்து..."

"வெளியே போர் நடக்கும்போது அரண்மனைக்குள் காவல் அத்தனை அதிகமிராது. உள்ளே வீரர்களுடன் நுழைந்தால் என்னைக் கொன்றுவிட்டு அரண் மனையையும் கோட்டையையும் கைப்பற்றலாம் என்று திட்டமிட்டிருப்பான். உடன் மானாபரணனும் கண்டிப்பாய் வருவான்" என்ற மன்னன் மீண்டும் நகைத்தான்.

"இளவரசர் என்னை இங்கு அனுப்பி வைத்ததன் காரணம் இப்போது புரிகிறது" என்ற செல்வியின் முகம் சிவக்கத் தொடங்கியிருந்தது. வாயிலில் நின்ற வீரனை நோக்கி, கரத்தை அசைத்தாள் அவள்.

அடுத்து வெண்ணிற உடையுடன், பின்புறம் தொங்கிய போர்வில்லுடன் அதீத அடக்கத்துடன் உள்ளே நுழைந்து

மன்னனையும் செல்வியையும் வணங்கி நின்றான் ஆசார்யரின் சீடன் நம்பி.

"நம்பி, நம் சீடர்கள் அனைவரையும் உடனடியாக அரண்மனைக்குள் அழைத்துவிடு. இன்னும் ஒரு நாழிகையில் நானும் வருகிறேன்" என்றாள் செல்வி.

# 45. ஒரு நன்றி கெட்டவன் ஒரு நம்பிக் கெட்டவன்

**வை**கையின் பிரவாகம் தன் அலைக்கரங்களால் கரையைத் தட்டி, கலீர்கலீரென்று சிரித்தபடி சென்ற வேகமும், திருவிழாக்களில் கூட்டமாக நடந்து செல்லும் மங்கையரைப் போல் துள்ளல் நடையும், இருபுறங் களிலும் வெளேரென்று விரிந்துகிடந்த மணல்வெளியும் பார்வைக்கு மிக ரம்மியமாகவே தெரிந்தன. ஆனால் பார்ப்பவரின் உணர்வைப் பொருத்தே காட்சி மகிழ்வையோ, சினத்தையோ, ரசிப்பையோ எரிச் சலையோ ஏற்படுத்துகிறது என்ற உண்மையை நிரூபிக்க வைகையின் கரைப் பகுதியையும், உச்சிப்பொழுதில் கதிரவன் ஒளியில் வெள்ளிச்சரங்களாகப் பாய்ந்த வெள்ளத்தையும் சற்றுக் குழப்பத்துடனும், எரிச்சலுடனும் பார்த்தபடி நின்றிருந்தான் முகுந்தன். அவன் விழிகள் மீண்டும் எதிரே நின்றிருந்த துறவியின்மீது பதிந்தது.

சேரஓற்றனும், துறவி வேடமிட்டு சோழர் பொக் கிஷத்திலிருந்து செங்கதிர் மாலையைக் களவாடியவனும், அதையே பரிசாகப் பெற்றவனுமான ஜெயவர்மனின் கோலம் முற்றிலும் மாறியிருந்தது. இயல்பாகவே கள்ளத் தனமும், தந்திரமும் பிரதிபலிக்கும் அவன் விழிகளில் விரக்தியும், சலிப்பும், ஒரு நிதானமும்கூடத் தெரிந்தன. அவன் குரலும் பரம நிதானத்துடன் ஒலித்தது,

"முகுந்தா, நீ என்னைக் காண்பது இதுவே கடைசி முறையாக இருக்கும். மீண்டும் என்னிடம் வந்து சேர்ந்த

செங்கதிர் மாலையை உனக்காகவே பயன்படுத்த எண்ணியிருந்தேன். ஆனால் நீ...”

“என்னை மன்னித்து விடுங்கள்” முகுந்தனின் குரலும் தலையும் தழைந்து கிடந்தன.

“இனி யார் மன்னித்தும் பயனில்லை முகுந்தா. வீரகேரளரிடமிருந்து பாதுகாப்பளிக்கவும், அவரிடம் இழந்த நம் பூந்துறையின் பகுதிகளை மீட்டு, உன் தந்தைக் குப்பின் உன் நிலையை உயர்த்தவும் எண்ணியதால்தான் செங்கதிர்மாலையுடன் உன்னை நாடி வந்தேன். ஆனால் நான் மயங்கிக்கிடந்தபோது அதை அபகரித்து, சொந்தத் தாய்மாமனை இனி சேரநாட்டுக்கு வரவொட்டாமல் அடித்து விட்டாய். சோழமன்னர் முகத்திலும் விழிக்க எனக்கு இனி தகுதியில்லை”

“சற்றுப் பொறுங்கள். இந்தப் போர் முடிந்ததும்...” மேற் கொண்டு ஏதோ கூறமுயன்ற முகுந்தனை ஜெயவர்மனின் கரம் உயர்ந்து தடுத்தது.

“இந்தப் போர் நடக்க வேண்டாம் முகுந்தா. சாளுக் கியரும் காழிவர்மரும் உடனிருப்பதால் மதுரையைக் கைப்பற்றிவிடலாம் என்று எண்ணாதே. இப்படியே திரும்பிச்சென்றுவிடு. இப்போதும் உன் நன்மையைக் கருதித்தான் எச்சரிக்கிறேன். சொல்வதைக் கேள். உயிருடன் இருந்தால்தான் மீண்டும் உயர்வுக்கு முயற்சிக்கலாம்”

முகுந்தன் நிமிர்ந்து ஜெயவர்மனை நன்றாக ஏறிட்டான் “இந்தப் போரை இனித் தடுக்க இயலாது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். சாளுக்கியரையும், காழிவர்மரையும் இணைக்கவும், இந்தப் படையெடுப்புக் காகவும் நான் எத்தனை முயற்சி செய்திருக்கிறேன் என்பதை அறிவீர்களா? காழிவர்மர் எனக்களித்திருக்கும் வாக்குறுதிகள் என்னென்ன என்பதை அறிவீர்களா? பொறுத்துப் பாருங்கள்” என்றான் வேகத்துடன்.

ஜெயவர்மனின் விழிகள் முகுந்தனையும், சற்றுத் தொலைவில் நின்றிருந்த படைப்பிரிவுகளையும் ஒருமுறை வலம் வந்தன. வெகு அலட்சியமான நகைப்பொன்றும் உதிர்ந்தது அவனிடமிருந்து.

"விதி இன்னதென்று அறிவால் உணர்ந்தால் அதிலிருந்து தப்பிக்க முயற்சி செய்யலாம். ஆனால் அதை மாற்றி எழுத மனிதனால் ஆகாது. நீ ஒரு நன்றி கெட்டவன். எனக்கு மட்டுமல்ல, வித்தை கற்றுத்தந்த நாட்டுக்கும் நன்றி செலுத்த மறுப்பவன். நான் உன்னை நம்பிக் கெட்டவன். கடைசியாக ஒருமுறை உன்னைக் காணவே வந்தேன். நான் உண்மையிலேயே துறவியாகி விட்டேன். வடக்கே பயணப்பட்டுக் கொண்டிருக்கிறேன். செல். பாடசாலைக்கு நீ செய்திருக்கும் துரோகத்துக்குப் பரிசளிக்க உன் ஆசார்யர் உனக்காகக் காத்திருக்கிறார். இந்த சாளுக்கியப் படைகளை முறியடிக்க மதுரையின் கிழக்கிலிருந்து அரையன் ராஜராஜன் பாயத் தயாராக இருக்கிறான். வருகிறேன்" என்ற ஜெயவர்மன் திரும்பியும் பாராமல் விறுவிறுவென்று வைகைக்கரையை நோக்கி நடந்தான்.

விக்கித்து நின்ற முகுந்தன் தூரத்தே தெரிந்த மதுரையின் கோட்டையை நோக்கிப் படைகள் நகரத் தொடங்கிவிட்டதைக் கண்டு ஓடிச்சென்று மூஷிக மன்னன் அருகில் நின்ற தன் புரவியில் தாவியேறிக் கொண்டு அதை முன்னால் செலுத்தினான்.

படைகள் கோட்டையை நெருங்கும் தறுவாயில் காழிவர்மன் திரும்பி முகுந்தனை அழைத்தான். முகுந்தனிடமிருந்து பதிலேதும் வரவில்லை. அவன் முகத்தில் அதுவரை காணாத அச்சம் படர்ந்திருப் பதையும், விழிகள் தூரத்தில் வெறிப்பதையும் கண்டு அவன் பார்வை விழுந்த இடத்தை உற்று நோக்கினான்.

மதுரையின் கோட்டைவாயிலில் சோழர்படை அணி வகுத்து நின்றிருந்தது. சோழ இளவலை அடுத்து படைத்

தலைவர்கள் மூவர் பூரண கவசங்களுடன் நின்றிருக்க, ஆசார்யர் புரவிமீது அமர்ந்து ஆடாமல் அசையாமல் முகுந்தன் இருந்த பகுதியை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தார். அவர் விழிகளில் புரவியிலமர்ந்திருந்த முகுந்தன் விழுந்ததும், அவர் கரத்திலிருந்த கோதண்டம் நிதானமாக உயர்ந்தது.

கோட்டையின் கிழக்கிலிருந்து புழுதிப்படலம் எழுந்து அதிவேகமாக நெருங்க முற்பட்டுக்கொண்டிருந்தது. காஞ்சியிலிருந்து வந்திருந்த சோழர்படையுடன் மெல்லிய நீண்டு வளைந்த வாளை உயர்த்தியபடி முன்னணியில் அரையன் ராஜராஜன் பாய்ந்து வந்துகொண்டிருந்தான். அது போதாதென்று கோட்டையின் தெற்கே நீண்டு கிடந்த பாதையிலும் புழுதிப்படலம் தென்பட்டது. இரு தினங்களாக ராஜேந்திர சோழதேவனின் உத்தரவுக்காகக் காத்திருந்த உக்கிரப்பாண்டியனும் மதுரையை நெருங்கிக் கொண்டிருந்தான்.

சாளுக்கிய வீரநாராயணனையும், மூஷிக மன்னன் காழிவர்மனையும் நன்றாகவே நெருங்க அனுமதித்த சோழ இளவல், கிழக்கிலிருந்து வரும் அரையன் ராஜராஜனின் வேகத்தைக் கவனித்து, சற்றுக் கழித்தே தன் வலக்கரத்தை உயர்த்தினான். அப்படியே மணலில் மண்டியிட்டுப் பெரும் போர்விற்களை ஏந்திய சோழ வீரர்களிடமிருந்து அம்புகள் சாளுக்கியப் படையின் நடுப்பகுதியில் பாயத் தொடங்கின. அது போதாதென்று கோட்டைச் சுவரின் பெரும் மாடங்களிலிருந்து இறக்கப் பட்டு மணலில் நிறுத்தப்பட்டிருந்த பொறிகள் பெரும் ஈட்டிகளை எடுத்துப் பலமாக வீசத் தொடங்கின. சாளுக்கியப் படைகளின் நடுப்பகுதியின் முன்னணியில் பாய்ந்து வந்துகொண்டிருந்த வீரர்கள் சரியத் தொடங்கியதும், அந்த இடைவெளியை நோக்கி கோட்டை வாயிலிலிருந்து எய்யப்பட்ட பெரும் அம்புகள் போல் படைத் தலைவர்களுடன் மூன்றாகப் பிரிந்த

சோழர்படை சாளுக்கிய வீரநாராயணன் இருந்த பகுதிக்குள் பாய்ந்தது. ஆசார்யருடன் நின்றிருந்த சீடர்கள் மூஷிக மன்னன் காழிவர்மனுக்கும் சாளுக் கியருக்கும் இடையே ஊடுருவி அம்புகளைப் பொழிந் தபடியே புரவிகளைப் பாயவிட்டனர்.

ஆசார்யரின் கரத்திலிருந்த கோதண்டம் அவரது வலது கரத்துக்கும் இடது கரத்துக்குமாக மாறிமாறி இடம் பெயர்ந்து போரில் அவர் *சவ்யசாசியென்பதை நிரூபித்தது. அவரது தோளின் பின்புறம் கட்டப்பட்டிருந்த அம்புகள் நிறைந்த தூளிகள் இரண்டிலும் இருந்த வகைவகையான அம்புகள் காழிவர்மனின் வீரர்களை ஏதோ பக்கவாட்டிலிருந்து மழைச்சாரல் விழுவது போல சரம்சரமாகப் பறந்துவந்து தாக்கிச் சரித்தன. அவரது அந்த வெண்ணிறப் புரவி அவர் பக்கவாட்டில் கால் களால் தட்டும் விதத்துக்கேற்ப முன்புறமும், பக்க வாட்டிலும் நகர்ந்து முன்னேறியது. ஆசார்யரிடமிருந்தும், அவரது சீடர்களிடமிருந்தும் தரைக்குச் சரியாக ஏழடி உயரத்தில் வரிசையாக அதீத வேகத்துடன் வந்த அம்புகள் வீரர்களின் மார்பிலும் கழுத்திலும் மிகச் சரி யாகப் பாய்ந்ததால் மளமளவெனச் சரிந்த வீரர்கள் புரவிகளின் கால்களில் மிதிபட்டனர். காழிவர்மனை நோக்கித் தனது புரவியை முன்னேறவிட்ட ஆசார் யருடன் ஒருபிரிவும், நடுப்பகுதியை நோக்கி மற்றொரு பிரிவுமாக நெருங்கிய சீடர்கள் போர்விற்களை மீண்டும் பின்புறம் தொங்கவிட்டுத் தங்கள் வாட்களை உருவிக் கொண்டனர்.

ஆசார்யரின் சமிக்ஞையை அடுத்து சீடர்கள் நால்வர் தன்னை நோக்கி வருவதைக் கவனித்தான் முகுந்தன். பாதகரம், வஜ்ரமஸ்தி, சிம்மகர்ணம் என அவன் பிரயோகித்த அம்புகளை எதிர்கொண்ட அந்த சீடர் களின் பயிற்சியும், வேகமும் எத்தகையது என்பதையும்

---

**★ சவ்யாசி - இருகரங்களாலும் இணையான லாகவத்துடன் ஆயுதங்களைப் பயன்படுத்துபவன் -மகாபாரதம்.**

அடுத்த சில கணங்களில் புரிந்துகொண்டான். அனாயாச மாக அவன் அம்புகளை எதிர்கொண்ட சீடர்கள் அந்த அம்புகளை மறித்தும், விலகியும், சுழன்றும் இரண்டாகப் பிளந்தும் பயனற்றுப் போகவைத்தபடியே நெருங்கி வாட்களால் தாக்கத் தொடங்கினர். அவர்கள் தாக்கத் தொடங்கிய பின்பே தன் புரவி பக்கவாட்டில் நடத்தப் படுவதையும், தன் மீது நால்வரில் ஒருவரது வாளின் நுனிகூடப் படாததையும் உணர்ந்தான் முகுந்தன். பக்கவாட்டில் அவனை நடத்தியபடியே வந்த சீடர்கள் திடீரென அவனைப் புறக்கணித்து, வேறுபுறத்தில் சேர வீரர்களைத் தாக்கத் தொடங்கிவிட்டனர்.

திகைத்துத் திரும்பிய முகுந்தன் தன் நேர் எதிரே ஆசார்யர் நிற்பதையும், தான் வாளை விடுத்துப் போர்த்தனுசை எடுத்துக் கொள்ள அவகாசமளித்தபடி தயாராக நிற்பதையும் கண்டான். ஒருகணமே தயங்கிய முகுந்தன் சிந்திக்க இது சமயமல்ல என்பதை உணர்ந்து கொண்டதால் தன் போர்த்தனுசை உயர்த்தி அம்பு களைப் பொருத்த முற்பட்டான் அவன் நாணை இழுக்கு முன்பாக ஆசார்யரின் இடக்கரம் பின்புறம் சென்று அம்புகள் நிறைந்த தூளியிலிருந்த காகதுண்ட வகை அம்புகளை ஒதுக்கியது. அதே வேகத்தில் கோதண்டம் அதிவேகத்துடன் எய்த முதல் அம்பு அவன் போர்த் தனுசின் நாணை அறுத்துத் தள்ளியது. அடுத்து சுசியாஸ் திரம் என்னும் மெல்லிய அம்புகள் தரையிலிருந்து ஏழடி உயரத்தில் தொடங்கி மூன்றடி வரை சரம்சரமாகப் பாய்ந்து இறங்கியது.

நெற்றியிலிருந்து பாதம்வரை இடைவெளி விடாமல் உடல் முழுதும் பாய்ந்து மறுபுறம் ஊடுருவிவிட்ட அந்த அம்புகள் அவனைப் புரவிமீதே சரித்தன. சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்ட உடலுடன் வானத்தை வெறித்த விழிகளுடன் உயிரற்ற முகுந்தனின் உடல் புரவியிலிருந்து சரிந்து விழுந்தது.

சற்றுத் தொலைவிலிருந்து ஆசார்யர் முகுந்தனுக்கு அளித்த குரூர தண்டனையைக் கண்ட மூஷிக மன்னன் திகைப்பில் உறைந்து அப்படியே நின்றான். சீடர்களின் வாள் வேகம் தன் வீரர்களைத் திணறடிப்பதையும், ஆசார்யரின் புரவி தன்னை நோக்கித் திரும்பி விட்டதையும் கவனித்த காழிவர்மன் அவரை எதிர்க்கத் தனக்கும் தன் வீரர்களுக்கும் திறனும் பயிற்சியும் போதாது என்பதைப் பூரணமாக உணர்ந்து கொண்ட தால், தன் வாளைக் கச்சையுடன் கழற்றி இரு கரங்களாலும் ஏந்தியபடி புரவியைவிட்டுக் குதித்து அவரை நோக்கி நீட்டியபடி சரணடையும் பாவனையில் நின்றான்.

போர்க்களத்தின் மறுபுறம் தன் கனத்த பெரும் தேகத்தைத் தாங்கிய புரவியின் கயிறுகளை ஒரு கரத்தால் பற்றியபடி, மறு கரத்தில் கனத்த பட்டையான வாளை உயர்த்தி ஏதோ ராட்சசன் ஒருவன் போரிடுவதுபோல் சாளுக்கிய வீரர்களை வெட்டிச் சாய்த்துக் கொண்டிருந்த படைத்தலைவர் கிருஷ்ணன் ராமனுக்குச் சமமாகப் போரிடப் படைத்தலைவன் எவரும் கிடைக்காததால் அந்தப் போர் அவருக்கு அத்தனை சுவாரசியத்தைத் தரவில்லை.

எதிர்ப்புறம் கனவேகத்தில் ஊடுருவிய அரையன் ராஜராஜனின் போர்முறை அவருக்கு நேர் எதிரிடையா யிருந்தது. அவன் மெல்லிய நீண்டவாள் ஏதோ காலஸர்ப்பம் சுழலுவதுபோல் சுழன்று சாளுக்கியப் படைத்தலைவர்களைக் கழுத்திலும், மார்பிலும் மின்னல் வேகத்தில் ஊடுருவி வெளிவந்தது. அனாவசியச் சுழற்றல்கள் ஏதுமின்றி நேர் செங்குத்தாகப் பாய்ந்து எதிரி களின் வாளை விலக்கி மார்பில் வாளைப் பாய்ச்சியபடி முன்னேறிய க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வானின் வீரர்கள் விளைவித்த சேதம் அபரிமிதமாகயிருந்தது. இருபுறங்களில் நெருக்கப்பட்ட சாளுக்கியவீரர்கள் மேற்கு நோக்கி ஒதுக்கப்படுவதைக் கவனித்த வீரநாராயணன் நேர் எதிரே வந்த சோழ இளவலை நோக்கித் தன்

புரவியைச் செலுத்தினான். எத்தனையோமுறை சோழர்களுடன் போரிட்டவனும், சாளுக்கியரின் நிகரற்ற வாள் வீரன் என்று பெயரெடுத்தவனுமான வீரநாராயணன் சற்று நிதானத்தை இழந்திருக்கிறான் என்பதை முதல் வீச்சிலேயே புரிந்துகொண்ட சோழஇளவல் முகத்தில் முறுவல் விரிந்தது.

வலக்கரத்தால் வாளை வீசியபடியே வந்த வீரநாராயணனின் இடக்கரம் பக்கவாட்டில் தொங்கிய பெரும் ஈட்டியை எடுத்து, சோழஇளவலை நோக்கி வீசியது. தன் புரவியை லேசாகப் பக்கவாட்டில் விலக்கித் தன்னை நோக்கி வந்த ஈட்டியை இரண்டாக வாளால் முறித்த சோழ இளவல் தன் நீண்ட வாளை உயர்த்தி வீர நாராயணனைத் தடுத்தான். அடுத்து நேர் வெட்டாகவும் எதிர்வெட்டாகவும் சுழன்று தடுத்து உருவி விலகிய சோழ இளவலின் வாள் சோழர் வாள் வீச்சின் முறைகளையும் வேகத்தையும் காட்டத் தொடங்கியது.

படைபலமோ, வீரர்களின் எண்ணிக்கையோ போரின் வெற்றிதோல்வியை நிர்ணயிப்பதில்லை என்பதையும், தாக்கும் முறையும், சமயமும் அறிந்து அணிவகுப்பு கலையாமல் நடத்தும் படைத்தலைவர்களின் அனுபவமும், சமிக்ஞைகளைப் புரிந்து அட்சரசுத்தமாக அதை நிறைவேற்றும் வீரர்களின் வேகமும்தான் வெற்றியை நிர்ணயிக்கிறது என்பதை மீண்டும் நிரூபித்துக் கொண்டிருந்தான் அரையன் ராஜராஜன். கிழக்கிலிருந்து சாளுக்கியரை நடுப்பகுதியில் ஊடுருவியவனின் இடக்கரம் உயர்ந்து விரல்களைப் பிரித்தும், முஷ்டிபிடித்தும் காட்டிய சமிக்ஞைகளால் ஊடுருவிய சோழவீரர்கள் இரண்டாகப் பிரிந்து சாளுக்கியரைத் தாக்கிய வேகத்தில் நகரத் தொடங்கிய வீர நாராயணனின் படை மெல்ல மேற்கு நோக்கி நகரத் தொடங்கியது அதன் காரணத்தைச் சற்றுத் தாமதாகவே புரிந்து கொண்டான் சாளுக்கிய நாராயணன். மற்றொருபுறம் சோழர் படைத் தலைவர்

இருவராலும் தாக்கப்பட்ட தன் வீரர்களும் முன்னோக்கி நகர்ந்து கொண்டிருந்தனர். கோட்டையின் மேற்குப்புறத்தி லிருந்து பெரும் கூச்சல் ஒலித்தது. ஆஜானுபாகுவான உருவத்துடன், முகத்தைப் பாதிக்கும்மேல் மறைத்த பெரும்மீசையுடன் புரவியில் ஆரோகணித்துப் பாய்ந்து சாளுக்கிய வீரநாராயணனை நோக்கி வந்துகொண்டிருந் தான் உக்கிரப் பாண்டியன். அவனுடன் வந்த தென் பாண்டிநாட்டுப் போர்க் களிறுகள் வைகைக்கரையை அதிரவைத்த பிளிறல்களுடன் துதிக்கைகளில் பெரும் இரும்பு உலக்கைகளைச் சுழற்றியபடி சாளுக்கியரின் நடுவே புகுந்தன.

**ம**துரை அரண்மனை நந்தவனத்தை அடுத்து மரக் கூட்டங்களாகத் தெரிந்த பகுதியின் நடுவே நின்றிருந்தது அந்த அழகிய மண்டபம். மாலைக் கதிரவன் வீசிய பொன்னிற ஒளியில் மண்டபத்தின் தூண்களில் தெரிந்த சிற்பங்களும், கூரையிலிருந்த வேலைப்பாடுகளும் அதைச் செதுக்கிய சிற்பியின் கைவண்ணத்தைக் கூறிக் கொண்டிருக்க, மண்டபத்தின் நடுவே தெரிந்த மேடையின் மீது இன்னும் அழகுடன் அசையாமல் நின்றிருந்தாள் அந்தப் பெண். அவள் கார்கூந்தல் சிவந்த ஒற்றை மலருடன் இடையைத்தாண்டி நெளிந்து நீண்டு கிடக்க, குறுகிவளைந்த இடையில் நீர் நிரம்பிய குடத்துடன் முகம் யாரையோ எதிர்பார்த்து நந்தவனத்தைப் பார்த்திருந்தது. அருகில் நெருங்கிய பின்பே அது மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்ட சிலை யென்பதும் அதன் மீது வண்ணங்கள் தீட்டப்பட்டிருப் பதும் புலப்பட்டது. அவள் கரத்திலிருந்த குடத்தில் நீர் திடீரெனத் தளும்பியது. அவளும் வலப்புறமாகச் சுழன்று திரும்பி அந்த மேடையிலிருந்து நகர்ந்து மண்டபத்தின் ஓரத்துக்கு வந்தாள். மேடை நகர்ந்த சதுரமான இடத்திலிருந்து தலை ஒன்று முளைத்து மேலே வந்தது. கோச்சடையனின் எச்சரிக்கை மிகுந்த விழிகள் வெளியே வந்து நாற்புறமும் கவனித்தன. எவரும் பார்வையில்

படாமற்போகவே அவன் முழுதாக மேலே ஏறிவந்தான். அவனைத் தொடர்ந்து பாண்டிய வீரர்கள் பலரும் மேலே ஏறி வந்து அந்தத் தோப்பில் நிறைந்தனர். சற்றுத் தள்ளியிருந்த மற்றுமொரு மண்டபத்தின் அடியிலிருந்தும் வீரர்கள் பலர் வெளியே வந்தனர்.

தன் உபதலைவனை அழைத்த கோச்சடையன் "சென்று அரண்மனையின் மேற்கு வாயிலைத் திறந்துவிடு. இன்னும் ஒரு நாழிகையில் மானாபரணர் உள்ளே நுழைந்துவிடுவார். விரைந்து செல்" என்று அனுப்பியவன் அரண்மனையை நோக்கி வீரர்களுடன் வேகமாக நடந்தான். மரக்கூட்டங்களைத் தாண்டி நேர் எதிரே முத்தாணி மண்டபத்தை நோக்கிச் செல்லும் பாதை தெரிந்தது. இடமும் வலமுமாகப் பிரிந்த வழிகள் அரண்மனையின் பக்கவாட்டிலும், மன்னன் வசிக்கும் மாளிகையை நோக்கியும் சென்றன. காவலர்கள் நடமாட்டம் குறைவாகவே இருப்பதையும், கோட்டைச் சுவரைத்தாண்டி வெளியே நடக்கும் போர்க்கூச்சல் கேட்கத் தொடங்கி விட்டதையும் கவனித்தான் கோச்சடையன்.

வீரர்களை அழைத்தவன் "வீரர்களே, அதோ தெரியும் மாளிகைதான் சோழ மன்னன் வசிக்குமிடம். முதலில் அதைச் சூழ்ந்துகொள்வோம். எதிர்ப்பது காவலரோ, பணியாட்களோ எவரானாலும் தாட்சண்யம் பாராமல் வெட்டியெறியுங்கள்" என்றவன் தடதடவென்று மாளிகையை நோக்கி ஓடத் தொடங்கினான். வீரர்கள் தொடர்ந்தனர்.

அரைஓட்டமாக ஓடிய கோச்சடையனும், வீரர்களும் மாளிகையை நெருங்க சற்றுத் தொலைவு இருக்கும்போது மாளிகையின் பக்கத் தூண்களிலிருந்து முளைத்து வருவதுபோல் வெளேரென்ற உடைகளுடன், கரங்களில் பெரும் கோதண்டங்களைத் தாங்கி ஆசார்யரின் சீடர்கள் வெளியே வந்தனர். கோச்சடையன் சற்று நிதானித்தான்.

அவன் நின்ற இடத்திற்கு வலப்புறத்தில் மாளிகையின் கதவு திறந்தது. உள்ளேயிருந்து மெல்லிய இரும்பு வலையொன்றை அணிந்து, இறுகக்கட்டிய குழலும், நீண்ட வாள் பக்கவாட்டில் தரையில் கோடிழுக்க, கோதண்டத்தைத் தாங்கி வெளியே வந்தாள் செங்கமலச்செல்வி.

செல்வியைக் கண்டதும் கோச்சடையன் பிடரியில் உஷ்ணம் பரவியது. 'அரையன் ராஜராஜனின் மகளா? இவள் எங்கிருந்து வந்து சேர்ந்தாள்? கொலைகார ராட்சசி ஆயிற்றே...'

சற்று நிதானித்தவன் அதே கணத்தில் அரண் மனையின் மேற்கு வாயிலில் பெரும் கூச்சல் ஒலிக்கத் தொடங்கிவிட்டதைக் கவனித்தான். மானாபரணன் ஈழ வீரர்களுடன் உள்ளே நுழைந்துவிட்டான் என்பதைப் புரிந்து கொண்டதால், "வீரர்களே, வாட்களை சக்கர வட்டமாக முன்புறம் சுழற்றி அம்புகளைத் தடுத்து விடுங்கள். அந்த இளைஞர்களை நெருங்கித் தாக்குங்கள்" என்று இரைந்தவன் வாளை உயர்த்திக் கொண்டு தன் மெய்க்காவல் வீரர்களையும் அழைத்துக்கொண்டு செல்வி நின்ற திசையில் பாய்ந்தான்.

செல்வி அரண்மனையின் தாழ்வரையிலிருந்து கீழேயிறங்கி, புல்வெளியில் நிதானமாகக் கால்களைப் பதித்து கோச்சடையனை நோக்கி நடந்தாள். கோச் சடையன் பின்னால் ஓடிவந்த அவன் மெய்க்காவலர் இருபதின்மரும் சட்டென்று நின்றனர்.

திரும்பி நோக்கிய கோச்சடையன் இரைந்தான் "ஏன் நின்றுவிட்டீர்கள்? அவளைச் சூழ்ந்துகொண்டு தாக்கிக் கொல்லுங்கள்"

அந்த மெய்க்காவலரின் தலைவன் நின்று, தங்களை நோக்கி வந்து கொண்டிருந்த செல்வியை ஒருமுறை நோக்கினான்.

"படைத்தலைவரே, சென்றமுறை போர்க்களத்தின் நடுவே இந்தப் பெண்ணிடமிருந்து மானாபரணரைக்

காக்க உத்தரவிட்டீர்கள். ஆனால் இப்போது கள்ளர்களைப் போல் சோழன் மாளிகைக்குள் நுழைந்து தாக்குவதையே எங்களால் ஏற்றுக் கொள்ள இயல வில்லை. அதிலும் தனித்து நம்மை எதிர்க்கவரும் ஒரு பெண்ணை இத்தனை வீரர்களும் தாக்கவும் கொல்லவும் கூறுகிறீர்கள். மன்னித்து விடுங்கள். நாங்கள் இன்னும் பாண்டிய மண்ணைச் சேர்ந்தவர்கள்தாம். மானா பரணருடன் சேர்ந்து முற்றிலும் ஈழத்தவராகி விடவில்லை” என்றான் அந்த மெய்காவற்படைத் தலைவன்.

ஒருகணம் திகைத்த கோச்சடையனின் முகத்தில் உஷ்ணம் ஏறியது. பதிலேதும் கூறாமல் மீண்டும் செல்வியை நோக்கித் திரும்பியவன் வாளை உயர்த்திக் கொண்டு பாய்ந்தான். மெய்க்காவலரில் நான்கைந்து வீரர்கள் குழப்பத்துடன் அங்கேயே நின்றுவிட்டுப் பின்னர் கோச்சடையனுடன் உதவிக்கு விரைந்தனர். தலைவனுடன் மற்றவர்கள் சீடர்களின் அம்புகளைத் தடுத்தபடியே வேறுதிசையில் பாய்ந்தனர்.

கோச்சடையனுடன் சேர்ந்து தன் மீது பாய்ந்த வாட்களை ஏக காலத்தில் தடுத்த செல்வியின் முகத்தில் அந்த வறண்ட முறுவல் நெளிந்தது. அவள் கரத்தில் அந்த மெல்லிய வாள் கரகரவெனச் சுழலத் தொடங்கிது. ஏதோ ஸர்ப்பமொன்று நெளிவதைப்போல் லாகவமாக வளைந்து வேகத்துடன் அசைந்த அவள் கரத்தையும் அந்த வாள் கனவேகமாகச் சுழன்று தங்கள் கண்களுக்கு எதிரிலும், கழுத்தையும் தடவிச்சென்ற வேகத்தையும், திடீரென்று நேராகப்பாய்ந்து இரு வீரர்களின் மார்பிலும், தோளிலும் பாய்ந்து சரித்துவிட்டதையும் கண்ட கோச்சடையன் திகைத்தான். அவன் ஆத்திரம் உயர்ந்தது. இரு கரங்களாலும் தன் பட்டையான வாளை உயர்த்தி அவள் தலைமீது இறக்க முயன்றான். உயர்த்திய அவன் வாளை உறுதியாகத் தடுத்து விலக்கிய செல்வியின் நீண்டவாள் சுழன்று இன்னும் வேகத்துடன் தாக்கியது.

கோச்சடையனின் திகைப்பை இன்னும் உயர்த்த செல்வி வெளிவந்த மாளிகையின் கதவு மீண்டும் திறந்தது. உடன் காவலர் எவருமின்றி, போர்க்கவசம் ஏதுமின்றி, மார்பில் பெரும் புலிச்சின்னம் பொறிக்கப்பட்ட பதக்கம் ஆட, கரத்தில் பிடித்த உடைவாளை மட்டும் ஏந்தியபடி வெளியே வந்து சண்டை நடந்து கொண்டிருந்த அரண்மனைப்பகுதியைக் கவனித்தபடி நின்றான் சோழ ராஜேந்திர தேவன். அவன் கூர்விழிகள் கோச்சடை யனிருந்த பகுதியையும், சீடர்கள் போராடிக் கொண்டிருந்த இடத்தையும் கவனித்தன.

மாளிகையின் தூண்களினருகே நின்ற சீடர்களிட மிருந்து சரம் சரமாக அம்புகள் பறந்து பாண்டிய வீரர்கள் பலரைச் சரித்தன. தூரத்திலிருந்து செல்வி பலரால் தாக்கப்படுவதைக் கவனித்த நம்பி தூணைச்சுற்றிக் கொண்டு புல்வெளியில் இறங்கி தன் வாளை உருவிக் கொண்டு செல்வியிருந்த இடத்தை நோக்கிப் பாய்ந்தான். இன்னும் இரு சீடர்களும் நம்பியைத் தொடர்ந்தனர். அடுத்த சில கணங்களில் கோச்சடையனுடன் வந்த இன்னுமிரு பாண்டிய வீரர்கள் காயங்களுடன் புல் வெளியில் உருண்டு விழுந்தனர். உடலெங்கும் காயங் களுடன் வாளை ஏந்தி நின்ற கோச்சடையனை எதிர்க்க நம்பிக்கு உத்தரவிட்ட செல்வி மேற்கு வாயிலில் கூச்சல் ஒலித்த இடத்தை நோக்கி விரைந்தாள். செல்வி சென்ற திசையைக் கவனித்த ராஜேந்திரசோழதேவன் நம்பியின் வாள் வீச்சை ஒருமுறை கவனித்துவிட்டு, செல்வி சென்ற திசையில் எதிர்ப்பட்ட பாண்டிய வீரர்களைத் தன் வாள்வீச்சால் அனாயாசமாக விலக்கிவிட்டு வேகமாக நடந்தான்.

மேற்கு வாயிலில் மானாபரணனும் ஈழ வீரர்களும் முன்னேறியிருப்பதையும், சோழ வீரர்களும், சீடர்களுமாகப் பலர் மண்ணில் உருண்டு கிடப்பதையும் கவனித்த செங்கமலச் செல்வி தன் கோதண்டத்தை உயர்த்தினாள். மூன்றாகவும், ஐந்தாகவும் அவளிடமிருந்து

பறக்கத் தொடங்கிய அம்புகள் ஈழத்து வீரர்களை இலக்கு தவறாமல் தாக்கத் தொடங்கின. அம்புகள் வரும் திசையில் செல்வி நிற்பதையும், சற்றுப் பின்னால் சோழ மன்னன் வாளை ஏந்திக் கொண்டுவருவதையும், மன்னனைத் தொடர்ந்து சோழ வீரர்கள் பின்னால் ஓடி வருவதையும் கண்ட மானாபரணன் முகத்தில் அச்சம் வேகமாகப் படர்ந்தது.

அபாயம் நெருங்குவதைப் புரிந்து கொண்ட மானா பரணன், தன் கரத்திலிருந்த பெரும் ஈட்டியைச் செல்வியை நோக்கிப் பலமாக வீசினான். அதே வேகத்தில் திரும்பியவன் ஈழ வீரர்களைப் பின்தொடர உத்தரவிட்டுப் பக்கவாட்டில் தெரிந்த கோட்டையின் வடக்கு வாயிலை நோக்கி விரையத் தொடங்கினான்.

அம்புகளைப் பறக்கவிட்டபடியே அவனைப் பின் தொடர்ந்த செல்வி தன்னை நோக்கிப் பறந்துவந்த ஈட்டியின் பாதையிலிருந்து சுழன்று விலகினாள். அவள் கரத்திலிருந்த கோதண்டம் பக்கவாட்டில் அந்த ஈட்டியைத் தடுத்துக் கீழே தள்ளியது. வடக்கு வாயிலின் வெளியே ஒலித்த கோஷங்களைக் கவனித்த செல்வியின் கரம் உயர்ந்து கோட்டை வாயிலில் நின்ற வீரர்களுக்கு சமிக்ஞை செய்தது. மானாபரணன் வாயிலை நெருங்க முற்படுமுன்பாகக் கரகரவென்ற பெரும் ஒலியுடன் கதவுகள் திறந்தன.

வேகத்துடன் திறந்த கோட்டைக் கதவுகளின் வழியே முன்னணியில் சோழ இளவல் ராஜாதிராஜ சோழ தேவன் உயர்த்திய வாளுடன் புரவியில் அமர்ந்து பிரவேசித்தான். அவன் பின்னால் சோழ வீரர்கள் எழுப்பிய வெற்றிக் கோஷம் உயர்ந்து ஒலிக்கத் தொடங்கியிருந்தது. சோழ இளவலை அடுத்து உள்ளே நுழைந்த புரவியிலிருந்த அரையன் ராஜராஜனைக் கண்ட மானாபரணனின் தலை சுழலத் தொடங்கியது. திகைப்பில் உறைந்து ஒரு கணம் அப்படியே நின்றவன் தப்பிக்கும் மார்க்கம் தேடி மீண்டும் திரும்பினான்.

திரும்பிய அவன் விழிகள் செல்வியின் கரத்தில் அதுவரை காணாத அளவுக்கு அவள் கோதண்டம் வளைந்து நாண் இழுக்கப்பட்டிருப்பதையும், அர்த்த சந்திர வடிவில் கூர் முனையைக் கொண்ட காகதுண்டம் வகை அம்பு தன்னைக் குறிவைத்துத் தயாராக இருப்பதையும் கண்டன. அடுத்த கணம் செல்வியின் கோதண்டத்திலிருந்து விடுபட்ட அந்த அம்பு இம்மி பிசகாமல் அசுர வேகத்தில் மானாபரணனின் கழுத்தை நோக்கிப் பாய்ந்தது. சுத்தமாகப் பிசிறு ஏதுமின்றி மானாபரணன் கழுத்தைத் துண்டாக்கிய அந்த காகதுண்டம் வெறித்த விழிகளுடனும் பட்டையான வடிவில் கற்கள் பதிக்கப்பட்ட மகுடத்துடனும் அவன் தலையை சோழ இளவல் வந்து கொண்டிருந்த புரவியின் முன்னால் உருட்டித் தள்ளியது. தலையற்ற உடல் வாள்பிடித்த கரத்தோடு தள்ளாடிப் பின்புறமாக சாய்ந்தது.

கயிறுகளைப் பிடித்து இழுத்துப் புரவிகளை நிறுத்திய சோழ இளவலும், அரையன் ராஜராஜனும் முன்னால் உருண்டு நின்ற மானாபரணன் தலையையும் உடலெங்கும் காயங்களிலிருந்து குருதி வழிய, கரத்தில் உயர்த்திய கோதண்டத்துடன் வானிலிருந்து குதித்து விட்ட போர்த்தேவதை போல் நின்ற செங்கமலச் செல்வியையும் கண்டனர். அரையன் ராஜராஜனின் முகத்தில் முறுவலொன்று படர்ந்து சிறு நகைப்பாகவும் உதிர்ந்தது. புரவியிலிருந்து குதித்து இறங்கியவன் விரைந்து சென்று செல்வியை அணைத்துக்கொண்டான்.

# 46. ராஜேந்திர விண்ணகரம்

**ம**னிதனின் வாழ்வோ, தாழ்வோ, ஆனந்தமோ, துக்கமோ எதுவும் காலகதியை நிறுத்த முடிவதில்லை. யாருக்காகவும், எதற்காகவும் தயங்கி நிற்காத காலம் தன் போக்கில் சென்றுகொண்டுதானிருக்கிறது. ஆனால்

தமிழகத்தின் மன்னாதி மன்னர்கள் வாழ்ந்த அரண்மனைகளும், மாளிகைகளும் மறைந்து போனாலும் அவர்கள் மக்களுக்காக எழுப்பிய ஆலயங்களை அழிக்க அந்தக் காலத்தாலும் முடியவில்லை. அதை நிரூபிக்க விரும்பியதைப் போல் சேர மன்னன் ராஜசிம்மன் எழுப்பிய மூன்று மாடங்களுடன் வானை நோக்கி உயர்ந்து எழுந்த அந்த ராஜகோபால சுவாமி ஆலயம் சோழ மன்னனுக்கு நன்றி செலுத்தும் விதமாக ராஜேந்திர விண்ணகரம் என்றே பெயரிடப்பட்டு, முல்லைநாட்டு மக்களுக்கு அர்ப்பணிக்கப்படத் தயாராகிக் கொண்டிருந்தது.

ஆலயத்துக்குச் சற்றுத் தொலைவில் மகிழ்ச்சியால் துள்ளிக்கொண்டு பாய்ந்த கருணையாற்றின் பிரவாகமும் மாலைக்கதிரவன் ஒளியில் அசல் பொன்னாகவே மின்னிக் கொண்டு, ஆலயங்களுக்கு இணையாகக் கால கதியால் அழிக்கப்படாமலிருந்ததால் சற்றுக் கர்வத்துடன் பாய்ந்து கொண்டிருந்தது. கரையோரத்து மரங்களி லிருந்து பட்சிகளின் கூச்சல் பலமாக ஒலித்து, கருணை யாற்றின் கர்வத்தை ஆமோதித்தது.

கால்கள் நீரில் நனைந்திருக்கக் கடைசிப் படியில் அமர்ந்திருந்தாள் அந்தப் பெண்மணி. அச்சு அசலாக செங்கமலச் செல்வியைப் போலவே இருந்த அவள் முகத்தில் செவியோரங்களிலும், மேற்பகுதியிலும் தெரிந்த நரை அவள் முதுமையைக் காட்டின. அவள் விழிகளில் பெருக்கெடுத்த அன்பும், அந்த அன்பை வழியவிட்ட விழிகளும் தன் மடி மீது தலையைச் சாய்த்து விழிகளை மூடிப் படுத்துக் கிடந்த செங்கமலச்செல்வியை வாத்ஸல்யத்துடன் நோக்கின. அவள் விழிகளில் திரண்டு நின்ற கண்ணீர்த் துளியொன்று உதிர்ந்து செல்வியின் கன்னத்தில் விழுந்தது. அவள் கரம் உயர்ந்து செல்வியின் குழல்களை வருடிக் கொடுத்தது. வாழ்நாளில் அதுவரை அனுபவித்தறியாத நிம்மதியும், அமைதியும் உள்ளத்தில் நிரம்பிக் கிடப்பதை செல்வியின் முகத்தில் பூத்திருந்த

முறுவல் காட்டிக்கொண்டிருக்க, வலக்கரம் உயர்ந்து அன்னையின் முகத்தைத் தடவி விழிகளைத் துடைத்தது.

விழிகளை மூடியபடியே அவள் இதழ்கள் சொற்களை உதிர்த்தன "அம்மா, நீ கண்ணீர் விட்டது போதும். கடந்த காலத்தை எண்ணி வருந்தியதும் போதும். ஒன்று சேர்ந்த நாம் இனி பிரியப்போவதில்லை. வாழும் காலத்தை நினைத்து மகிழ்வுடன் வாழக் கற்றுக்கொள். இறுதிவரை உன்னுடனேயே நான் இருப்பேன். எந்தப் போர்க் களத்துக்குச் சென்றாலும் மீண்டும் உன்னிடம்தான் வரப்போகிறேன்"

அருகில் அமர்ந்திருந்த குந்தவியின் முகமும் மனமும் முழுதாக மலர்ந்திருந்தது. புதுமண வாழ்வின் பூரிப்பு அவள் தோற்றத்தையே மலரவைத்திருந்தது.

படிகளில் நீட்டிக்கிடந்த செல்வியின் கால்கள் அவளையே பார்த்தபடியிருந்த குந்தவியின் மடியில் கிடந்தன. குந்தவியின் மேடிட்ட வயிற்றுப்பகுதியில் செல்வியின் பாதங்கள் லேசாகப் பதிந்ததால் விழிகளை மூடியபடியே செல்வியின் குரல் ஒலித்தது.

"குந்தவி... என் கால்கள் உன் வயிற்றில் படுகிறது பார். குழந்தைக்கு ஏதும்..." ஏதோ கூறவந்த செல்வியை மறித்து மேற்கொண்டு அவளைப் பேசவிடாமல் குந்தவி பதிலளித்தாள்.

"அக்கா, இருக்கட்டும். இந்தப் பாதங்கள் கடந்த நாடுகள் எத்தனை, அள்ளி வந்த வெற்றிகள் எத்தனை, இதுவரை அடைந்த துன்பங்கள் எத்தனை?. தாராளமாக உன் பாதம் என் மகன் மீது படட்டும். அதனால் அவன் பிறவியிலேயே வீரமும், விவேகமும் உடையவனாகத்தான் பிறப்பான்" என்ற குந்தவி செல்வியின் பாதங்களைப் பிடித்து தன் மடிமீது நன்றாக இருத்திக் கொண்டாள்.

செண்பகவல்லியின் முதிய விழிகள் தன் மடியில் கிடந்த மகள் மீதும், அருகில் அமர்ந்திருந்த மருமகள்

மீதும் பதிந்தன. இவர்களைக் காண கணவன் இல்லையே என்ற நினைவு அவள் விழிகளைப் பனிக்க வைத்தாலும், மகள் இட்ட கட்டளையை எண்ணி அடக்கிக் கொண்டாள். ஒவ்வொருவரும் உயிருடன்தான் இருக்கிறார்களா என்றே அறியாதபடிக்கு சிதறிப்போன தன் குடும்பம், இத்தனை காலம் கழித்தேனும் ஒன்று சேர்ந்ததும், அதிலும் ஒருவர்மீது ஒருவர் பொழிந்த அன்பும் அவளைச் சொர்க்கலோகத்திலிருப்பதாகவே எண்ணவைத்தன.

படித்துறையின் மேற்பகுதியிலிருந்து மெல்ல இறங்கி வந்துகொண்டிருந்தான் வல்லபன். அவன் விழிகள் படிகளில் அமர்ந்திருந்தவர்களைக் கண்டதும் ஏதோ கள்ளனைப் போல் விழித்தன. பின்புறமாக நெருங்கி குந்தவியின் கவனத்தைக் கவரவும், அவளைத் தனியே அழைக்கவும் விரும்பியவன் மிக மெலிதாகக் குரல் கொடுத்தான். கையை அசைத்து சைகை செய்து பார்த் தான். குந்தவி அவனைக் கவனித்தாகவே தெரியவில்லை.

சற்றுநேரம் நின்றவன் “அம்மா... அம்மா” என்றும் சற்று உரத்துக் குரல் கொடுத்துப் பார்த்தான். அவளும் திரும்புவதாக இல்லை.

“அக்கா... அக்கா...” என்றான் மீண்டும் சற்றுப் பலமாக.

விழிகளை மூடியபடியே செல்வியின் குரல் ஒலித்தது “என்ன வல்லபா? ஏன் ஒவ்வொரு படியாக நின்று நடனமாடுகிறாய்? குந்தவி இப்போது வரமாட்டாள்”

“அக்கா... நான் நடனமாடினேன் என்பதை எப்படி அறிந்தாய்?” என்றான் வல்லபன் வியப்பு தொனித்த குரலில்.

செல்வி அப்போதும் விழிகளைத் திறக்கவோ, எழுந்து கொள்ளவோ முயலவில்லை. அன்னையின் மடிமீதிருந்தே பதிலளித்தாள் “எனக்கு நீ ஒருமுறை ஆருடம் கூறினாயல்லவா?”

"ஆம் கூறினேன்"

"அதைப்போல் இதுவும் ஒரு கலை. பழகப்பழகத்தான் பிடிபடும். காற்றின் அசைவும், விலங்குகள் அசைவும், ஓசைகளில் ஏற்படும் மாற்றங்களும் மனித நடமாட்டத்தையும், காலடியோசையின் மாற்றம் அசைவையும் தெரிவித்துவிடும்"

படிகளில் இறங்கிய வல்லபன் அன்னையின் பின்னால் அமர்ந்தான்.

"அக்கா..."

"சொல்"

"நாளை நீ அவசியம் செல்லத்தான் வேண்டுமா?"

"ஆம். எதற்காகக் கேட்கிறாய்?"

"நானும் உடன் வரலாம் என்று எண்ணுகிறேன். போர்ப்பயிற்சியை நானும் பெற வேண்டுமல்லவா?"

"இம்முறை பெற இயலாது. ஈழத்து விக்கிரமபாகு புரட்சியை அடக்குவதாக கூறிக்கொண்டு நம் வசமிருக்கும் அனுராதபுரத்திலும் புகுந்துவிட்டான். நம் வீரர்கள் அவனை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கிறார்கள். நாளை சோழ இளவலுடன் நானும் செல்ல வேண்டும். எப்படியும் திரும்பி வர ஓரிரு திங்கள் ஆகலாம். உனக்கும் முக்கியப் பணிகள் இருக்கின்றன"

"நீ கேட்டுக் கொண்டால் சோழ பாண்டியர் என்னையும் உடன்வர சம்மதிக்க மாட்டாரா?"

"முதலில் அரச கட்டளைகளை மறுபேச்சின்றி மதிக்கக் கற்றுக்கொள். இங்கு அன்னையையும், குந்தவியையும் பார்த்துக்கொள். குந்தவியின் நிலையை அறிந்துதான் உன்னை இங்கிருக்கப் பணித்தார் மன்னர். சேரலாதர் ஆலயத்தை விரைவில் கட்டி முடிக்க உதவியாக இரு. பிராகாரத்தில் பொறிக்கப்படப்போகும் நிவந்தத்தின்படி

எழுபத்தியெட்டு வேலி நிலத்தையும் அளந்து பிரித்து தயாராக வைத்திரு. அது மட்டுமல்ல"

"இன்னும் என்ன உபதேசம் மிச்சமிருக்கிறது?" வல்லபன் குரலில் சலிப்பு தெரிந்தது.

"சோழ இளவல் ஈழத்திலிருந்து திரும்பியதும் நம் தந்தையார் அமர்ந்த கொற்கை அரியணையில் உன்னை அமர்த்தவும் எண்ணியிருக்கிறார். அதற்குத் தகுதி உடையவனாக ஆக்கிக்கொள். போரில் கலந்து கொள்வதைவிட முக்கியமான பொறுப்புகளை ஏற்கவும் நிறைவேற்றவும் பழகிக்கொள். உன் மக்களை அறிந்து கொள்"

வல்லபன் பதிலேதும் கூறவில்லை. அதுவரை மௌன மாக அமர்ந்து மகளைப் பார்த்தபடியிருந்த செண்பக வல்லியின் குரல் மெலிதாக ஒலித்தது "மகளே, முதல் ஜாமம் தொடங்கிவிட்டது. இனியும் குந்தவி இப்படி நதிக் கரையில் அமர்ந்திருப்பது சரியல்ல, வா இல்லத்துக்குப் போகலாம்" என்றாள்.

மெல்லப் படிகளில் ஏறிய குந்தவியை அணைத்த படியே வந்த செல்வியையும், செண்பகவல்லியையும் ரதத்தில் ஏற்றிய வல்லபன் புரவிகளை நிதானமாகச் செல்ல சொடுக்கினான்.

காலைப்பொழுதில் இளங்கோகுடியின் தோற்றமே மாறியிருந்தது. வீதிகள் நிறைய அணிவகுத்து நின்ற திருவாலீஸ்வரத்துப் படையும், கோட்டாற்றிலிருந்து வந்திருந்த வீரர்களும் அணிந்திருந்த கவசங்களும், உயர்த்திய வேல்களும், காலைக் கதிரில் பளீரிட்டுக் கொண்டிருந்தன. கிழக்கே நீண்ட பாதையின் தொடக்கத்தில் தயாராக நின்ற புரவிகள் கால்களை மாற்றிமாற்றி வைத்துப் பாய்வதற்குத் துடித்து நின்றன. வெளேரென்ற உடைகளுடன் சீடன் நம்பியும் அவன் தோழர்களும் தோளின் பின்புறம் தொங்கிய விற்களும்,

பெரும் கோதண்டங்களையும் ஏந்தி விழுப்பரையரின் இல்லத்துக்கு எதிரே காத்திருந்தனர். இல்லத்தின் உள்ளே விழுப்பரையரின் குரல் பலமாக ஒலித்துக் கொண்டிருந்தது.

சற்றுக்கழித்து செங்கமலச் செல்வி மெல்லிய இரும்பு வலை அணிந்து, இடையிலிருந்து நீண்டு தரையில் கோடிழுத்த வாளுடன், தோளிலிருந்து தொங்கிய கோதண்டத்துடன் வெளியே வந்தாள். நம்பியின் வணக்கமும், வீரர்கள் எழுப்பிய கோஷங்களும் விண்ணை நிறைத்தன.

தன் சாம்பல் நிறப்புரவியில் ஏறியமர்ந்த செங்கமலச் செல்வி இல்லத்தின் வாயிலில் நின்ற அன்னையையும், குந்தவியையும், வல்லபனையும் பார்த்துக் கையசைத்து விட்டு, வலக்கரத்தை உயர்த்தினாள். ஆறாயிரம் வீரர்கள் கொண்ட அந்தப் படைப்பிரிவு கிழக்கு நோக்கி நகரத் தொடங்கியது. அவளை வாழ்த்தி வழியனுப்புவது போல் ராஜேந்திர விண்ணகரத்து ராஜகோபால சுவாமி ஆலயத்து மணிகள் டணார் டணார் என்று பலமாக முழங்கின.

- முற்றும் -

